வேறு

73. கச்சணி முலையாள் பத்பமின் வளர்வாழ்
கட்டழ கினிதா—கியமானுள்—புணர்தோளார்
நச்சர வினிலே நித்திரை செயுமால்
நத்தணி கரனுர்—துளமாயோன்—மருகேசா !
பச்சம துடனே நற்குற மகள்சேர்
பச்சையின் மயில்மேல்—வருலோலா !—குகநாதா !
அச்சம துடனே மற்புய அ(சு)ரோன்
அற்றிட விடுகூர்—அயிலா ! தோ—கையினுதா !

74. வட்டமுலை மாது உமைமானுள்
[வரிச்சிதுள்ள] தேவி தருபாலா !—குகவேளே !
இட்டமுடன் வேடர் தருமானுள்
இச்சையுடன் மேவு புயவேலா !—குகநாதா !
கட்டழகி யான திருமாயோன்
கட்டியணை மாது மருகேசா !—செகநாதா !
அட்டதிசை சூழு முயர்கோடார்
அத்தர்கயி லாசர் நிகர்தோகை—மலையோனே !

75. சூதுவி ளைத்திடு மாபெலன் உற்றிடு
சூருயிர் பட்டிட—செயும்வேலா !
மாதுகு றக்குடி வேடுவர் பெற்றவள்
மாலொடு நித்தியம்—புணர்லோலா !
தாதுகள் மொய்த்திடு நீபம லர்ப்புய !
தாரணி யெற்கர !—குகவேளே !
‡ மோதுப வக்கடல் சூழ்சிகி பொற்கிரி
மூவரெ னத்தொழ—வளர்வோனே !

---

73. பத்மமின் - பதுமத்தின். பத்மம்+இன் எனக்கொள்க. சந்தம் நோக்கி இவ்வாறு நின்றது. 'துள்வு' 'துள' என நின்றது.

தோகை - சிகிமலை.

74. [ ] இதன் உருவம் சரியாகத் தெரியவில்லை.

உயர்கோடு ஆர் - உயர்ந்த சிகரங்களையுடைய. அத்தர்-சிவபெருமான். கோடார் கயிலாசம் என இயைக்க; 'கோடார் தோகைமலை' எனவும் கொள்ளலாம்.

75. எற்கர ! - ஒளிபொருந்திய கையனே !

‡ மோதுபவக்கடல் சூழ் சிகி பொற்கிரி என்பது பொருத்தமில்லை. 'மோது மலைக்கடல்' என்றிருக்கலாம்.

வேறு

76. கறையிலகிய திருக்கண்டர்
உமையவள்புணர் திருச்சங்கர்
கமழ்மலரணி புயத்துங்கர்—நலமேசேர்
பிறையிலகிய கனச்செஞ்ச
டைகளிலகிய வருக்கன்பு
பெறவருகுக ! எனக்கின்பம்—அருளாயோ ?
[மறையிலகிய திருப்புண்டதனை
அருளதென்றும்
வருபவர்பணி மணிப்பைம்பொன்—மணிதாளா !]
சிறையிலகிய மயிற்கந்த !
இனிவரமருள் மிகுத்தங்க
சிலைதனைநிகர் சிகிக்குன்றை—மலைவேலா !

வேறு

77. மதிபுனை சடையார் கயிலையின் மலையார்
வடிவுள வுமையாள்—தனையேசேர்
நதிபுனை யரனார் திரிபுர தகனர்
நலமிகு மிறைபா—லகவேளே !
ததிதிரு டியமால் கலைதிரு டியமால்
சகமள விடுமால்—மருகோனே !
நிதிதமிழ் தருவாய் ! குறமகள் கணவா !
நிலைபெறு சிகிமா—மலையோனே !

வேறு

78. சித்தராய் வந்த முதல்வோர்
சிற்பரா னந்த வடிவோர்—பரமானர்
பத்தராய் வந்த வரனார்
பச்சைமா லன்று அறியா—இருதாளார்
முத்தராய் வந்த சிவனார்
முத்தியே தந்த இறையார்—தருபாலா !
கர்த்தராய் வந்த குகனே !
கற்சிகா குன்றை மலையா !—முருகோனே !

---

76. [ ] மூன்றுமடியின் உருவம் விளங்கவில்லை.

தங்க சிலை : மேருமலை.

வேறு

79. காரைநிகர் குழலாள் பூவைநிகர் சரணாள்
காமமிகு குறமான்—அணைதோளா!
மேரைநிகர் முலையாள் வாசமிகு குழலாள்
வேதமெனு மிடையாள்—உமைமானாள்
வார்ரையணி மடவாள் தேவிதிரி புரையாள்
வாலைகும ரிமினாள்—அருள்பாலா!
சூரையட ரயிலாய்! ஆடுமயில் முருகா!
தோகைமலை தனிலே—வளர்வோனே!

வேறு

80. சத்திதனை முனமே யுத்தமிடு மசுரோன்
சட்டகம தனிலே—எயும்வீரா!
அத்திதனை யணிவோர் விர்த்திபெறு கிரியார்
அத்துவித முடிவாய்—வருவோர்பால்
பத்தியுடன் வளர்மான் மத்தகெச முலையாள்
பத்மமகள் பணிமான்—அருள்பாலா!
சித்தியுள குமரா! இப்பவர மருள்வாய்!
சித்ரமிகு சிகிமா— மலையாளா!

வேறு

81. வாச நீபமா மாலை சூடுவோய்!
வாக தாகவே தோகை மீதிலே—வருவாயோ?
தேச மீதிலே வாழ்வு ளோர்களே
தேடு பாதனே! தேவர் நாயகா!—அருளாயோ?
நாச மாகவே சூரன் மீதிலே
நாடி வேலையே[....]—எயுவோனே!
ஈசர் பாலகா! வாழ்வை நீசெய்வாய்!
ஏக நாயகா! தோகைமேரிலே—வளர்வோனே!

வேறு

82. இச்சை யதிகரு றத்தி நாயகி
யிட்ட முடன்மரு வற்பு தா! அருள்—உதவாயோ?
பச்சை மயில்தனில் நித்ய மேவரு
பத்தர் பணிபுரி கர்த்த னே! அயில்—அணிவீரா!
செச்சை யிலகுபு யத்த னே! செய்த
செப்பு முலையுமை புத்ர னே! தமிழ்—உதவாயோ?
நச்சை யுயரர விற்ப ணுமுடி
நத்து சிகிமலை யிற்கு லாவிய—முருகோனே!

---

81. [...] விடப்பட்டுள்ளது. 'மோது போரிலே' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

### வேறு

83. மயிலேறிய குகநாயக! வரதா! நல முதவாய்!
மகமேபுரி யிமையோர்புகழ் வனுமேபணி குமரா!
குயிலாகிய மொழியாளுயர் கொடியாகிய விடையாள்
குடமாமுலை வடிவேயுள குறநாயகி! கணவா!
ஒயிலாயடி யவரேபணி உமைமாதிரி புதல்வா!
உடனேவர மடியேனிட முதவாய்! சர வணனே!
வெயிலார்மல ரணிமாபுய! விதிமால்புகழ் சிகியா
மிகுமாமலை தனிலேவளர் குமரா! அருள் துரையே!

### வேறு

84. கொஞ்சப் புத்தி நினைத்திடு சூருயிர்
கொன்றப் பச்செய முற்றிடு வேலவ!—குருநாதா!
வஞ்சச் சத்துரு மற்புய ராவணன்
மண்டைக் குக்கணை தொட்டிடு ராகவன்—மருகோனே!
கஞ்சத் திற்றின முற்றிடு நான்முகன்
கண்டர்ச் சித்திடு வித்தகர் மேவுறு—புதல்வோனே!
மிஞ்சச் சித்திகள் நித்திய மேபணி
விந்தைப் பொற்கொடி யுற்றசி காமலை—முருகோனே!

### வேறு

85. வாலைதிரி புரையாள் கானமயி லனையாள்
வாசமிகு மலர்சூ—டியமானுள்
வேலையெதி ரெதிரே தான்முன்வரு மசுரோன்
மீதில்விடு குமரா!—அருளாயோ?
ஓலையணி குறமான் மேவுகுரு பரனே!
ஓதுதமி ழருள்வாய்!—குகவேளே!
மாலையணி புயனே! தோகைமயில் முருகா!
வாகுதிகழ் சிகிமா—மலையோனே!

### வேறு

86. வணத்தி லுற்றிடு வேடுவ ரேதரு
மகிழ்ச்சி யுற்றிடு நாயகி யேபுணர்—புயவோனே!
சினத்தி லுற்றிடு சூருட னேயெதிர்
செயித்த சத்தியை நாள்தொறு மேயணி—கரவேளே!

---

84. இது சந்தவிருத்தம். புகழ்வனும்: புகழ்வோனும். 'மிகு சிகியாம் மலை' என்க.

85. அப்பசெயம் உற்றிடு: அப்ப ∘ அப்போது.

அனத்தி லூற்றிடு நான்முக னர்தின
மடுத்து நித்திய மேபணி யீஸ்வரர்—தருபாலா!
கனத்தி லுற்றிடு மாமயி லா! அருள்
கதித்த நற்சிகி மாமலை வாழ்வுறு—குகவேளே!

## வேறு

87. கோகன கத்திரு மாது மேவிய
கூர்படை யுற்றிடு மாய னருட—மருகேசா!
கோடிம திச்சடை வேணி யாருயர்
தோல மிகுக்கயி லாச ஈஸ்வரர்—நலமேசேர்
மாகம திற்றினம் வாழு வோர்தெய்வ
வாசவ னப்புய மீதி லேவளர்—மறையோனே
மாநில முற்றவர் யாரு மேபணி
மாகமுல் வித்தக! நீயி நாளருள்—உதவாயோ?
யாகம்வி ளைத்திடு சூர னுருடன்
ஆகம ரைப்புரி வீர னே! இனி—[...]
யாரெனை ரட்சியு நாத னே! நவ
மானப டைத்திரள் வீர னே! வர—முதவாயோ?
சேகர முற்றிடு கோடு சேருயர்
சீர்கள்ப டைத்திடு தோகை யாகிய—[....]
சீர்மிகு வெற்பினில் நாளு மேவளர்
தேவர்க ளுக்குயர் தேவ னே! செக—மகிபாலா!

## வேறு

88. மகத்தில் மிஞ்சிய மாமுனி வோர்நல
மகிழ்ச்சி யுந்திய வானவ ரேபணி—இருதாளா!
செகத்தில் மிஞ்சிய ஞானவ ரேபணி
திடத்தில் மிஞ்சிய வேலவ னே! செய—குமரேசா!
சுகத்தில் மிஞ்சிய வேடமி னள்புணர்
துரைக்கு கன்! க்ருபை யாவையு மேயினி—உதவாயோ?
அகத்தில் மிஞ்சிய சூருட னேயெதிர்
அமர்ச்செய் குன்றையின் மாமலை மேவிய—குகவேளே!

---

87. மாகம் - வானுலகு. 'அம்புயம்' என்பது 'அப்புயம்' எனச் சந்தம் நோக்கி நின்றது. மறையோனே : ஏ : எண்ணிடைச் சொல்.

[...] இக் குறியிட்ட இடங்களில் ஏடு முறிவால் சொற்களில்லை. முறையே, 'அருளீவார்' 'பெயர்மேவு' என்னும் சொற்களைச் சேர்த்துப் படிக்கலாம்.

88. ஞானவர் - ஞானிகள். துரைக்குகன் : விளி.

வேறு

89. தோகைமயின் மீதிலே தேவிகுற மாதுமே
சோடியொடு வா! ஐயா!—குகவேளே!
வாகைபுனை வேலவா! சூரொடெதிர் வீரனே!
வாசமலர் நீபமே—புனைமார்பா!
ஓகைபுனை நாதனே! தேவியுமை பாலகா!
ஓதுதமிழ் நீ செய்வாய்!—அமரேசா!
பாகைநிகர் மாசொலா! தோகைமலை நாதனே!
பார்கள்பணி பாதனே!—குமரேசா!

வேறு

90. சொல்லைப்பயில் ஸ்வாகத மாமொழி
சொன்னக்கிளி யாகிய மீறிய—தனமானள்
வில்லைச்சரி யேசொலும் வாணுதல்
விண்ணிற்பொலி சீர்மதி யானன—முகமானள்
அல்லைச்சம ராடிய கார்குழல்
அன்னத்துட னேநடை யேபயில்—குறமானள்
புல்லைப்புய! வேலவ னே! அருள்!
பொன்னிக்கொடி சேர்சிகி யாமலை—முருகோனே!

வேறு

91. கொச்சைக் குறப்பெண் மணவாளா!
கொட்டுக் கிணத்தின் மூலமானு—ளிடமேசேர்
நச்சைத் தரித்த மிடறூர்சீர்
நத்துக் கரத்தி னரனுரே—தருபாலா!
செச்சைப் புயத்த! அமரேசா!
சித்ரத் தமிழ்க்கு வுயர்தேவே!—குகவேளே!
இச்சைக் கிசைத்த இருதாளா!
எற்குச் சணத்தி லருள்தாராய்!—சிகியாளா!

வேறு

92. கந்தக்கம லாசன னுருயர்
கம்புக்கர மாயவ னரிவர்
கங்கைச்சடை மாமுடி சீர்கழல்—அறியாதார்
இந்தைத்தரி வேணியி னர்வெளை
யென்பைத்தரி யீசுர னர்தரும்
எங்கட்கொரு நாயக மே! குரு—பரவேளே!

---

90. புல் ஐ புய!—தழுவும் அழகிய தோளனே!

92. கம்பு - சங்கு. இந்து - சந்திரன்.

சந்தத்தமிழ்.பாடவு மேயருள்
சங்கத்தலை வா! கும ரா! நல
சங்கக்குழை வேடமி ஞள்புணர்—இருதோளா!
இந்த்ரப்பிர மாதிப ரேபணி
இந்தத்தல மீதினி லேவளர்
என்றுற்றிடு தோகையின் மாமலை—வளர்வோனே!

வேறு

93. [செந்திமலை வாசர் குறிஞ்சிநக ராளர்]
செங்கமல மலர்வாழ்—அயன்மாயோன்
வந்திருவர் பணியே புரிந்தஇரு சரண!
மங்கை[...]குறமான்—அணைதோளா!
கொந்திலகு மலர்மா கடம்பையணி புயனே!
கொங்கையுமை தருபா—லக! வேளே!
நந்திலகு வயல்சூழ் சிகண்டிமலை முருகா!
நம்புமெனை யினியா—தரியாயோ?

94. சுந்தர னுக்குமுன் சந்து நடந்திடு
சுந்தர ரன்புறும்—இருதாளார்
கந்தமி குத்திடு கொன்றை யணிந்தவர்
கங்கைய ணிந்தவர்—தருபாலா!
செந்தமி ழைச்சொல என்றன்முன் வந்தருள்!
செங்கையி லங்கிய—வடிவேலா!
சந்தமி குத்திடு குன்றையில் வந்தருள்
சங்கர! சண்முக!—குருநாதா!

வேறு

95. கொத்து மலரணி மற்பு யவசல!
கொத்து மயில்மிசை நித்யம் வருகுக!—அருளாயோ?
குத்து முலையுள பத்ம மலர்முக!
கொப்பை யணிகுழை நற்கு வர்மகள்—புணர்தோளா!.
வித்து ருமவிதழ் சத்தி யெனும்விழி
விற்பொ ருதும்நுதல்முப்பு ரமதெரி—செயுமானுள்
நத்து திருமக! இப்ப அருள்புரி
நற்சி கியின்மலை சத்தியணிகர—தலவேளே!

---

92. 'என்றும் உற்றிடு தோகையின் மாமலை' என்க.

93. [ ] சந்தமும் பொருளும் பொருந்தவில்லை. 'செந்திமலை யரசே! குறிஞ்சிநில இறைவா!' எனப் படிக்கலாம். செந்திமலை முருகா என்பர் பின்னும் (178) [...] இடையில் ஒரு நிரையசை சேர்த்தல் வேண்டும். 'மங்கையெழில் குற மான் என்று படிக்கலாம்.

வேறு

96. சித்துவிளை யாடிவரு நற்கயிலை யாதிபதி
சிற்பரம நாதரருள்—புதல்வோனே!
நத்துதனை யேயணியும் அச்சுதர்து ழாயையணி
நச்சரவி லேதுயில்வர்—மருகோனே!
குத்துமுலை யாள்குறம! டக்கொடியை மேவுபுய!
குட்டிமயி லேறிவரு—குகவேளே!
முத்துவிளை மாவயல்கள் சுற்றுசிகி மாமலைய!
முத்தமிழை நீயெனிட—முதவாயோ?

வேறு

97. பங்கய முற்றிடு மங்கைம டக்கொடி
பந்துமு லைக்கைய முங்கவ ணைத்திடு—செயமாயோன்
லெங்கைய ழித்தவர் மங்கள முற்றவர்
ரொம்பம கிழ்ச்சிகொள் துங்கமு யர்த்திடு—மருகோனே!
கங்கைத ரித்தவர் அங்கத முற்றவர்
கஞ்சன்மு டித்தலை வென்றவர் பெற்றிடு—புதல்வோனே!
மங்கைகு றத்திம ணந்திடு வித்தக!
மங்குல்க ளுற்றசி கண்டி மலைக்குரு—பர! வேளே!

வேறு

98. கயிலர்ச மலைவாசர் மதிசூடு சடையாளர்
கருராவை யணிமார்பர்—தருபாலா!
குயிலான மொழிமாது வனமீதில் வளர்மாது
குறமாது புணர்வாக!—வடிவேசேர்
மயிலான பரியாள! எனையாள முனமாக
வருவாய்! த யவதாக—முருகோனே!
அயிலா! ம துரமான தமிழ்பாட வருளேசெய்!
அழகான சிகிமேரில்—வளர்வோனே!

வேறு

99. கல்லைப் பெண்ணுரு வாகவு மேமிதி
கன்னிப் பொன்னியை மேவிய மாலுட—மருகோனே!
சொல்லைச் சொல்லுசு வாகத மேநிகர்
சொல்லிற் கொன்னிய வேடமி ளைப்புண—ரிருதோளா!

---

97. அங்கதம் - பாம்பு.

98. கருரா: கரு அரா என்பதன் விகாரம். 'மதிரா அணி வேணியர்' என்பர் பின்னும் (447).

99. சுவாகதம் - கிளி. கொன்னிய சொல்லில் - திருந்தாத சொல்லையுடைய.

வல்லைப் பண்ணிய மாதன மாதரி
வன்னச் சென்னியில் மாமுடி சேருமை—தருபாலா!
முல்லைப் பல்லிய ராசையை நீதவிர்!
முன்னைச் சன்னிய ராய்சிகியாமலை—முருகோனே!

வேறு

100. வுன்னமயி லேறியே யென்னிடம தாகவே
மன்னவரு வாய்! குகா!—குமரேசா!
தென்னர்முடி சூடியே தன்னரசு வாழுமான்
சின்னவிடை நீலியாள்—தருபாலா!
நன்னயம தாகவே துன்னுவன மீதில்வாழ்
நன்னுதலின் வேடமான்—அணைபாலா!
செந்நெல்விளை நேமனே! சொன்னமதை நீ செய்வாய்!
திண்ணமிகு தோகைமா—மலையோனே!

வேறு

101. அட்டதி சைப்புவி யாளு மாபெலன்
அற்புத லட்சண மான சூருடன்—எதிர்வீரா!
வட்டமு லைக்குட மாது பூமகள்
மற்புய மத்தினில் மேவு மாயவன்—மருகோனே!
துட்டரெ னத்திரி மூவர் மேலமர்
தொட்டுந கைத்திடு நாத ஞருட—புதல்வோனே!
சிட்டனெ னக்கருள் யாவு மேயருள்!
சித்துவி ளைத்திடு தோகை மாமலை—முருகோனே!

வேறு

102. பிறையைத் தரித்த சடையார் கயிலைக் கிரிக்குள் வளர்வோர்
பிணையைத் தரித்த கரனார்—விடமாமோர்
கறையைத் தரித்த மிடறுர் மணநற் கடுக்கை யணிவோர்
கருணைக் கிசைத்த புதல்வா!—குமரோனே!
மறையைத் தரித்த அயனார் புகழச் சுதற்கு மருகா!
வரமெத்த இப்ப வருள்வாய்!—குகவேளே!
சிறையைத் தரித்த மயிலா! குமரிக் குறத்தி கணவா!
சிகிநற் கிரிக்குள் வளர்மா—முருகோனே!

வேறு

103. மதிசூடிய சடைநாயகர் கயிலாசமென் மலைமேல்வளர்
வடிவேயுள பரனுருட—இடமேசேர்
துதியேபுரி யிமையோன்மகள் அயிலாகிய இணைமாவிழி
துரைமாதரி யுமைநாயகி—புதல்வோனே!

கதியேயுள மயிலேறிய குகனே! அருள் தருவாயினி
கமழ்நீபமென் மலர்மாலிகை—அணிமார்பா!
பதியோர்பணி குமரா! அருள் தமிழாவையு மினியே
[செய்வை!
தருசூழ்சிகி மலைமீதினில்—வளர்வோனே!

வேறு

104. சித்த ரெனவருவோர் முத்தி தனையருள்வோர்
சிற்ச பையினடமே—புரிவோர்பால்—வளர்மானுள்
வித்த கிமெனகையாள் கொற்ற வைமினுமையாள்
விர்த்தி பெறுபுதல்வா!—குகவேளே!—அருளாயோ?
பத்தர் பணிசரண! வித்தை தனையருள்வாய்!
பட்ச முடனெனையாள்!—குமரேசா!—செகநாதா!
சத்த மிடுகடல்சூழ் நற்சி கிரின்மலையா!
சத்தி யணிகரனே!—முருகோனே!—சிகியாளா!

வேறு

105. காருற்ற குழல்நாயகி பூவுற்ற திருவாளன
காமக்கு றமினுள்புணர்—இருதோளா!
பாருற்ற அடியார்பணி தேவர்க்கு ளுயர்நாயக!
பாமெத்த வினியேசெய்வை!—குகநாதா!
தாருற்ற புயனே! அருள்! போருற்ற அடல்வேலவ!
தாவித்தி ரியுமாமயில்—முருகோனே!
மேருற்ற சிகிமாமலை மீதிற்கு லவிவாழ்பவ!
வீரத்தி லுயர்வேலணி—குமரோனே!

வேறு

106. காருற்றிடு கானம தேவளர்
காவற்குற நாயகி யாள்புணர்—இருதோளா!
வாருற்றிடு பூமுலை மாதரி
வாலைக்கொடி நாயகி யாளருள்—புதல்வோனே!
சீருற்றிடு வானம தேவளர்
தேவர்க்கொரு நாயக னே! அரு—ளுதவாயோ?
தாருற்றிடு மார்புய னே! குக!
தாமுற்றிடு தோகையின் மாமலை—வளர்வேலா!

வேறு

107. (திருமாது பு)ணர்தோளர் கடல்மீது துயில்மாயன்
துளவாப ரணமார்பர்—நலமேசேர்
(பொருநா)வ ணனையேவெல் பணிமீது நடமேசெய்
புகழ்மாயன் மகிழ்சீர்கொள்—மருகோனே!
(செருமேவி) யெதிர்சூரன் உரமார்பு இருகூறு
செயும்வேலை யணிவீர!—முருகோனே!
(தருமேவு நக)ராள! அடியேன்மு னருளேசெய்!
தமிழ்நாவ லவ! தோகை—மலையாளா!

வேறு

108. வித்தை தனையருள்வாய்! விர்த்தி பெறுகுகனே!—குருநாதா!
முத்தை நிகரெயிறுள் மொட்டு மலருமையாள்—அருள்பாலா!
சித்தை யுரைபவனே! சிற்றி டையின்மயிலாள்—குறமானுள்
தத்தை புணர்புயனே! சத்தி சிகிமலையா!—குமரேசா!

வேறு

109. கடம்பை யணிபுயனே! சிறந்த முருகையனே!
கனன்று எதிருறுசூர்—உடல்மீதே
அடன்று அயில்தனையே யெறிந்த குருபரனே!
அதிர்ந்த நடமயிலா!—குகவேளே!
நடஞ்செ யரனுடனே பிணைந்த வுமைமகனே!
நலஞ்செய் தமிழ்தனையே—உதவாயோ?
மடந்தை குறமகள்சேர் நிறைந்த புயசயிலா!
வரஞ்செய் சிகிமலைமேல்—வருலோலா!

வேறு

110. வண்டடத்தன மேபுரி சூருடன்
சண்டச்சம ரேசெய்து வேல்தனை
மண்டுற்றெறி நாயக னே! சர—வணவேளே!
கண்டக்கறை யீஸ்வரர் தாதுயர்
தும்பைக்கதிர் மாலிகை சூடிய
கங்கைச்சடை வேணிய ரேதரு—புதல்வோனே!

---

107. நகவலைவில் உள்ள இடங்கள் ஏடு ஒடிந்தழிந்த பகுதிகள்; ஒருவாறு செப்பனிடப்பட்டுள்ளன. தருமேவு நகர்: அமராவதி.

108. உரைப்பவனே என்பது சந்தம் நோக்கி உரைபவனே! என நின்றது. 'அறைபவனே!' 'மொழிபவனே'! என்பவற்றுள் ஒன்றிருத்தல் அழகிது.

துண்டைப் பிறை யாகிய மாநுதல்
விம்பத்தினை யேநிகர் சேயிதழ்
சொந்தக்குற நாயகி மேவிய—இருதோளா!
கொண்டற்படி கோடுயர் சீருயர்
மண்டித்தின மேவளர் காவுயர்
**குன்றைக்கிரி** மீதினி லேவளர்—குருநாதா!

**வேறு**

111. நச்சுக் கடைவிழியாள் முத்துக் கெதிரெயிறுள்
நத்துக் கிணைமிடறுள்—குறமானுள்
[கச்சுத் தனமதிலே மெத்தக் கையினுலே]
கட்டிப் புணர்குகனே!—முருகோனே!
மொச்சுத் தினமரியே சுற்றித் திரிமணமார்
முக்யப் படமலர்சூ—டியமார்பா!
எய்ச்சுப் புறமிடுசூ ரைக்கொற் கதிரயிலா!
இச்சைப் **படுகிசிமா—மலை**யாளா!

**வேறு**

112. போரைப்புரி ராவண னுருயிர்
போகச்சம ராடிய மாயவன்—மருகோனே!
தாரைத்தரி யாறிரு மாபுய!
சாடைக்குற நாயகி மேவிய—இருதோளா!
சூரைக்கொ லும் வேலவ னே! குக!
**தோகைக்கிரி** மீதினி லேவளர்—குருவேளே!
சீரைத்தரி மாமயில் வாகன!
தேவர்க்குயர் தேவசி காமணி!—முருகோனே!

**வேறு**

113. செந்தா மரைமலர் வாச நான்முகன்
வண்டார் துளபமென் மாலை மாயவன்
சிங்கா ரமதுள தேவ ரானவர்—தினமேதான்
வந்தே பணிபுரி பாதனே! அருள்
தந்தே நிதமெனை யாளை யா! குக!
மங்கா மயில்தனி லேறி யேவரு—செயவேளே!

---

110. விம்பம் - கொவ்வை.

111. மொய்த்து என்பது மொச்சு என நின்றது. [ ] "கச்சுத் தனமதையே மெத்தக் கரமதிலே" என இருப்பின் சந்தம் பொருந்தும். அரி - வண்டு.

112. 'மாபுய' என்றவர் 'இருதோளா' என்று திரும்பவுங் கூறுகிறர். 'மலர்மார்பா' எனக் கூறல் நேரிது.

வேறு

த்து பரிமயிலா ! வித்தை தனையருள்வாய் !
சத்தி யணிகரனே !—குகவேளே !
ாத்து அரவுதயா ரித்த முடியரனுர்
கொத்து இதழியதே—புனைவோர்பால்
து முமையவளே பெற்ற கனபுதல்வா !
நட்பி னுடனென்முனே—வருவாயோ ?
த்து ருமவிதழா ! அத்த மதையருள்வாய் !
வித்த க ! சொல்சிகிமா—மலையோனே !

வேறு

த்துவி ளைத்தவனே ! வித்தைப டித்தவனே !
சிற்சபை யுற்றவனே !—நலமேசேர்
த்துரு மக்கனிநேர் பொற்பித மூற்றவனே !
வித்தகி பெற்றவனே !—அருளாயோ ?
து த ரித்திடுமா லைப்புணர் பொற்கொடியாள்
நட்புயர் பொற்புயர்சீர்—மருகோனே !
துரு வைக்கொ லும்வே லுற்றகை யற்புதனே !
சற்குண ! நற்சிகிமா—மலையோனே !

வேறு

ச நீபமா மாலை சூடுவோய் !
வாகு மேவுசீர்—மயிலாளா !
ச மீதிலே வாழ்வர் தேடுவோய் !

வேறு

117. வனத்தி லுற்றிடு வேடமி னளொடு
மகிழ்ச்சி யுற்றிட வேயியல் பாய்மரு—வியதோளா!
அனத்தின் மிச்சம தாய்நடை யேபயில்
அருட்செய் வித்தகி பாகம தேவளர்—அரனரே
சினத்த நச்சர வேயணி வேணியர்
திருச்ச பைக்குண்முன் ஆடிய ஈஸ்வரர்—தருபாலா!
மனத்தி லிச்சைய தாயரு ளேசெய்வை!
மணிச்சி கிக்கிரி மீதினி லேவளர்—குருநாதா!

வேறு

118. வீர னனசூர் மார்பி லேமுனள்
வேக மாகவே வேலே யேவுபார்—புகழ்வீரா!
சார மாகவே பார்வை நீசெய்வாய்
சாமி! சேவலா! தாக மாகவே—குகவேளே!
பார மானசீர் தோகை வாகன!
பாவை வேடமான் மீதி லாசையே—புரிலோலா!
தார நீபனே! தோகை மேரிலே
தானெ நாளுமே வாழு நாதனே!—முருகோனே!

வேறு

119. கனகக்கிரி மீதினி லேவளர்
கருணைக்கட லாகிய ஈசுரர்—தனையேசேர்
வனசத்திரு வேபணி யீஸ்வரி
மகிழற்புத மாகிய பாலக—குகவேளே!
பனகத்தினி லேதுயில் மாலுயர்
பருதித்திரு மாயவ னருட—மருகோனே!
தனமெத்தவு நீயருள் வாய்!நல
தமிழ்மெத்தவு நீயருள் வாய்!சிகி—மலைநாதா!

வேறு

120. கஞ்சநான் முகனுர் அண்டர்வா னவனுர்
கண்டுநாள் தொறுமே—பணிபாதா!
பஞ்ச வானனுர் செஞ்சடா தரனுர்
பங்கில்வாழ் வுறுமான்—அருள்பாலா!

---

117. அனத்தின் மிச்சமதாய் - அன்னத்தினும் மேலாக. (உலக வழக்கு)

118. தோகை மேரிலே: மேருவிலே - மலையிலே. 'எந்நாளுமே' என்பது நாளுமே என நின்றது.

வஞ்சஞ கிப்சூர் என்றுவா முசுரோன்
மங்கிவீ ழிடவே—தொடுவோனே !
தஞ்சசீ யெனையாள் ! குன்றைமா மலையா !
சங்கநா வலனே !—குகவேளே !

வேறு

121. சத்தி தனையெதிரா யுற்று வருமசுரோன்
சட்ட கமதனிலே—விடுவோனே !
பத்தி யுடனினையே யற்பி ஞெடுபணிசீர்
பத்த ரிடம்வெகுவாய்—அருளாயோ ?
நித்ய சுபகரமே பெற்ற குறமகள்சேர்
நித்ய செயமிகுமா—புயவேளே !
அத்தி முனம்வருவோ ருக்கு மருமகனே !
அற்பு தசிகியின்மா—மலையோனே !

வேறு

122. சிற்சபையி லாடுமரன் நச்சரவு சூடுமரன்
சித்தனென வாகுமர—னிடமேசேர்
அற்புதமென் மாமலரி னித்யமுறை மாபரவும்
அட்டதிசை யோர்பரவும்—உமைபாலா !
மற்புயவம் மாவினுயிர் பட்டிடமுன் வேலுதவு
மத்தகச மாமுலையர்—புணர்தோளா !
பொற்கிரியை நேர்சொலுயர் அற்புதசி காமலைய !
பொற்குமர ! நீயருளை—யுதவாயோ ?

வேறு

123. வண்ணச்சிறை மயில்வாகன !
பண்ணிற்றமிழ் சொலுபாவல !
மண்ணிற்பொலி யடியார்பணி—யிருதாளா !
கண்ணப்பன்மு னருளூனுணு
பின்னற்சடை யவர்பாலக !
கண்ணிற்பொலி யருளானென்முன்—விழியாயோ ?
நண்ணச்சம ரிடுசூருடன்
மின்னற்கதி ரயிலேவிய
நண்ணுற்றிடு பெலமாகிய—செயவீரா !
விண்ணத்திடு முடியேமிகு
குண்ணக்குடி மலைவேலவ !
மின்னற்கன நிதியாவையு—முதவாயோ ?

---

121. சத்திதனை விடுவோனே! என்று முடிக்க. சட்டகம் - உடம்பு.

### வேறு

124. சங்கத்தினி (லேயொரு) நாவல!
சந்தத்தமிழ் (பாடவு) மேஅருள்—உதவாயோ?
பங்கப்பழ னத்தினி லேவளர்
பைம்பொற்கத லிக்கனி மேல்வெகு—விசையாலே
துங்கக்கய லுற்றெழு மேன்மைகள்
துன்றக்கன வுற்றிடு நேசமின்—வளநாடா!
தங்கக்கிரி யைச்சரி யாகிய
சந்தச்சிக ரச்சிகி மாமலை—முருகோனே!

### வேறு

125. செந்தமி ழைத்தருவாய்! கந்தவ னத்தினில்வாழ்
செம்பவ ளக்கொடியாள்—குறமானுள்
கந்தம லர்க்குழலாள் கொங்கைஞெ முக்கிடவே
கண்டுவ ணைத்திடுமா—புயவோனே!
சந்தமு லைக்கொடியாள் அந்தரி வித்தகியாள்
சங்கரி பெற்றவனே!—குமரோனே!
கொந்தல ருற்றிடுகா உந்திப டர்த்திடுசீர்
கொண்ட சிகிக்கிரிமேல்—வருவேளே!

### வேறு

126. வஞ்ச மேபுரி கின்ற சூருடல்
மண்ட வேலதை யன்று ஏவிய—செயவீரா!
நஞ்ச ராவணி கண்ட நாயகர்
கங்கை மாதுமை தந்த பாலக!—குகவேளே!
கஞ்ச மாமல ரஞ்சு தாளினள்
கம்பு நேர்மிட றன்பு நாயகி—புணர்தோளா!
தஞ்சம் வேறிலை வந்து நீ க்ருபை
தந்து ஆதரி குன்றை மாமலை—முருகோனே!

---

124. நகவளவிலுள்ளவை சந்தத்திற்கு மாறுக உள்ளன. 'லுற்றிடு' 'கற்கவு' எனக் கொள்க.

125. ஞெமுக்கிட - அழுந்த.

126. கம்பு நேர்மிடறு - சங்கனைய கழுத்து.

வேறு

127. கயிலைக்கர சாகிய நாயகர்
கமணற்சடை யீஸ்வர னாரிடம்—வளர்மானாள்
குயிலைப்பொரு மாமொழி யாளுயர்
குமரிப்பெணி னாள்தர வேவரு—புதல்வோனே!
மயிலைப்பரி யாயதன் மீதினில்
வருவித்தக னே! குக னே! அரு—ளுதவாயோ!
அயிலைத்தரி மாபெல வா! திரு
அமர்சித்திர கேகய மாமலை—முருகோனே!

வேறு

128. கரும்பு நிகர்மொழியாள் சிறந்த குழைதனையே
கடந்த இணைவிழியாள்—நலமேசேர்
சுரும்பு வளர்குழலாள் மடந்தை குறமகளே
சுகஞ்செய் தொழிலுடனே—புணர்தோளா!
விரும்பு அடியனையே! கறங்கு கடல்தனிலே
மிகுந்து துயில்புரிமால்—மருகோனே!
அரும்பு மலர்மணமார் கடம்பை யணிபுயனே!
அலர்ந்த சிகிமலையா!—குமரோனே!

வேறு

129. தத்து பரிமயிலா! வித்தை தனையருள்வாய்
சத்தி யணிகரனே!—குகநாதா!
வித்து ரும்விதழாள் மொய்த்த குழல்மடவாள்
விற்பு ருவநுதலாள்—குறமானாள்
குத்து முலைதனிலே மெத்த வணைகுமரா!
கொத்து மலரணிமா—புயவோனே!
அத்து விதமுடிவே! நித்த மென்முன்வருவாய்!
அற்பு தசிகியின்மா—மலையோனே!

வேறு

130. கன்னல் நிகர்மொழியாள் வில்லை நிகர்நுதலாள்
கன்ன மடர்விழியாள்—நலமேசேர்
சொன்ன மலைமுலையாள் மின்னல் நிகரிடையாள்
துன்னு வனமடவாள்—புணர்தோளா!

---

127. கமணற்சடை: கமழ் நற்சடை. கேகயம் - மயில்.

128. 'அடியனை விரும்பு' என்க.

நன்ன யமதுளசி ருன்னு தமிழ்ருள்வாய்!
நண்ணி யடியன்முனே—வருவாயே!
வன்ன மயில்முருகா! சொன்ன மதையருள்வாய்!
வண்ணமிகு சிகிமா—மலையோனே!

வேறு

131. கச்சு புனைமுலையாள் பத்ம மலரடியாள்
கத்து கடலமுதே—நிகர்மானாள்
நச்சு விழியுளமான் பொற்பு மிகுகுறமான்
நத்தி மருவியவா!—குமரேசா!
விச்ர வசுமகன்மேல் தக்க வுயர்கணையே
விட்ட முகில்வணனர்—மருகேசா!
மெச்சு சிகிமலைமேல் நித்யம் வளர்குகனே!
வித்வ சனகுகனே!—அருளாயோ?

வேறு

132. [பெரும்பை யரவணிவோர் சுகந்த மிகுசடையார்]
பெதும்பை குறமகளாள்—புணர்தோளா!
சுரும்பை நிகர்விழியாள் மணந்த குழலுமையாள்
சுபஞ்செய் உமைதருபா—லக! வேளே!
அரும்பை யுயரெயிறுள் குரும்பை நிகர்முலையாள்
அணங்கு வுயர்தெய்வயா—னையின்வாகா!
கரும்பை யொளிமொழியாய்! மிகுந்த தமிழ்தருவாய்!
கணங்கொள் சிகிமலைவாழ்—குகநாதா!

வேறு

133. கொண்டனிற மேனியார் தந்திமுனம் நாடுவோர்
கொஞ்சுகிளி சீதையாள்—புணர்மாயோன்
அண்டர்பணி நாதனார் தண்டமணி பாணியார்
அன்புமிகு நீதிமால்—மருகோனே!
வண்டமிழை நீசெய்வாய்! மிஞ்சசுரன் மீதிலே
மண்டவயி லேவுமா—செயவீரா!
துண்டமதி சூடுவோர் மைந்த! மயில் வீரனே!
துங்கமிகு தோகைமா—மலையோனே!

---

131. விச்சிரவசு - புலத்தியன் மகன்; இராவணன் தந்தை.

132. பெரும்பை அரவு-பெரிய படமுடைய பாம்பு. [ ] பொருள் பொருந்த வில்லை. 'பெரும்பை யரவரையாள் சுகந்த மிகு குழலாள்' எனக்கொள்ளின்பொருந்தும்.

வேறு

134. நதியுற்ற சடையாளர் அரவுற்ற பணியாளர்
நலமுற்ற கயிலாச—ரிடமேசேர்
மதியுற்ற முகமாது எழிலுற்ற வுமைமாது
மணமுற்ற குழன்மாது—தருபாலா!
கதியுற்ற மயிலாள! அடியற்கு அருளேசெய்!
கதிருற்ற வயிலாள!—குமரேசா!
பதியுற்ற வடியார்கள் ககனத்தில் வளர்தேவர்
பணிசித்ர மிகுதோகை—மலையாளா!

வேறு

135. வட்ட மலைமுலையாள் பத்ம மலர்வதனள்
மட்டு லவுகுழலாள்—உமைமானுள்
இட்ட முடனரனுர் பக்க மதில்வளர்மான்
இச்சை யுடனருள்மா—புதல்வோனே!
துட்ட னெனவருசூர் பட்டு விழவெதிரே
சுத்த மிகுமயிலே—வியவீரா!
திட்ட முடனருள்வாய் வித்தை தனையினியே!
சித்ர மிகுசிகிமா—மலையோனே!

வேறு

136. வன்ன மயிற்பரியாய்! என்னை வளர்த்திடவே
மன்ன! எனக்குழனே—வருவாயே!
மின்ன லிடைக்கொடியாள் பொன்னி தனக்கிணையாள்
மின்னு நுதற்பிறையாள்—வடிவேசேர்
அன்ன நடைக்கழலாள் கிண்ண முலைப்பெணினுள்
அன்னை குறப்பெணினுள்—புணர்தோளா!
இன்ன மெனக்கருளே வண்மை மிகச்செய்குவாய்!
இந்நி லமுற்றசிகா—மலையோனே!

வேறு

137. தத்தி வருமயிலா! புத்தி யுடனடியார்
சக்ர தலமிசையே—பணிபாதா!
அத்தி யுரியுடையார் மொய்த்த சடையரனுர்
அர்த்த மதிபுனைவோர்—தருபாலா!

---

136. அன்ன நடைக் கழலாள்: கழல் வீரர்களணிவது: பெண்கள் காலணியாகக் கூறுவது பெரும்பாலும் மரபில்லை.

சத்தி தனையெதிர்சூர் பக்க மதில்விடுவாய்!
தத்தை குறமகளாள்—புணர்தோளா!
சித்தி புரிகுகனே! வித்தை தனையருள்வாய்!
சித்ர மிகுசிகிமா—மலையோனே!

வேறு

138. கும்ப முலையுமையாள் அம்பு லியின்வதனள்
கொண்ட னிகர்குழலாள்—நலமேசேர்
விம்ப நிகரிதழாள் கொஞ்சு கிளிமொழியாள்
விண்டு விறல்துணையாள்—தருபாலா!
கம்ப மிசைவளர்மா தங்க முகர்துணைவா!
கஞ்ச மலர்வதன!—அருளாயோ?
அம்ப ரமதனில்வாழ் தந்தி ரர்கள்முதலாய்
அண்டர் பணிசிகிமா—மலையோனே!

வேறு

139. சித்ரமயில் வாகன! வித்தைமிகு நாவலா!
சிற்சபையி லாடுவோர்—தனமானோர்
புத்ர! வரம் நீசெய்வாய்! சத்ருசெய வேலவா!
புட்பமலர் சூடுவோய்!—குகவேளே!
அத்திமுனம் நாடுவோ ருக்குவரு தேவியாள்
அற்புதமி னள்பொனள்—மருகோனே!
சத்தியணி பாணியா! பொற்புதனை நீசெய்வாய்!
சற்குண! கு கா! சிகா—மலையோனே!

வேறு

140. கயிலை மலைதனிலே அரசு புரியரனர்
கதிரு லவுமதிசூ—டியர்பாலா!
ஒயிலை யுயர்மயிலாள் இமய மலையரசே
உதவு முமையவளே—தருபாலா!
அயிலை யெதிர்வருசூ ரலற விடுகுமரா!
அருமை யொடுதமிழே—அருளாயோ?
குயிலை நிகர்மொழியாள் குறமி னணைபுயவா!
குக! சி கியின் மலைவாழ்—வடிவேலா!

வேறு

141. பங்கய மீதினிலே அன்புடன் வாழுமினள்
பண்புடன் மேவியமால்—மருகோனே!
செங்கையி லேயயிலே கொண்டுமு னேயெதிரே
சென்றசு ரோனுடல்மேல்—விடுவோனே!

138. தந்திரர் - கந்தருவர்.

கொங்கைமி னுள்குறமான் பங்கினில் வாழ்பவனே!
குன்றையின் மாமலைமேல்—வளர்வோனே!
மங்கையர் மால்கொளவே வந்திடு மாவடிவே!
வம்பவிழ் நீபமென்மா—லிகைமார்பா!

வேறு

142. கருத்தமுகின் மேனியான் நலத்ததிரு மேனியான்
கமழ்த்துளப மாலையோன்—மருகோனே!
விருப்பமுடன் வேடமான் மகிழ்ச்சியுட னுடமே
மிகுத்தணையி னசையாய்—அணைவோனே!
முருக்கினிதழ் மாதுமா பதிக்கினிய பாலகா!
முனைச்சமர்செய் சூரையே—கொலுநாதா!
திருக்குலவு தோகையா மலைக்குள்வளர் நாதனே!
சிறப்புமிகு தோகைவா—கன! வேளே!

வேறு

143. மச்ச நிகர்விழியாள் கச்சை யணிமுலையாள்
மட்டு லவுகுழலாள்—குறமானுள்
பட்ச மிகுமணைமேல் வைத்து வெகுமயலாய்
பத்ம முகமுலைமேல்—அணைதோளா!
நச்ச ரவையணிவோ ருக்கு மயல்விளைமான்
நத்து வரிதுணையாள்—தருபாலா!
அச்ச மிடவசுரோன் பட்டு விடவெலுவேள்!
அற்பு தசிகியின்மா—மலையோனே!

வேறு

144. மதிதாதகி சூடிய வேணியர்
நதிராவணி நாயக ஈசுரர்
மணிமாமுடி சேர்க யிலாசர்பொன்—மலையார்பால்
அதிமாலொடு நாள்தொறு மேவளர்
இமயாசல மீதினி லேவரும்
அடியார்பணி நாயகி யீஸ்வரி—தருபாலா!
விதிமால்முத லாகிய வானவர்
தினமேபணி யேபுரி வேலவ!
சிறைமாமயில் வாகன னே!அருள்—தருவாயே!
கதியாவையும் நீதரு வாய்! குக!
தமிழ்யாவையும் நீதரு வாய்! குக!
கனமாமணி சேர்சிகி மாமலை—முருகோனே!

---

142. 'கறுத்த' எனற்பாலது எதுகை நோக்கிக், 'கருத்த' என நின்றது.

143. நத்து அரி துணையாள் - சங்கேந்திய திருமாலின் தங்கை.

வேறு

145. மறக்கு லத்தினி லேவரு நாயகி
மகிழ்ச்சி பெற்றிட வேமலர் மாலிகை—புனைவோனே!
திறத்தெ திர்த்திடு சூருடல் கீறிய
திகழ்க்க டப்பமென் மாலிகை யேயணி—குக! வேலா!
அறச்சி றுத்திடு சீரிடை யாள்சிறை
அனத்தை ஒத்திடு மாநடை யாள்திரி—புரைமானுள்
சிறப்பு யர்த்திடு பாலகனே! அருள்
சிகிக்கி ரிக்குக! நீயருள் யாவையும்!—உதவாயோ?

வேறு

146. கச்சணி முலையாள் பத்மமென் மலராள்
கத்திகை தனையே—அணிமானுள்
மச்சமென் விழியாள் பொற்கிளி மொழியாள்
மட்டுயர் குழலாள்—உமைமானுள்
நச்சர வணிவோர் வெற்பினில் வருவோர்
நத்திடு புதல்வா!—குகவேளே!
இட்சண மடியே னுக்கருள்! குமரா!
எட்டிடு சிகிமா—மலையோனே!

வேறு

147. திரிபுரசங் காரன் உமையவள்பங் காளன்
திகழுயர்பைந் தாமன்—அருள்பாலா!
பரிவொடுநின் றேதான் நடமிடுதென் தோகாய்!
அடியன்முன்வந் தேதான்—அருளாயோ?
உரியகுரம் பேதான் பயில்பவள்சிங் காரீ
ஒருகுறமின் பாலே—வளர்தேவே!
அரிபிரமன் றூனே பணிசிகிவிண் டாளா!
அழகுளகந் தா! நீ—அருளாயோ?

வேறு

418. கஞ்சமா மலர்மேல் வந்தநான் முகனுர்
கண்டுநாள் தொறுமே—பணிபாதா!
வஞ்சமா யெதிர்சூ ரஞ்சவே விடுவாய்!
வந்துதா னருளே—தருவாயே!

---

147. முதலடியில் 'தனதனதந் தான' என வருஞ் சீர்கள் மற்ற அடிகளில் 'தன தனதந் தானு' என நீள்கின்றன. தென் தோகாய்!—அழகிய மயிலையுடையவனே! குரம்பை - சிறுகுடில்; குரம்பே எனச்சந்தம் நோக்கி நின்றது. சிகி விண்டு - மயில்மலை.

கொஞ்சநூல் இடையாள் மங்குல்சூழ் குழலாள்
குப்பமா முலையாள்—குறமானுள்
மஞ்சமீ தினிலே கண்டுசேர் பவனே!
மஞ்சுசேர் சிகிமா—மலையோனே!

வேறு

149. இருவைப்புணர் மாயவ ஞருயர்
செகமெச்சிய ராகவ ஞருட—மருகோனே!
பொருதுச்சம ராடிடு சூரொடு
பொருதுக்கொல வேல்தனை யேவிய—செயவீரா!
மருவுற்றிடு நீபம தாகிய
மலரைத்தரி மாபுய வா! சிறை—மயிலாளா!
தருவுற்றிடு தோகையின் மாமலை
தனினித்தியம் வாழ்பவனே! நலம்—உதவாயோ?

வேறு

150. பானத்தணி மாயவ ஞருயர்
பாகுற்றிடு மாமொழி மாதுட—மருகோனே!
கானத்தினில் வாழுமி ஞள்வெகு
காதற்குற நாயகி யாள்புணர்—இருதோளா!
வானத்துள தேவர்க ளேபணி
வாசக்கழ லாயருள் யாவையும்—உதவாயோ?
ஞானத்தவ ரேபுக ஞயக!
நானக்கமழ் சோலைகள் சூழ்சிகி—மலையாளா!

151. சீதச்சசி சூடிய வேணியர்
தேவிக்கவு மாரிஉ மாபதி—தருபாலா!
பாதப்பணி யேபுரி வானவர்
பான்மைப்பட வேவர மேயருள்—குகவேளே!
போதத்தவ ரேபணி வேலவ!
பூவைக்குற நாயகி மேவிய—இருதோளா!
வேதத்தனை யேசிறை மீதிடு
மேலுற்றிடு தோகையின் மாமலை—முருகோனே!

வேறு

152. கஞ்சமலர் நான்முகவன் கண்டுபணி மாசரண-முருகோனே!
வஞ்சமிகு சூருடல மண்டவிடு கூரயில—வடிவேலா!
தஞ்சமடி யேன்முனருள்! தந்திமுக ஞருடைய-துணைவோனே!
நஞ்சமிட ரூர்புதல்வ! நன்றுபுரி தோகைமலை—முருகோனே!

---

150. புகழ் + நாயக! = புகஞயக!

வேறு

153\. பொருப்பை நிகர்முலையாள் சிலைக்கு நிகர்நுதலாள்
புகழ்ச்சி யுள இமையா—சலமானுள்
கருப்பை வடிவுடையாள் துணைப்பெ ணுமைவடிவாள்
கனத்த கவுரிமினுள்—தருபாலா!
செருப்ப யில்செயசுரோன் உடற்கு எதிர்படவே
திகழ்ப்பொன் அடிவடிவேல்—தொடுவீரா!
மருப்பை நிகர்முலையாள் குறத்தி புணர்புயனே!
மகிழ்ச்சி யுயர்சிகிமா—மலையோனே!

வேறு

154\. வாசக்க டம்பையணி வாகுற்றி லங்குபுய!
வானத்தி லண்டர்பணி—இருதாளா!
நேசக்கு றம்பயிலும் ஆசைக்கி சைந்தகொடி
நேருற் றிலங்குகுற—மகள்பாகா!
நாசப்ப டர்ந்தெதிர்செய் சூரற்கு அன்றுமுனம்
நாடிக்க னன்றயிலை—விடுவோனே!
தேசத்தர் வந்துபணி கோடுற்ற அந்தமிகு
சீருற்ற குன்றைமலை—முருகோனே!

வேறு

155\. திருமகள் மருவிய பொற்பு பெற்ற மாயவன்
திகழொளி யிலகிய சக்க ரக்கை மாயவன்—எதிராக
பொருதிய அசுரர்கள் கட்டு விட்டு ஓடிட
புரையகல் பகழிதொ டுத்து விட்ட மாயுவன்—மரு
[கோனே
கருதிய தமிழ்நிதி யிப்பெ னக்கு நீயருள்!
கலைமதி தலையணி முத்தர் பெற்ற பாலக!—வடிவேலா!
அருமைக ளுடன்வரு பத்தர் நித்த மேபணி
அழகுள சிகிமலை வித்த கற்பு தா! சிறை—மயிலோனே!

வேறு

156\. வனமதி லிலகுகு றத்திப் பெ ணுள்தனை
மலரணை யதனில் அணைத்துப்ப ஞள்மரு-வியதோளா!
கனதனம் இலகிய சத்திக்கு மாரிமின்
கலைமதி புனைபவள் விற்கொக்கு மாநுதல்-உமைமானுள்

153\. கருப்பை வடிவு: கருப்பு ஐ வடிவு - கரிய நிறமுள்ள அழகிய வடிவு. கறுப்பு எனற்பாலது எதுகை நோக்கிக் கருப்புஎன நின்றது. மருப்பு-யானைக்கொம்பு.

155\. இப் பெனக்கு: இப்ப எனக்கு. வித்தகற்புதா! வித்தக அற்புதா!

156\. கலை மதி புனைபவள் - பிறை முடித்தவள்; சிவபிரான் செயல்சத்திக்கும் ஏற்பிக்கப் பெற்றது.

அனநடை பயில்பவள் பொற்புப்பொன் மாயவன்
அருமைகொள் துணையவள் கொற்றத்திரி சூலிசொல்—
எனஎன அடியனை ரட்சிப்ப தேகடன் [புதல்வோனே!
இசையுள மதுரித வித்தைக் குகா! சிகி—மலையோனே!

### வேறு

157. மதியணி சடையார் வடிவுள வரனு—ரிடமேசேர்
துதியுள வுமையாள் சுதனென வருமா—மயில்வீரா!
கதிதனை யருள்வாய்! கனதன மறமான்—அணைதோளா!
பதிபுகழ் முருகா! பருசிகி மலையாய்!—குகவேளே!

### வேறு

158. பாகை நிகர்மொழியாள் கோகனக அடியாள்
பாவை வடிவயிலாள்—நலமேசேர்
தோகை மயிலனையாள் காவில் வளர்குறமான்
(தூய அனநடையாள்)—மயலாளா!
ஓகை புனைஒயிலா! கூர்மை மிகுஅயிலா!
ஓது தமிழ்நிதியே—தருவாயே!
வாகை புனைபுயனே! மாவை வெலுபவனே!
வாகு திகழ்சிகிமா—மலையோனே!

### வேறு

159. செந்தாமரை நான்முக னேபணி
தெண்டாயுத பாணிய னே! க்ருபை—தருவாயே!
கொந்தாரித ணீப மென் மாலைய!
கும்பாயடி யாரிமை யார்பணி—யிருதாளா!
பந்தாமுலை யாள்கய மேவிய
பங்கேருக மானனை யாள்குற—மகள்பாகா!
வந்தாதரி நீயென்மு னுகவும்
மங்காதசி காமலை வாழ்வுறு—குமரோனே!

---

156. என என - என்ன என்று (வினவி). மதுரிதம் - இனிமை.

158. நகவேளவில் உள்ள பகுதி எட்டிலில்லாமற் சேர்க்கப்பெற்றது.

159. கொந்தாரித ணீபம்: கொந்து ஆர் இதழ் நீபம் - கொத்தாக நிறைந்த இதழையுடைய கடம்பு. கும்பு - தொகுதி (உலகவழக்கு).

வேறு

160. சிறந்த வனமீது வளர்ந்த கொடியான
திரண்ட முலைமாது—வடிவேசேர்
பறந்த அனமான நடங்கள் பயில்தேவி
பசந்த குறமாது—புணர்தோளா!
நிறந்த பொடிபூதி அணிந்த உமைபாகர்
நெளிந்த இடைமாது—உமைபாலா!
இறந்த அடியார்கள் பிறந்தி டவொறுத
இசைந்த சிகிமேரின்—மலையோனே!

வேறு

161. வனத்தேவரு வேடமி னள்தனை
[மயலாக்கவு] மேயுற வாடிய—செயவீரா!
சினத்தேவரு சூருட னேயெதிர்
செயித்தேவரு வேலவ னே! அரு—ளுதவாயோ?
மனத்தேவரு நோய்தனை யேதவிர்
மதுத்தேனுயர் நீபம தேயணி—புயவோனே!
கனச்சீருள கோடுக ளேயுயர்
கதிர்த்தோகையின் மாமலை மேவிய—குமரோனே!

வேறு

162. சந்தத்தமிழ் பாடிய நாவல!
சங்கத்தினில் மேவிய நாவல!—குகநாதா!
சொந்தக்குற நாயகி மேவிய
துங்கக்கும ரா! க்ருபை யாவையு—முதவாயோ?
நந்தத்தினை யேயணி பாணியர்
நஞ்சுக்குறை மாமிடர் பாலக!—முருகோனே!
அந்தச்சிறை மாமயில் வாகன!
அண்டத்துயர் கோடுயர் தோகையின்—மலையோனே!

வேறு

163. வனமீதினில் வாழ்பவள்
வடிவாகிய வேடமின்—அணைதோளா!
தனமாதரி யீஸ்வரி
தனையேபுணர் ஈசுரர்—புதல்வோனே!

---

161. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'மயக்கா வுள' எனப்படிக்கலாம். மயக்கா - மயக்கி (செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்).

162. நஞ்சுக்குறைமாமிடர்: நஞ்சுக்கு உறைவிடமாகிய பெருமைமிக்க மிடறு. மிடறு எனற்பாலது மிடர் என நின்றது சந்தம் நோக்கி. இத்தொடர், நஞ்சுக்கறை என நிற்பின் நஞ்சு தங்கியதனாற் கறைபொருந்திய மிடறு என அமையும். அந்தச்சிறை - அழகிய சிறகு.

மனம்வாழ்மிடி நோய்தவிர்
வரதா !சிறை மாமயில்—முருகோனே !
கனமேவிய கோடுயர்
கதிர்சேர்சிகி மாமலை—வளர்வோனே !

வேறு

164. சிறைமயில் வாகன ! திறமிகு சூரனர்—உடல்மீதே
குறைபட வேலையே குருதிக ளோடவே—யெறிவீரா !
நிறைவர நீசெய்வாய் ! நிமலர்சொல் பாலகா !—குகவேளே !
மறைபுகழ் நாவலா ! வரமருள் தோகைமா—மலையோனே !

வேறு

165. பொருப்பை நிகர்முலையாள்
புகழ்ச்சி யுளமறவோர்—தருமானள்
விருப்பொ டணைபுயனே !
மிகுத்த நிதிதமிழே—தருவாயோ ?
மருப்பு லவுமுலையாள்
மகிழ்ச்சி யுயருமையாள்—தருபாலா !
பொருப்பி லுயர்சிகியா !
புழைக்கை முகர்துணைவா !—அருளாயோ ?

வேறு

166. வனநாயகி குறநாயகி மகிழ்வாயணை புயனே !
மயிலேறிய செகநாயக ! வரதா !க்ருபை புரிவாய் !
சினமேபுரி பலமேயுள திடமேவிய அசுரோன்
செகமேல்விழ இருகூறுசெய் அயிலாயுத முருகா !
அனமாநடை பயில்மாதரி அழகாகிய மயிலாள்
அயிலாகிய விழியாளுமை தருபாலக ! முருகா !
கனமாகிய குகநாயக ! கமலாசன மயிலாள்
கலைவாணியு நிதமேபுரி சிகிமாமலை முருகா !

வேறு

167. முத்தி தனையருள்வாய் ! பத்தர் பணிசரண !
முத்து நிகரெயிறுள்—குறமானள்
நத்தி லகுமிடறுள் பத்ம மலர்வதனள்
நட்பி னெடுமவளே—புணர்தோளா !

---

166. இது சந்தவிருத்தம். கமலாசன மயிலாள் : இலக்குமி. இலக்குமியும், கலைவாணியும் எப்போதும் இருக்க விரும்பும் சிகிமாமலை என்க.

167. வதனள் : வதனத்தாள்.

சித்தி தனைவிளைவோர் சத்ரு பணிகழலா!
சித்ர மிகுமயில்வா—கனவீரா!
அத்தி முகர்துணைவா! இப்ப வரமுதவாய்!
அட்ட திசைபடர்தோ—கையின்மேரா!

வேறு

168. கங்கையணி வேணியார்
கண்டுமய லாகவே—புணர்மானுள்
பங்கயமி னுளுமே
பண்பினெடு மாவலாய்—பணிமானுள்
கொங்கையுமை பாலகா!
கொண்டனிற மேனியார்—மருகோனே!
செங்கையணி வேலவா!
தென்குலவு தோகைமா—மலையோனே!

வேறு

169. [வித்தைக்கொரு கட லாகவும்
அத்தத்தில் அழகைய ளுகவும்
மெத்தச்சிகுசெய் குவை! குமரேசா! மயிலாளா!
தத்தைக்கு நிகர்மொழி யாகிய
பத்மத்தில் வளர்கொடி யாகிய
சத்திக்கு நிகர்விழி யாள்குற—மடமானுள்
நத்தைச்சொல் உயர்மிட ராய
பொற்புற்ற திருவத ளுள்நிதம்
நட்புற்று மருவிய வாகுள—வெகுலோலா!

---

விளைவோர் - விளைப்போர்

169. இப்பாட்டின் உண்மை வடிவம் விளங்கவில்லை.
இப்படியிருக்கலாம்:

வித்தைக்கண் ஒருகட லாகவும்
அத்தத்தில் அளகைய ளுகவும்
மெத்தச்செய் குவை!கும ரேச! நன்—மயிலாளா!
தத்தைக்கு நிகர்மொழி யாகிய
பத்மத்தில் வளர்கொடி யாகிய
சத்திக்கு நிகர்விழி யாள்குற—மடமானுள்
நத்தைச்சொல் உயர்மிட ருளுயர்
பொற்புற்ற திருவத ளுள்நிதம்
நட்புற்று மருவிய வாகுள—வெகுலோலா!

கத்தைக்கு ழலியுமை மாதிரி
புத்திரச்சி கவிழும் வானுயர்
கர்த்தர்க்கு யர்கயிலை நேர்சிகி—மலையோனே!]

வேறு

170. *சித்தம் வைத்தெனை ரெட்சிடு வித்தக!
சித்தர் கர்த்தர்சொல்—புதல்வோனே!
பத்தர் மெத்தவும் நித்தியம் நித்தியம்
பற்றி யுற்றிடு—பணிதாளா!
சத்தம் உற்றிடு நற்கட லிற்றுயில்
சக்க ரத்தரி—மருகோனே!
இத்த லத்தினில் முக்கிய முற்றிடும்
*இச்சை நற்சிகி—மலையோனே!

வேறு

171. கோகன கத்திரு மாது மேவிய
கூர்மைகொள் சக்கர மாய ஞருட—மருகோனே!
மாகம திச்சடி லேச ரீஸ்வரர்
வானக முற்றிடு மேரு ளோருத—வியபாலா!
மோகமி குத்திடு வேட நாயகி
மோதுமு லைக்குட மீதி லேமரு—வியதோளா!
தேகம திற்பிணி நோயை நீதவிர்
சீர்மிகு நற்சிகி மேரில் வாழ்வுறு—குமரோனே!

வேறு

172. மயிலாகிய பொற்கொடி நாயகி
வடிவாகிய அற்புத வானனள்—நலமேசேர்
ஒயிலாகிய நற்குற நாயகி
உடல்மீதினி லற்பொடு மேவிய—முருகோனே!
குயிலாகிய சொற்புகழ் நாயகி
கொடியாரிடை பெற்றிடு மாதுமை—தருபாலா!
அயிலா! க்ருபை யிப்பக லாயருள்!
இனிதாகிய நற்சிகி மாமலை—முருகோனே!

---

கத்தைக்கு ழலியுமை மாதிரி
புத்ரச்சி காமதா வானுயர்
கர்த்தர்க்கு யர்கயிலை நேர்சிகி - மலையோனே!

170 ரெட்சிடு - இரட்சித்திடு.

172. ஆனனள் - முகத்தினள்.

வேறு

173\. வேலையெ டுத்தவனே! சூரைய டர்த்தவனே!
வீரமி குத்தவனே!—அருளாயோ?
ஓலைத ரித்தமினள் வேடர்கு லக்கொடியாள்
ஓவிய முற்றமினள்—குறமானள்
மாலைமி குத்திடவே சேர்புய! வித்தகனே!
வாகுய ரற்புதனே!—அருளாயோ?
வாலைம திச்சடையார் பால! எனக்கருள்வாய்!
மாசல நற்சிகிமா—மலையோனே!

வேறு

174\. தாரைத் தரித்தபுய னே! வித்தை யைத்தருவை
சாதிக்கு றத்திபுணர்—இருதோளா!
மேரைத்த ரித்தமுலை கூரிட்ட சத்திவிழி
மேன்மைக்க ளிற்றுநடை—பயில்மானள்
காரைத்தி சைத்தகுழ லாளச்சு தற்கிளையள்
காமப்பு யக்குருசில்—தருபாலா!
சீரைப்ப டைத்தசிகி மேருக்கி சைத்தகுக!
தேவர்க்கு யர்ச்சிபெறு—முருகோனே!

வேறு

175\. திருவுற்றிடு மாமல ராகிய
வதனக்கொடி மாதுடி யாகிய
நிகழ்பொற்பிடை வேடமி னள்புணர்—புயவோனே!
மருவுற்றிடு நீபமென் மாலிகை
யதணைத்தரி சீர்புய னே! குக!
வடிவுற்றிடு தோகையின் மாமயில்—முருகோனே!
செருவுற்றிடு சூருட னேயெதிர்
சமரைப்புரி கூருள வேலவ!
தமிழைத்தரு வாய்! அம ரோர்பணி—யிருதாளா!
உருவுற்றிடு கோடுக ளேமிகு
பெருநற்றட வாவிக ளேமிகு
உயர்நற்சிகி மாமலை மேவிய—முருகோனே!

---

174\. காரைத் திசைத்த - முகிலைத்திகைக்கவைத்த. அச்சுதற் கிளையாள் காமப் புயக்குருசில் - உமாதேவி விரும்பும் புயமுடைய தலைவனுகிய சிவபிரான்.

வேறு

176. கங்கை யணிசடையார்
கண்டு மகிழுமையாள்—தருபாலா!
கொங்கை மறமடவாள்
கொண்டு மருவியவா!—புயவோனே!
செங்கை யணியயிலா!
திங்க ளணிவதனு!—குகநாதா!
பங்க யமினிதம்வாழ்
பண்பு செறிசிகிமா—மலையோனே!

வேறு

177. தருண முலைமடவாள் அயிலை நிகர்விழியாள்!
சரச மிகுகுறமான்—அணைதோளா!
அருண னிறவடிவாள் கமல நிகர்வதனுள்
அழகு திகழுமையாள்—தருபாலா!
வருண மயில்முருகா! தமிழை யருள்புரிவாய்!
மகிமை யுடனடியார்—பணிதாளா!
அருண மடிமைசெய்வோன் இவனெ னவுமினியே
அரசு புரிசிகிமா—மலையோனே!

வேறு

178. தந்தி முகர்துணையாய்! அண்டர் பணிசரணு!
சங்க ரரைநிதமே—வியமானுள்
கொந்தி லகுமலரே சந்தி ரனைஅணிமான்
கொண்டல் படிகுழல்மான்—அருள்பாலா!
அந்தி மதிவதனு! என்ற னிடம்வருவாய்!
அந்த மிகுசிறைமா—மயிலாளா!
செந்தி மலைமுருகா! குன்றை மலைவடிவே!
செங்க மலைபுணர்மால்—மருகோனே!

வேறு

179. அந்தரி யம்பிகையாள் சந்த்ரன ணிந்தமினுள்
அண்டர்ப ணிந்திடுமா—தரிமானுள்
சுந்தரி சங்கரியாள் செஞ்சடை விந்தைமினுள்
சுந்தர மிஞ்சியமான்—அருள்பாலா!

---

177. அருணமடிமை செய்வோன் இவனெனவுமினியே-இனியே நம்அடிமை செய்வோன் இவனெனவும் அருள்.

178. சந்திரனை அணிமான்: பிறை முடித்தவள். 'சந்த்ரன் அணிந்த மினுள்' (179) என்பதையும் நோக்குக! இந்நூலில் 156-ஆம் பாட்டைப் பார்க்க.

எந்தனி டந்தனிலே வந்துவ ரந்தருவாய் !
இந்த்ரமு குந்தனுமே—பணிதாளா !
சந்தமி குந்திடுசீர் கொண்டசி கண்டியனே !
சங்கநி றைந்திடுநா—வலவோனே !

வேறு

180. வித்தை தனையருள்வாய் ! சித்ர மயில்முருகா !
விர்த்தி பெறுசிகிமா—மலையாளா !
தத்தை மொழியுமையாள் கர்த்தர் புணர்கொடியாள்
சத்தி விழியுமையாள்—புதல்வோனே !
கத்தை யணிசடையார் சத்தி புணரரனார்
கற்க யிலையிறையார்—புதல்வோனே !
நத்தை யணியரிமா லுக்கு வருமருகா !
நட்பி னெடுஅருளே—தருவாயே !

181. சித்தி விளைபவனே ! பத்ம மலர்வதனா !
சித்ர மயில்முருகா !—அருளாயோ ?
முத்தி தனையருள்வாய் ! பக்தர் பணிசரணா !
முக்ய முடனிமையோர்—பணிதாளா !
சத்தி தனையெதிர்சூர் பட்டு விழவிடுவோய் !
சர்ப்ப மிசைதுயில்மால்—மருகோனே !
அத்தி முகர்துணைவா ! இப்ப வரமருள்வாய் !
அத்து விதமுடிவே !—சிகியாளா !

வேறு

182. கஞ்ச மாமலர் வந்த நாயகி
கண்டு ஆசைகொள்—அரிமாயோன்
அஞ்ச ராவணன் அன்று வீழிட
[அம்பு ராசியை அணைகோல்மால்—மருகோனே !]
தஞ்சம் வேறிலை யின்று ஆதரி
சந்த நாவல !—முருகோனே !
மஞ்சு மேவிய குன்றை மாமலை
வந்த வேலவ !—குகவேளே !

---

182. வீழிட - வீழ்ந்திட. அம்புராசியை அணைகோல் மால் - கடலில் அணை கட்டிய திருமால். [ ], இரண்டு சீர்கள் மிகுந்துள்ளன. 'அம்பை யேவினன் - மருகோனே !' எனப்படிக்கலாம்.

வேறு

183. தத்தைமொ ழிக்குறமான் அற்புத நற்கொடியாள்
கூற்குண மெய்க்குறமான்—அணைதோளா !
நத்தைநி கர்த்திடுசீர் பெற்றக மூத்தினள்மான்
நட்புமி குத்திடவே—அரனார்சேர்
கூற்றைந றைக்குழலாள் வித்தகி பெற்றவனே !
கற்பக னித்தமுமே—பணிதாளா !
வித்தையெ னக்கருள்வாய்!பொற்சிகி மெய்க்கிரியாய் !
வித்தக ! இப்பஇநாள்—அருளாயோ ?

வேறு

184. தூட்டு மலரணி குழலாள் சித்ர மிகுகுற மடவாள்
கட்டி யணையிரு புயனே !—முருகோனே !
மெட்டு லவுமிகு பலமா பட்டு விழஅயில் விடுவோய் !
வித்தை தனையினி அருள்வாய் !—குமரேசா !
கெட்டு விடஅசு ரன்முனே விர்த்தி பெறுவெகு கணையே
கிட்டி விடுவடி வுளமால்—மருகோனே !
நெட்டு லவுமலை கடல்சூழ் பொற்பு மிகுசிகி மலைவாழ்
நித்ய சுபகர ! குமரா !—அருளாயோ ?

வேறு

185. கஞ்சத்திரு நாயகி மேவிய சங்கைத்தரி மாயவ னுருயர்
கன்றைக்கனி மேலெறி மாலுட—மருகோனே !
நஞ்சத்திரு மாமிட றீசுரர் சந்த்ரச்சடி லேசர்வி ளுடவர்
சந்தித்திடு நாயக ரீசுரர்—தருபாலா ! [மீதினில்
வஞ்சக்கொடி தாகிய மாவுடல்ரெண்டிட்டிட வேயவன்
மண்டக்கதிர் வேலதை யேவிய—செயவீரா !
மஞ்சத்தினி லேகுற நாயகி அங்கத்துட னேபுணர் சீர்புய !
வம்புற்றிடு சோலைகள் சூழ்சிகி—மலையோனே !

---

183. கற்பகன் நித்தமுமே பணிதாளா !: கற்பகன்: இந்திரன். இப்ப இநாள் - இந்நாளிலே இப்பொழுதே.

184. மெட்டுலவுமிகுபலமா - மெட்டுடன் உலவிய மிகு வலிமையுடைய சூரனாகிய மாமரம். மெட்டு - கௌரவம். 'மெட்டுக் கடக்க வெருட்டிவிடும்' (விறலி விடுதூது : 860.)

185. 'வஞ்சக் கொடிதாகியமா' என்பது சூரபதுமனையே குறிப்பதால், 'அவன்மீதினில்' என்றார். அவன் : சூரபதுமன்.

### வேறு

186\. நறைநீபமென் மலராகிய நறுமாலிகை புனைவாய்!
மறைநான்முகன் நிதமேபணி மலரார்கிய பதனே!
சிறைமாமயில் தனிலேறிய திகழ்வே லணிகரனே!
கறைமாமிடர் புதல்வா! உயர் கனதோகையின் மலையா!

### வேறு

187\. திருப்பங்கய மீதினி லேவளர்
திகழ்ப்பைங்கொடி யாள்புணர் மாலுட—மருகோனே!
பொருப்பென்றுசொல் மாமலை நாயகி
புனைக்கொன்றையின் மாமலர் சூடிய—உமைமாளுள்
அருட்டங்கிய கூர்விழி நாயகி
அணைத்தன் றுடல் மேல்புணர் ஈசுரர்—தருபாலா!
செருச்சென்றுசெய் சூருடல் கீறிய
திகழ்க்குன்றைசி காமலை வாழ்குரு—குமரேசா!

### வேறு

188\. வந்தனை புரியடி யாரிடம்
வந்திடு துயர்களை யோடிட—வருவாயோ?
நிந்தனை புரியடல் சூருடல்
ரெண்டிட அயில்தனை யேவிய—குகவேளே!
எந்தனை யினிநல மாகிட
இன்றுட னென்முன்வரு வாய்! சிகி—மயிலாளா!
உந்தனை யலதினி வேறிலை
உம்பர்கள் பணிசிகி மாமலை—முருகோனே!

### வேறு

189\. சங்கத்தமிழ் நாவல னே! அருள்
சந்தத்திரு மாமயி லேறிய—செயவீரா!
துங்கக்கயி லாசர்விஸ் வேசுரர்
துண்டப்பிறை சூடிய வேணிய—ரிடமேசேர்
சங்கக்குழை நாயகி யீஸ்வரி
தந்தற்புத மாகிய பாலக!—முருகோனே!
பங்கப்பட மாவல வேலவ!
பண்புற்றசி காமலை வாழ்வுறு—குமரேசா!

---

186\. இது சந்தவிருத்தம்.

188\. எந்தனை: என்றனை. உந்தனை: உன்றனை.

189\. தந்தற்புதமாகிய: தந்த அற்புதமாகிய. பங்கப்பட மா வல வேலவ: மா பங்கப்பட, வல வேலவ = மாமரம் பங்கப்படும்படி (வெற்றி கொள்ள) வல்ல வேலவனே!

வேறு

190. சிந்தாகுலம் யாவையு மேதவிர்
சிங்காரசி காமயி லேறிய—குகநாதா!
வந்தாதரி வேலவ னே! உமை
மங்காஇமை யாசல நாயகி—திருமானுள்
மைந்தா! தமிழ் மாநிதி யாவையும்
வந்தேயினி யேயருள் வாய்! குற—மகள்பாகா!
கந்தா! இமை யோரடி யாரெதிர்
கண்டேபணி சீர்சிகி மாமலை—முருகோனே!

வேறு

191. சித்தி தனையருள்வாய்! பத்ம மலர்வதனு!
சிற்ப ரமர்தமையே—அணைமானுள்
விர்த்தி பெறுமுமையாள் குத்து முலையுமையாள்
விற்பு ருவஉமையாள்—தருபாலா!
பத்தி யொடுபணிவே னுக்கு வரமருள்வாய்!
பச்சை மயில்முருகா!—குமரேசா!
அத்தி முனம்வருவோ னுக்கு வருமருகா!
அற்பு தசிகியின்மா—மலையாளா!

வேறு

192. கறைக்கண்ட ரிடமேவளர்
கமழ்ப்பங்க யமதேநிகர்—இருதாளா!
சிறைத்துங்க மயிலாளுமை
திருச்செங்கை யுமையாளுத—வியபாலா!
பிறைத்துண்டை யணிநாயகர்
பிணைச்செங்கை யரனுர்தரு—புதல்வோனே!
நிறைத்திங்க ளுயரானன!
[நிலைக்குஞ்சிகி] மலைநாயக!—முருகோனே!

வேறு

193. கடம்ப மாலையணி யிருதோளா!
கரந்தை சூடுசடை யரனுர்சேர்—நலமேசேர்
குடங்கொள் பூணுமுலை யுமைமானுள்
குடங்கை நேருவிழி யுமைமானுள்—புதல்வோனே!

---

192. [ ] ஓரெழுத்து மிகுகின்றது.

நடஞ்செய் மாமயிலின் முருகோனே !
நலஞ்செய் வாய்!குமர! வடிவேலே—அணிவோனே !
திடங்கொள் சோலைமிகு வடிவேசேர்
**சிகண்டி மாமலையின்** வளர்வோனே !—குகவேளே !

**வேறு**

194. நாகமதி சூடுசடை வேணியர னர்பால்
நாளும்வள ரீஸ்வரிநல் மாதுவருள் புதல்வா !
மாகமிசை வாழ்கலைகொள் பூர்ணமதி தானே
வாழுமுக நாயக! கு கா! அருள்செய் இனியே!
யோகமிகு ஞானியர்கள் யாவர்களு மேதான்
ஓகையொடு மேபணிசெய் பூவைநிகர் சரணு!
மோகமிகு வேடமகள் மேவுபுய நாதா!
மூவர்புகழ் **தோகைமலை** மீதுலவு குமரா !

**வேறு**

195. மறைபெற்றிடு நான்முக னர்மண
மலரிற்றினம் வாழ்கலை வாணியை—யணைதோளார்
சிறையிற்பட வேசெயும் வேலவ!
திகழச்சுத மாயவ ருைட—மருகோனே !
நிறைகற்புயர் வேடமி னுள்தனை
நிதமெச்சிட வேயணை நாயக!—அருளாயோ ?
சிறையுற்றிடு மாமயில் வாகன !
**சிகிநற்கிரி** மீதினி லேவளர்—முருகோனே !

**வேறு**

196. பகழிக் கூத்தன்மு னேநட மாடிய
பதமெற் காக்கநல் மாவர மேயினி—யுதவாயோ ?
திகழ்விற் போற்பொரு சீர்நுத லாள்வளர்
திருவைப் பார்க்கவு மேயழ காகிய—குறமானுள்
சுகமெய்ப் பாற்புகழ் போல்மொழி யாள்புணர்
துரை! வித் யாப்பிய மேயருள் வாய்!சிறை—மயிலாளா !
அகமற் சூர்க்கொரு வேல்விடு சேவக!
அருள்பொற் கோக்குல மேபணி **தோகையின்**—
**மலையாளா !**

---

194. இது சந்த விருத்தம்.

196. துரை; விளி; வித்யாப்பியம்: வித்தியாப்பியாசம்.

வேறு

197. கரிய கண்டமா யுயரு மண்டம்வாழ்
கலேயி லங்குசீர் மதிய ணிந்தா—சுரர்பால்வாழ்
பெரிய கும்பமா முலேயள் நங்கையாள்
[ளசிவுபல] மங்கைமா துமைசொல் மைந்தனே !—
அருளாயோ ?
வரிய ணிந்தநீள் குழைய டர்ந்தபார்
வையினள் நன்றுகான் மறம டந்தைசேர்—புயவேளே !
உரிய குன்றைமா மலேயில் வந்தவா !
உலகி னின்பமே [வியவா !]—குகவேளே !

வேறு

198. கும்ப மிகுமுலேயாள் அம்பு விகொள்சடையாள்
கொங்கி லகுகுழலாள்—மடமாது
விம்ப மிகுமிதழாள் அம்பு நிகர்விழியாள்
விஞ்சை மிகுமுலேயாள்—தருபாலா !
உம்பர் பணிசரணு ! வந்து க்ருபைபுரிவாய் !
[உந்தனுடையானி]—இடமேதான்
வம்ப ணிகுறமினள் இன்ப மிகுகணவா !
வந்த ருள்செய்சிகிமா—மலேயோனே !

வேறு

199. குறத்தி தனைநிதமே புணர்ச்சி செயும்வடிவே !
குணக்க டலின்முருகா !—அருளாயோ ?
திறத்தி லெதிர்வருமா உடற்கு வுருவிடுகூர்
திகழ்க்க திரின்வடிவேல்—அணிவோனே !
பறக்கு மயில்முருகா ! எனக்கு வரமருள்வாய் !
பருத்த முலேயுமையாள்—புதல்வோனே !
அறக்க டவுளென்முனே மகிழ்ச்சியுடன்வருவாய் !
அருட்செய் குவைசிகிமா—மலேயோனே !

வேறு

200. கங்கை யணியரனர் பங்கில் வளருமையாள்
கங்குல் நிகர்குழலாள்—தருபாலா !
செங்கை யணியயிலா ! வந்து வரமருள்வாய் !
செங்க மலமலர்மான்—மருகோனே !

---

197. [ ] இக்குறியிட்டவை விளங்கவில்லே. இவற்றை முறையே, 'ப்ரபல' எனவும், 'விடந லஞ்செய்வாய் !' எனவும் படிக்கலாம்.

198. [ ] இதனே 'உன்றனிட அடியான்' எனப்படிக்கலாம்.

199. அறக்கடவுள் : விளி.

மங்கை குறமகள்சேர் அந்த மிகுபுயனே !
வஞ்ச சுரனுடனே—யெதிர்வீரா !
கொங்கை யணிவனமார் அண்டர் பணிகலமார்
குன்றை மலைமுருகா !—குமரேசா !

வேறு

201. மறைவேதனர் பணிநாயகா !
மயிலேறியே வருவாய் !குகா !
பிறைசூடிபால் வளர்தேவியாள்
பிணையானதோ ரிணைபார்வையாள்
சிறைசேருமா குயிலாள்மினுள்
திருசேர்மின ளுமைபாலகா !
கறைமேகமே வளைசோலைசூழ்
கனதோகைமா மலைநாயகா !

வேறு

202. குறத்தி யுடகணவா ! மகிழ்ச்சி யுடனருள்வாய் !
கொலைக்க ளமதனிலே—யெதிராவே
திறத்தில் வருஅசுரோர் உடற்கு அயில்தனையே
சினத்தில் விடுகுமரா !—செயவீரா !
நறக்க மலஅயனுர் மிகுத்த அடியவரே
நலத்தி லுயர்முனிவோர்—பணிபாதா !
அறக்க டவுள்புதல்வா ! எனக்கு வரமருள்வாய், !
அலர்ப்பொன் வளர்சிசிமா—மலையாளா !

வேறு

203. சத்தி யணிகுமரா ! வித்தை தனையருள்வாய் !
சத்து ருவையெதிரே—கொலும்வீரா !
அத்தி முகர்துணைவா ! சித்தி விளைகுருவே !
அற்பு தமென்மலராள்—புணர்தோளா !
நத்தி லகுகரனுர் பச்சை நிறஉடலார்
நச்ச ரவின்அணையார்—மருகோனே !
நித்ய மணமிகுபூ கட்டி யணிபுயனே !
நெட்டு லவுசிகிமா—மலையோனே !

வேறு

204. சித்ரமயில் வாகனு ! விர்த்திபெறு சேவலா !
சித்துவிழை காரணு !—குகநாதா !
அத்ரவிழி மாமினள் குத்துமுலை மார்பினள்
அற்புதம தானசீ—ரிருதாளாள்

---

201. இது சந்தவிருத்தம்.

மொய்த்திலகு கேசமான் இச்சைமிகு வேடமான்
முத்துமுலை மீதிலே—புணர்தோளா!
சத்தியணி நாயகா! இப்பவரம் நீ செய்வாய்!
தற்பரம! தோகைமா—மலையோனே!

வேறு

205. சமரைப் பொருசூ ருயிரைக் கொலவேல்
தனைவிட் டெறிமா—செயவீரா!
குமரிக் கொடியாள் இமயக் கிரியாள்
குணவித் தகியாள்—தருபாலா!
நமனைக் கடிதா யகலச் செய்குவாய்!
நலவித் தைகளே—அருளாயோ?
அமரர்க் கிறைவா! எனைரட் சியையா!
அழகுற் றசிகா—மலையாளா!

வேறு

206. தத்துதோ கையின்மேல் நித்தமே வருவாய்!
சத்திசேர் கரனே!—அருளாயோ?
நத்துசேர் கரனர் பத்மமா புணர்வோர்
நத்துசேர் மருகா!—குகநாதா!
குத்தரா வணிவோர் நற்சடா தரனர்
குத்துமா முலையாள்—உமைபாலா!
சித்துசேர் குகனே! இப்பரீ அருள்வாய்!
சித்ரதோ கையின்மா—மலையோனே!

வேறு

207. கங்கைச்சடை வேணிய னர்கறை
கண்டர்ப்புணர் நாயகி யாள்திரி—புரைமானுள்
மங்கைக்குல மாரிமி னுள்தரு
மைந்தக்கும ரா! அருள் யாவையும்—உதவாயோ?
சங்கைத்தரி மாயவ னுருயர்
தந்திக்குழு னேவரு மாயவன்—மருகோனே!
செங்கைக்குற நாயகி மேவிய
செஞ்சொற்கும ரா! சிகி மாமலை—முருகோனே!

---

206. பத்மமா: தாமரையில் வாழும் திருமகள்.

வேறு

208. கருத்த முகிலுடலார் சிவத்த இதழுடையார்
கனத்த வளையணிமால்—மருகோனே!
பெருத்த முலையுமையா ளிடத்தி லனுதினம்வாழ்
பிணக்கை யரன்மகிழ்வா—கியபாலா!
செருத்த பலவசுரோ னுடற்கு அயில்விடுவோய்!
திருப்ப வுசையருள்வாய்!—குகநாதா!
திருத்த மிகுசெயவா! எனக்கு வரம்அருள்வாய்!
சிகிக்கி ரியில்வளர்மா—குமரோனே!

வேறு

209. தத்தி வருபரியா! வித்தை தனையருள்வாய்!
சர்ப்ப மிசைதுயில்வோர்—மருகோனே!
சத்தி தனையடல்மீ *தெதிர்த்து வருபெலமா
சட்ட கமதனிலே—யெறிவீரா!
பத்தி யொடுபணிவே னுக்கு வரமருள்வாய்!
பத்ம மலர்நிகரா—கியதாளா!
நத்தி லகுவயலா! அத்து விதமுடிவே!
நற்ப ரமர்புதல்வா!—சிகிமேரா!

வேறு

210. வனமேலனு தினமேவளர்
வடிவாகிய குறநாயகி—புணர்தோளா!
சினமேமிகு அசுரோனுடல்
தெறிவாய்விட அயிலேவிய—குகநாதா!
அனமேல்வரு திசைநான்முகன்
அருமாமறை யயனேபணி—யிருதாளா!
கனமாமணி மிகுகோடுயர்
கருமாமுகில் தவழ்தோகையின்—மலையாளா!

வேறு

211. மலர்மங்கை புணர்கின்ற
[...]விறல்விண்டு—மருகோனே!
அலர்கொன்றை யுயரிந்து
அணிசெஞ்ச டையர்மைந்த!—அருளாயோ?

---

208. திருப்பவுசு - செல்வ வாழ்வு. செயவா! - வெற்றியாளனே!

209. முதலடியுடன் 114, 129-ஆம் பாட்டுக்களை ஒப்பிடுக.
*தெதிர்த்து : சந்தம் பொருந்தவில்லை. பெலமா - வலிய மாமரம்.

211. இப்பாட்டின் உருவம் சரியாயில்லை. இப்படியிருக்கலாம்: முதலடியில், 'மலர்மங்கை புணர்கின்ற[...]விறல்விண்டு—மருகோனே!' என்பதை, 'மலர்மங்கை புணர்கின்ற பிரியங்கொள் விறல்விண்டு—மருகோனே!' எனப் படிக்கலாம்.

[பெலமிஞ்சு மசுரன்ற னைமுனங்கொல்
பிரியங்கொ ளனையின்று—அருளாயோ?]
நலமிஞ்சு துதிகுந்த!
நனிகொண்டல் வளர்குன்றை—மலையாளா!

**வேறு**

212. சுதையை யாள்பவனே! வித்தையை யேயருள்வாய்!
சற்குண வேலவனே!—குகநாதா!
கொத்தியல் பூமலரே கட்டிய மாலிகையாய்!
கொட்டிய பேரிகையாய்!—குமரேசா!
சுத்திய மாமதிலா! நிர்த்தமென் மாமயிலா!
சொற்பிர காசமதே—மிகுதேகா!
துத்திய ராவணிவோர் பெற்றிடு பாலகனே!
சொற்சிகிமா மலையா!—செகநாதா!

**வேறு**

213. சினத்த சூருட னேயெதி ராயடல்
செயித்த வேலவ னே!அருள் யாவையும்—உதவாயோ?
கனத்த மாமயில் வாகன னே! அருள்
கருத்த னே!வெகு மாநிதி யாவையும்—உதவாயோ?
இனத்த தாகிய மாமணி சேர்துதி
இசைத்த நீளிலை வேலணி பாணிய!—முருகோனே!
மனத்த தாகிய நோய்தனை யேதவிர்!
மகிழ்ச்சி நாயக! தோகையின் மாமலை—வளர்வோனே!

**வேறு**

214. மதுமாமலர் சூடிய நாயக! நடமேபுரி மாசிறை யேவிரி
மயின்மீதினி லேறிமு னேயினி—வருவாயே!
பதுமாசன நான்முக னுருயர் அடியாருயர் வானுள தேவர்கள்
பணியேபுரி பூமல ராகிய—இருதாளா!

---

மூன்றாமடியில்,
[பெலமிஞ்சு மசுரன்ற னைமுனங்கொல்
பிரியங்கொ ளனையின்று—அருளாயோ.]
என்றிருப்பதை,
பெலமிஞ்சு மசுரன்ற
னைமுனங்கொல் பெருமைந்த!—அருளாயோ?
எனப் படிக்கலாம்.

துதிகுந்த! - புகழ்மிக்க குந்தம் என்னும் படையுடையவனே! குந்தம் - ஈட்டி.

212. பூமலர் - பொலிவுறும் மலர். துத்தி - பாம்பின் படத்திலுள்ள புள்ளி.

பொதுமாதர்க ளாசையை நீதவிர்! கனசூருடல் கீறிய வேலவ!
புகழாகிட நீவரம் யாவையும்—உதவாயோ?
சதுமாமறை தேடிய நாயக! எனையாளுமை யா! உமை பாலக!
தனிநாயக னே! சிகி மாமலை—வளர்வோனே!

வேறு

215. சிறைத்துங்க மயில்வாகன!—முருகோனே!
திருக்குன்றை மலைமீதினில்—வளர்வோனே!
பிறைச்செஞ்ச டையர்மேவிய—நலமானாள்
பிணைக்கண்பொ லியுமாதுமை—அருள்பாலா!
கறைக்கொண்டல் நிகர்மேனியர்—மருகோனே!
கதிர்க்கொண்ட வடிவேலவ!—அருளாயோ?
குறைத்துங்க விடைநாயகி—நலமேசேர்
குறப்பெண்கொ டியைமேவிய—குகவேளே!

வேறு

216. திருப்பங்கய மீதினி லேவளர்
திருக்கொங்கைமி னள்மரு கா! குக!—அருளாயோ?
பொருப்பென்றுசொல் மாமலை யாளுயர்
புரைக்கண்குற நாயகி யாள்புணர்—இருதோளா!
செருச்சென்றிடு மாவுடல் கீறிட
திகழ்க்கொண்டிடு கூரயி லா! வரம்—உதவாயோ?
கருக்கொண்டிடு மாமுகி லேதவழ்
கதிர்க்குன்றையின் மாமலை மேவிய—செயவீரா!

வேறு

217. கருப்புநிற மேனியார் உயர்ச்சிபெறு நேமியார்
கனத்திடுவின் மாயனார்—மருகோனே!
[மருப்புநிக ரானதோர் கனத்ததன மார்பினள்
வனக்கிளியை நேருசீர்—மொழிமானாள்]
பொருப்புநிகர் மேனியான் மிகுத்தபல வீரமா
புகழ்த்தவயி லேவியே—கொலுவோனே!
விருப்பமுட னீசெய்வாய்! வரத்தையென்முன் ஈயையா!
மிகுத்தசிகி மேரிலே—வளர்வோனே!

---

216. திகழ் - ஒளி.

217. கறுப்பு என்பது கருப்பு என எதுகை நோக்கி வந்தது. [ ] இரண்டாம் அடியின் பொருள் முடியவில்லை. அதனை,

'மருப்புநிக ரானதோர் கனத்ததன மார்பினள்
வனக்கிளியை மேவுசீர்—உடையோனே!

எனப் படிக்கலாம்.

மிகுத்த பல வீரமா - மிக்க வலிமையுடைய வீரம்பொருந்திய மாமரம்.

வேறு

218. தேனுற்றிடு நீபமென் மாமலர்
மாலைப்புய னே! குக! நாயக!
சீருற்றிடு தோகையின் மாமயில்—முருகோனே!
மானுற்றிடு காதள வோடிய
பாவைக்குற நாயகி காருள
வாகுற்றிடு வேடமி னள்புணர்—புயவோனே!
கூனுற்றிடு மாசிலை யாருயர்
நீலத்திரு மேனிய னுருயர்
கூர்சக்கர பாணிய னருட—மருகேசா!
வானுற்றிடு மாமதில் தாவிய
கோடுற்றிடு தோகையின் மேரினில்
வாழ்வுற்றிடு தேவதை யே! எனை—அருள்வாயோ?

வேறு

219. கங்கை யணிசடையார் செங்க மலமுடியார்
கந்த இதழியினு—ரிடமேசேர்
கொங்கை திரிபுரையாள் துங்க மிகுகொடியாள்
கொண்டல் நிகர்குழலாள்—தருபாலா!
மங்கை குறமகளாள் அம்பை நிகர்விழியாள்
வஞ்சி தனைநிதமே—புணர்தோளா!
செங்கை தனிலயிலே கொண்ட குருபரனே!
தென்சி கியின்மலைமேல்—வருவோனே!

வேறு

220. கனத்த செஞ்சடை யீஸ்வரர் பால்வளர்
கறுத்த பைங்குழ லீஸ்வரி யேதரு—புதல்வோனே!
வனத்தில் வந்திடு வேடமி னள்வெகு
மகிழ்ச்சி மிஞ்சிட மேவிய வா! அருள்—உதவாயோ?
சினத்த வஞ்சக னகிய சூருடல்
தெறிக்க அன்றுநன் வேலதை யேவிய—செயவீரா!
இனத்த னன்றுகொள் மாமணி சேருயர்
எழிற்பொ லங்கிரி யாகிய தோகையின்—மலைநாதா!

வேறு

221. மேகநிகர் குழலாள் கோகிலமென் மொழியாள்
வீழிநிக ரிதழாள்—குறமானள்
நாகபட வரையாள் வேலைநிகர் விழியாள்
நாணமிகு குறமான்—அணைதோளா!

---

218. 'காருள வாகுற்றிடு' என்பது கருநிறங்கருதிப் போலும்.

221. வீழி - விழுதி. வீழியின் கனியை இதழுக்குவமையாகக் கூறுவது மரபு. 'வீழியின்கனி வாயொரு மெல்லியல்' (கம்ப - புனல்விளை. 28).

ட்டிய மலரணிமா நற்சிறை யுளமயிலா!
கட்டழ குளகுமரா!—முருகோனே!
பிட்டில கியவொளிசேர் நற்கயி லேயின்மலேயார்
விற்புரு வமென்மொழியாள்—உமைபாலா!
ட்டிலின் மிசையினிதாய் பொற்குற மகள்தனேமே
கட்டிம ருவுகுமரா!—அருளாயோ?
மட்டில கியஅசுரோன் பட்டிட அயில்விடுவோய்!
விர்த்திபெ றுநல்சிகிமா—மலேயாளா!

## வேறு

ஞ்ச மலரயனுர் அண்ட மதிலிமையோர்
கண்டு பணிபுரிசீ—ரிருதாளா!
ஞ்ச மிடுவசுரோன் நொந்து விழவெதிரே
வம்பு செயவயிலே—வியவீரா!
கொஞ்ச நலவிடையாள் அம்பை நிகர்விழியாள்
கொஞ்சு கிளிமொழியாள்—குறமானுள்
ஞ்ச ணேயிலொயிலாய் என்று மருவியவா!
பண்பு மிகுசிகிமா—மலேயோனே!

## வேறு

வேதநான் முகனுர் வானில்வாழ் வுறுவோர்
வேள்விமா தவனுர்—பணிவோனே!
ாதநா ரணனுர் நீலமே னியனுர்
நாளுநாள் தொறுமே—புகழ்வோனே!
தமா மதிசேர் வேணிநா யகனுர்

வேறு

225. கரும்பு நிகர்மொழியாள் குடங்கை நிகர்விழியாள்
கனங்கு ழலிநல்மினுள்—குறமானுள்
விரும்பு [குறமகளாள்] மகிழ்ந்து மருவியவா!
மிகுந்த வரமருள்வாய்!—குகவேளே!
அரும்பு நிகரெயிருள் குடங்கள் நிகர்முலையாள்
அகண்ட வெளியுமையாள்—தருபாலா!
சுரும்பு மிகுவனமார் மிகுந்த சிகிமலையா!
சுகந்த மலரணிமா—புயவோனே!

வேறு

226. பிறையுற்றிடு வேணியர் கதியுற்றிடு வாகனர்
பெலமுற்றிடு மேரினர்—தருபாலா!
கறையுற்றிடு நீபமென் மலருற்றிடு மாலிகை
நலமுற்றிட வேயணி—புயவேளே!
குறையுற்றிடு மாவிடை கனமுற்றிடு வேடர்சொல்
குறமெய்க்கொடி மேவிய—புயவோனே!
சிறையுற்றிடு மாமயில் தனிலுற்றவ னே! அருள்
துரை! நற்சிகி மாமலை—முருகோனே!

வேறு

227. திருவை மருவியமால் பருதி யுலவியமால்
செயம துயர்கனமால்—மருகோனே!
அருளை யுதவிசெய்வாய்! ககன வுலகமதே
அமரர் பணிபுரிசீர்—இருபாதா!
பொருதி யமர்செய்குவோன் அசுர னுடனெதிரே
பொருது அயிலயிலா!—குகநாதா!
தருவை மிகுசிகிமா மலையில் வருபவனே!
தமிழை யருள்புரிவாய்!—செகநாதா!

வேறு

228. கோடுற்றிடு மாமலை மேல்வளர்
கூனப்பிறை சூடிய வேணியர்—தருபாலா!
காடுற்றிடு வேடுவ ரேதரு
கார்மைக்குழல் நாயகி மேவிய—புயவோனே!

---

225. குறமானுள் என்றவர் திரும்பவும் குறமகளாள் என்முர். [குறமகளாள்] என்பதைச் சுரமகளாள் எனப் படிக்கலாம். சுரமகள்: தேவயானை.

226. குறையுற்றிடுமா இடை - சிறிய பெருமைமிக்க இடை. துரை: விளி.

227. பொருதி - பொருது. பொருது - பொருகின்ற. அயில் அயிலா! - கூரிய வேலனே!

பீடுற்றிடு வானவ ரானவர்
பேசற்றுட னேபணி யேபுரி—செகநாதா!
நாடுற்றிடு தோகையின் மாமலே
நாதக்கும ரா! க்ருபை யாவையும்—உதவாயோ?

வேறு

229. வனத்திலே யனுதினமும்
மகிழ்ச்சியாய் வளர்குறமின்—மடமானுள்
தனத்திலே மருவுபுய!
தருக்கள்சூழ் சிகிமலேயில்—வளர்வோனே!
சினத்திலே மிகுவசுரன்
சிறுத்துவீ ழிடவயிலே—எயும்வீரா!
மனத்திலே துயர்விலக
வரத்தையே புரிவை! சிறை—மயிலாளா!

வேறு

230. சூது நிகர்முலேயாள் பாண நிகர்விழியாள்
தோகை குறமகளாள்—புணர்தோளா!
வாது புரியசுரோன் மீது வயில்விடுவோய்!
வாகு திகழ்குமரா!—செயவீரா!
சேது இதழ்மலராம் நீப மணிபுயனே!
சீர்ம யிலின்முதுகே—றியதேவே!
கோது தவிர்சிகிமா மேரில் வளர்வடிவே!
கூவி வளர்கொடியா!—செகநாதா!

வேறு

231. கச்சணி முலேயாள் முத்துகொ ளெயிறுள்
கற்புயர் குறமான்—புணர்தோளா!
நச்சணி யரவே பெற்றவர் கனமார்
நட்புட னிதமே—புணர்மானுள்
பச்சையின் வடிவாள் அற்புத மொழியாள்
பத்மமி னுமையாள்—புதல்வோனே!
செச்சைகொள் புயனே! வித்தையை யருள்வாய்!
சித்திர சிகிமா—மலேயாளா!

---

228. பேசற்று - பேச்சில்லாமல்.

230. சேது - சிவப்பு. கூவி வளர்கொடியா! - சேவற்கொடியா! 'கோழி வளர் கொடியா!' என இருக்கலாம்.

231. பத்மமின் இலக்குமியாயினும் உமை, இலக்குமி, சரசுவதி ஆகியோர் சத்தியின் பிரிவே யாதலால் இங்ஙனங் கூறினூர்.

வேறு

232. சத்தி யணிகரனே ! வித்தை தனையருள்வாய் !
சத்ரு செயமிடுதோ—கையினுதா !
அத்தி முனம்வருவோர் முத்தியு லகினில்வாழ்
அற்பு தமென்முகமால்—மருகோனே !
சித்தி புரிகுமரா ! நற்சி றையின்மயிலா !
சித்ர மிருசிகிமா—மலையாளா !
புத்தி மிகவருள்வாய் ! விர்த்தி பெறுகுகனே !
பொற்பு லவுவடிவே !—அருளாயோ ?

வேறு

233. வேலையெ டுத்தசுரோன் கூறுப டச்சினமாய்
மேலில்வி டுத்தவனே !—செயவீரா !
மாலையு தித்திடுமா வானம திச்சடையார்
மாகயி லைக்கிரியார்—தருபாலா !
ஓலைத ரித்திடுவாள் கானர்வ ளர்த்தமினுள்
ஓகையொ டுற்றணைசீர்—புயநாதா !
காலையு தித்திடுமோர் சூரிய னுக்கெதிரார்
கார்மிகு நற்சிகிமா—மலையோனே !

வேறு

234. செங்கையில் வேலணிவோய் !
செந்திரு மால்மருகா !—மருகோனே !
மங்கை மினுள்குறமான்
மங்கள மாயணைமா—புயவோனே !
கொங்கையு மாபதியார்
கொந்தலர் சேர்சடையார்—புதல்வோனே !
பங்கய வாவிகள்சேர்
பண்புயர் தோகையின்மா—மலையோனே !

வேறு

235. கங்கையணி சடையார் அம்புலிகொள் சடையார்
கஞ்சன்முடி யணிவோ—ரிடமேசேர்
சங்கையணி குழலாள் அம்பிகைமி னுமையாள்
தந்ததிரு முருகா !—அருளாயோ ?

---

235. சங்கையணி குழலாள் : சங்கு : சங்காலான அணி.

கொங்கைமலை யனையாள் தண்டலையின் வளர்மான்
குஞ்சரியை நிதமே—புணர்தோளா !
செங்கையினி லயிலா ! வந்துக்ருபை புரிவாய் !
திங்கள்தவழ் சிகிமா—மலேயோனே !

வேறு

236. காவுற்றிடு நாயகி மேவியவா !
காருற்றிடு மேனியி னர்மகிழ்வார்—மருகோனே !
நாவுற்றிடு வாணியை நீயருள்வாய் !
நானத்திரு நீபமென் மாலிகையே—புனைதோளா !
பூவுற்றிடு நான்முக னவனே
போதத்திரு மாமுனி வோர்தினமே—பணிபாதா !
பாவுற்றிடு நாவலர் நாயகனே !
பாரச்சிகி மாமலை மீதினிலே—வளர்தேவே !

வேறு

237. கோகனக மாமலரின் மாதுபுணர் தோளார்
கோலமிகு மேனியரி மாயன்மரு கோனே !
மாகமிசை வாழ்பவர்கள் கானமுனி வோரே
மாலினுட னேபணிசெய் சீரிலகு தாளா !
தாகமுட னேவனமி னள்புணர்பொன் வாகா !
தாரையணி மாபுயவ ! நீயருள்செய் வாயே !
தேகமிசை நோயகல நீருள்செய் வாயே !
சீரிலகு கோடிலகு தோகைமலை நாதா !

வேறு

238. சங்கரி யுமையாள் மங்கள உமையாள்
சந்திர வதன—ளிடமேசேர்
சங்கரர் மதிசேர் செஞ்சடை யரனர்
தந்திடு புதல்வா !—குமசேரா !
திங்களின் வதன ! வந்தருள்புரிவாய் !
தென்சிகி மலையா !—வடிவேலா !
மங்கள கரனே ! அன்பர்கள் நிதியே !
வண்டமிழ் தருவாய் !—அமரேசா !

---

237. இது சந்தவிருத்தம்.

236. காவுற்றிடு நாயகி : வள்ளியம்மை.

வேறு

239. கந்தமலர் நீபமிகு தொங்கலணி மார்ப ! அருள்
கஞ்சனித மேபணியும்—வடிவேளே !
அந்தமிகு தோகைமயில் வந்தகும ரா ! முருக !
அண்டரடி யார்பரவும்—இருதாளா !
சொந்தமுடன் வேடர்தரு பைங்தொடியை மேவுபுய !
துங்கமயின் மாமலையில்—வருவோனே !
சந்தமிகு பாடல்தனை யின்றருள்செய் வேல்முருக !
சந்திரனை நேர்வதன !—வடிவேலா !

வேறு

240. கஞ்சனை வென்றவனுர் அண்டமு நின்றவனுர்
கங்குனி றைந்திடுமே—னியின்மாயோன்
நஞ்சர வின்றலைமேல் நின்றிடு கின்றவனுர்
நந்தணி செங்கையின்மால்—மருகோனே !
தஞ்சமி னன்பன்முனே வந்துவ ரந்தருவாய் !
சங்கரர் தந்திடவே—வருபாலா !
வெஞ்சம ரம்புரிமா அஞ்சமுன் வென்றவனே !
விண்டொடர் குன்றையின்மா—மலையாளா !

வேறு

241. ககனத் தமரோர் பணிநற் சரணு !
கருணைக் கடலே ! அடியார்க் குடனே—அருளாயோ ?
செகரட் சகனே ! தமிழைத் தருவாய் !
திருவைப் புணர்மால் மருகக் குமரா !—அருளாயோ ?
குகவித்த கனே ! ப்ரபலத் தெய்வமே !
குறமெய்க் கொடியாள் புணற்பொற் புயனே !—
அகமுக் கியகு ரனைவெட் டியவா ! [அருளாயோ ?
அடியற் கெளியாய் ! சிகிநற் கிரியாய் !—அருளாயோ ?

வேறு

242. திருக்கயி லாச மலையார் கலைப்பிறை சூடு சடையார்
திகட்டனு மேவு கரனுர்—பரமானுர்
தருக்கம ழான வனமாள் மறக்குல மீதில் வருவோன்
தனக்கருள் நாதர் தரவே—வருபாலா !

---

239. வடிவேளே ! - வடிவையுடைய வேளே !

240. நஞ்சரவு : நச்சரவு எனற்பாலது சந்தம் நோக்கி மெலிந்தது. வென்றவனுர், நின்றவருர் என்பனபோன்ற சொற்கள் சந்தம் நோக்கி அவ்வாறு அமைந்தன. வெஞ்சமரம் புரிமா : மாமரம்.

242. திகட்டனு : திகழ்தனு. மறக்குல மீதினில் வருவோன் : கண்ணப்ப நாயனுராக இருக்கலாம்.

செருக்கள மீதி லெதிரா யமர்ச்செயு மாவை யுடனே
செகுத்திடு கூரி னயிலா !—அருளாயோ ?
மருக்களு லாவு மலரான் சிறைப்பட வேசெய் முருகா !
மணிக்கிரி யான சிகிமா—மலேயோனே !

243. வன்ன மயில்முருகா ! கன்னி யுமையவளே
மன்னு விழியுமையாள்—தருபாலா !
கன்னல் நிகர்மொழியாள் அன்ன மெனுநடையாள்
கன்னி யணிகுழலாள்—குறமானுள்
நன்ன யமதுடனே பின்னி மருவியவா !
நண்ண வென்முன்வருவாய்—குமரேசா !
செந்நெல் விளைநகரா ! இன்னம் வரமருள்வாய் !
திண்ணு லவுசிகிமா—மலேயோனே !

244. காதற்கிசை குறமகள் மேவிய
கானத்தினில் வளரும்வி லாசம—தணிதோளா !
சீதப்பிறை யணிபவ னேபுணர்
தேவிக்கிசை கனமிகு பாலக !—முருகோனே !
பாதத்தினை யனுதின மேபணி
பாலற்கருள் புரிகுக னே ! சிறை—மயிலாளா !
போதக்குறு முனிபணி நாயக !
பூவுற்றிடு சிகிமலே வாழ்வுறு—குமரோனே !

245. வச்சிர வாயுதனுர் பெற்றிடு கூர்விழியாள்
மட்டவிழ் கேசமினுள்—புணர்தோளா !
நச்சிகல் வேல்விழியாள் பொற்கொடி வேடமினுள்
நட்பொடு மேவியவா !—குமரேசா !
தச்சிட மார்பினில்மா வுக்குடல்கீறிடவே
சட்டம தாகமுன்வேல்—விடுவீரா !
கைச்சிலே மால்மருகா ! வித்தையை நீயருள்வாய் !
கட்பொழில் சூழ்சிகிமா—மலேவேளே !

246. மேகக் குழலாள் பாகுச் சொலினுள்
மேனிப் பொனினுள்—குறமானுள்
மோகக் கடலாள் மீதிச் சையதாய்
மோடிப் படவே—புணர்தோளா !
தாகத் துடனே வாபத் தன்முனே
தாமப் புயனே !—குகவேளே !
நாகப் புவிமேல் வாழ்பொற் புயர்சீர்
நாடுச் சிகிமா—மலேயாளா !

243. இப்பாட்டு முதலாகப் பாட்டின் சந்த வேறுபாடு குறிக்க 'வேறு' எனக் குறிப்பிடுதல் இல்லே.

247. எதிர்த்துவரு சூரனுடல் பகுத்துவிட வேலதனை
யெடுத்துவிடு மாபெலவ!—அதிவீரா!
குதித்துநட மாடிவரு மயிற்றுரக மீதுவரு
குகக்குமர னே! கிருபை—தருவாயோ?
மதிக்குநிக ராகவரு முகக்குறமி ளுள்மருவ
வனத்தினிடை யேநடைசெய்—இருதாளா!
விதிச்சிறையை யேதவிர்செய் உயர்ச்சிபெறு **தோகைமலை**
மிருக்கவளர் சாமி! என்முன்—வருவாயோ?

248. கொடிபோன்ற இடையாள் குளிர்சேர்ந்த மதியா
—னனமானாள்—உமையாளே
மடியேந்து புதல்வா! மகிழ்ந்தோங்க வென்முனே!
—வருவாயே—மயின்மீதே!
அடிநேர்ந்து பணிவேன் அணியோங்க வருள்வாய்!
—குமரேசா!—கணநாதா!
கடிசேர்ந்த மலரா! கமழ்பாங்கு சிகிமா
—**மலையாளா**!—எனையாளாய்!

249. அறப்புணை அந்தணனர் மதிக்குயர் செஞ்சடையார்
அணிச்செய கொன்றையினர்—தருபாலா!
மறக்கொடி யிங்கிதமா யணைத்திடு அம்புயனே!
மகிழ்ச்சிக ளுந்திடவே—வருவாயே!
திறப்படை கொண்டசுரோன் எதிர்த்திட வென்றவனே!
செகத்தினி லன்பர்களே—பணிதாளா!
நறக்குளிர் செங்கமலா சனற்குரு! வந்தருள்வாய்!
**நனிச்சிகி பொன் கிரியாய்**!—குமரேசா!

250. கானத்தை மீறு குழலாள் மேருக்கு நேரு முலையாள்
காடுற்ற வேடர் தருமான்—அணைதோளா!
நானத்தை மேவு மிதழ்சேர் நீபத்தை மார்பி லணிவோய்!
நாசத்தை யார வசுரோர்—குலசூரா!
மோனத்தை மேவு முனிவோர் மாபத்தர் யாரு நிதமே
ஞானத்தர் தேவர் பணியே—புரிலோலா!
வானத்தை மேவு முடிசேர் **தோகைப்பொன் மேரில்** வளர்வோய்!
வாழ்வைச்செய் வாய்! நன் முருகா!—குகநாதா!

---

250. நாசத்தை ஆர - நாசமடைய. அசுரோர் குலசூரா! - அசுரர் குலத்திற்கு அச்சமூட்டியவனே. சூர் - அச்சம்.

251. கங்கை யணிசடையார் செங்க மலவயனும்
கண்டு பணியரனு—ரிடமேசேர்
மங்கை யுமையவளே தந்த திருமகவே!
வந்து வரமினிதாய்—உதவாயோ!
செங்கை யணியயிலா! இன்று வரமருள்வாய்!
செந்தி மலையரசே!—குகவேளே!
நங்கை குறமகளாள் பங்கில் வளர்குமரா!
நன்று மிகுசிகிமா—மலையோனே!

252. குறத்தியை யினிதா யணைத்திடு புயனே!
குணக்கட லெனவே—வளர்வோனே!
திறத்தினி லுயர்வோன் எதிர்த்திடு அசுரோன்
செயித்திட எதிர்வோ—னுடல்தானே
உறத்திட அயிலே விடுத்திடு குமரா!
உனைப்பணி யடியேன்—எனையாளாய்!
அறக்கடல் வடிவே! சிகிக்கிரி முருகா!
அருட்க்ருபை புரிவாய்!—செகநாதா!

253. கான முற்றிடு வேடமினுள்புணர்
காம மிக்குள நாயக னே!வரம்—உதவாயோ?
ஞான முற்றிடு மாதவ ரேபணி
நாத வித்தக! நீக்ருபை யாவையும்—உதவாயோ?
நான முற்றிடு நீபமென் மாலிகை
நாளு முற்றிடு மாபுய னே! மயில்—முருகோனே!
வான முற்றிடு தோகையின் மாமலை
வாழ்வு உற்றிடு வேலவ னே!நல—குமரேசா!

254. கச்சணி முலையாள்—குறமானுள்
கட்டிய ணையுமா—திருதோளா!
நச்சணி மிடறுர்—தருபாலா!
நத்தணி கரனுர்—மருகோனே!
அச்சம துடனே—எதிர்சூரோன்
அற்றிட வயிலே—விடுவோனே!
பச்சம துடனே—வருவாயே!
† [பத்......மினு]—தோகைமேரா!

---

254. † சிதைவு. இதனைப் 'பத்தர்களகனே'! எனப் படிக்கலாம். 'தோகை மேரா' என்பது சந்தம் நோக்கித் 'தொகைமேரா' என நின்றது.

255. வனத்தி லுற்றிடு வேடமி னள்புணர்
மகிழ்ச்சி பெற்றிடு மாபுயனே! அரு—ளுதவாயோ?
சினத்தி லுற்றெதிர் சூரனை யேயுடல்
தெறிக்க விட்டிடு கூரயி லா! சிறை—மயிலாளா!
கனத்தி லுற்றிடு வானவர் ஞானவர்
கருத்தி லுற்றிடு காரண னே!வரம்—அருள்வாய்நீ!
மனத்தி லுற்றிடு நோய்மிடி யேதவிர்
மணிச்சி கிக்கிரி மீதினி லேவளர்—குருநாதா!

256. சத்திக்கு எதிர்த்திடு சூருடல்
† [தட்டுப்பட ஏவிய] மாபல!—செயவீரா!
தத்திக்கு மயிற்பரி வாகன!
சத்தக்கட விற்றுயில் மாயவன்—மருகோனே!
தித்திக்கு § [யேதடகொடி] நாயகி
செப்புற்ற தனக்குற நாயகி—புணர்தோளா!
சித்திக்க அனுக்ரக மேயருள்
* [சித்ரச்சிகி] வாழ்வுறு—குகவேளே!

257. சிறையுற்றிடு மாமயில் வாகன!
திடமுற்றிடு சூருடல் கீறிய—அயிலாளா!
பிறையுற்றிடு வேணியின் நாயகர்
பெலமுற்றபொன் மேரினில் வாழ்பவர்—குருபாலா!
கறையுற்றிடு கேசமி னுளுயர்
கமழுற்றிடு வேடமி னள்பணி—யிருதோளா!
மறையுற்றிடு நான்முக னர்பணி
வடிவுற்றிடு தோகையின் மாமலை—வளர்வோனே!

258. கடப்பை யணிபுயனே! கனத்த சிறைமயிலா!—குமரேசா!
திடத்தி லுயரசுரோன் சினத்து விழஅயிலே—வியவீரா!
குடத்தின் மிகுதனமான் குறத்தி புணர்புயனே!-குகவேளே!
விடத்தை அணிஅரனர் விருப்பு சுத! சிகிமா—மலையோனே!

259. கஞ்ச மலரயனர் கண்டு பணிசரண!—குகநாதா!
வஞ்ச மிகுமசுரோன் மங்க வயில்தனையே—வியவீரா!
நஞ்ச மணியரனர் நந்து திருமகனே!—அருளாயோ?
தஞ்ச மருள்புரிவாய்! சம்பு சிகிமலைமேல்—வளர்வோனே!

---

256. † இதனைத் 'தட்டுப்ப டத்தொடு மாபல!' எனப் படிக்கலாம். § இதனை 'மிதழ்க்கொடி' எனப் படிக்கலாம்.

* 'சித்ரச்சி கிக்கிரி' என இதனைப்படிக்கலாம்.

260. வாச முற்றிடு நீப மாபுய! மாலை யைத்தரி மார்பனே!
நேச முற்றிடு வேட நாயகி நேரி ழைப்புணர் போகனே!
நாச முற்றிடு சூர னுருடன் நாடி வெற்றிகொள் வேலனே!
பாச முற்றிடு நோயை நீதவிர்! பாடு நற்சிகி யாளனே!

261. கயிலாச கிரிவாசர் கமழ்மாலை புனைமார்பர்—உமையாள்சேர்
ஒயிலான பரமேசர் ஒளிர்சோம னணியீசர்—தருபாலா!
அயிலான எனையாள்வை அணிகோதை மிகுவேடர்—மகள்வாகா
மயில்மீதில் வருநாத! மணியான நலதோகை—மலையாளா!

262. கானத்தினில் வாழுயர் வேடுவர்
காருற்றிடு கேசமி னுள்குற—மகள்பாகா!
நானக்கம லாசன நான்முகன்
ஞானக்குரு மாமுனி வோர்பணி—யிருதாளா!
கூனப்பிறை சூடிய வேணியர்,
கூடிப்புணர் மாதுமை யாள்தரு—புதல்வோனே!
வானத்தவர் தேடிய நாயக!
வாழ்வுற்றசி காமலை மேவிய—முருகோனே!

263. கந்தக்க டப்பையணி அம்பொற்பு யக்குமர!
கஞ்சக்கொ டிப்புணரும்—இருதோளார்
நந்தத்தை யுற்றகரர் கங்குற்கெ திர்த்தநிறர்
நன்றுற்ற வச்சுதர்நல்—மருகேசா!
சந்தக்கு றப்பெணணை துங்கத்தி ருக்குமர!
தங்கக்கி ரிப்பரமர்—தருபாலா!
அந்தச்சி றைச்சிகிய! இன்றெற் கருட்செய்குவை!
அங்கச்சி கிக்கிரியின்—மலையோனே!

264. கனகமலை யதனில்வளர் பரமர்தர வருபுதல்வ!
—கதிர்வேலவா!—அரணவலா!
பனகநல அணையின்மிசை துயிலும்அரி மருவிவளர்
—பதுமாசனள்—மருகேசனே!
புனமதனில் உறைமறவர் அருளவரு குறமடவி
—புணர்தோளனே!—விழிபாரையா!
சினமுலவு அசுரனுயிர் விலகஅயில் தொடுகுமர!
—திகழ்தோகைமா—மலைநாயகா!

---

260. இது சந்த விருத்தம்.

264. அரண் நாவலா! - காவலாகிய நாவலனே! பனகம்; பன்னகம் - பாம்பு.

265. மாலைக்குழ லாள்குற நாயகி
வானப்பிறை யாகிய சீர்நுதல்—மடமானுள்
காலைக்கதிர் போலவு மேனியள்
காதற்கும ரா! க்ருபை யாவையும்—உதவாயோ!
பாலைப்பழி மாமொழி யாளுமை
பானைக்குழ லாளுமை நாயகி—தருபாலா!
வேலைப்பொரு சூருடன் மேல்விடு
மேன்மைக்குக னே! சிகி மாமலை—முருகோனே!

266. கோதைக்கு றத்திபுணர் கோலக்க டப்பமலர்
—அணிதோளா!—வடிவேலா!
சீதைப்பெ ணுத்தமியை சீர்மிக்க வற்பினெடு
—புணர்மாயோன்—மருகோனே!
வாதைப்ப டக்கொடிய மாவைக்கொ லக்கதிர்கொள்
—துணேவேலே—விடுவோனே!
சூதைப்பொ ருத்தகன தோகைப்பெ ணுற்றசிகி
—மலைமீதே—வளர்வோனே!

267. வாசக்க டம்பமலர் மாலைக்கி சைந்தபுய!—முருகோனே!
தேசத்தர் வந்துபணி சீருற்ற குன்றைமலை—வளர்வோனே!
ஈசற்கி சைந்தவுமை யேயற்பு மிஞ்சவரு—புதல்வோனே!
மாசற்றி டுஞ்சிகியின் வாழ்வுற்ற கந்த! அருள்—உதவாயோ?

268. மேலா னவர்பணி பாதா! மயில்வரு
வீரா! அருள்புரி—குருநாதா!
நாலா கியகலை நீயே யருள்புரி
நாதா! சரவண—பவ! வேளே!
கோலா கலகும ரேசா! நலமிகு
கோவே! கதிர்துணை—வடிவேசேர்
வேலா! உமைதரு பாலா! சிகிமலை
மீதே வளர்குக!—முருகோனே!

269. பத்தி யதுமிகவே யற்பி னெடுநிதமே
பத்தர் பணிசரண!—குகநாதா!
சத்தி தனையெதிர்மா வைக்கொ லிடவிடுவோய்!
சத்த முகினிறமே—னியன்மாயோன்

---

268. கதிர்துணை வடிவேசேர் வேலா!: துணை: அடியர்க்காதரவு. 'தூய துணை அயில்' என்பர் பின்னும் (294).

269. கொலிட: கொன்றிட.

நத்தி லகுகரனர் அச்சு தனன்மருகா!
நட்பி னெடுகுறமான்—அணைதோளா!
முத்தி தனையருள்வாய்! நற்சி கியின்மலையா!
முக்ய முடன்வரமே—தருவாயே!

270, நச்சர விற்றுயி லச்சுத னருட—மருகோனே!
நற்றமி ழைச்சொல வற்புட னேவரம்—உதவாயோ?
பச்சமி குத்திடு நற்குற நாயகி—தனையேதான்
பத்மமு கத்தில முத்திட மாலொடு—புணர்தோளா!
மச்சக ரத்த! வி ழிக்கொடி மாதுமை—யவள்பாலா!
மற்புய நற்பல முற்றிடு சூருடன்—எதிர்வேலா!
லச்சண முற்றிடு வற்புத னர்பணி—யிருதோளா!
லட்சுமி நித்திய முற்றசி காமலை—முருகோனே!

271. சானகிக்கு மாலிகை யேபுனை நாயகர்
சாகரத்தி னுகணை மீதினி லேதுயில்
—புரிமாயோன்—தருவேசூழ்
வானகத்தில் வாழ்வுறு தேவர்க ளாலெதிர்
வாதுபெற்ற ராவணன் மாயமு ழுழியை
—எயுமாயோன்—மருகோனே!
கானகத்தி லேயுறை வேடமி னுளொடு
காதல்மிக்க வேபுணர் சீர்புய னே! க்ருபை
[..........]—தருவாயே!
நானமுற்ற தோடிதழ் சூழ்மலர் வாழ்வுறு
நான்முகத்த ரேபணி தோகையின் மாமலை
[...........]—முருகோனே!

272. கோகன கத்திரு மாது மேவிய
கூர்திகி ரிப்படை மாய னருட—மருகோனே!
மாகம திற்றின மேவி யேநல
வாழ்வுப டைத்திடு வான வோர்பணி—யிருதாளா!
நாகம திச்சடை யீச னர்புணர்
நாயகி வித்தகி பால கா! வரம்—உதவாயோ?
சாகர முற்றிடு நேம நாடுள
தார்புனை வித்தக! தோகை மாமலை—முருகோனே!

---

271. [...] பின்னிரண்டடிகளில் ஒவ்வொரு சீர் இல்லை. 'இனிநீயே - தருவாயே!' என்றும், 'தனில்வாழ்வாய்!—முருகோனே.!' என்றும் இசைத்துப் படிக்கலாம்.

273. மணமேமிகு தாதகி சூடிய நெடிதாகிய சீர்சடை வேணியர்
மதனுர்தமை யேயெரி வாய்விட-விழிநாதன்-நலமேசேர்
தணமேமிகு மாலிகை யேயணி கரிதாகிய கேசமி னுளுமை
தருபாலக னே! அடி யேனிடம்—வரமேசெய்—தெனை
[யாளாய்!
நிணமேமிகு கூரிய ஆழியை யெதிராய்வரு ராவணன் மேல்விடு
நெடுமால்மரு கா! நட மாடிய—மயில்மீது—வருவோனே!
குணமேமிகு நான்முக னுயர் பொதியாசல மாமுனி வோரிட
குருநாயக னே! சிகி மாமலை—வளர்கோல! முருகோனே!

274. பிறைசூடிய வேணிய னுர்வெகு
ப்ரியமாகிய நாயகி யாளுட—புதல்வோனே!
குறையாய்விட மாவுர மேலதி
கொடிதாய்வடி வேல்தனை யேவிய—செயவீரா!
மறைதேடிய நாயக னே! நல
வரமேதரு வாயடி யேனிட—முருகோனே!
சிறைமாமயின் வாகன னே! உயர்
சிகிமாமலை மீதினி லேவளர்—குகவேளே!

275. தலையாகம தேசெய ஈசுரர்
தயவாய்வரம் யாவையு மேதர—அதனுலே
மலைவாகமுன் வானவர் கோனெனு
மகவானெடு போர்புரி சூரனை—யிருகூறாய்
கொலையேபுரிவேலவ னே!அருள்
குகனே! நட மாடிய தோகையின்—மயிலாளா!
சிலைமாயவ னுர்மரு கா! உயர்
சிகிமாமலை மீதினி லேவளர்—முருகோனே!

276. டாகை புனைபெலமா மார்பு வகி ரிடவே
நாமமிகு கதிர்வேல்—விடுவோனே!
வாகைபுனை குமரா! தோகையுள மயிலா!
வாசமல ரயனுர்—பணிலோலா!

---

273. தாதகி - ஆத்தி. மதனுர்: இழிவு குறித்தது. விழிநாதன் - விழித்து நோக்கிய சிவபிரான். தண்ணம் - குளிர்ச்சி: 'தணம்' எனச் சந்தம் நோக்கி நின்றது.

275. சூரபதுமன் தன் தலையை வெட்டியிட்டு வேள்வி செய்தமை யிங்கு கூறப்பெறுகிறது.

276. டாகை: 42, 39-ஆம் பாட்டுக்களை நோக்குக.

ஓகைபுனை ஒயிலா! வேடர்மகள் கணவா!
ஓதுகலை பயில்நா—வலவேளே!
ஈகைபுனை கரனே! வேணவர மருள்வாய்!
ஏருலவு சிகிமா—மலையோனே!

277. நடனக் கான்மயில் வாகன னனே! கதிர்
கனகப் பூண்முலை நாயகி யாள்மண
நளினக் கோயிலின் வாழ்வுள மாமகள்—புணர்தோளா!
விடமுற் றேறிய கூறெயிர் சீறிய
அரவிற் கூவலை மீதினி லேதுயில்
விதியைப் பாலக னுயருள் மாலுட—மருகோனே!
திடமெய்ச் சூருடல் கீறிட வேயொரு
இலைநற் கூரயி லேவிய வாகுக!
யமனைக் கால்கொடு தானுதை யீசுரர்—தருபாலா!
உடலிற் பாதக [நோயக லாதருள்]
குறவர்ப் பாவையை மேவிய மாபுய!
ஒளிர்பொற் கோடுள தோகையின் மாமலை--முருகோனே!

278. கங்கைபுனை சடையார் திங்களணி யரனர்
கஞ்சமல ரயனர்—பணிதாளார்
மங்கையுமை யவள்மா தங்கிதிரி புரையாள்
மங்களம துடனே—தருபாலா
செங்கையணி யயிலா வந்துவர மருள்வாய்!
செம்பவள விதழாள்—குறமாதுள்
கொங்கைநெகி ழிடவே கண்டுமரு வியவா!
குன்றைமலை தனிலே—வளர்வோனே!

279. கலைமதி [சூடிய] வேணி யார்புணர்
கமழ்மல ரணிகுழல் மாது மாதரி—தருபாலா!
அலைதனி [லேதுயில்]மாய னரரி
அமரர்கள் பணிபுரி மாய னருட—மருகோனே!
கொலைபுரி பெலமிகு சூர னுருட
குடல்கிழி படவயி லேவு நாயக!—முருகோனே!
சிலைநுத லுளகுற மாது மேவிய
திருவள ரிருபுய னே! சி காமலை—வளர்வோனே!

---

277. மாமகள் - இலக்குமி. எயிர். எயிறு கூவு அலை - ஓசையுறும் கடல். துயில் மால் எனக்கூட்டுக. விதி - பிரமன். 'உடலிற் பாதகநோய கலாதருள்' என்பது பொருள் சரியாயில்லை. 'நோயணுகாதருள்' என்றிருப்பின் பொருந்தும்.

279. [ ] முதலிரண்டடிகளில் இரண்டாம் சீர்கள் 'தானன' என்றிருத்தல் பொருத்தமில்லை. 'தனதன' என்றிருத்தல் வேண்டும். பின்னிரண்டடிகளை நோக்குக. இவை முறையே 'புனைதரு' 'லறிதுயில்' என இருக்கலாம்.

280. வட்ட மதிவதனாள் தத்தை நிகர்மொழியாள்
மத்த கெசமுலையாள்—குறமானாள்
இட்ட முடனணைமேல் கட்டி யணைபுயனே !
இச்சை யுடன்மயில்மேல்—வருவாயோ ?
குட்டை முனியயனார் பத்தர் பணிசரணா !
கொத்து மலர்தனையே—புனைதோளா !
துட்ட னெனுமசுரோன் பட்டு விழவயிலே
தொட்ட குக ! சிகிமா—மலையோனே !

281. தத்தும யிற்பரியாய் ! வித்தையெ னக்கருள்வாய் !
சத்திக ரித்தகையா !—முருகேசா !
கொத்துப டத்தினரா வைப்புனை நற்சடையார்
கொத்தும லர்ப்புனையீ—சுரர்பாலா !
நத்துத ரித்திடுவோர் அற்புத லெட்சுமிசேர்
நச்சர வைக்கொளுமால்—மருகோனே !
சித்துப டைத்தகுகா ! பத்தர்த ரித்தகுகா !
சித்திர முற்றசிகா—மலையோனே !

282. மதிசூடிய வேணிய னார்புணர்
வடிவேமிகு மாதுமை யாளுட—புதல்வோனே !
ததியேயுணு மாயவ னாருயர்
சகமேபுகழ் நாரண னாருட—மருகோனே !
விதியேபணி யேபுரி நாயக !
விரைநீபமென் மாலிகை யேபுனை—யிருதோளா !
கதியேமிகு மாமயில் வாகன !
கதிர்சூழ்சிகி யாமலை வாழ்வுறு—குமரோனே !

283. கானக மீதினிலே வாழ்வுறு வேடமினாள்
காதல்கொள் நாயகனே !—குகவேளே !
சானகி மேவியசீர் நாகணை மேலுறைவோர்
நாரண னார்மருகா !—முருகோனே !
தானவர் மாகுலமா மார்பது கீறிடவேல்
தான்வெகு கோபமதாய்—விடுவோனே !
வானக ராசனையே யாதரி வேலவனே !
வாகுள தோகையின்மா—மலையோனே !

---

283. தானவர் மாகுல மா - அசுரர் பெருங்குலத்துச் சூரனாகிய மாமரம், வானகராசனை ஆதரிக்கின்ற வேலவனே !

284. சூலான மேகநிக ரான கேசமின்
  சூதான சீரின்முலை மாது மாதரி—யிடமேசேர்
பாலான சோமனணி வேணி யீசுரர்
  பாலா ! கு கா ! அருளை நீசெய் வாய்நல—மிகுதேவே !
சேலான பாவைவளி பாக மேவரு
  சீதாச மேதருட ஆசை யாகிய—மருகோனே !
மேலான தேவர்பணி பூவி னோர்பத !
  வேலா ! சி காமலையின் மீதி லேவளர்—குமரேசா !

285. காமேவிய வேடமி னள்புணர்
  காலாயுத மாகொடி யாய் ! வர—முதவாயோ ?
தேமேவிய மாமொழி நாயகி
  சீரானதெய் வானைமி னள்புணர்—இருதோளா !
பாமேவிய சீர்தமி ழேயருள்
  பாலா ! மதி சூடிய ஈசுரர்—தருபாலா !
தாமேவிய் வேலவ னே ! அருள் !
  தாரேயணி மார்ப ! சி காமலை—முருகோனே !

286. சங்கத்திரு நாவல ரேபணி
  சந்தத்திகழ் மாமல ரேநிகர்—இருதாளா !
பங்கப்பணை யேமிகு காவளர்
  பண்புற்றிடு நேமமென் னுடுவ—குகநாதா !
துங்கக்கன மாமயில் வாகன !
  துண்டப்பிறை சூடிய வேணியர்—தருபாலா !
தங்கக்கிரி நேருசி காமலை
  தங்கித்தின மேவளர் வேலவ !—அருளாயோ ?

287. திருவைப்புணர் மாயவ னுருயர்
  திகிரிக்கர நாரண னுருட—மருகோனே !
மருவுற்றிடு நீபமென் மாலிகை
  மருமத்தினி லேயணி நாயக !—அருளாயோ ?
பொருதிச்சம ராடிய சூரொடு
  புகழ்சத்திமி னல்விளை யாடிய—செயவீரா !
பருதிக்கதிர் மாமதி யேதவழ்
  பதுமக்கொடி சேர்சிகி மாமலை—முருகோனே !

---

284. வள்ளி யென்பது வளியென நின்றது. சீதாசமேதர் - இராமன்.
286. பங்கப்பணை - சேறுடைய வயல்

288. கச்சணி முலையாள் விற்குயர் நுதலாள்
கற்புயர் மடமான்—வனமேவாழ்—வடிவேசேர்
லெச்சண மிகுசீர் அற்புத மலர்சேர்
லெட்சுமி நிகர்வே—டமினுள்சேர்—புயவோனே!
நச்சர வினிலே நிர்த்தம திடுவோர்
நத்தணி கரனுர்—மருகோனே!—வடிவேலா!
வச்சிர கரனுர் அற்பொடு பணிவோய்!
வர்ச்சித முளதோ—கையின்மேரே—வளர்வோனே!

289. மேலான வாகன வமரோரும்
வேதாவு மேபணி—இருதாளா!—குருநாதா!
சேலான கூரிய விழிமானுள்
சேதான பூவினில்—வளர்மானுள்—குறமாதே
மீலான நாயக! அருளாயோ?
வாதேசெய் சூருடல்—இருகூருய்—விடுவோனே!
நாலான மாநிதி தருவாயே!
நாதா! சி காமலை—வருவோனே!—குமரேசா!

290. காரான மேனியின் மாய னுருயர்
கான்மீது லாவிய பாத னுருட—மருகோனே!
கூரான வேலதை யேவி யேயிரு
கூருக வேயெதிர் சூரை யேவெலு—முருகோனே!
தாரார்பு யாசல! வேள்! கு கா! அருள்
தாரா! சி காமயில் மீதி லேறிமுன்—வருவாயோ?
சீரான தோகையின் மேரி லேவளர்
தேவே! வி லாசமென் மாலை யேயணி—முருகோனே!

291. † [கானமயில் வீரா! கூரிலகு வேலா!
காரணகு கா! நீ]—வருவாயே!
ஞானமிகு முனிவோர் சீரிலகு மடியார்
நாலுமுக வயனுர்—பணிபாதா!
வானமதி அணிவோர் வேணியர ரிடமே
வாழ்வுபுரி யுமையாள்—தருபாலா!
சானகிதன் மருகா! மாநிதியை யருள்வாய்!
தாரணிசொல் சிகிமா—மலையோனே!

---

291. † முதலடியின் சீர்கள் சந்தத்திற் கிசையவில்லை.
"கானமயில் குமரா! கூரிலகும் அயிலா!
காரணவ! குகனே!—வருவாயே!"
என்று படிக்கலாம்.

292. செச்சையணி புயனே! நிர்த்தமிடு சரண!
சித்ரமிகு வடிவேல்—அணிவோனே!
கச்சையணி முலையாள் பத்மமலர் வதனள்
கற்பினுயர் குறமான்—அணைதோளா!
பச்சைமயில் முருகா! வித்தைதனை யருள்வாய்!
பத்தியொடு மடியார்—பணிதாளா!
† [நச்சையணி அரவே சுமக்குமுயர் புவியோர்]
நட்புமிகு சிகிமா—மலையோனே!

293. வாசக்க டப்பமல ரணிமார்பா!
வாகுற்ற சத்தியணிகுகவேளே!—அருளாயோ?
தேசத்தர் பத்தர்பணி யிருதாளா!
தேனுற்ற நற்கமலமலர்வாழ்வோன்—துதிநாதா!
பாசத்த முத்தியெனை விடலாமோ?
பாகத்தில் வைத்தகுற மகளோடே—புணர்தோளா!
நாசப்ப டச்சமர்செய் அயிலாளா!
நாடுற்ற மற்சிகியின்மலைமீதே—வருவோனே!

294. சூதுபுரி யசுரோன் மார்புகிழி படவே
தூய துணை அயிலே—வியவீரா!
வாதுபுரி பெலவான் ராவணனை யெதிரே
மாளவொரு கணையே வியமாயோன்
தாதுதிகழ் மலர்மா னேமருவு புயமால்
தான்மகிழு மருகா!—அருளாயோ?
கோதுதவிர் மயிலா! நீயென்முனம் வருவாய்!
கோலமிகு சிகிமா—மலையோனே!

295. கோகனக மலராள் சானகியை யணைவோர்
கூர்திகிரி யரிமால்—மருகோனே!
மாகமிசை வளர்வோ ரேபணிசெய் வடிவோன்
வாசவனை யெதிர்போ—ரிடுசூரோன்
தேகமிரு பிளவா யாகவயில் விடுவோய்!
சீருலவு நிதியே—அருளாயோ?
தாகமுடன் மயின்மே லேறியென்முன் வருவாய்
தார ணிசொல் சிகிமா—மலையோனே!

---

292. † "நச்சையணிரவே சுமக்கு முயர்புவியோர்" சந்தம் சரியாயில்லை.
"நச்சை யணியரமேல் நிற்குமுயர் புவியோர்"
என்று படிக்கலாம். அரவு: அர என நின்றது.

296. கானக மீதினிலே வாழ்வுறு வேடுவரே
காதல்கொள் மாமகளாள்—நலமேசேர்
வானக மீதினிலே தான்வளர் வாசவனுர்
மாமகள் தானிருவோர்—புணர்தோளா!
ஞானகி சேர்புயனுர் நேமிகொள் சீர்கரனுர்
தாரணி யேயுணுமால்—மருகோனே!
மோனம காமுனிவோ ரேபணி சீர்பதனே!
மோதலை சூழ்சிகியா—மலையோனே!

297. கச்சை யணிமுலையாள் கற்பு மிகுகுறமான்—அணைதோளா!
இச்சை யுடனருள்வாய்! இக்கு மொழியுமையாள்-தருபாலா!
நச்சை யரவணைமேல் நற்று யில்செயரிமால்—மருகோனே!
பூச்சை மயில்முருகா! பட்ச மொடுசிகிமே—ரினில் வாழ்வே!

298. வண்ட னெனவருவோன் தண்ட மிகுமசுரோன்
மங்க வயில்தனையே—விடுவீரா!
அண்டர் பணிசரண! தண்ட மிழையருள்வாய்!
அன்பி னெடுகுறமான்—அணைதோளா!
துண்ட மதியணிவோர் கண்ட முயர்கறையார்
துங்க மிகுமரனுர்—தருபாலா!
கொண்டல் படிமுடிசேர் மண்ட லமதனில்வாழ்
குன்றை மலையரசே!—குகவேளே!

299. சங்கை யணிகரனுர் இந்தை யணிசடையார்
சம்பு திரிபுரனுர்—தருபாலா!
செங்கை தனிலயிலே கொண்ட குருபரனுர்
செந்தி மலையரசே!—அருளாயோ?
மங்கை குறமகளாள் பங்கி லுறைவடிவே!
வந்து அடியன்முனே—யருளாயோ?
பங்க யமினிதம்வாழ் குன்றை மலையரசே!
பண்பு பெறுகுகனே!—செகநாதா!

300. வச்சிர பாணியனுர் அற்புத நாயகனுர்
மற்புய மாயவனுர்—பணிதாளா!
பச்சையின் மாமயிலா! முத்தமிழ் நீயருள்வாய்!
பத்திய தாயடியார்—துதிகோவே!
நச்சிரு ராவணிவோர் துப்புர வானவர்சீர்
நட்புகொள் மாதுமையாள்—தருபாலா!
கச்சிகல் பூமுலையா ளைப்புணர் மார்புயனே!
கர்த்தசி கமாலைமேல்—வளர்வோனே!

301. பச்சைம யிற்பரியா ! அற்புத நற்பதனே !
பட்சமெ னக்கருள்வாய் !—அமரேசா !
கொச்சைமி குத்தமினுள் முக்யவ னக்கொடியாள்
குத்துமு லேக்குடமேல்—அணேதோளா !
செச்சைத ரித்தபுயா ! சத்தித ரித்தவனே !
சித்துவி ளேத்தவனே !—குமரேசா !
கச்சைத ரித்திடுவாள் கொற்றவை பெற்றவனே !
கர்த்த ! சி கிக்கிரியா !—முருகேசா !

302. வட்டம திச்சடையார் பொற்கயி லேக்கிரியார்
மற்பெல முப்புரமீ—தெரியாவே
தொட்டநு தற்கணனுர் சித்திவி ளேத்திடுவோர்
சொக்கரி டத்துமையாள்—புதல்வோனே !
கொட்டம்வி ளேத்திடுசூ ரைப்பொரு வித்தகனே !
குத்துமு லேக்குறமான்—அணேதோளா !
கட்டழ குற்றவனே ! இப்பவெ னக்கருள்வாய் !
கர்த்த ! சி கிக்கிரியா !—முருகோனே !

303. கனத்த மயில்வடிவே !—அருளாயோ !
கருத்தி னிதமுறைவாய்—முருகோனே !
வனத்தில் வருகுறமா—னுடனேதான்
மகிழ்ச்சி யுடனிதமே—அணேதோளா !
சினத்து வருமசுரோன்—உடல்மீதே
திறத்து விடுஅயிலா !—யுத ! வேளே !
அனத்தி னடையுமையாள்—தருபாலா !
அருட்சி கியின்மலேமேல்—வளர்வோனே !

304. மதிசூடிய சடிலார் கயிலாசமென் மலேயார்
மகிழ்மாதுமை யவளே —தருபாலா !
ததிமேல்வரு மயலால் களவேபுரி அரியார்
சகமேபுகழ் விறலார்—மருகோனே !
கதிமாமயில் தனிலே வருவாயடி யன்முனே
கமழ்நீபமென் மலர்சூ—டியதோளா !
நிதிசேர்தமிழ் தருவாய் ! உயர்வானக இமையோர்
நிருபா ! சிசி மலேமேல்—வளர்கோனே !

---

300. கொச்சை = மழலை மொழி.

301. மற்பெலம் = மிகுந்த வலிமை.

302. எரியாவே - எரியாகவே.

305. பங்கய மேறு மாது பங்கினில் வாழு மாயன்—மருகோனே !
செங்கையின் வேலை மாமுன் சென்றிட ஏவு சூர !—குருநாதா!
கங்கையை மேவு மீசர் கந்தர நீல நாதர்—தருபாலா !
எங்கையில் ஏம மேசெய் ! இந்துவு லாவு **தோகை—மலை**நாதா !

306. சிந்துர நிறத்தார் கங்கையை முடித்தார்
செஞ்சபை நடித்தார்—பரமானர்
இந்துவை அளித்தார் செங்கயி லையுற்றார்
இந்த்ரனை [ரட்சித்தார்]—தருபாலா !
பந்துயர் தனத்தாள் சுந்தர மிகுத்தாள்
பைங்கிளி குறப்பா—வையினுதா !
வந்துமு னெனக்கே தந்தருள் வரத்தை
மங்கள **மயிற்கோ—டினில்**வாழ்வே !

307. கஞ்சத்திரு நாயகி மேவிய
நன்றுற்றிடு பாணிய ரூருயர்
கங்குற்றிரு மேனிய னர்வெகு—நலமேசேர்
அஞ்சக்கன ராவண னுருடல்
கண்டக்கண மேயெதி ராடிவெல்
அந்தச்செய மானுட[.........]—மருகோனே.
செஞ்சொற்றமிழ் பாடவு மேயருள் !
இந்த்ரப்பவு சேயினி நீயருள் !
செங்கைக்கிணை யாயொரு கூரயில்—அணிகோனே !
மஞ்சத்தினி லேகுற மாதுடன்
இன்பத்தினி லேமிகு நாயக !
வண்டுற்றிடு சோலைகள் சூழ்**சிகி—மலையோனே** !

308. கூருற்றிடு வேல்தனை யேயெதிர்
கோதுற்றிடு சூருடல் மீதினில்—எயும்வீரா !
காருற்றிடு மேனிய னர்திரு
காதற்கிசை மாயவ னுருட—மருகோனே !
தாருற்றிடு மாபுய னே ! அருள்
தா ! பச்சையின் மாமயி லா ! சிவன்—அருள்பாலா !
வாருற்றிடு வேடமி னள்புணர்
வாகுக்கும ரா ! **சிகி யாமலை**—முருகோனே !

---

305. எங்கையில் ஏமமேசெய் - எங்கட்கு நன்மையே புரிக. இந்து உலாவு தோகைமலை - திங்கள் தவழும் மயில்மலை.
306. [ ]ரட்சித்தார் : டகர ஓசையைக் குறைத்தல் வேண்டும்.
307. [...]ஒருசீர் குறைகிறது. 'சீர்பெறு' எனச் சேர்த்துப்படிக்கலாம்.

309. புண்ட ரிகமலர்மேல் என்றும் வளர்கொடியாள்
பொன்ப வளவிதழாள்—புணர்மாயோன்
வண்ட ரெனும்அசுரோர் தங்கள் குலம்அறவே
வந்து கணைவிடுமால்—மருகோனே !
கண்ட மிருகமறையார் மன்றில் நடமிடுவோர்
கஞ்சன் முடிதுணிவோர்—பரமானோர்
கொண்டல் நிகர்குழலாள் நங்கை யுமைபுதல்வா !
கொங்கு திகழ்சிகிமா—மலையோனே !

310. [கான கத்திலுறை வேட மான்
காமி குத்தகுல மாது மே—வியதோளா !
சான கிக்குமண மாலை யே
தாம யொத்தியி லுலாச மால்—மருகோனே !]
ஞான முற்றஅடி யார்க ளேபணி
நாம மெய்க்கதிரின் வேல னே !அருள்—உதவாயோ !
வான வர்க்கிறைவ! நாய கா! சிறை
மாம யிற்சிகியின் மேரிலே வளர்—குகவேளே !

311. மங்குல் நிகர்நிறவோர் தங்கள் குலம்அறவே
வஞ்ச முடனயிலே—வியவீரா!
சங்கு நிகர்மிடறுள் வம்பு புனைமுலையாள்
சங்க ரிசொல்புதல்வா !—அருளாயோ ?
கொங்கு கருநடதே சங்கள் புகழ்சரணு !
கொந்த லர்கொள்புயனே !—வடிவேலா !
பொங்கி யெழுகடல்சூழ் குன்றை மலையரசே!
பொங்க மொடுதமிழே—அருளாயோ ?

---

310. [ ]முதலிரண்டடிகள் பின்னிரண்டடிகளுடன் சந்தப் பொருத்தங் கொள்ளவில்லை. அவற்றை,

கான கத்திலுறை வேட மான்புனம்
காவ லுற்றகுற மாது மேவிய—இருதோளா !
சான கிக்குமண மாலை யேயிடு
தாம யொத்தியிலு லாச மால்மகிழ்—மருகோனே !

'அயோத்தி' என்பது சந்தம் நோக்கி 'அயொத்தி' என நின்றது.

311. பொங்கம் - பொலிவு.

312. [துங்கமயில் வாகனா! செங்கையணி வேலவா!
தொங்கலணி மார்பனே!]—குகவேளே!
பங்க முறுமிதழ்சேர் புண்ட ரிகமலராள்
பங்கி னுறைவிறல்மால்—மருகோனே!
திங்க ளணிவதனா! இந்த்ர இமையவரே
சிந்தை மகிழ்வுடனே—பணிபாதா!
மங்க லிலியரனார் [இங்கிதகுணபாலா]
வந்த ருள்செய்சிகிமா—மலையோனே!

313. மட்டவிழ் குழலாள் பொற்கிளி மொழியாள்
மத்தக முலையாள்—மடமானாள்
கட்டணி மலரே மெத்தவும் அணிமான்
கற்புயர் குறமான்—அணிதோளா!
அட்டகி ரிகள்சூழ் நற்கயி லையினார்
அற்புத உமையாள்—தருபாலா!
வட்டவொண் சிகிசேர் விர்த்திகொள் சிகியா
மற்கிரிவளர்வே—லவ! நாதா!

314. பங்க யத்தி னுறைபவள் தங்க முற்ற திருவுடல்
பஞ்ச ரத்தில் வளர்கிளி—மொழிமானாள்
கொங்கை செப்பை நிகர்பவள் இந்தி ரைப்பெண் வெகுமயல்
கொண்ட ணைத்த புயவிறல்—மருகோனே!
செங்கை வைத்த அயில்கொடு வந்தெ திர்த்த அசுரர்கள்
சிந்தை கெட்டு அழிபட—விடுவோனே!
கங்கை பெற்ற சடையரன் மைந்த! மெத்த வரமருள்!
கந்த முற்ற சிகிமலை—முருகோனே!

315. கயிலைக்கர சாகிய ஈசுரர்
கமழ்நற்சடை நாயகர் பாகம—துறைமானாள்
குயிலைப்பழி மாமொழி யாளுயர்
குமரிக்கொரு பாலக னாகிய—வடிவேலா!

---

312. [ ] இக்குறிக்குள் இருப்பவற்றின் சந்தம் சரியில்லை.
இவற்றை,

“துங்க மயிலவனே! செங்கையணியயிலா!
தொங்க லணிபுயனே!”

என்றும்,

“இங்கித நல்மகனே!”

என்றும் படிக்கலாம்.

மயிலைப்பரி யாமென ஏறிய
மணமொய்த்திடு நீபமென் மாலிகை—அணிதோளா !
அயிலைக்கன சூருடல் கிரிட
அடுவித்தக ! **தோகையின் மாமலை**—வளர்கோனே !

316. தத்தும யிற்பரியாய் ! வித்தையெ னக்கருள்வாய் !
சத்திக ரித்தவனே !—குகவேளே !
கொத்தும லர்ப்புயனே ! பத்மம லர்ப்பதனே !
கொத்தர விற்றுயில்வோன்—மருகோனே !
பத்தர்க ளுக்கருளே மெத்தவி ளைத்தவனே !
பட்சமி குத்தென்முனே—வருவாயே !
சித்தசன் மைத்துனனே ! வர்த்தனை யுற்றிடுசீர்
சித்ரமி குத்தசிகா—**மலையோனே** !

317. கச்சைத் தரித்த முலையாள்
கட்டுற்றெடுத்த மலர்சூ—டிய மானுள்
கொச்சைக் குறத்தி கணவா !
கொப்புத் தரித்த குழையாள்—மகவோனே !
பச்சைச் சிகிப்பு ரவிமேல்
பத்மப் பதத்தை அடியேன்—மறவேனே
செச்சைப் புயத்தி லணிவோய் !
சித்ரச் சிகிக் கிரியில்வாழ்—முருகோனே !

318. வேலா யுதத்தை யெதிர்த்த சூருடல்
மேலே யெடுத்து விடுத்த நாயக !—அருளாயோ !
கோலா கலத்தி குறப்பெ ணாயகி
கோடார் தனத்தி லழுத்தி யேபுணர்—இருதோளா !
சேலா னநச்சு மிகுத்த கூர்விழி
சீரா னகற்றை மிகுத்த மாகுழல்—உமைபாலா !
மேலா னவித்தை யெனக்கு நீயருள்
வேளே ! சிகிக்கி ரியிற்கு லாவிய—குருநாதா !

319. போதிலுற் றவனுர் மாமறைக் குரியார்
போதமுற் றிடுவோர்—பணிபாதா !
சூதுமெத் தவுமே தான்விளைத் திடுமா
சூரபத் மனையே—கொலும்வேலா !
மாதுவித் தகியாள் மீதிலிச் சையினுல்
மால்மிகுத் திடுபா—லக ! வேளே !
ஏதமற் றிடுமா கோடுபெற் றிடுசீர்
ஏர்நிறைத் திடு தோ—கையின் வேளே !

320. பதுமமலர்க்கொடியாள் சனகித ஊேப்புணர்வோர்
பனகம திற்றுயில்வோர்—மருகோனே!
விதுதரி நற்சடையார் கனகம லேச்சிவனர்
விமலமி குத்தரனர்—தருபாலா!
மதுமிகு பொற்கமலா சனர்பணி வித்தகனே!
வடிவுமி குத்திடுவேல்—அணிவோனே!
கீதுமமி குத்திடுரு ரனையடு பொற்புயனே!
கனமிகு சித்ரசிகா—மலேயோனே!

321. கார்கொண்டிடு திருமேனியர்
கானந்தனில் வருநாயகர்—மருகோனே!
சூர்கொன்றிடு அயிலாயுத!
கோலந்திகழ் மயில் மீதினில்—வருவோனே!
[தார்கொடி யிருசீர்புயாசல
திகழ்குற நாயகி—புணர்தோளா!]
பார்கொண்டிடு சிகி மேரினில்
பாரம்ப ரிவுடனேவளர்—குகவேளே!

322. சித்திப டைத்தவனே! நற்குண வித்தகனே!
சித்ரமி குத்திடுசீர்—மயிலாளா!
முத்தியெ னக்கருள்வாய்! வித்தையெ னக்கருள்வாய்!
முற்படு மற்புயமா—விழவேதான்
சத்தியெ டுத்தவனே! அற்புத நற்கொடியாய்!
சக்கர அத்திரமால்—மருகோனே!
கத்திகை யுற்றபுயா! கர்த்த! சி கிக்கிரியா!
கற்புயர் வித்தகியாள்—புதல்வோனே!

323. காமேவிய வேடமி ஞள்புணர்
காலாயுத மாகிய சீர்கொடி—அணிவோனே!
பாமேவிய சீர்தமி ழேயருள்
பாலாகிய மாமதி யேநிகர்—முகவேளே!

---

320. விது - மதி. கதுமம் - சீற்றம்.

321. [ ] இக்குறியுள்ள பகுதி சந்தஞ் சரியாயில்லை. சொற்களும் விடப்பட்டுள்ளன. இப்பகுதியை,

"தார்கொண்டிடு புயமீதினில்
கானந்திகழ் குறநாயகி—புணர்வேலா!"

எனப் படிக்கலாம்.

322. மற்புயமா: சூரனுகிய மாமரம். சக்கரமும் அத்திரமும் ஏந்தியமால். கத்திகை - மலர்மாலே.

தாமேவிய சூருடல் கீறிய
தாரேபுனை கூர்வடி வேலவ !—அருளாயோ ?
மாமேவிய கோடுள தோகையின்
மாவாகிய சீர்மலை மேவிய—குருநாதா !

324. மருவுற்றிடு நீபமென் மாலிகை
மலரைப்புனை சீர்புய னே ! அரு—ளுதவாயோ ?
திருவுற்றிடு மாயவ னார்வளர்
திகழ்சக்கர மாதவ னார்திரு—மருகோனே !
உருவுற்றிடு காமனை யேயெரி
உயர்நற்கயி லாசர்சொல் பாலக !—முருகோனே !
தருவுற்றிடு பாணிய னே ! குக !
சகமுற்றிடு தோகையின் மாமலை—வளர்வோனே !

325. வாசக்கம லாசன னுருயர்
வானத்தினில் வாழ்வுறு வாசவர்—பணிதாளா !
நேசக்குற நாயகி மேவிய
நீதக்கும ரா ! க்ருபை யாவையும்—அருளாயோ ?
நாசப்பட வேயெதிர் சூரனை
நாடிக்கதிர் வேலதை யேவிய—செயவீரா !
ஈசர்க்கொரு பாலக னே ! கன
ஏருற்றிடு தோகையின் மேல்வரு—முருகோனே !

326. கச்சணி முலையாள் கட்டிய மலராள்
கற்புயர் மடமான்[..........]—நலமேசேர்
பச்சம துடனே நற்குற மகளாள்
பத்மமென் முலைமேல் அற்பொடு நிதமே-அணைதோளா
நச்சர வினிலே நிர்த்தமு னிடுவோர்
நத்தணி கரனார் விட்ணுவின் மருகா !—மயில்மேலா !
மச்சமென் விழியாள் வித்தகி புதல்வா !
மற்புய முருகா ! நற்சிகி மலைமே—லருள்கோனே !

327. செந்திரு மகள்சேர் அம்புய விறலார்
செங்கம லயனார்—பணிவோர்பால்
வந்திடு முமையாள் பைங்கிளி மொழியாள்
வம்புகொள் முலையாள்—தருபாலா !

---

326. [ ] இப்பகுதியில் இரண்டு சீர்கள் இல்லை. 'பொற்புறு வனமான்' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

327. அம்புயம் - அழகியபுயம். விறலார் : திருமால். திருமாலும் அயனும் பணிவோர் ; சிவபிரான்,

வந்திசெய் அசுரோன் நொந்திட வயிலே
மண்டிட விடுசே—வக! வேளே!
அந்தியின் மதிபோல் மங்கள வதன!
அன்புயர் சிகிமா—மலேயோனே!

328. குத்து முலேயுமையாள் விர்த்தி பெறுமுமையாள்
கொத்து மலரணிமா—னிடமேசேர்
மொய்த்து வளர்சடையார் நச்சை யணிமிடறுர்
முத்தி தருமரனுர்—தருபாலா!
சித்து விளேமுருகா! வித்தை தனேயருள்வாய்!
சித்ர மிகுமயில்வா—கன! வேளே!
அத்து விதமுடிவே! நற்சி கியின்மலேயா!
அற்பு தமின்மருகா!—குமரேசா!

329. கஞ்ச மலரயனுர் கண்டு பணிசரண!—குகவேளே!
வஞ்ச மிடுமசுரோன் வம்ச மழிபடவேல்—விடுசூரா!
தஞ்ச மினியருள்வாய்! சங்க ரர்சொல்புதல்வா!—குமரேசா!
அஞ்ச லெனவருவாய்! அந்த மிகுசிகிமா—மலேயோனே!

330. காலே நிறவடிவே! காதல் மிகுகுறமான்—அணேதோளா!
வேலே யெதிரசுரோன் மீது கிழிபடவே—விடுவோனே!
பாலே நிகர்மொழியாள் பாவை யுமைபுதல்வா!—குகவேளே!
சோலே மிகுகனமார் தோகை மலே முருகா!—குமரேசா!

331. தத்தை மொழியுமையாள் சத்தி யெனும்விழியாள்—தனேயே [சேர்
கற்றை யுளசடையார் கர்த்தர் கயிலேயினுர்— அருள்பாலா!
முத்தை யணிமுலேயாள் மொய்த்த குழல்மடவாள்—புணர் [லோலா!
வித்தை தனேயருள்வாய் விர்த்தி பெறுசிகிமா—மலேயாளா!

332. கச்சை யணிமுலேயாள் கற்பு மிகுகுறமான்—அணேதோளா!
நச்சை யணிமிடறுர் நத்தை யணிகரனுர்—தருபாலா!
பச்சை மயில்முருகா! பற்ப மலரயனுர்—பணிபாதா!
செச்சை யணிபுயனே! சித்ர மிகுசிகிமா—மலேயோனே!

333. தோகை மயில்முருகா! சூரை வெனும்வடிவேல்—அணி [வோனே!
வாகை யணிபுயனே! வாகு திகழ்குமரா!—அருளாயோ!
பாகை நிகர்மொழியாள் பாவை குறமகள்சேர்-புயவோனே!
ஓகை புனேஒயிலா! ஒவ மிகுசிகிமா—மலேயோனே!

334. சித்ரமயில் வாகனர் பற்பமலர் வாசனர்
சித்தமகிழ் வாகவே—பணிபாதா!
நத்திலகு பாணியார் அத்ரமிகு பாணியார்
நட்பினெடு மேவுமால்—மருகோனே!
சித்திமிகு நாதனர் பெற்றபுதல் வா! குகா!
செக்கர்நிற மேனியா!—அருளாயோ?
அத்தியுட சோதரா! இப்பவரம் நீசெய்வாய்!
அற்புதரு வாய்! சிகா—மலையோனே!

335. கங்கை யணிசடையார் சந்த்ர னணிசடையார்
கண்ட மிருகறையார்—இடமேசேர்
பங்க யமென்வதனள் கங்குல் மிகுகுழலாள்
பந்து மிகுதனமா—தரிபாலா!
செங்கை யணிஅயிலா! துங்க மயில்முருகா!
திங்கள் மிகுவதன!—குமரேசா!
மங்கை குறமகள்சேர் அந்த மிகுபுயனே!
வந்த ருள்செய்! சிகிமா - மலையோனே!

336. மேலாகிய வானவர் பூமலர்
வேதாவுமெந் நேரமு மேபணி—யிருதாளா!
கோலாகல வேலவ னே! அருள்!
கோதேமிகு சூருடல் கீறிடு—குகநாதா!
நாலாகலை யாகவு மேயருள்
நாதா! சிறை மாமயி லேறிய—செயவீரா!
சேலார்விழி மாதரி பாலக!
சீரார்சிகி மாமலை வாழ்வுறு—குமரேசா!

337. கங்கை யணிசடையார் கந்த இதழியின—ரிடமேசேர்
மங்கை யுமையவள்சீர் வம்பு முலையுமையாள்—தருபாலா!
கொங்கை மிகுகுறமான் கொஞ்சியணைபவனே-முருகோனே!
செங்கை யணியயிலா! தென்சி கியின்மலையா!—வடிவேலா!

338. சோதி மிகுமதியே சூடு மணிசடையா—ரிடமேசேர்
ஆதி திரிபுரையாள் ஆவ லொடுதருபா—லக! வேளே!
போதி லருமகளாள் போல வருகுறமான்—அணைதோளா!
நீதி யுடனடியா ரேப ணிசெய்சிகிமா—மலையோனே!

---

334. அற்பு - அன்பு.

339. மங்கள மிகுகொடியாள் சங்கரி திரிபுரையாள்
வம்பணி யிருமுலையாள்—உமைமானுள்
சங்கரர் மதிதனையேல் செஞ்சடை யரரினிதாய்
தந்திடு புதல்வ! குகா!—அருளாயோ?
துங்கமென் மயில்முருகா! வந்தரு நிதிதருவாய்!
சுந்தர மிகுசரண!—குமரேசா!
தீங்கநன் மலைநிகரார் மிஞ்சிய சிகிமலையா!
சம்பிரம மிகுவடிவேல்—அணிவோனே!

340. கஞ்சநான் முகனுர் கம்புசேர் கரனுர்—பணிபாதர்
நஞ்சமா மிடருர் நங்கைபார் வதியாள்—தருபாலா!
வஞ்சமா வுடல்மேல் மண்டவே அயிலே—வியசூரா!
தஞ்சம்வே றிலையே சங்கரா! சிகிமா—மலையாளா!

341. சேவ லான கொடியா! தோகை யான மயில்மேல்
சீர தாக வருவாய்!—அமரேசா!
ஆவ லான குறமான் மீது பூவி னணைமேல்
ஆசையாக அணைமா—புயவோனே!
மாவ லான வசுரோன் மார்பு கீற வயிலே
வாக தாக விடுமா—கனநாதா!
காவலான முருகா! தேவை யான தருள்வாய்!
காவு லாவு சிகியா—மலையோனே!

342. திருவுற்றிடு மாயவ ருயர்
திகழ்சக்கர பாணிய ரைலை—கடல்மீதே
உருவுற்றிடு நாகணை யார்வளர்
உலகத்தையுண் மாயவ ருட—மருகோனே!
செருவுற்றிடு மாவுடல் கீறிய
திறமுற்றிடு மாவயி லாயுத!—வடிவேளே!
மருவுற்றிடு நீபமென் மாலைய!
வடிவுற்றசி காமலை வாழ்வுறு—குமரோனே!

343. தத்துமயில் முருகா! வித்தைதனை யருள்வாய்!
சத்திதனை யணிபா—ணியின்வேளே!
கொத்துமர வினிலே நித்திரைசெ யரிமால்
கொத்துமல ரணிமால்—மருகோனே!

---

339. மதிதனையேல் - மதியை அணிந்த. தங்க நன்மலை - மேருமலை.

340. கம்பு - சங்கு. நஞ்சமா மிடருரும் பார்வதியாளும் தருபாலா!. வஞ்சமா: சூரனுகிய மாமரம்.

341. மாகனநாதா! - மிக்க பெருமை பொருந்திய நாதனே!

குத்துமுலை யுயர்வே டக்கொடியை யணிவோய்!
குப்பலொடு நிதியே—தருவாயே!
நத்துமிகு வயல்சூழ் பற்பமக ள்நிதமே
நத்துசிகி மலையா!—அருளாயோ?

344. கோலமிகு சரணு! வேலையணி கரனே!
கோதகலு மயிலா!—முருகோனே!
ஞாலமிகும் அடியா ரேபணிசெய் குகனே!
நானமிகு மலர்மா—லிகைமார்பா!
ஆலமணி மிடறுர் தாதகியை யணிவோர்
ஆவல்கொளு மையாள்—தருபாலா!
மேலவர்க ளரசே! சேவலுயர் கொடியாய்!
மேன்மையுள சிகியா——மலையோனே!

345. கோலாக லக்கும ரேச னே!அருள்
கோவே!சி கிப்பரி மீதி லேயென்முன்—வருவாயோ?
நாலான வித்தையை நீசெய் வாய்!குக
நாமா!க டப்பமென் மாலை யேயணி—புயவோனே!
மாலான நற்குற மாது மேவிய
வாகா!எ திர்த்திடு சூர னுடன்—எதிர்கூ_ரார்
வேலாயு தக்குண வீர னே!உயர்
மேலான பொற்கிரி யான தோகையின்—மலைநாதா!

346. மலையாகிய தனமான்
வனவேடுவர் குறமான்—புணர்தோளா!
சிலைமானுதல் உமையாள்
திரிசூலம்வை கையினள்—தருபாலா!
கலையாவையு மருள்வாய்!
கமழ்நீபமென் மலரே—அணிமார்பா!
கொலைமாவுயிர் விடவே
கொளும்வேலவ! சிகிமா—முருகோனே!

347. புண்டரிக அயனுர் பொங்குகடல் மிசையே—துயில்மாயோன்
அண்டமிசை வளர்வோர் அன்பினொடு நிதமே—பணிபாதா!
கொண்டல்மிகு குழலாள் கொங்கைகுற மகளாள்—புணர்
தோளா!
தண்டமிழை யருள்வாய்! சம்பு!சிகி மலைவாழ்—முருகோனே!

---

346. 'சிகிமா முருகோனே': இது, 'சிகிமாமலையோனே' என இருத்தல் பொருத்தம்.

347. அண்டமிசைவளர்வோர்: வானவர். சம்பு: விளி; இங்கு முருகனைக் குறிக்கிறது.

348. கங்கை யணியரனுர் திங்க ளணிசடையார்
கங்குல் நிறமிடறுர்—இடமேசேர்
கொங்கை மிகுவுமையாள் அன்பு மிகுவுமையாள்
கொஞ்ச மதிநுதலாள்—உமைமாளுள்
மங்கை யுமைபுதல்வா! கொண்டை மயில்தனிலே
வந்து வரமருள்வாய்!—குக!வேளே!
செங்கை யணிஅயிலா! நங்கை கமலேமினுள்
சென்று வுறைசிகிமா—மலேயோனே!

349. வந்து வரமருள்வாய்! வம்பு புனையுமையாள்—இடமேசேர்
இந்து அணிசடையார் இன்ப முடனருள்பா—லக!வேளே!
கொந்து மலரயனுர் கொண்ட குருபரனே!—முருகோனே!
மைந்து மிகுமயிலா! மஞ்சு மிகுசிகிமா—மலேயோனே!

350. கோகன கக்கொடி மாது மேவிய
கோலமி குத்திடு மாய ஞருட—மருகோனே!
நாகம திச்சடை யீச ஞர்வெகு
நானமி யற்றிய மாலே யார்தரு—புதல்வோனே!
மேகமி குத்திடு கேச நாயகி
மேன்மைப டைத்திடு வேட நாயகி—புணர்தோளா!
வேகம யிற்பரி யாள னே!அருள்
வேலவ! நற்சிகி யாள னே!அருள்—உதவாயோ?

351. அலேமீதுமுன் துயிலேபுரி அணிமாலுட மருகா!
அமரோர்பணி சரணு!க்ருபை யருள்வாய்!சரவணனே!
கொலேயேபுரி அசுரோனெடு கொடிதாகிய வயிலே
கொடுபோயெதி ரடுவோய்!நல குமரா! சிறை மயிலா!
சிலேயாகிய நுதலாளுயர் திரிசூலம்வை கையினுள்
செகநாயகி யுமைபார்வதி தருபாலக! முருகா!
தலேயாறுள வடிவே!குக! தமிழ்யாவையு மருள்வாய்!
தருவேமிகு சிகிமாமலே தனிலேவளர் பவனே!

352. எதிர்த்த சூர னுடல்மீதே
எடுத்து வேலே விடுவீரா!
எனக்கு நீசெய் குவைபாலின்
இனித்த பாடல் தனேயேதான்!

---

348. கொஞ்சமதி: பிறைமதி.

351. இது சந்தவிருத்தம்.

கதித்த தோகை மயிலாளா!
கடப்ப மாலை யணிமார்பா!
கறுப்பு வேளை யெரித்தோன்
கடுக்கை மாலை யரன்மேலோன்
மதிச்ச டாத ரனையேதான்
மகிழ்ச்சி யாக அணைமாதுள்
வடித்த தேனின் மொழிவாயாள்
மலர்ப்பெண் மாது உமைபாலா!
விதித்த நாலு முகன்வானோர்
விருப்ப மான துதியாளா!
விருத்த மான முடியேசேர்
மிகுத்த தோகை மலையாளா!

353. அலைமேலர வணைமீ துது யிலுமாயோன்
அளைபால்வெணெ யதுவேதிரு டியமாயோன்—மரு
கொலையேபுரி கொடுசூர்கிழி படவேதான் [கோனே!
குருவே!கிளை கொலுவேல்தனை விடுவீரா!-அருளாயோ?
சிலையேநிகர் திருமாணுதல் [........]
திருவேநிகர் [...]உமைமானுள்—தருபாலா!
கலையேயருள்! கமலாசனர் பணிபாதா!
கதியேயருள்! கனதோகையின் மலைமேல்வாழ்—
[முருகோனே!

354. அரவினுட படமுடிகள்
அதிரவெகு நடனமிடு—மயின்மீதே!
அறுமுகமென் அழகொழுக
அடியனிரு விழிகுளிர—வருவாயே!
குரவிலகு பதுமமலர்
குலவுமண விருசரண!—முருகோனே!
குமரகுரு பர!சண்முக!
குதுகுலம துடனடியர்—பணிநாதா!

---

352. இது சந்தவிருத்தம். விருத்தமான முடி: முதிர்ந்த சிகரம்; தோகை மலைக்கு அடை.

353. [...] இங்கு முறையே: 'உமைமானுள்' என்றும், 'அழகானுயர்' என்றும் சேர்த்துப் படிக்கலாம்.

உரவிகட தட்கரட
உலைவைமிகு கரியின்முக—[.......]
உயர்துணைவ! இனியருள்செய்
உமைகுமரி தருபுதல்வ!—வடிவேளே!
இரவிநிகர் முடியுலவும்
இலகுசிகி மலைமுருக!—[.......]
இமையவர்கள் மருவலர்கள்
இறைவ! அதி நிதிதமிழை—யுதவாயோ?

355. மதியையணி சடையார் வடிவிலகு மரனார்
வளர்கயிலை யெனுமா மலையில்வரு பவனார்—தருபாலா!
கதியைமிகு மயிலா! கருணைபொழி விழியாய்!
கமலமல ரயனார் ககனம்வள ரிமையோர்—பணிபாதா!
அதிகவர மருள்வாய்! அமரருட இறைவா!
அமர்செய்பெல புயனார் அசுரனுட லிருகூ—றிடுவேலா!
நதிகள்மிகு வயல்சூழ் நகரமிகு தனமார்
நறுமலரின் வனமார் நலமிகுசி கியின்மா—மலையோனே!

356. கயிலைமலை யரனார் [திரிரிமவேலவனார்]
கமழிதழி முடியார்—பரமானோர்
கலைமதியை யணிவோர் கரியுரியி னுடையார்
கருணையுள அரனா—ரிடமேசேர்
குயிலைமிகு மொழியாள் மதியைநிகர் வதனாள்
கொலைபுரியு மயிடோன்—முடிமீதே
குலவுநட மிடுமான் அடியர்மன மதிலே
குடிகொளுமை யவளே—தருபாலா!
மயிலையுயர் பரியா யதனில்வரு பவனே!
வரத! சர வணனே!—முருகோனே!
மணமதுல வியநீ பமலரணி புயனே!
வடிவயில! அருளே—தருவாயே!
ஒயிலையுள குறமான் மருவுமிரு புயனே!
உனையலது கெதிவே—றிலைநாதா!
ஒளிர்மணிகொள் முடிசேர் சிகிமலையின் முருகா!
உயர்தமிழ்பொ னிதிதான்—அருளாயோ?

---

351. [...] இங்கு முறையே 'கணநாதன்' 'குகவேளே!' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

356. [ ] 'திரியும்விடை வலனார்' எனப் படிக்கலாம்.

357. மத்தகெச முலையாள் அற்புதமென் வதனள்
மட்டுலவு குழலாள்—குறமானுள்
வர்த்தனைகொள் மறவோர் பெற்றதிரு மகள்சேர்
மற்புயமு ருகனே !—அருளாயோ?
கொத்துமயில் தனிலே நித்யம்வரு பவனே!
கொத்தலரை யணிசீர்—புயவேளே!
குத்துமயில் தனையே கைக்குளணி குமரா!
குப்பலொடு தினமே—யிமையோரே
பத்தர்பணி சரணு! வித்தைதனை யருள்வாய்!
பற்பமலர் வதனு!—[....]
பட்டுவிழ அசுரோ னுக்குஅயில் விடுவோய்!
பச்சைநிற அரிமால்—மருகோனே!
சத்தமிடு கடல்மேல் மைக்கண்விழி துயில்வோர்
சக்கரம்வை கரமால்—துணைமானுள்
சத்திபக வதியாள் புத்ர!சிகி மலையா!
தற்கரம வடிவே!—குகவேளே!

358. செங்கடப்ப மாலையணி புயனே!
சிந்துரத்தி னுனவ ருடசோ—தரவேளே!
செங்கதிர்க்கு [நிகரான] வடிவே!
செந்தமிழ்க்கு [ளுயர்பாலனே]—முருகோனே!
தங்கமுற்ற மாமலையின் வளர்வோர்
சந்திரச்ச டாதரரின் புதல்வா!—நிதியேதான்
தந்தெனக்கு ஆதரவு புரிவாய்!
சம்ப்ரமச்சி காமயிலில் வருகா—வலவோனே!
துங்கமுற்ற கோகனக மலராள்
தொங்கல்மொய்த்த கேசமட மகளாள்!—[...]
சுந்தரப்பொ ளுள்மருவு புயமால்
சொந்தமுற்ற மாயன்மகிழ் மருகா!—முருகோனே!

---

257. [...] 'முருகோனே!' என்று சேர்க்கலாம். துணைமானுள் : தங்கை. தற்கரம் - களவு; தஸ்கரம் என்னும் வடமொழித் தற்பவம். திருட்டுக் கலையைப் பற்றி முருகப்பெருமானும் கரபடன் என்பவனும் எழுதிய நூல் அறுபத்துநான்கு கலைகளில் ஒன்ருக உள்ளது.

358. இக்குறியிட்டவற்றில் முதலிரண்டை முறையே 'நேருறுநல்' 'நாதகுரு பரனே!' எனப் படிக்கலாம். மற்ருேரிடத்தில் 'திருமாது' எனச் சேர்க்கலாம்.

அங்கமுற்ற வேடர்மகள் தனையே
அன்புமிக்க மேவுமிரு புயனே!—[...]
அந்தரத்தர் தேவர்பணி சரண!
அந்தமுற்ற தோகைமலை [....]வளர்வோனே!

359. கோலமிகு சிறைசேர் கோதகலு மயிலா!
கூர்மைமிகு மயிலால் கோதுபுரி யசுரோ
—னுடல்மீதே —எறிவோனே!
சீலமிகு குமரா! ஆதரவு புரிவாய்!
தேவரடி யவரே சீரிணொடு நிதமே
—பணிபாதா!—வடிவேலர்!
நீலமிகு குழலாள் நேசமிகு குறமான்
நேரிழையை யணைவாய்! நீதமிழை யருள்வாய்!
—முருகோனே!—கணநாதா!
ஆலமிகு மிடறுர் ஆவலுள புதல்வா!
ஆடகமென் மலைநே ரானசிகி மலைமேல்
—வளர்வோனே!—குகவேளே!

360. கங்கையணி சடையார் பங்கில்வள ருமையாள்
கஞ்சமலர் வதனள்—தருபாலா!
மங்கை குறமகளார் அன்பிணொடு நிதமே
வங்கணம துடனே—புணர்தோளா!
செங்கையணி யயிலா! பைந்தமிழை யருள்வாய்!
தெண்டிரையில் துயில்வோர்—கனமேசேர்
சங்கையணி யரியார் துங்கமிகு மருகா!
தங்கமிகு சிகிமா—மலையோனே!

361. சீருற்றிடு மாமயில் வாகன மீதிச்சைய தாய்வரு வாய்!குக!
தேவர்க்கொரு நாயக னே!நல—முதவாயோ?
பாருற்றிடு வார்பணி நாயக! நானக்கதிர் நீபமென் மாலைய!
பார்வைக்கிசை வேடமி னள்புணர்—இருதோளா!
வாருற்றிடு பூமுலை யாளுயர் வேடர்க்கொடி மேவிய மாபுய!
வானச்சசி யானன னே! க்ருபை—புரிவாயோ?
தாருற்றிடு மாயவ னர்மரு கா!வித்தையை நீசெய்குவாய்! உயர்
தாமுற்றசி காமலை மேவிய—முருகோனே!

---

[ ] இங்கு இரண்டிடங்களிலும் முறையே 'குகவேளே!' 'தனிவேலே' எனச் சேர்க்கலாம்.

360. வங்கணம் = நட்பு.

362. திருமேவிய மார்பினர் செயமேமிகு ராகவன்—மணமேசேர்
திகழ்மாதுள மாலையர் திறமாகிய ராவண-னுடனே தான்
பொருசீர்சிலை மாயவன் புகழ்மால்மருகா! வரம்-உதவாயோ?
பொலிநீபமென் மாலிகை புனைமாபுய! நீக்ருபை—தரு
[வாயே!
மருவேமிகு தாமரை மலர்மேல்வரு நான்முகன்—அடியாரே
மகிழ்வாய்நித மேபணி மலராகிய சீர்பத!-முருகோனே!
தருவேமிகு சோலைகள் தழைதோகையின் மாமலை—தனிலே
[வாழ்
சண்முகா! சிறை மாமயில் தனையேறிய நாயக!—வடி
[வேளே!

363. கச்சையணி முலையாள் பற்பமலர் வதனள்
கற்புமிகு முமையா—ளிடமேசேர்
நச்சையணி மிடறுர் வட்டமதி யணிவோர்
நத்தையணி கரனர்—தருபாலா!
செச்சைமிகு புயனே! வித்தைதனை யருள்வாய்!
சித்ரமிகு சிகிமா—மயிலாளா!
இச்சையுடன் வருவாய்! நற்சிகியின் மலையா!
சித்துவிளை முருகா!—குகவேளே!

364. கோகன கக்கொடியாள் வாகுப டைத்தமினள்
கோகில மொத்தசொலாள்—தனையேசேர்
மேகநி றத்திருமால் நேமித ரித்திடுவோர்
வீறுப டைத்திடுரா—வணனுனேன்
சாகஅு டற்புரிவோர் நாகணை யிற்றுயில்வோர்
தாமகி ழுற்புதமா—மருகோனே!
சேகர முற்றசிகா மாமலை வித்தகனே!
சீர்தமிழ் வித்தையதே—அருள்வாயே!

365. வித்தையெ னக்கருள்வாய்! அற்புத மெய்க்கொடியாள்
மெத்தவ ணைத்திடுமால்—மருகோனே!
சித்தைவி ளைத்திடுவோர் நற்சடை யர்க்கிடமே
சித்தம கிழ்ச்சியதாய்—வளர்மானள்
தத்தைமொ ழிச்சொலினள் பெற்றிடு புத்திரனே!
சத்தித ரித்தவனே!—குகவேளே!
முத்தைநி கர்த்தெயிறுள் பொற்குற நற்கொடிசேர்
முக்யமி குத்தசிகா—மலையாளா!

---

362. நான்முகனும் அடியவரும் பணி என்க. 'சண்முகா' என்பதில் ணகர வொலியை நீக்கிச் சந்தங்கொள்க.

363. வட்டமதி: ஈண்டுப் பிறைமதியையே குறிக்கும்.

366. திருவைப் புணர்வோர் செயமுற் றிடுவோர்—ஒளியேசேர்
திகழ்சக் கரனுர் செகரட் சகனுர்—மருகோனே!
மருவுற் றிடுதா மரையிற் றினம்வாழ்—ஒருநாலாம்
வதனர்க் கினிதாய் மறையைச் சொலுசீர்—குருநாதா!
பொருதிச் சமரே புரிமற் பெலசூர்—[..........]
பொடிபட் டிடவே பொருசத் தியையே—வியசூரா!
தருவுற் றிடுகோன் றனையுற் றிடுசீர்—[..........]
சகமெச் சியதோர் தலைமைச் சிகிமா—மலையோனே!

367. வேடநா யகிதனையே
மேவிவாழ் வுறுபுயனுர்—தருவேசேர்
மேலவோர் களினுடனே
வீறதா யெதிர்சமரே—புரிசூரோன்
ஓடவே லெறிகுகனே!
ஓகையே புனைபவனே!—முனமேதான்
ஊமையா கியதனயா!
ஓசைசே ரிறையவனுர்—பொருளேதான்
நாடவே பொருள்சொலுவோய்!
நாகமேல் துயிலரியார்—மருகோனே!
நாயனே! அடியவர்பால்
நாளுநீ தயவுசெய்வாய்!—கணநாதா!
மாடமா ளிகைவளமே
வாழுநே மனநகரா!—குருநாதா!
வாசநீ புமென்மலர்சேர்
வாகனே! சிகிமலையா!—செகநாதா!

368. சிலையுற்றிடு நுதலாள் மலரற்புத வதனள்
திருவுக்கெதிர் வடிவாள்—குலமானுள்
முலையைத்தழு வியவா! கிருபைக்கடல் முருகா!
முனிவர்க்குறு முனிவோர்—பணிநாதா!

---

366. [...] முறையே 'களமீதே' 'தருவேளே' எனச் சேர்க்க.
தருவுற்றிடுகோன் - இந்திரன்.

367. ஊமையாகிய தனயா!—'மதுரையில் 'உருத்திரசன்மன்' எனும் செட்டிப் பிள்ளையாக இருந்தவனே!; இறையனுகப்பொருளுக்கு உரை மதிப்பிட்ட வரலாறு இங்குக் கூறப்படுகிறது.

368. குறுமுனிவர்: அகத்தியர். முனிவரும் குறுமுனிவரும் பணிநாதா' என்க.

கொலையைப்புரி அசுரோன் உடலைப்பகி ரிடவே
　　கொடுமைக்கதிர் வடிவேல்—விடுவீரா!
கலையைக்கண மருள்வாய்! சிகிநற்பரி தனில்வாழ்
　　கமழ்பொற்சிகி மலையாய்!—அமரேசா!

369. அயிலைச்சம ரிடுசூ ருடலிற்கிழி படவே
　　அமரர்க்குயர் வுறவே—யெறிவீரா!
குயிலைச்சரி யெனவே சொலுமற்புத மொழியாள்
　　குறமெய்க்கொடி தனையே—புணர்தோளா!
கயிலைக்கர சுடனே யிடமுற்றிடு முமையாள்
　　கமழ்நற்சடை யுமையாள்—தருபாலா!
மயிலைப்பரி யெனவே நடமுற்றிடு குமரா!
　　வனமொய்த்திடு சிகிமா—மலையோனே!

370. [கந்த மாரணி கும்ப மாமுலை]
　　கஞ்சவா னனமிகுவாள்—உயர்மானுள்
சொந்தமா கியகுறமான் இன்பமா யணைபுயனே!
　　துங்கமா மயில்தனிலே—வருவோனே!
அந்தமா கியமுருகா! சந்தமா கியதமிழ்தா!
　　அன்பரே பணிசரணு!—குகநாதா!
நந்தமே யணிகரமால் இன்பமே மிகுமருகா!
　　நன்றுலா வியசிகிமா—மலையோனே!

371. கஞ்ச மேலுறை மங்கை மேவிய
　　கங்குல் மேனியன்—உயர்மாயோன்—மருகோனே!
வஞ்ச னுகிய நெஞ்ச மாவுடல்
　　மண்ட வேயயில்—தனையேதான்—விடுசூரா!
தஞ்சம் வேறிலை வந்து தானருள்
　　தந்து ஆதரி!—முருகோனே!—செயவீரா!
மஞ்ச மீதினில் அன்பின் வேடுவர்
　　மங்கை சேர்புய!—சிகியாமே—மலைநாதா!

372. திருமாமரு வியகாயகர்
　　திகணேமியை அணிமாலுட—மருகோனே!
தருவேமிகு வனவேடுவர்
　　தருநாயகி மயலாயணை—யிருதோளா!
பொருசூருட லிருகூறுசெய்
　　புகழ்வேலுள முருகா!க்ருபை—புரிவாயே!
மருநீபமென் மலர்மாலிகை
　　மகிழ்வாயணி புயனே! சிகி—மலைநாதா!

---

370. [ ] 'கர்தமா மலரணிசேர் கும்பமார் முலையுடையாள்' எனப் படிக்கலாம்.
372. திகணேமி: திகழ் நேமி.

373. கச்சை யணிமுலையாள் நட்பு மிகுகனமார்
கற்பு மிகுகுறமான்—புணர்தோளா!
செச்சை யணிபுயனே! இப்ப வரமருள்வாய்!
**சித்ர மயில்தனிலே**—வருவாயே!
நச்சை யணிமிடறூர் பொற்பு மிகுமரனார்
நட்பி னெடுதருபா—லக!வேளே!
பச்சை அரிமருகா! வித்தை தனையருள்வாய்!
பத்தி யுடனடியார்—பணிபாதா!

374. கஞ்சமென் மலர்வாழ் பைங்கிளி யனையாள்
கங்குலை நிகர்சேர்—குழல்மானாள்
கொஞ்சமெல் லிடையாள் அன்புயர் குறமான்
கொஞ்சிநல் லணைமேல்—அணைதோளா!
மஞ்சரி யணிசீர் அம்புய முருகா!
வந்தருள் புரிவாய்!—குகவேளே!
நஞ்சணி மிடறூர் தந்திடு புதல்வா!
நன்றிகொள் **சிகிமா—மலையோனே**!

375. கயிலை மலையரனார் மகிமை யுயர்முதல்வோர்
கமழு மலரணிவோ—ரிடமேசேர்
குயிலை நிகர்மொழியாள் சிலையை நிகர்நுதலாள்
கொடியி டையினுமையாள்—தருபாலா!
மயிலை நடையிடுசீர் குமர! குருபரனே!
வரம ருள்செய்குகனே!—முருகோனே!
அயிலை யணிபவனே! **சிகிம லையின்** வடிவே!
அழகு திகழ்முதலே!—நலவேளே!

376. குகனே! சிறை மயிலேறிய குமரா!க்ருபை புரிவாய்!
முகமாறுகொள் வடிவே!கலை முதலே! நிதி தருவாய்!
செகமேபுகழ் கயிலாசர்நல் திருமாமதி புனைவோர்
மகனே!சிக ரமதேமிகு மணிசேர்சிகி **மலையா**!

377. தோகை மயில்முருகா! வேக முடன்வருவாய்!
தூய சரவணனே!—செகநாதா!
வாகை புனைபுயனே! நீப மலரவனே!
மாது குறமகள்சேர்—புயலோலா!
டாகை புனையசுரோன் மார்பு கிழிபடவே
நாச மிடவயிலே—வியவீரா!
ஓகை புனைஒயிலா! **தோகை மலைமுருகா**!
யோக மதையருள்வாய்!—குகவேளே!

---

373. சித்ரமயில்: மயில்மலை யெனக் கொள்க.

378. கானக மீதுறை வேட நாயகி
யாள்தனை யாசைய தாக வேபுணர்
காரண னே!சிறை தோகை யேறிய—குகவேளே!
நானமு லாவிய நீப மாலிகை
மார்பினி லேயணி நாத னே!உயர்
நாகணை மாயவன் நேமி மாலுட—மருகோனே!
வானக மீதுறை சோம னேயணி
மேரினி லேவள ரீச னூர்தரு
மாபுதல் வா!க்ருபை யாவு மேயினி—உதவாயோ?
தானவ னாகிய மாவை யேவெலு
கூர்படை யாகிய வேல னே!வளர்
தாமிகு தோகையின் மேரி லேவளர்—செயநாதா!

379. சித்ரமயில் வாகனா! வித்தைதனை நீசெய்வாய்!
சித்திவிளை யாடுவோர்—நலமேசேர்
நத்திலகு பாணியார் வட்டமதி வேணியார்
நட்புமிகு தேவியார்—தருபாலா!
சத்தியைமுன் னாளிலே கொட்டமிடு சூரன்மேல்
சட்டமுட னேவுசீர்—முருகோனே!
அத்தியுட சோதரா! இப்பவரம் நீசெய்வாய்!
அற்புமிகு தோகைமா—மலையோனே!

380. வனத்தில் மேவிய வேட நாயகி
மகிழ்ச்சி யேமிக மேவி யேபுணர்—இருதோளா!
கனத்த பூமுலை மாது ஈஸ்வரி
கருத்தி லாசைகொ ளீச னாருள்—புதல்வோனே!
சினத்து மேயெதிர் சூர னுடல்
தெறிக்க வேல்விடு சூர னே!க்ருபை—புரிவாயே!
அனத்து நான்முகன் வான வோர்பணி
அருட்சி காமலை மீதிலேவளர்—குகவேளே!

381. கச்சணி முலையாள் நற்குற மகளாள்
கட்டிமு னணைமா—புயவேளே!
நச்சணி மிடறூர் கற்றைகொள் சடையார்
நட்பொடு புணர்மா—துமைபாலா!
பச்சம துடனே பச்சைம யிலிலே
பத்தன்முன் வருவாய்!—குமரேசா!
நச்சக மதில்வாழ் பொற்சிகி மலையா!
நத்துகொள் கரமால்—மருகோனே!

382. அடியார்பணி சரணு! வனவேடுவர் தருமான்
அழகாய்மரு வியவா!—குகநாதா!
துடியேமிகு மசுரோ னுடல்கீறிட முனமே
சுபமேபெற இமையோர்—நலமேசேர்
வடிவேல்விடு குமரா! நிதிதா! சர வணனே!
மயில்மீதினி லினிதாய்—வருவாயோ?
படிமீதினில் வளர்வோர் துதிதோகையின் மலையா!
பதுமாசனர் பணியே—புரிவேலா!

383. சித்ரமல ரணைமேல் நற்குறமி னுடனே
செப்பரிய மதலீ—லைகளுடே
நித்தமரு வியவா! பொற்கமல வயனுர்
• • நிட்டைபுரி முனிவோர்—பணிதாளா!
தத்திரட மயிலா! வித்தைதனை யருள்வாய்!
சக்கரந லரியார்—மருகோனே!
கத்திகைகொள் புயனே! பத்தருட நிதியே!
கர்த்த!சிகி மலைவாழ்—முருகோனே!

384. குத்துத் தனத்து வடிவாள்
கொச்சைக் குறத்தி தனையே—புணர்தோளா!
நத்துத் தரித்த கரமால்
நட்புற் றவற்பு தமினுள்—மருகோனே!
சித்துத் தழைத்த சிவனுர்
சித்ரச்ச டைப்ப ரமனுர்—தருபாலா!
கொத்துக் கடப்ப மலரார்
கொற்றப் புயச்சி கியின்மா—மலையோனே!

385. வீர மிஞ்சிய சூரன்மேல் கூர்மை கொண்டிடு வேலையே
வீறுகொண்டெறி பாணியாய்!—அமரேசா!
பார மிஞ்சிய கோடுநேர் மோக மிஞ்சிய மார்பினுள்
பாலி லங்கிய சோமனேர்—முகமானுள்
ஆர மிஞ்சிய கேசமான் வேடர் பைங்கொடி யாளையே
ஆவ லுந்திட நாளுமே—புணர்தோளா!
சார மிஞ்சிய பாடல்தா! வேக மிஞ்சிய தோகையா!
தாமி குந்திடு தோகைமா—மலையாளா!

---

384. கொற்றப்புய : விளி.

386. திருநாயகி தனையே தினமேவிய அரிமால்—மருகோனே!
பொருசூருடல் தனையே பிளவாய்விட அயிலே—வியநாதா!
தருசூழ்சிகி மலையா! தமிழேயுத விசெய்வாய்! [...]
அருளே!கன நிதியே! அணியாய்! சர வணனே!—[...]

387. திருமேவிய புயனுர் மலராகிய விழியார்
திகணேமியை யணிவோர்—மருகோனே!
செருமேவிய அசுரோன் உடல்கீறிட எதிரே
செயவேல்விடு குமரா!—செயவீரா!
மருமேவிய மலர்நீ பமதேயணி புயனே!
மயிலேறிய குகனே!—அருளாயோ?
தருமேவிய சிகிமா மலைமேல்வளர் பவனே!
சகமேபுகழ் சரண!—நிதிதாராய்!

388. கொச்சை யணிபுயனே! சித்ர மிகுமயிலே—றியநாதா!
கச்சை யணிமுலையாள் கற்பு மிகுகுறமான்—அணைதோளா!
நச்சை யணிமிடருர் நட்பு மிகுமுமையாள்—தருபாலா!
பச்சை யரிமருகா! பத்தர் பணிசிகிமா—மலையாளா!

389. கான கத்திலுறை வேட நாயகி
காரி கைக்குமய லாக வேபுணர்—இருதோளா!
சான கிக்குமது மாலைசூடிய
தார்த ரித்தபுய மாய மாலுட—மருகோனே!
பான லத்திலுயர் சோம னேயணி
பார்வ திக்குவொரு பாக மீதுறை—பவர்பாலா!
வான முற்றவடி யார்க ளேபணி
வாகு முக்யமிகு தோகை மாமலை—முருகோனே!

390. கொட்டமிடு சூரனுயிர் கெட்டுவிட மானுதிகொள்
குத்துவயி லேவுகன—செயவீரா!
வட்டமிடு தோகைமயி லிற்றினமு மேறிவரு
மட்டுலவு நீபமலர்—அணிமார்பா!
அட்டகெச மேநிகரும் மைக்கரிமு னுகவரும்
அச்சுதனன் மான்மருக!—முருகோனே!
கட்டமுக னுனகுக! வித்தைதனை நீயருள்செய்!
கர்த்தசிகி மாமலையில்—வளர்வோனே!

---

386. [...] விடப்பட்டுள்ளன. முறையே 'முருகோனே!' 'வடிவேலா!' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

390 அச்சுதன் நல்மால் மருக!

391. சித்ரமயில் வாகன! அற்புமிகு நாயகா!
சித்திதனை நீசெய்வாய்!—குகநாதா!
அத்ரவிழி வேடமா னுக்குமய லாகவே
அக்கரைய தாகவே—புணர்தோளா!
புத்தில்வளர் நாகமே நற்சடையில் மேவுவோர்
புத்ர! வெகு சீர்கொள்பா—டலுமேதா!
சத்தியணி வீரனே! நற்சிகியின் மேரில்வாழ்
தக்கபுக ழாளனே!—வருவாயே!

392. கடம்பையணி புயனே! சிகண்டிமயில்முருகா!
கரந்தையணி சடையார்—நலமேசேர்
நடம்புரியு மரனர் உயர்ந்தகயி லையினர்
நமன்றனைமு னுதைவோர்—தருபாலா!
படம்புரையு மரையாள் குறம்பயிலு மடமான்
பசந்துமிகு குறமான்—அணைதோளா!
அடம்புரியு மசுரோரர் குலங்கெடயில் விடுவோய்!
அலங்கிருத சிகிமா—மலையோனே!

393. மன்றுள்நட மிடுவோர் சந்த்ரனணி சடையார்
வம்பிதழி யணிவோ—ரிடம்வாழ்மான்
நன்றுபுரி யுமையாள் கொண்டல்படி குழலாள்
நங்கைதிரி புரையாள்—தருபாலா!
வென்றுசம ரிடுவோர் தங்கள்குல மறவே
வெங்கொடிய வயிலே—வியவீரா!
என்றுநிகர் கதிர்சேர் தங்குகொடு முடிசேர்
இந்த்ரர்பணி சிகிமா—மலையாளா!

394. செறுத்து வந்தெதிர் சூருடல் கீறிய
செயித்த வேலவ னே! க்ருபை யாவையு—முதவாயோ?
கறுத்த மேனிய னுகிய மாயவன்
கனத்த கார்முக மாயவ னுருட—மருகோனே!
சுறுக்கி லேநடை யேபயில் மாமயில்
துரைக்கு கா!க்ருபை யாவையு மேயினி—யுதவாயோ?
பொறுத்த தோகையின் மாமலை யாய்! உயர்
புகழ்ச்சி யாகிய சீர்தமி ழேயினி—யுதவாயோ?

---

391. 'புற்றில்' என்பது எதுகை நோக்கிப் 'புத்தில்' என நின்றது.

392. சிகண்டிமயில்: இருபெயரொட்டு. சிகண்டி: மயில் தோகையுமாம்.

393. என்று நிகர் கதிர் - கதிரவனைப் போன்ற ஒளி.

395. மேகந்தி ரண்ட குழலாள்
வேதஞ்சி றந்த விடையாள்—குறமானுள்
மோகங்கள் மிஞ்ச வணைமேல்
[மூதின்ப கலையினதுபோல்]—அணைதோள்ா!
பாகஞ்சி றந்த தமிழ்தா!
பாலன்றன் முன்பு வருவாய்!—குகநாதா!
மாகஞ்சி றந்த மதில்சூழ்
வாழ்வென்று மிஞ்சு சிகிமா—மலையோனே!

396. காதலா கியகுற நாயகி
காமமீ றிடஅணை சேர்புய—வடிவேளே!
ஓதமே வியகடல் மீதினில்
ஊரரா வினிலமர் மாயவன்—மருகோனே!
மாதர்சூ ழுமையவள் பாலக!
வாசநீ பமென்மலர் சூடிய—இருதோளா!
சீதமா மதிதவழ் கோடுயர்
சீர்கொள்தோ கையின்மலை நாயக!—முருகோனே!

397. மதிசூடிய சடையார் கயிலாசகி ரியினர்
வளர்தாதகி புனைவோ—ரிடமேசேர்
துதிசேர்பத மலராள் கணையாகிய விழியாள்
துடிபோலவு மிடையாள்—உமைபாலா!
விதிமால்பணி சரண! அடியேனுட இடமே
விளையாடிமுன் வருவாய்!—அமரேசா!
கதியாகிய மயிலா! எனையாதரி! குமரா!
கதிர்தோகையின் மலைமேல்—வளர்வோனே!

398. கந்தக்க டம்பை யணிபுயனே!
கங்கைக்கி சைந்த சடையரனர்—தருபாலா!
[சந்தத்த னத்து] மிகுகுறமான்
சங்கக்க ரங்கொ டணைகுமரா!—அமரேசா!
நந்தத்தை யென்று மணிகரனர்
நன்றுற்ற விண்டி னுடமருகா!—குமரேசா!
சொந்தச்சி கண்டி, மலைஅரசே!
துங்கச்சி கண்டி மயில்முருகா!—அருளாயோ!

---

395. [...] 'மோதின்பநெஞ்ச மதுபோல்' எனப் படிக்கலாம்.

398. [ ] சந்தம் சரியில்லை. 'சந்தத் தனங்கொள்' எனப் படிக்கலாம்.

399\. திருத்த மாகிய மாதுமி னுளுயர்
சிறப்ப தாகிய வேடமி னளொடு—புணர்தோளா!
பருத்த மாமுலை நாயகி யாளுமை
பகிர்த்த நூலிடை சீர்கவு மாரிசொல்—புதல்வோனே!
விருத்த வான்மதி ஆனன னே! பொருள்
மிகுத்த பாவினம் யாவையு மேசொல—உதவாயோ?
செருத்த டாரிட மாவொடெய் வேலவ!
திகழ்ச்சி காமலை மீதினி லேவளர்—முருகோனே!

400\. செப்பு நிகர்முலையாள் அற்பு தமென்விழியாள்
சித்ர மெனும்வடிவாள்—வனமேவாழ்
கொப்பு அணிகுழையாள் வித்து ருமவிதழாள்
கொத்து மலர்குழலாள்—புணர்தோளா!
விற்பு ருவஉமையாள் பெற்ற திருமகவே!
வித்தை தனைஅருள்வாய்!—குமரேசா!
பொற்பு மிகுசிகியாம் வெற்பில் வளர்அரசே!
பொற்க மலசரண!—வளர்நாதா!

401\. கஞ்ச மலரயனுர் அண்டம் வளரிமையோர்
கண்டு பணிசரண!—குகநாதா!
அஞ்ச லெனவெனையாள்! கந்த மலர்புனைவாய்!
அன்பி னெடுவருவாய்—அமரேசா!
நஞ்ச மணிமிடறுர் சந்த்ர னணிசடையார்
நங்கை யுமையவளே—தருபாலா!
வஞ்ச மிகுமசுரோன் மங்க அயில்விடுவாய்!
வந்த ருள்செய்சிகிமா—மலையோனே!

402\. வாரை யணிதனத்தாள் பூவை நிகர்முகத்தாள்
வாச மிகுவனத்தே—வளர்மானுள்
தாரை யணிபுயத்தாள் கூர்மை [நயனத்தாள்]
தாம முலவுகற்பே—மிகுமானுள்
சீரை யணிபுனத்தே கானர் புகல்குலத்தாள்
சீர்செய் குறமகட்கே—இசைதோளா!
மேரை நிகரவுற்றே வாழு சிகிமலைக்கே
மேன்மை யுலவுகட்பாய்—வளர்வோனே!

---

399\. தடாரித்தல் - ஊடுருவல். செருத்தடாரிட - போரிலே (மார்பில்) ஊடுருவும்படி.

402\. [ ] சந்தம் குறைகிறது. 'நயன முற்றுள்' எனப் படிக்கலாம்.

403. கச்சைத்த ரித்த முலையாள்அற்புற்றி ருக்கு மன்சாள்
கட்டித்த ரித்த மலராள்—குறமானுள்
பச்சைக்கி ளிச்சொல் பயில்வாள் இட்டத்தில் இச்சைமிகவே
பக்கத்தி ருத்தி மயலாய்—அணைதோளா!
நச்சைத்த ரித்த மிடறுர் அற்புற்ற மர்த்த புதல்வா!
நத்தைத்த ரித்த கரமால்—மருகோனே!
செச்சைப்பு யத்தி னரசே! வித்தைக்கி சைத்த முதல்வா!
சித்ரச்சி கிக்குள் வளர்வே—லவ! வேளே!

404. தண்ட மிடுவசுரோன் அன்று பிளவிடவே
சண்டை செயவயிலே—வியவீரா!—நலமேசேர்
கொண்டல் நிறவுடலார் செங்க மலமணையாள்
கும்ப முலைதனிலே—புணர்மாயோன்—மருகோனே!
அண்டர் பணிசரணு! நன்று புரிகுமரா!
அன்பி னுடனடியேன்—முனமேதான்—வருவாயே!
தொண்டர் புகழ்சிகிமா குன்றில் வளர்வடிவே!
துங்க மிகுமயிலா!— அருளாயோ?—குகவேளே!

405. கங்கைச் சடைப்ப ரமனுர்
கஞ்சத் திருப்பெ ணுமையாள்—தருபாலா!
மங்கைக் குறத்தி யுடனே
மஞ்சத் திலிச்சை பெறவே—புணர்தோளா!
கொங்கைப் பொறுத்த மடவார்
கொண்டுற் றிருக்கு மயலே—தவிராயோ?
செங்கைக் கிசைத்த அயிலா!
தென்பொற் புவுற்ற சிகிமா—மலையாளா!

406. திருப்பெண்டிர் மேவு புயனுர்
துளைக்கொண்ட வேயி னிசையார்
திகழ்ச்சங்கை யூது கனிவா—யரிமாயோன்
மருத்தங்கு மாலை யணிவோர்
கருக்கொண்ட மேக நிறனுர்
வனைச்செங்கை நாதன் மகிழ்வாம்-மருகோனே!
செருக்கொண்ட சூர னுடனே
யெதிர்த்தன்று போர்செய் குமரா!
திருப்புண்ட ரீக மலரோன்—பணிபாதா!
வருத்தஞ்செய் நோயை யடுவாய்!
எனக்கின்று மேன்மை தருவாய்!
மணிக் குன்றை மேரில் வளர்சீர்—முருகோனே!

---

406. திருப்பெண்டிர்: இலக்குமி. பெண்டிர்: ஒருமையில் வந்தது.
'மண்டமரட்டகளிறன்னுன் தன்னையொரு - பெண்டிர் அருளக்கிடந்த
தெவன்கொல்?' (கலித்தொகை; 61: 18-19.)

407. கதிமி குந்த மயிலா! வளர்க டம்ப மலரா!
கருணை தங்கும் விழியா!—அருளாயோ!
பதிமி குந்த வுயர்சே மவள மிஞ்சு நகரா!
பருவ வம்பு லியைநேர்—முகவேளே!
சுதிமி குந்த கலைஞா னமதை யின்று தருவாய்!
சுகமி குந்த குறமான்—அணைதோளா!
நதிமி குந்த சடையார் அருளு மைந்த! கனமார்
நலமி குந்த சிகிமா—மலையோனே!

408. தத்தை நிகர்மொழியாள்
சர்ப்ப வல்குல்மடமான்—வனவேடோர்
பெற்ற குணமயிலாள்
பெட்பி னுடனிதமே—புணர்தோளா!
வித்தை தனையருள்வாய்!
விர்த்தி பெறுமயிலே—றியசூரா!
சித்ர மயின்மலையா!
சித்து விளைகுமரா?—அருளாயோ?

409. நடனம யிற்பரிமேல் வருகன வித்தகனே!
நலமிகு வித்தகனே!—அமரேசா!
குடநிகர் நற்றனமான் நுதலெனு நற்சிலையாள்
குறவர்ம கட்குமுனுள்—அணிதாரா!
அடமிகு மற்புயமா உடல்பகி ரக்கதிர்வே
லதையெறி பொற்புயனே!—குகவேளே!
திடமிகு வித்தையதே அடியனி டத்தருள்வாய்!
சிகியின்ம லைக்கரசே!—குமரேசா!

410. திருத்தங்கிய ராகவ னுருயர்
இதழ்க்கொண்டது மூயணி மாபுயன்
திகழ்ப்பங்கய மாமல ரானன—மிகுமாயோன்
உருத்தன்றுமு னேவரு ராவணன்
உடற்பங்கம தேபட வேகணை
உயிர்க்கொண்டிட வேயெயு மாலுட—மருகோனே!
தருப்பொங்கிய கானம தேவளர்
நலச்சந்திர னுகிய மாமுக!
தழைக்குங்குற நாயகி மேவிய—இருதோளா!
பருக்குஞ்சிகி வாகன னே!அருள்
மிகுக்குங்கலை யாவையு மேயினி
பணைக்கும்வயல் சூழ்சிகி யாமலை—வடிவேளே!

411. எந்தவித மேனு நீயே கொண்டைமயில் மீதி லேதான்
என்றனிட மாக வேதான்—வருவாயே!
மைந்தினுயர் சூர மாவே ரெண்டுபட வேலை மேலே
வஞ்சமுட னேவு வீரா!—கணநாதா!

அந்தமிகு கானில் வேடோர் பைங்கிளியை யாசை யாலே
அன்பினுடன் மேவு நாதா!—குமரேசா!
செந்தமிழை நீசெய் வாயே! கந்தமல ரான நீபா!
செங்கதிர்கொள் தோகை மேர்மேல்—வளர்வோனே!

412. அமரர்க்கர சாகிய நாயகன்
அழகுற்றிடு வாசவ னேபணி—புரிபாதா!
சமருற்றிடு சூருட னேயெதிர்
சருவிச்சம ராடிய கூர்மிகு—அயிலாளா!
குமரிக்குற நாயகி யாள்புணர்
குக! வித்தக னே! அடி யேனிடம்—வருவாயே!
கமரக்கிரி மேலயி லேவிடு
கனமுற்றசி காமலை வாழ்வுறு—செகநாதா!

413. விருத்த னெனவே குறத்தி யிடமே
விசித்ர முடனே—வருவோனே!
செருத்த அசுரோன் உடற்கு எதிரே
செயிக்க வயிலே—வியசூரா!
பருத்த மயிலா! எனக்கு னருள்தா!
பணைத்த முலையாள்—உமைபாலா!
திருத்த முடிசேர் மிகுத்த வொளிசேர்
சிகிக்கி ரியில்வாழ்—குமரேசா!

414. கச்சிறுக்குந் தனத்தினள் பொற்பிருக்குங் குறத்தியாள்
கற்பதிக்குங் கலத்தினள்—தனையேதான்
மெச்சிநித்தம் புகழ்ச்சியாய் மெத்தையிற்செங் கரத்தினல்
மெத்தணைக்குங் கரத்தவா!—செயவேளே!
பட்சியிற்கொண் டுயர்ச்சியாய் நற்சிறைப்பொன் படைத்த
பச்சைமெய்த்தென் மயிற்குகா!—அருளாயோ? [தோர்
வச்சிரத்தன் றனக்குவாழ் வைக்கொடுக்கும் பதத்தனே!
வர்த்தனைத்தென் சிகிப்பொன்மே—ரினில்வேலா!

415. அயிராவத முளவோன் இமையோருட குலமே
அரசாகிய மகவான்—பணிபாதா!
குயிலாகிய மொழியாள் வடிவாகிய வதனள்
குறவோர்குல மடமான்—அணைதோளா!

---

412. கமர் - பிளவு. கிரிகமர - மலைபிளக்க.

414. கற்பதிக்குங்கலம் - மணிகளிழைத்த அணிகலன். மெத்த அணைக்கும் என்பது 'மெத்தணைக்கும்' என அகரங்குறைந்து வந்தது. வர்த்தனை - வரவு,

அயிலாயுத மதையே எதிர்சூரன்முன் விடுவாய்!
அழகாகிய குமரா!—அருளாயோ!
கயிலாசமென் மலையே நிகர்கோடுயர் கனமார்
கதிர்தோகையின் மலைமேல்—வளர்வோனே!

416. வனத்தில் வந்திடு வேட நாயகி
மகிழ்ச்சி பொங்கிட மேவு நாயக!—வடிவேளே!
அனத்தில் வந்திடு வேத னுரிமை
யவர்க்கு வஞ்சனை யேசெய் சூர்கிழி—படவேதான்
சினத்தில் வந்தெதி ராடு தானவர்
தெறிக்க வென்றுயர் வேலை யேவிய—செயவீரா!
மனத்தில் வந்திடு நோயை நீதவிர்
மணிச்சி கண்டியின் மீதி லேவளர்—குகவேளே!

417. ஆதிமறை தேடரிய பாத னுர்வெகு
ஆவலொடு தேவிபுணர் நாத னுர்கட—வுள்மேலார்
சோதிமதி சூடுசடை வேணி யார்கரி
தூயதமை யேயுடைகொ ளீச னுர்தரு—புதல்வோனே!
பாதிமதி யானநுதல் கூர்மை சேருயர்
பார்வையுள மாதுகுற மானை யேபுண—ரிருதோளா!
மேதினியி லேயடியர் நாளு மேபணி [கோனே!
மேன்மைபெறு தோகைமலை மீதி லேவளர்—முரு

418. திருவிளை யாட லாடு சிவனுர்
திகழ்கயி லாச மேரி லிறையா—ரிடமேசேர்
மருமிகு மாலை சூடு குழலாள்
வளைவிலை நேர தான நுதலாள்—உமைபாலா!
திருமகள் மேவு மார்பி னரியார்
செபமிடு தான வோரை வெனுமால்—மருகோனே!
தருமிகு சோலை சூழு சிகிமா
தனில்வளர் வேல வா! நல் வரமே—தருவாயே!

419. சோதிநவ ரத்னமெனு மாமணியி ழைத்ததொரு
தூயமுடி வைத்தவிமை—யவர்கோமான்
போதிலகு மற்புதமென் மாமலரி னுற்றுவளர்
போதமறை யைச்சொல்சதுர்—முகமானேன்

---

418. 'தானவரை' என்பது சந்தம் நோக்கித் 'தானவோரை' என நின்றது.

நீதியொடு பத்தர்பணி யேபுரிம லர்ச்சரண'!
நீயென்முனம் நித்யம்வரு—குவை ! நாதா !
பாதிமதி யைச்சொனுதல் மாதுயர்கு றத்திபுணர்
பாவலவ ! நற்சிகியின்—மலையோனே !

420. கருத்தனே ! அருள்தா ! மதிச்சடா தரனர்
கருத்தசீர் மிடறுர்—தருபாலா !
பருத்தமா மயிலா ! கடப்பமா லிகையா !
பணைத்ததோள் முருகா !—குகநாதா !
விருத்தனுய் வருவாய் ! எனக்குநீ யருள்தா !
விருப்பமா யடியே—னிடம்வாராய் !
திருத்தமா கியவே டுவர்ப்பெண்மே வியவா !
**சிகிப்பொன்மா மலைமேல்**—வளர்வோனே !

421. சங்கத்தமி ணுவல னே ! பெல
தந்தித்திரு வானன னுருட—துணைவோனே !
சங்கக்கர மாயவ னுர்பொரு
தண்டக்கர நாரண னுருட—மருகோனே !
துங்கச்சிறை மாமயில் வாகன !
சொந்தக்குற நாயகி மேவிய—இருதோளா !
தங்கக்கதிர் சேர்முடி சூழ்வரு
தங்கற்புத மாகிய **தோகையின்—மலைவாசா !**

422. திருமாது மேவு புயனுர்
திகணேமி மேவு கரனுர்—மருகோனே !
பொருசூரன் மார்பி லெதிரே
புணர்கூர்மை வேலை யெயுமா—செயவீரா !
மருமாலை சூடு புயனே !
வருவாய்பொன் மேவு மயின்மேல்—முருகோனே !
தருவாயிந் நாளில் வரமே
சண்முகா ! **சிகாமென் மலையா** !—குமரேசா !

---

419. மாதுயர் குறத்தி : மாது உயர் குறத்தி.

421. தமிணுவலனே : தமிழ் நாவலனே.

422. திகணேமி : திகழ்நேமி.

சண்முகா ! ணகர வொற்றியைக் குறைக்க.

423. கஞ்சத் திருப்பெண் வளர்புயனார்
கம்புற் றநற்க ரமினுயர்மால்—மருகோனே!
நஞ்சக் களத்து வளரரனார்
நங்கைத் திருக்கு மரிமடமான்—அருள்பாலா!
செஞ்சொற் றமிழ்ப்பு கலவருள்தா!
செங்கைக் கிசைத்த தொருவடிவே—லணிவோனே!
நெஞ்சத் திருக்கை யகலருள்தா!
நின்றுற் றிடிற்சி கியின்மலைமேல்—வருவோனே!

424. வேலையெதி ரசுரோன் மார்புகிழி படவே
வேகமுட னெயுமா—செயவீரா!
மாலையணி புயனே! சீர்தமிழை யருள்வாய்!
வாகுதிகழ் குமரா!—வடிவேளே!
ஓலையணி குழையாள் கானமதி லுறைவாள்
ஓதரிய குறமான்—அணைதோளா!
மாலைமதி வதனா! நீநிதியை யருள்வாய்!
மாசிகியின் மலைமேல்—வளர்வோனே!

425. கான மேல்வளர் வேட நாயகி
காத லாயணை—புயவோனே!
வான மேல்வளர் சோம னேயணி
வாச னார்தரு—புதல்வோனே!
நான மேவிய நீப மேயணி
நாத னே!க்ருபை—புரிவாயே!
தான வேர்ர்குல நாச னே!சிகி
தாமு லாவிய—மலையாளா!

426. பாலா மதியணி வேணி நாயகர்
பாலே யுறைபவள் மாது மர்தரி—தருபாலா!
நாலா கலைதனை நீசெய் வாய்! குக
நாமா! சிறைமயில் மீதி லேறிய—செயவீரா!
கோலா கலமிகு நாத னே! அருள்
கூராய்! எதிர்வரு சூர னாருடன்—அடர்வோனே!
மேலா கியநிதி நீசெய் வாய்! நல
மேசேர் சிகிமலை மீதி லேவளர்—குமரேசா!

---

423. கம்பு = சங்கு. நற்கரமின் = நற்கரத்தின். நெஞ்சம் திருக்கை அகல் அருள்தா = உள்ளம் வஞ்சகத்தை விலக அருள்புரிக.

426. ‘நலமே சேர் சிகிமலை’ என்க.

427. வானில்வளர் மதிசேர் ஆனனமின் மடமான்
வாசமிகு மலர்சூ—டியதோளாள்
கானில்வளர் குறவோர் தானுதவு கொடியாள்
காதலுள குறமான்—அணைதோளா!
தேனிலகு மொழியாள் காரைநிகர் குழலாள்
சீதமதி நுதலாள்—உமைபாலா!
வானிலகு தருசூழ் கோடுநிரை நலமார்
வாழ்வுமிகு சிகிமா—மலையாளா!

428. கொங்குதேர் நீபமல ரணிமார்பா!
கொண்டல்போன் மேனியரி மருகோனே!
தொங்கல்மே காரமதில் வருவோனே!
சுந்தரா [னனமாது] யுமைபாலா!
மங்குலாம் வாசமிகு குழல்மானுள்
வண்டுசேர் மாலையணி குறமானுள்
பங்கில்வாழ் நாத! சர வணவேளே!
பண்புசேர் தோகைமலை முருகோனே!

429. அலைமீதினி லேதுயில் நாயகர்
அடலேபுரி ராவண னுடன்—எதிர்மாயோன்
சிலையேயணி பாணியி னர்வெகு
திகழாகிய நேமியி னர்மகிழ்—மருகோனே!
கொலையேபுரி சூருடல் கீறிய
கொடுகூர்மைகொள் வேலவ னே! க்ருபை—புரிவாயே!
கலைமாநிதி யாவையு மேயருள்!
கனதோகையின் மாமலை மேல்வளர்—முருகோனே!

430. வஞ்சவ ரக்கனை ரெண்டுப டச்செய்து
மண்டிடு சத்தியை—எயும்வேளே!
பஞ்சவ ணச்சிறை அஞ்சுக நற்பரி
பண்பின டத்திய—செயவீரா!
அஞ்சலெ னச்சொலி யென்றனி டத்தினில்
அன்புமி குத்தமிழ்—தருவாயே!
நெஞ்சம திற்றிகழ் துன்பம தைத்தவிர்
நின்றுயர் நற்சிகி—மலையாளா!

---

428. மேகாரம் - மயில். [ ] 'கார்குழலி' எனப் படிக்க.

430. அஞ்சுக நற்பரி: அழகிய சுகமிகும் நல்ல ஊர்தி (மயில்). 'அஞ்சிகி நற்பரி' எனக்கொள்வது தகுதி.

431. சித்து விளைத்தவனே! இப்ப வெனக்கருள்வாய்!
சித்தி ரகற்சிகிமேல்—வருவோனே!
வித்து ருமத்தினையே ஒக்கு மிதழ்க்கொடியாள்
வெற்பு முலைக்குறமான்—அணைதோளா!
நத்து தரித்தவனுர் பச்சை நிறத்துடலார்
நட்பு மிகுத்தமினுள்—மருகோனே!
கத்து கடற்புவிசூழ் பத்தர் துதிக்குகனே!
கர்த்த! சிகிக்கிரிமேல்—வளர்நாதா!

432. கொற்ற மிகுத்திடுசூர் பட்டு விழக்கதிர்சேர்
குத்து மயிற்றனையே—வியவீரா!
வித்தை யெனக்கருள்வாய்! அற்பு தமுற்றவனே!
விர்த்தி படைத்திடுசீர்—வடிவேலா!
மொய்த்த மலர்ப்புனைவாய் பத்தர் மனப்பொருளே!
முத்தி னெயிற்குறமான்—அணைதோளா!
தத்து மயிற்பரியா! நற்சி கிவெற்பரசே!
சட்ட மிகுத்திடுபூ—நிகர்பாதா!

433. கோகன கத்திருமா மேவிய பொற்புயனுர்
கூர்மிகு சக்கரமால்—மருகோனே!
யோகமி குத்திடுவோர் வாகுய ரற்புதனுர்
ஊர்கலு ழப்பரியார்—துதிநாதர்!
மாகம திச்சடையார் பாகம திற்கொடியார்
மாதுனம பெற்றிடுசீர்—புதல்வோனே!
சேகர முற்றிடுசீர் தோகைம லைக்கரசே!
சீர்தமி ழைத்தருவாய்!—குகவேளே!

434. செந்தாமரை வாசனுகிய வண்டாடிய மாலைமார்பினன்
தெண்டாயுத பாணிநான்முகன்—நலமேசேர்
நந்தாயுத பாணிநாயகர் தண்டார்துள மாலைமாலுயர்
நன்றேமிகு மாயனுருட—மருகோனே!
கொந்தாகிய நீபமாலையை! நின்றுடிய தோகைவாகன!
கொண்டாளெனை வானவோர்பணி—யிருதாளா!
வந்தாதரி நாதனே! உயர் விண்டோய்சிகி மேரிலேவளர்
மங்காதகு ணகரா! சர—வணவேளே!

---

434. பிரமன் படை தண்டம். ஆகையால் தெண்டாயுதபாணி என்றூர்.

435. கொண்டல் மேனியார் பைந்து ழாயனுர்
குன்றை வானிலே—யெடுமாயோன்
அண்ட மீதிலே நின்ற நாதனுர்
அன்ப தானவோர்—மருகோனே !
வண்ட ளுனசூர் கொன்ற வேலவா !
வந்து வாழ்வையே—தருவாயோ ?
தொண்ட ஞனையா ! குன்றை மேரில்வாழ்
துங்க வாகனு !—குருநாதா !

436. கிரவுஞ்சகி ரியிலே படவுஞ்சம ரிடுகூர்
கிளருங்கன வயிலா—யுதவேளே !
மறமிஞ்சிய வசுரோன் உடல்ரெண்டது படவே
வலுகுந்தம தனையே—எயும்வீரா !
குறமங்கையை யணைமேல் மருவுங்குரு பரனே !
குளிர்கொண்டலி னிறமால்—மருகோனே !
நறநன்கம லயனுர் பணியுஞ்சர வணனே !
நலமூந்திய சிகிமா—மலையோனே !

437. வலுச்செய் வம்புயர் மைந்துள சூருடல்
வகிர்க்க நுண்மைகொள் குந்தம தேவிய—செயவீரா !
கலுக்கெ னும்படி தண்டைக ளாடிட
கருத்தி லன்பொடு வந்தருள் யாவையும்—உதவாயோ ?
செலுத்து வெண்கதி ருந்திடு மாமதி
சிரத்த ணிந்திடு சங்கரர் பாலக !—முருகோனே !
கலுப்ப திந்தது வெண்மைய தாய்மதி
கதிர்ச்செய் குன்றையின் நன்மலை மேவிய—குகவேளே !

438. பச்சைமயில் வாகனு ! மெத்தமண மேவுசீர்
பற்பமலர் வாசனுர்—பணிதாளா !
கொச்சைமண மேனியா ருக்குமய லாகியே
கொத்துமலர் மேவுகா—னகமீதே
இச்சையுடன் மேவுவாய் ! நித்தியகல் யாணனே !
இப்பவரம் யாவுமே—தருவாயே !
செச்சையணி மாபுயா ! சத்தியெனும் ஆயுதா !
சித்ரமிகு தோகைமா—மலையோனே !

---

436. குந்தம் = வேல்.

439. திருப்பங்கய மாமலர் மேல்வளர்
திருப்பெண்புணர் மாயவ ளுருட—மருகோனே!
மருக்கொண்டிடு நீபமென் மாலிகை
மணக்கும்படி மார்பினி லேயணி—குகவேளே!
பொருப்பென்றுசொல் பூமுலை நாயகி
புனத்தின்பம தாகவு மேமரு—வியதோளா!
விருப்பம்பெற நீவர மேயருள்!
மிகுக்குஞ்சிகி மேரினி லேவளர்—குமரோனே!

440. சித்ரமயில் வாகன!—அருளாயோ?
சித்ரமிகு நாயகா!—குமரேசா!
விர்த்திபெறு நீபமா—லிகைமார்பா!
வித்தைதனை நீசெய்வாய்!—குகவேளே!
சத்தியெனு மாயுதா!—கணநாதா!
சக்கரமென் மாயனுர்—மருகோனே!
நித்யசுப நாதனே!—அமரேசா!
நெட்டுலவு தோகைமா—மலையோனே!

441. கனகமுடி மேரில் வளர்வோர்
கதிர்மதிய வேணி யரனு—ரிடமேசேர்
அனநடையின் மாது வுமையாள்
அழகுதிகழ் நாரி புதல்வா!—அருளாயோ?
வனமுலவு வேடர் கொடியாள்
மகிழ்வினொடு மேவு புயனே! அமரேசா!
இனமணிகொள் கோடு நிரைசேர்
இலகுசிகி மேரில் வளர்கூர்—வடிவேலா!

442. கஞ்சமலர் மாலையணி புயவேதன்
கண்டுபணி நாதன்மதி மலர்தானே—புனைவோர்பால்
பஞ்சவண மானதொரு கிளிபோல
பண்பினொடு நாளும்வள ருமைமானுர்—தருபாலா!
அஞ்சலெனவேயென்முனம் வருவாய்! பொன்
அம்பொன்மயில் மீதிலினி யமரேசா!—குகநாதா!
தஞ்சமருள் நீபமல ரணிமார்ப!
தங்கமக மேரைநிகர் சிகிமேரே—வளர்வேளே!

443. வனக்குற மாது வாகா!
மயிற்பரிமீதி லேதான்—வருவாயே!
கனத்திடு தோகை மேர்மேல்
கருத்தினி லாசை யாயே—வளர்நாதா!

மனத்துள வாவல் போலே
வரத்தையி நாளி லேதான்—அருள்வாயே!
சினத்தொடு சூரன் மேலே
தெரித்திடு கூரின்வேலா—யுதநாதா!

444. காவுற்றிடு குறநாயகி
காதற்செய வுடனேபுணர்—இருதோளா!
பாவுற்றிடு புலவா! வெகு
பாடற்றமிழ் தனையேயினி—யுதவாயோ?
பூவுற்றிடு திசையானனர்
போதக்குறு முனிமாதவர்—பணிதாளா!
மாவுற்றிடு மயில்வாகன!
வாழ்சித்திர முயர்தோகையின்—மலைவாசா!

445. சித்ரமயில் வாகன! வித்தைதனை நீசெய்வாய்!
சித்திபெறு நாயகா!—குகநாதா!
அத்ரவிழி வேடமா னுக்குமண மாலையே
அத்தமதி னுலெயே—அணிலோலா!
நத்திலகு பாணியார் அற்புதமி னுளையே
நத்துசெய மாயனுர்—மருகோனே!
விர்த்திபெறு நாதனே! நற்சிகிய தானதோர்
வெற்பில்வளர் வேலவா!—குகவேளே!

446. கருணைக் குறமான் மகிழச் செயவே
கமழ்பொற் புயர்கா—வினிலேதான்
மருவிப் புணர்வாய்! எனைரெட் சியையா!
மணமுற்றிடுமா—லிகைமார்பா!
தருவுக் கரசாய் வளர்வச் சிரனுர்
தநியிற் கரனுர்—மருகோனே!
செருவுற் றிடுசூர் அலறக் கொலுவாய்!
திகழ்மெய்ச் சிகிமேல்—வருநாதா!

447. எதிராய்வரு சூறிடல் கீறிட
எழில்கூர யிலாயுத மேவிய—செயவீரா!
மதிராவணி வேணியர் பாலுறை
மடமாதுமை நாயகி யாள்தரு—புதல்வோனே!
கதியாகிய மாமயில் வாகன!
கதியேயடி யாரிட மேயருள்—புரிவோனே!
விதிமால்பணி தாமரை நேர்பத!
வெகுசோதிகொள் தோகையின் மாமலை—வருநாதா!

448. கஞ்சமலர் தனில்வாழ் கண்டுமொழி மடமான் - அணைதோளா!
நஞ்சவர வினிலே நன்றுநட மிடுவோர்—மருகோனே!
தஞ்சமடி யவர்பால் தங்கமயில் முருகா!—அருளாயோ?
மஞ்சமிகு சிகியாய் வந்தமலை வடிவே!—குகவேளே!

449. கானக முற்றிடுவோ ரேதரு பொற்கொடியாள்
காதல்மி குத்தமினள்—புணர்தோளா!
வானக முற்றிடுவோர் தேவர்து திக்கரசே!
வாசவ னுக்கிசைவா—மருகோனே!
நானமி குத்திதழ்சேர் நீபம லர்ப்புயனே!
நான்முகன் மெய்க்குருவே!—குகவேளே!
பானல முற்றிடுசீர் சோமன்மு டிச்சடையார்
பாலக! மெய்ச்சிகிமா—மலையோனே!

450. ககன மன்றி னடமே புரியு நம்பர் நலமார்
கலையி லங்கு மதிசேர்—சடையானோர்
முகமி லங்கு முமையாள் வடிவு கொண்ட நுதலாள்
முனைமி குந்த விழியாள்—தருபாலா!
தகத கென்ற வுடலாள் குறவர் தந்த மடமான்
தனைம கிழ்ந்து புணர்வாய்!—அமரேசா!
அகமு டன்று வருசூ ரனைமுன் வென்ற அயிலா!
அருள்சி கண்டி மலைமேல்—வளர்நாதா!

451. கச்சுபுனை முலையாள் விற்புருவ நுதலாள்
கற்புமிகு மடமான்—வனமேவாழ்
நச்சுபுனை விழியாள் கத்திகைகொள் குழலாள்
நட்பினொடு வணைமேல்—அணைதோளா!
அச்சுதன்மெய் கரியான் பொற்புநிறை புயமால்
அற்புமிகு மருகா!—எனையாளாய்!
தச்சுவிடு மயிலா! இப்பவர மருள்வாய்!
சட்டமிகு சிகிமா—மலையாளா!

452. சிகர கிரியைநிகர் முலையினள்
செகண திமிதியெனு நடனமே—புரிமானள்
முகம திலகுமிரு விழியினள்
மொழிகொள் குயிலினுமை [மாதுதான்]—அருள்பாலா!

---

449. பானலம்: பால்நலம். திங்களின் கதிருக்குவமை.

452. [ ] 'அமரிதான்' என்று படித்தால் சந்தம் பொருந்தும்.

பகர வொருமலையின் [மீதிலே]
பருதி யொளியினயி லதனையே—வியசூரா!
தகர மொழுகுகுழல் [வேடர்மான்]
தழுவு குமர! சிகி [மேரிலே]—வருநாதா!

453. முல்லை முகையைநிகர் பல்லி னழகொழுகு
முள்ளி னயிலையெதிர்—விழிமானுள்
வில்லை யமர்செய்நுதல் பொன்னி குறவர்தரு
மெல்லி யலைமருவு—புயவேளே!
அல்லை புரியசுரை வெல்ல வமர்கள்தொடு
அண்ண லறுமுகவ!—எனையாளாய்!
குல்லை யரியினுட செல்ல மிகுமருக!
குண்ணை நகர! சிகி—மலையாளா!

454. கலைமாமதி சூடிய வேணியர்
திகழ்மேனியர் மானணி பாணியர்
கருணாநிதி யாகிய நாயக—ரிடமேசேர்
மலையாகிய பூமுலை நாயகி
இமையாசல னுருட பாலக!
மையுலாவிய சீர்குழல் மாதுமை—தருபாலா!
சிலையார்நுதல் கூரயில் போல்விழி
மலர்சூடிய வேடமி னள்புணர்
திருசேர்புய நீபமென் மாலிகை—[.........]
அலையாழிகள் சூழ்புவி யோர்புகழ்
முனியீஸ்வர ரேபுகழ் சீர்பத!
அழகாகிய தோகையின் மாமலை—முருகோனே!

455. செருப்பு ரிந்திடு சூருட மார்பது
பகிர்க்க வென்றிட மாலிகை யேபுனை
திறத்து மிஞ்சிய வேலதை யேவிய—செயவீரர்!
மருப்பி ரண்டுகொள் வீரம தாகிய
கனத்த குஞ்சர மாகிய ஆனன
மதத்த ஐங்கர நாயக னுருட—துணைவோனே!

---

[ ] இக்குறியிலுள்ளவற்றை முறையே 'நடுவிலே' 'மறவர்மான்' 'மலையிலே' எனப் படித்தால் சந்தம் பொருந்தும்.

453. குல்லை - துளசி. குண்ணைநகர்: குன்றை நகர்.

454. மையுலாவிய: மை: ஒலி குறைந்து மகரம்போல நின்றது. [.........] புனைவோனே! எனச் சேர்த்துப் படிக்கலாம்.

பொருப்பு உந்திய பூமுலை நாயகி
குறத்தி அம்புய மீதினி லேபுணர்
புகழ்க்க டம்பமின் மாலிகை யேபுனை—குகவேளே!
திருப்பொ லிந்திடு கோடுக ளேநிரை
சிறப்பு யர்ந்திடு **கேகய மாமலை**
திளைத்த சுந்தர மாமயி லா! அருள்—குமரேசா!

456. கஞ்சநான் முகனு ரன்பதா கவுமே
கண்டுநாள் தொறுமே—பணிதாளா!
வஞ்சனு கியசூ ரஞ்சவே லதையே
மண்டவே வியவா!—செயவீரா!
தஞ்சம்வே றிலையே வந்துநீ யருள்வாய்!
சங்கபா ணியனுர்—மருகோனே!
கொஞ்சநே ரிடையாள் இன்பமே பெறுவாய்!
**குன்றைமே ரினிலே**—வளர்வோனே!

457. கற்றைச் சடையரனுர் நத்தைத் தரிகரனுர்
கட்டுற் றிடுதொடையார்—தனையேசேர்
தத்தைக் கெதிர்சொலினுள் கற்புக் கொருகடலாள்
சத்திக் குயர்விழியாள்—உமைபாலா!
வித்தைக் குயர்கடலே! இப்பக் குபைதருவாய்!
மெச்சிப் புகழ்சரணு!—எனையாளாய்!
சித்தைப் புரிபவனே! பத்தர்த் துயர்தவிர்வாய்!
சித்ரச் **சிகிமலைமேல்**—வருநாதா!

458. கோங்கிள நீப மாலை தான்புனை சீரின் மார்ப!
கூன்பிறை சூடு வேணி—யரனுர்பால்
காங்கிசை கேச மாது கோங்கின மான மார்பு
காண்டிப மாம்வி லாச—உமைபாலா!
ஓங்கிய வேடு வோர்கள் கான்றனை மேவு சீல!
ஊர்ந்திடு தோகை மீதில்—வருலோலா!
தேங்கம மான பாடல் தான்தரு வாய்! பொன் மாது
சேர்ந்திடு **தோகை மேரில்**—வளர்வோனே!

459. பூவில்வள ரயனுர் நான்மறைகொ ளயனுர்
போதமிகு மயனுர்—பணிதாளா!
காவில்வளர் மறவோர் தானுதவு மடமான்
காதலுட னணைசீர்—புயவோனே!

458 காங்கிசை - விருப்பம். காண்டிபமாம் விலாசம் - காண்பதற்குரிய விளக்கனைய அழகு. காண் + தீபம்; காண்டீபம்; காண்டிபம் எனக் குறுகியது.

நாவில் வளர் கலைமா னேயெனிட மருள்வாய்!
ஞானமிகு முனிவோர்—துதிதாளா!
பாவிலுயர் புலவோர் தோகைமலை வடிவே!
பாடவர முதவாய்!—அமரேசா!

460. கரும்பி தென்னவே நயங்கொள் சொல்லினள்
கமழ்ந்த கண்ணிசேர்—குழல்மானள்
சுரும்பு கிள்ளையே மிகுந்து கொண்டதோர்
சுகங்கொள் மிஞ்சுகா—வனமானள்
விரும்பு கந்தனே! வரஞ்செய்! அந்தமே
மிகுந்த குன்றைமா—மலைவேலா!
அரும்பி தென்னவே நிறைந்த பல்லினள்
அணங்கு விந்தையாள்—தருபாலா!

461. எதிராக வருசூரன் உடல்பாதி யெனவாக
எறிசோதி மிகுவேலை—யெயும்வீரா!
மதிசூடி நலவேணி கயிலாச மலைநாதர்
வடிவான உமைமாது—தருபாலா!
விதியான மலர்நாதன் அடியார்கள் பணிதாழ
விரைவான மலர்நீப—மணிதோளா!
பதிசூழும் உயர்நேம வளநாட! [...]
பணைதோகை மலைமீதில்—வருவோனே!

462. வண்டுலாவு மலர்தனையே யம்புயாச லமதனிலே
மஞ்சதாக வணிநலமே—மிகுதோளா!
தண்டுழாயை யணிபுயனர் உம்பர்தாழ்வு குறைதவிர்வோர்
சங்கபாணி கருநிறமால்—மருகோனே!
கண்டுபோல நயமொழியார் அம்புபோல விருவிழியார்
கங்குல்போல வருகுழலார்—மயலாளா!
துண்டுமாம திகொள்சடையார் பங்கின்மேவு முமைபுதல்வா!
துங்கமான சிகிமலைமேல்—வளர்நாதா!

463. சங்கரி பாக முறைவோர் திங்களை வேணிதனிலே
தங்கிட நாளு மணிவோர்—நலமேசேர்
தங்கம தான மலையார் மன்றினில் நாளு நடமே
தந்திடும் நாத ருடபா—லகவேளே!

461. [...] 'குமரேச!' எனச் சேர்த்துப்படித்தால் சந்தம் பொருந்தும்.

கொங்கலர் நீப மலரே அம்புய மீதில் வளர்வோய்!
கொஞ்சிய மாது குறமான்—அணைதோளா!
மங்கள வேல்கொள் கரனே! குன்றையின் மேரில் வளர்வாய்!
வந்திடு வாய்!பொன் மயின்மேல்—அமரேசா!

464. கயிலை மலைதனில் நிதமும் வளர்பவர்
கலையின் மதியணி—அரனர்பால்
அயிலை நிகர்விழி மலையை நிகர்முலை
அரிவை யுமையவள்—தருபாலா!
குயிலை நிகர்மொழி மறவர் தருகொடி
குறமென் மடவியை—அணைதோளா!
மயிலை நடைபயில் அமரர் பணிபத!
வரத!அருள்சிகி—மலைநாதா!

465. கோதண்ட பாணியரி நானங்கொள் சீர்துளவை
கோலம்பு யாசலம—தனிலேசேர்
மூதண்ட மீதுயரும் வேதங்கள் தேடரிய
மூதிந்தி ராதிபர்கள்—முடிதீர்வோர்
மாதண்ட ராவணனை நாசம்செய் மால்மருக!
வாள்குந்த வேலையணி—கரவேளே!
வேதண்ட! ஆறுபடை வீடென்று மேவளரும்
வீறும்சி காமலையில்—முருகோனே!

466. கங்கை யணிசடையார் பங்கில் வளருமையாள்
கஞ்ச மலர்நிகரா—னனமானள்
மங்கை திரிபுரையாள் அந்தமிகு கொடியாள்
வம்பு புனைமுலையாள்—தருபாலா!,
செங்கை புனையயிலா! வந்து வரமருள்வாய்!
செங்க மலவயனுர்—பணிபாதா!
சங்கை யணியரிமால் அன்பு மிகுமருகா!
தங்கு சிகிமலைமேல்—வளர்நாதா!

467. மன்றுமிசை நடமா டம்புலிகொள் சடையார்
வம்பினித ழியையே—புனைவோர்பால்
நன்றுபுரி யுமையாள் செம்பவள விதழாள்
நங்கைதிரி புரையாள்—தருபாலா!

---

465. வேதண்ட!: குன்றுதோருடலைக் குறிக்கிறது.

கன்றுதனை யெறிவோர் அண்டர்மிடி தவிர்வோர்
கஞ்சமகள் புணர்வோர்—மருகோனே!
பொன்றுபட எதிர்சூர் கொன்றுவிடு மயிலா!
பொங்கமிகு சிகிமா—மலையோனே!

468. எதிராக வருசூரன் உடல்கீறு படவேலை
யெயும்வீர! முருகேச!—அமரேசா!
மதிசூடும் நெடுவேணி நடமாடு மொளிர்பாதர்
மகிழ்தேவி யுமைமாது—தருபாலா!
விதியான மறைவாயன் சிறையாக முனமேசெய்
திருநீப மலர்மாலை—புனைதோளா!
கதியான மயில்வாக! எனையாள்வை குமரேசா!
கனதோகை மலைமீதில்—வளர்வோனே!

469. சித்திபுரி அரனர் அத்தமதி புனைவோர்
செக்கர்நிற உடலார்—இடமேசேர்
சித்ரமிகு நுதலாள் விற்குநிகர் நுதலாள்
செப்புமுலை யுமையாள்—தருபாலா!
அத்திமுனம் வருவோர் கட்செவியி னணியார்
அற்புதமின் விழியார்—மருகோனே!
சத்திபணி கரனே! நற்சிகியின் மலையா!
தத்துமயில் முருகா!—அருளாயே!

470. கச்சைத் தரித்த முலையாள் கொப்புத் தரித்த குழலாள்
கற்புக் குறத்தி தனையே—புணர்தோளா!
பச்சைச் சிகிப்பொன் மயிலா! நிர்த்தத் தையுற்ற சரணா!
பற்பத் தையுற்ற வதனா!—குகநாதா!
இச்சைப் படிக்கு அருள்வாய்! நத்தும் றரிக்கு மருகா!
இப்பச் சிறப்பி னுடனே—வருவாயே!
செச்சைப் புயத்தி னரசே! சத்திக் கிசைத்த கரனே!
சித்ரச் சிகிப்பொன் மலையா!—குமரேசா!

471. வஞ்ச வரக்க னேடு சண்டை பிடித்து வேலை
மண்டி யெடுத்து வீசி—எயும்வீரா!
நஞ்ச மிடற்றின் ஈசர் அன்பு மிகுத்த மாது
வண்டர் படித்த கேச—வுமைபாலா!

---

471. வண்டர்: வண்டு. படித்த: முரன்ற. கேசம் - கூந்தல்.

கஞ்ச மலர்க்குள் வாழும் எண்க ணனுக்கு வேதம்
மங்க ளமுக்ய மாக—அருள்வோனே!
அஞ்ச,லெனக்கு நீசெய்! குன்றை மலைக்குள் வாழும்
அண்டர் தமக்கு வாழ்வை—யருள்வோனே!

472. குத்துமுலை யுமையாள் பக்கமதில் வளர்வோர்
குப்பலுள வரனுர்—கருபாலா!
பத்துமுடி விழவே நற்கணையை யெயுவோர்
பத்மமகள் புணர்வோர்—மருகோனே!
வித்துரும விதழாள் பொற்குறமின் கணவா!
வித்தைதனை யருள்வாய்!—குமரேசா!
அத்துவித முடிவே! இப்பவர மருள்வாய்!
அற்புமிகு சிகிமா—மலையோனே!

473. சந்தமிகு சோலை யெங்குநிறை வேடர்
தந்தகொடி மேவு—புணர்தோளா!
அந்தமிகு தோகை அந்தமலை நாத!
அன்பினுட னுக—மருவாநாள்
கொந்தலரின் வாளி ஐந்திலொருநாலு
கொண்டெயுகு ரன்முன்—மதமாரன்
எந்தனெடு கூனி வந்துநொடி பேசி
இந்தவித மேசி—வைகிருளே.

474. கந்த மலர்க்குழலாள் அன்பு மிகுத்திடுவாள்
கஞ்ச மலர்த்திருவே—நிகர்மானுள்
நந்த மிடர்க்கொடியாள் பந்து முலைப்பெணினுள்
நஞ்ச மிகுத்திடுகூர்—விழிமானுள்
அந்த ரமுற்றிடுசோ மன்ற னையொப்பிடவே
அந்த மிகுத்திடுமா—னனமானுள்
வந்த குறத்தியையே யின்பம் விளைத்தணைவாய்!
மங்க ளமுற்றசிகா—மலைவேளே!

---

472. குப்பல் - கும்பல்.

473. தலைவி தன் நிலையைத் தலைவனை விளித்துக் கூறுவதுபோல அமைந்த அகத்துறைப்பாட்டு. இது காமமிக்க கழிபடர் கிளவி எனப்படும். 'உன்னோடு மருவாநாளில் காமன் ஐங்கணைகளில் நான்கையும் (தாமரை, மா, அசோகு, முல்லை) எய்கிருன். தாய்க்கிழவி (கூனி) வந்து என் நிலையை இடித்துக் கூறி வைகிருள்' என்கிருள். விரைந்து வருக என்பது கருத்து. எந்தன்: மரூஉமொழி; என்றன் என இருத்தல் வேண்டும்.

474. நந்தம் - சங்கு. மிடறு என்பது மிடர் என நின்றது சந்தத்தால் 'நந்தம் போன்ற கழுத்து. அந்தம் மிகுத்திடும் ஆனனம் - அழகுமிக்க முகம்.

475. வானுடர் வந்துபணி தாள ரேவெகு
கூரான குந்தமணி பாணி யாரெதிர்
வாதாடு கின்றசுரன் மீதி லேயடர்—புரிவோரே
நானுவி தங்கொளடி யார்க ளேதுதி
மேலான **குன்றைமலை** நாதர் **நேமமென்**
**நாடாளர்** பஞ்சணையி லாவ லாயெனை—மருவாநாள்
தேனரு மம்பைமதன் ஏவு றூனது
மேலாக வெங்குமனல் போல ஏறுது
சீராடி யென்றனுடன் மேவ வேயினி—வருவாரோ ?
மானன வம்பகமி னார்க ளே!ஒரு
போதாகி லுஞ்சொலடி ! தூது போய்வெகு
வாகான கந்தர்முன மாசை தீரவும்—மடவீரே !

476. கொத்துமயில் வாகன ! பத்தர்பணி தாளனே !
குக்குடம தானதோர்—துசவேளே !
பத்துநிரை சேகரோ னுக்குவிடு வாளியார்
பற்பமகள் மேவுவோர்—மருகோனே !
வித்துரும வாயினள் கொச்சையுள மேனியாள்
விற்புருவ வேடமான்—அணைதோளா !
சித்துவிளை யாடுவோய் ! இப்பவரம் நீசெய்வாய் !
சித்ரமிகு **தோகைமா—மலை**யாளா !

477. சந்தத்தமிழ் பாடவு மேயருள்
சந்த்ரச்சடை வேணியி னருட—புதல்வோனே !
கந்தத்திரு மாலிகை யேயணி
கண்டத்தினள் வேடமி னளுட—கணவோனே !
நந்தத்தினை யேயணி மாயவன்
கங்குற்றிரு மேனியி னருட—மருகோனே !
சொந்தத்தெய்வ யானையை மேவிய
துங்கக்கும ரா!சிகி **மாமலை**—வளர்வோனே !

---

475. 'தாளர், பாணியார், புரிவோர், நாதர், நாடாளர் வந்து மருவாநாள் மதன் அம்பை ஏவுறான்; அது அனல்போல ஏறுது. (அவர்) வருவாரோ ? மின்னார்களே ! அடி ! மடவீரே ! ஒருபோதாகிலும் தூதுபோய்ச் சொல் !' என முடிக்க. இது தலைவி கூற்று. மினார்களே ! அடி ; என்பன ஒருமை பன்மை மயக்கம். பொதுவாகத் தோழிகளை விளித்து, ஒருத்தியைத் தூதுபோ என்று கூறுதல்போல் கொள்க. அம்பகம் - கண்.

476. குக்குடம் - கோழி. துசம் - கொடி ; சேகரம் - தலை. கொச்சையுள மேனி - இளைத்த மேனி. ஆசையால் இளைத்ததாகக் கொள்க.

478. முத்துக் கேஙிக ரான சீர்நகை
பத்மப் பூமல ரான வானன
மொய்த்துச் சூழ்தரு மேக மாகிய—குழலாளே
கொத்துப் பூமலர் மாலே யேயணி
விற்குப் போல்வளே வான மாநுதல்
கொப்புச் சேர்குழை வேட நாயகி—புணர்தோளா!
பத்துச் சேகர ராவ ணேனெடு
முக்யப் போர்விளே யாட லேபுரி
பச்சைத் தேகநன் மாயனுருட—மருகோனே!
சித்துச் சாமியை மேவு மாதுமை
அற்புற் றேபெறு பால கா!குக!
சித்ரத் தோகையின் மேரி லேவளர்—குமரேசா!

479. காவில்வளர் வேடு வோர்சொல்
காரிகையை மேவி யேயும்—இருதோளா!
பூவில்வளர் நாலு வேதன்
போதமிகு ஞான வேதர்—பணிதாளா!
பாவில்மிகு நாவ லா!பொன்
பாவையுட ஆசை யான—மருகோனே!
வாவிநிறை நேம நாட!
வாகுதிகழ் தோகை மேரில்—வருவோனே!

480. பங்கய மலராள் இங்கித மிகுமான்
பண்புகொள் மலராள்—புணர்மாயோன்
சங்கணி கரனுர் மங்குலி னிறனுர்
சந்தத முயர்மால்—மருகோனே!
சங்கரி புதல்வா! வந்தருள் புரிவாய்!
தந்தியின் வதனுர்—துணேவோனே!
செங்கையி னயிலா! குன்றையின் மலேயா!
திண்டிறல் வடிவேல்—முருகோனே!

---

478. கொப்பு: காதணி. கொப்பும் குழையும் அணிந்த வேட நாயகி.

479. பொய்யாமொழிப் புலவரைப் பாடச்செய்ய முட்டையென்னும் பெயருடன் வேடனுகச் சென்று, அவர் பாட்டிற் குறைகண்டு, தாமும் பாடிக் காட்டினுர் என்பதனுல் 'பாவில் மிகுநாவலா!' என்றுர்.

480. மங்குலினிறனுர்: மங்குலின் நிறத்தினுர். மங்குல் - மேகம். வதனுர் - வதனத்தார்.

481. நந்துநிக ரான மிடறுள் அம்புநிக ரான விழியாள்
நண்டுநிகர் சானு வடிவாள்—வெகுதூயாள்
பந்துநிக ரான முலையாள் கஞ்சமல ரான மிடறுள்
பண்புமிகு தேவி குறமான்—அணைதோளா!
முந்தியெதிர் படவே வந்துசம ரிடுசூர்
மொய்ம்புகெட வயிலே—வியவீரா!
இந்துதவழ் முடிசேர் குன்றைமலை வடிவே!
என்றும்வெகு தயவே—புரிவாயே!

482. சித்துவிளை யாடுவோர் நச்சரவு சூடுவோர்
செக்கர்நிற மேனியா—ரிடமேசேர்
குத்துமுலை மார்பினுள் வெற்றியெனு மாலையாள்
கொற்றவைசொல் பாலகா!—குமரேசா!
பத்துமுடி யானையே செத்துவிட வேசெய்வோர்
பற்பமகள் காதலார்—மருகோனே!
வித்துரும வாயினுள் நற்குறமி னுயகா!
விர்த்திபெறு தோகைமா—மலையோனே!

483. எதிராக வருசூரன் உடல்கீறு படவேலை
எதிர்சூர! அருள்யாவும்—உதவாயோ!
மதிசூடி நடமாடி கனகாச லவனுதி
மகிழ்தேவி யெனுமாது—தருபாலா!
கதியான மயிலேறு குகநாத! தமிழாள!
கருணாநி தி! இநாளில்—எனையாளாய்!
கதிர்கோடு நிறைவான மதிதாவு முடிசேரும்
கமழ்சோலை மிகுதோகை—மலைநாதா!

484. வேலாயு தத்தை யெடுத்து மாவுடல்
மீதேதொ டுத்த மிகுத்த மாபெல—முருகோனே!
நாலாக லைக்கு மருட்செய் பாவல!
நாதா!ன னக்கு நலத்தை நீபுரி—குமரேசா!
பாலாயி ருக்கு மொழிப்பெ ணுயர்
பாவாயெ னச்சொல் குறத்தி மேவிய—இருதோளா!
கோலாக லப்பொ ன்லத்த கோடுள
கோதேய கற்று சிகிப்பொன் மேரினில்—வளர்வோனே!

---

481. நண்டுநிகர் சானு: நண்டனைய முழந்தாள். முன்னிரண்டடி வேறு சந்தமும் பின்னிரண்டடி வேறு சந்தமுமாக உள்ளன. முன்னிரண்டடிகளை,

"நந்துநிகர் மிடறுள் அம்புநிகர் விழியாள்
நண்டுநிகர் பரடாள்—வெகுதூயாள்
பந்துநிகர் முலையாள் கஞ்சமலர் மிடறுள்
பண்புமிகு குறமான்—அணைதோளா!"

எனப் படித்தால் சந்தம் பொருந்தும்.

485. கனகம லைக்கெதிரார் சிகியின்ம லைப்பெருமாள்
கருணைமி குத்திடுவோர்—பரமானோர்
சினவசு ரைப்பொருவோர் குமரகு ருச்சிவனார்
திகழ்பது மப்பதமே—பணிவோரே
மனதினி லிச்சையதாய் வெகுசன ரெட்சகராய்
மனிதரில் முக்கியமாய்—வளர்வாரே
இனமணி யுற்றிடுசீர் முடியர வைப்புனைவோர்
எழில்பத விக்குறுவோர்—எளிதாவே

486. விடமுலவு மரவே கிளர்முடிய திரவே
விதநடைகள் புரிமா—மயிலாளா!
தடமுலவு மலையே அசுரனுட வுரமே
தவிடுபொடி படவேல் எயும்வீரா!
இடமுலவு புவியோர் அடியவரொடு மிமையோர்
இதயமகி ழுறவே—வருநாதா!
திடமுலவு கவிஞோர் எனவருள்செய் குமரா!
**சிகிமலையில்** வளர்வாய்!— அமரேசா!

487. கனமாகிய வுமைநாயகி
தவமேபுரி யெழுவோர்வெகு
கருணாநிதி யரனாருட—புதல்வோனே!
வனவேடுவர் குறமானுயர்
இமையோருட இறையோன்மகள்
மகிழ்வாகிட மலர்மாலிகை—புனைவாசா!
கனகாதிபன் மகள்மேவிய
இருதோளுள விறலார்நலம்
எழில்சேரரி திருமால்மகிழ்—மருகோனே!
மனதாசையி னதுபோலருள்
**சிகிமாமலை** தனிலேவளர்
மலர்நீபமென் மலர்சூடிய—குகநாதா!

488. நலமுலவு கும்பமுனி மதியையணி செஞ்சடையர்
நளினமலர் விஞ்சனிவர்—குருநாதா!
பெலமுலவு கொண்டனிகர் மதமொழுகு கின்றதொரு
பெரியகரு வும்பல்முகர்—துணையாளா!

---

485. எதிரார் = ஒப்பாகவுள்ளீ. குமரகுருவாகிய சிவனார்; இருவரும் ஒருவரே என்பதைக் குறிக்கிறது. இவருடைய பதம் பணிவோர் இங்குக் கூறிய நலமெலாம் பெறுவார்.

488. உம்பல் முகர் = யானைமுகத்தவர்.

தலமுலவு மன்பரிமை யவர்பரவு செஞ்சரண!
தருமருவு குன்றைமலை—வளர்நாதா!
கலமுலவு பைம்புயவ! பரமபத மின்றருள்வை!
கமழுயர் கடம்பமலர்—அணிவேளே!

489. வட்ட மிலகு முலையா ரிட்ட மிலகு குமரா!
வச்ர தரனன் மருகா!—குகநாதா!
துட்ட மிலகு மசுரோர் முக்ய மிகுகு லமெலாம்
சுட்டு அழிய விடுகூ—ருளவேலா!
பட்ட மிலகு நுதன்மா வுக்கு நிகரும் வதனர்
பட்ச மிகவும் வருசோ—தர!வேளே!
சட்ட மிலகு மடியார் குப்ப விலகு முடிசேர்
தக்க சிகியின் மலைமேல்—வளர்நாதா!

490. சினராவணன் உடனேயெதிர் செயுமானுட மருகா!
அனமேநிகர் நடையேபுரி அருள்வேடுவி கணவா!
கனமாநிகர் வதனருயர் கருணைநிதி துணைவா!
வனமேமிகு மயில்வாகன! வரதா! சிகி மலையா!

491. அறிவிலாத லுத்தர்இடமினுளி னித்தம்
அலைகிலாது மெத்த—நிதிதாராய்!
மறியையேல் கரத்தர் நடனமாடு நித்தர்
மகிமையான சித்தர்—தருபாலா!
பொறியைமேவு நத்தர்அரவிலாடு முத்தர்
புணருமைநி றத்தர்—மருகோனே!
சிறியதான புத்தி அசுரன்மார்கி ழித்த
செயகுகா! சி கிப்பொன்—மலையாளா!

492. காசாகிலு முதவாதவர் ஏணுவது மதியாதவர்
கார்போலுத விடுவாரென—அவர்பாலே
பேசாதுயர் நிதியாவையும் நீயேதரு குவை! நாயக!
பேர்மாமயில் தனிலேறிய—செயசூரா!
தேசாதிபர் மகஆதிபர் வேதாதிபர் தவஆதிபர்
சீரானித மவரேபணி—புரிபாதா!
ஈசா!குற மகள்நாயக! கூர்வேலணி யிருபாணிய!
ஈடேயில தெழில்தோகையின்—மலையாளா!

---

489. தட்டம் - துட்டத்தனம். நுதல்மா: யானை.

490. இது சந்தவிருத்தம். கனமா: யானை. கருணைநிதி: விநாயகர்.

491. பொறி - இலக்குமி. மை நிறத்தர் - முகில் வண்ணர்.

492. ஏண் - நிலைபெறுதல். ஏணுவது - நிலைபெற்ற அறம்.

493. அறுவரூட மனமகிழ கயிலைமலை யொருசுனையில்
அறுமுகம துடனிலகு—குகநாதா!
அறுகணசு ரனையுரம தனிலுருவ அயிலைவிடு
சண்முக! அடி யவர்கள்பணி—புரிபாதா!
நறுமென்மலர் தவழ்செறியு நளிர்வனம துலவிவளர்
நயமுலவு குறமகளை—அணைதேவே!
முறுவலொளி யிலகுவென்முன் மயிலின்முது கினில்வருவை!
முதுதமிழை யுதவிசெய்வை!—வடிவேலா!

494. அமரர்க் கரசன் மகிழ்வுற் றிடவே
அடலைப் புரிசூ—ரரமேதான்
கமருற் றிடவே அயிலைப் பொருவாய்!
கதிபெற் றிடுகே—கயவாகா!
குமரிக் கொருபா லக! வித் தகனே!
குணமெய்க் கடலே!—செயலாளா!
கமழ்பொற் பொழிலே மிகவுற் றிடுசீர்
கனநற் சிகிமா—மலையோனே!

495. யாவரும் பணிபாத! யாவருந் துதிநாத!
யாவருஞ் செறிநேம—வளநாடா!
தேவருஞ் செயலாக வேசெயுந் திகழ்வேல!
சீதரன் மனவாசை—மருகோனே!
மூவருஞ் சரியான சேவலங் கொடியாள!
மூதரும் பதமான—தமிழ்தாராய்!
பூவரும் பலர்நீப மாலையும் புனைமார்ப!
பூமடந் தையுலாவு—சிகிமேரா!

496. கந்த மலர்க்குழலாள் அன்பின் விழிக்குறமான்
கஞ்ச மலர்த்திருவே—நிகர்மானுள்
சந்த முலைக்கொடியாள் இன்ப மிகுத்திடுவோய்!
சங்க ரிபெற்றிடுசீர்—மிகுபாலா!
பைந்த மிழைத்தருவாய் குன்றை மலைக்கரசே!
பஞ்ச வனச்சிகிமேல்—வருவோனே!
அந்த மிகுத்திடுவேல் கொண்ட கரக்குமரா!
அஞ்ச லெனக்கருள்வாய்!—அமரேசா!

---

493. இப்பாட்டில் மயில்மலை குறிக்கப் பெறவில்லை. 'மயிலின் முதுகினில்' என்பதில் 'மயில்' மயில்மலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். சண்முக: ணகரவொலியைக் குறைக்க. 'சமுக' என்று கொள்ளினும் பொருள் பொருந்தும்.

494. கதிபெற்றிடு கேகயவாகா! - பலவகைக் கதிகளிலும் செல்கின்ற மயில் வாகனு!

497. கதமேமிகு வசுரோனுடல் இருகூறிட முனமே
கதியாயிடு வெகுகூர்மைகொள் அயிலேவிய—கரனரே
நிதமேயடி யவரேபணி மலராகிய வடியார்
நிதநேமநன் னகர்சூழ்சிகி மலையாரணை—மருவாநாள்
மதனார்கையில் வளைவாகிய சிலைமீதினில் வெகுசாய்
மலராகிய சரமேவுவர் அதனால்மயல்—மிகுமேபூ
இதழ்சேரணை தனிலேதுயில் புரியாள்மலர் முடியாள்
எனமோமகள் படுபாடுகள்? அறியேனடி—மடவீரே!

498. செந்தமி ழைத்தருவாய்! குன்றைம லைக்கரசே!
செங்கம லத்தயனர்—பணிதாளா!
பைந்தரு வுற்றவனர் இந்திரை யைப்புணர்வோர்
பண்பும ருத்துவனர்—மருகோனே!
சந்தமு லைக்கொடியாள் கொஞ்சுகி ளிக்கிணையாள்
தண்டலை யிற்புணர்பூ—மலர்மார்பா!
எந்தனை ரெட்சியையா! எந்தவி தத்திலுமே
எங்கணு முற்றவனே!—குகவேளே!

499. கச்சைப் புனைந்த கனதனத் தாளுயர்
கற்பிற் சிறந்த உமைமடப் பாவையை--அணைதோளார்
நச்சைப் புனைந்த மிடர்மிகுத் தார்திகழ்
நத்தைப் புனைந்த கரதலத் தார்தரு—புதல்வோனே!
இச்சைக் கிசைந்த குறமகட் கேதொடை
இட்டுப் புணர்ந்த இருபுயத் தாய்! என்முன்—வருவாயே!
பச்சைக் குழந்தை யெனவுதித் தாய்! நல
பற்பப் பெணின்று நடிசிகிக் கோடினில்—வளர்தேவே!

500. வேலாயு தத்தையணி பாணியா!
வேளே! எனக்கருள்செய் நாதனே!
காலான வித்தைதனை நீசெய்வாய்!
ஞானதி பக்குமர கோலனே!
பாலாம திச்சடையி னுதனர்
பாலா!சி கிக்கிரியின் யோகனே!
காலாயு தக்கொடியின் மேன்மையா!
காவாய்! மயிற்பரிய! சேவகா.!

---

497. செவிலி யிரங்கல் என்னும் அகத்துறைப்பாட்டு. 'அடி மடவீர்': ஒருமை பன்மை மயக்கம்.

498. மருத்துவன் - இந்திரன். இந்திரை இந்திராணியைக் குறிக்கிறது போலும். இலக்குமிக்கே இந்திரை என்று பெயர்.

500. பாலாமதி; பால் ஆம் மதி.

501. மாசற்றிடு திருமாமயில் ஏறிப்பொரு சமராடிடும்
வாகுற்றிடு கதிர்வேலணி—கரவேளே !
வாசத்திரு மலர்நீபமென் மாலைக்கிசை புய!நாயக !
வானச்சசி நிகராகிய—முகவேளே !
தேசத்தவர் பணிசீர்பத ! வேடக்கொடி புணர்மாபுய !
தேவர்க்கொரு மிடிதீரிடு—கனவேளே !
நாசப்பட வசுரோனுடல் கீறிட்டிடு கதிர்வேலவ !
ஞானக்குக ! சிகிமாமலை—வளர்வோனே !

502. நீபத்தார் புனைமார்ப ! வானத்தார் பணிபாத
னே ! இப்பார் புகழ்நேம—வளநாடா !
கோபத்தால் வருசூரன் மார்புக்கே யெதிராக
கூறிட்டே படவேலை—எயும்வீரா !
நீபத்தா ! எனவா ! பொன் தோகைச்சீர் பரியாள !
நேசத்தாள் குறமானை—அணைதோளா !
பாபத்தால் வருநோய்கள் போகத்தான் அருள்நீசெய் !
பாடற்றேர் கையின்மேரில்—வருவோனே !

503. கொஞ்சிய மொழிகிளியாள் கஞ்சமென் முகமதியாள்
கொங்கல ரணிகுழையாள்—மெலிதாமே
வஞ்சியி னிகரிடையாள் செங்கதிர் நிகருடலாள்
வம்புகொ ளிருமுலையாள்—கொடிதாமே
நஞ்சிக லிருவிழியாள் அஞ்சன மணிநுதலாள்
நந்தணி யிருகையினள்—குறமான்மேல்
நெஞ்சினின் மிகுமயலாய் மஞ்சம தனில்வளர்வாய் !
நின்றுயர் சிகிமலையா!—அருளாயோ ?

504. கடம்பையணி புயனே! வரங்களருள் புரிவாய் !
கரந்தையணி சடையார்—பொதுமீதே
நடம்புரியு மரனுர் மகிழ்ந்துவுமை புணர்வோர்
நறுங்கமல வயனுர்—பணிதாளார்
படங்கொளர வணிவோர் தரும்புதல்வ! நலமார்
பசுஞ்சிகியின் மிசையே—வருதேவே !
மடந்தைகுற மகளாள் புணர்ந்தவிரு புயனே !
மணங்கொள்சிகி மலைமேல்—வளர்வோனே !

---

502. நீ பத்தா ! என வா !—நீ, 'அன்பனே !' என (இரங்கி) வருக !

503. காதில் குழையுடன் மலரும் அணிவதுண்டு.

505\. தீதாகிய சூருட னேயெதிர்
சேருடிடு கூரயி லாயுத!—செயவீரா!
போதாகிய நீபமென் மாலிகை
பூண்மாபுய னே!நட மாடிய—மயிலாளா!
மாதாகிய சீருமை பாலக!
வாடாமல ரோனடி யார்பர—வியதாளா!
சேதாகிய பூமகள் சேருயர்
சீர்தோகையின் மாமலை வாழ்வுறு—குமரேசா!

506\. எதிராக வருசூரன் உடல்கூறு படவே
இசைவான அதிகூர்மை அயிலேவு குமரா!
மதிசூடி நடமாடி வருசோதி அரனர்
மகிழ்மாது உமைதேவி தருபால! முருகா!
ததிவாயர் முகிலான திருமேனி விறலார்
தரைமாது பொனின்மா து புணர்மாயன் மருகா!
விதிதேடு மிருதாள! எனையாளு மையனே!
விழைசோலை மிகுதோகை மலைமேவு வடிவே!

507\. நச்சர வினிலினிதாய் நிர்த்தம திடுபதனர்
நத்தணி யிருகரனர்—நலமேசேர்
அச்சம துடன்வருசீர் பத்துள சிரன்முடியே
அற்றிட வொருகணையே—விடுமாயோன்
மெச்சவும் வருமருகா! வச்சிரனி மையவரே
விர்த்திய துறவயிலே—தொடுசூரா!
பச்சம துடன்வருவாய்! பச்சையின் மயின்மிசையே
பத்தர்கள் துதிசிகிமா—மலையோனே!

508\. கோகில மொழியாள் வேடுவர் மகளாள்
கூவிய மயிலாள்—புணர்தோளா!
சாகிட எதிர்சூர் மார்பகி ரிடவே
தார்புனை அயிலே—வியவீரா!
வாகிகல் சிகிமா மேருவில் வளர்வாய்!
வாசனை மலர்நீ—பமென்மார்பா!
மாகிரண அயிலா! நீயினி யருள்வாய்!
மாமல ரணிசீர்—மிகுதாளா!

---

506\. இது சந்த விருத்தம்.

508\. மாகிரண : 'கி' யை ஓசை குறைத்துக் கொள்க.

509. செச்சையணி புயனே! அத்துவித முடிவே!
சித்ரமிகு வடிவே!—குகநாதா!
கொச்சையுள குறமா னுக்குமயல் மிகவே
கொத்துமல ரணிவாய்!—அமரேசா!
நச்சையணி யரவே யுச்சிநெளி படவே
நர்த்தனம திடுசீர்—சிறையேசேர்
பச்சைமயின் முருகா! இப்பவர மருள்வாய்!
பத்தர்பணி சிகிமா—மலையோனே!

510. நடனமயில் வாகனு! நலமுதவு வாயையா!—குமரேசா!
குடமுலவு மார்பினள் குறவர்மகள் பாகமே—வளர்வோனே!
அடமிலகு சூரனே அழிவுபட வேலையே—வியவீரா!
திடமருவு கோடுசேர் சிகியின்மலை நாதனே!—அமரேசா!

511. கனகமலை தனிலே வளரவரு மரனர்
கமழிதழி புனைவே—ணியர்பாலே
சினமுலவு மயிடோன் முடியினட மிடுவாள்
திகழுமைமி னருள்பா—லக!வேளே!
வனம்வளரு மயிலாள் குறவர்தரு கொடியாள்
மனதுமகிழ் வடிவே!—அருளாயோ?
அனமருவு தடமே மிகு சிசியின் மலையா!
அமரர்பணி சரண!—செகநாதா!

512. கங்கையணி முடியார் இந்துஅணி சடையார்
கண்டமது கறையார்—இடமேசேர்
மங்கையுமை யிமையாள் வஞ்சமயி டன்முனே
மண்டமர்செய் விறல்மான்—அருள்பாலா!
கொங்கையில கியமான் அன்புமிகு குறமான்
கொண்டலணி குழல்மான்—அணைதோளா!
செங்கையணி அயிலா! வந்துவர மருள்வாய்!
தென்கொள்சிகி மலைமேல்—வளர்வோனே!

513. பஞ்ச பாண னுடலே வெந்து போக வுடனே
பண்டு பார்வை விழியார்—நலமேசேர்
கஞ்ச நாலு முகனர் அன்பர் வானு ளவரே
கண்டு தேடு மரனர்—தருபாலா!
நஞ்ச மேவு விழியாள் இன்ப மான மொழியாள்
நன்று லாவு குறமான்—அணைதோளா!
தஞ்சம் வேறு இலையே யின்று காரு மயனே!
சந்த மான சிகிமா—மலையோனே!

---

513. ஐயனே என்பது அயனே என்று நின்றது.

514. சித்துவிளை யாடுவாய் ! வித்தைமிகு பாவலா !
சித்ரமிகு தோகைமா—மலையோனே !
வித்துரும வாயினள் பத்மமலர் வீடினள்
விர்த்திபெறு வேடமான்—அணைதோளா !
குத்துமுலை மார்பினள் நத்தையணி பாணியாள்
கொற்றவைசொல் பாலகா !—குகநாதா !
நத்துதவம் கூபமார் நித்யசுப நேமநா
டச்சிகியின் மேரிலே—வளர்வோனே !

515. பங்கய மலர்மானள் துங்கமென் மயில்போல்வாள்
பண்புகொள் கிளிபோலே—மொழிவாளே
கொங்கைகள் பொறையாலே நொந்திடு மிடையாளே
கொஞ்சிய குறமானள்—புணர்தோளா !
செங்கையின் அயிலாலே வந்திடு மசுரோன்மேல்
சென்றிட விடுவோனே !—செயவீரா !
நங்கையின் உமைபாலா ! வந்தருள் புரிவாயே !
நன்றுள சிகிமேர்மேல்—வளர்வோனே !

516. காவில்வளர் மடமான் காமமிகு குறமான்—அணைதோளா !
தேவியுமை யவளே தேகமதி லுறைவோர்—தருபாலா !
பாவியெனு மசுரோன் பாழுபட வயிலே—வியசூரா !
கூவிவரு மயிலா ! கோலமிகு சிகிமா—மலையோனே !

517. கந்தம லர்க்குழலாள் இந்துநு தற்குறியாள்
கஞ்சம லர்க்கணைபோல்—விழியாளே
அந்தமி குத்திடுவாள் பைங்கிளி யிற்குரலாள்
அன்புமி குத்திடுவே—டமினதா !
நந்தம ணிக்கரனர் கங்குல்நி றத்திடுவோர்
நன்குக தித்திடுமால்—மருகோனே !
பைந்தரு வுற்றிடுசீர் மிஞ்சுசி கிக்கிரியாய்!
பைந்தமி ழைத்தருவாய் !—குகநாதா !

518. குயில்போலவு மொழியாள் குறநாயகி கணவா !—அமரேசா !
அயிலாயுத மதையே அடுசூரன்முன் விடுவாய் !—குகநாதா !
மயிலேறிய வடிவே ! வரமேயருள் புரிவாய் !—குமரேசா !
ஒயிலா! தமிழ் நிதியே உதவாய்! சிகி மலைமேல்—வளர்வோனே!

---

514. நேமநாட : விளி. இப்பாட்டில் இருமுறை மயில்மலையின் பேர் வந்துள்ளது. ஆகையால், முதலில் 'தோகை மாமலையோனே' என்பதைத் 'தோகைமா மயிலோனே' எனலாம்.

519. கருத்தங்கிய மேகம தாகிய
குழற்பைந்தொடி பூமலர் நாயகி
கயற்கண்ணி பொன் மாமகள் மேவிய—இருதோளா !
செருத்தங்கிய ராவண னொடு
அடற்கொண்டிடு நேமியினர்கன
திகழ்ச்சங்கணி பாணிய னருட—மருகோனே !
மருத்தங்கிய நீபமென் மாலிகை
யணிப்பொன்புய நாயகனே ! குக !
வனப்பெண்பிளை யாள்தனை மேவிய—இருதோளா !
குருத்தங்கிய மாமணி சேர்முடி
மிகுத்தஞ்சிகி மாமலைமேல்வளர்
குகச்செந்தமி ழேதருவாய்! சர—வணவேளே !

520. மோதி யடல்புரிவோன் சூர னுடல்தனிலே
மோத மிடலயிலே—வியசூரா !
ஓதி தனில்வருவோர் கோது சிறைபடவே
ஒகை யொடுசெயுவோய் !—அமரேசா !
தாதி குறமகளாள் மீது மயலுடனே !
தாக மிகவணைமேல்—அணைவோனே!
மேதி னியிலுயர்மா நேம வளநகரா !
மேன்மை திகழ்சிகிமா—மலையோனே!

521. கானிலகு வேடுவர்சொல் நாயகியை நாளுங்
காதலுட னேமருவு கூர்மைவடி வேலா !
வானில்வளர் தேவர்பணி பூமெலிய பாதா !
வாசமிகு நீபமலர் மாலையணி தோளா !
தேனின்மொழி வாகுகுழல் தாவுமிரு பார்வைத்
தேவியுமை மாதுதரு பால ! கும ரேசா !
ஞானியர்கள் தேடவுறு நான்மறையின் வாழ்வே !
நாத ! சிகி மாமலையில் வாழுமம ரேசா !

522. பூவில்வளர் அயனுர் மாபொதிகை மலையார்
போதமிகு கலையார்—இருகோடார்
சேவில்வரு மரனுர் நால்வர்மகி ழிடவே
சீர்பொருளை முனமே—சொலும்வாயா !

519. குக : விளி.

521. இது சந்தவிருத்தம்,

ஆவியுட லெனவே பூவின்மண மெனவே
ஆகமதில் வெகுவாய்—மயலாலே
காவில்வரு குறமா னுேடுமரு வியவா!
கார்சிகியின் மலைமேல்—வளர்வோனே!

523. வந்தருள் புரிவாய்! மண்டிட அசுரோன்
—உடல்மீதே—விடுவேலா!
சந்தமின் முலையாள் சங்கரி உமையாள்
—திருமாளுள்—தருபாலா!
ஐந்தரு வினிலே அன்பொடு அரசே
—புரிவோரே—பணிவோனே!
செந்தமிழ் தருவாய்! தென்சிகி மலைமேல்
—வளர்வோனே!—அமரேசா!

524. திருமாதவள் மருவுறு புயனுர்
திருமாயவன் மகிழுயர் மருகா!—எனையாளாய்!
பொருசூரனி னுடல்கிழி படவே
பொருவேலினை விடுபெல முருகா!—குகநாதா!
மருமேவிய மலரணி புயனே!
வனநாயகி புணரிரு புயனே!—அருளாயோ?
தருவேமிகு சிகியெனு மலையா!
சகம்யாவையு மருளுமை புதல்வா!—அமரேசா!

525. விருப்பந்தரு வேடமி னுளொடு
மிகுத்திங்கித மாகவு மேபுணர்—இருதோளா!
திருப்பங்கய நான்முக னுர்தனை
சிறைக்கொண்டிடு நாயக னே! இனி—எனையாளாய்!
பொருப்பந்துகொள் மாமுலை நாயகி
புணர்ப்பைந்துள மாயவ னுருட—மருகோனே!
தருப்பொங்கிய மாமுடி மாநிதி
தழைக்குஞ்சிகி மாமலை நாள்தொறும்—வளர்வோனே!

526. கனகாசல மீதினி லேவளர்
கருணுநிதி யாகிய ஈசுரர்—தருபாலா!
வனவேடுவ ரேதரு தேவியை
மணமாலிகை சூடிய பாணிய!—முருகோனே!
அனமேறிய வேதய னேபணி
அலராகிய பாதர சே!க்ருபை—புரிவாயே!
சினராமுடி மேல்வளர் பூமிகு
திறமேமிகு தோகையின் மாமலை—வடிவேளே!

526. வேத அயன்: வேதயன்; விகாரம். பாத அரசே: பாதரசே; விகாரம். சினரா; சினவரா என்பதன் விகாரம். பூ மிகு - புவியில் மிகுந்த.

527. கங்கையணி சடையார் கண்டுமகி ழுமையாள்—தருபாலா!
மங்கைகுற மகளாள் வம்பையணி முலையாள் - புணர்தோளா!
செங்கையணி யயிலா! திங்களெனும் வதனு!—அருளாயோ?
பங்கயமி னுறைசீர் பண்புமிகு சிகிமா—மலையோனே!

528. தருசூழு நகரா னிமையோர்கள் பணிவோன்
தழைநேம நகரான்—பணிபாதா!
செருவேகொ ளசுரோ னுடலீறு படவே
திகழ்வேலை விடுவோய்!—குகநாதா!
மருமேவு மிதழ்சூழ் மலர்நீப மணிவோய்!
மயிலேறி யென்முனே—வருவாயே!
பருகோடு நிரையாய் வளர்தோகை மலையா!
படைவேல! எனையாள்—அமரேசா!

529. மாலை மதியணி சடையார்
வாகு திகழ்கயி லையினர்—[அளரானோர்]
பாலை நிகர்நய மொழியாள்
பாவை யுமையவள் புதல்வா!—எனையாளாய்!
சேலை யுளவயல் வளமே
சேரும் உயர்நகர் மிகுதே—மனனுடா!
காலை வருகதி ரொளியே
கானு முடிமிகு சிகிமா—மலையோனே!

530. தேனுற்ற மொழியாள் பூவுற்ற விழியாள்
தேமற்பொன் முலையாள்—செறிவாமே
கானுற்ற கொடியாள் வேடர்க்கு மகளாள்
காதற்கு இசைவா—கியதோளா!
கூனுற்ற பிறையே தானுற்ற சடையார்
கோலப்பொன் மலையார்—தருபாலா!
வானுற்ற முடிசேர் தோகைக்கி ரியின்மேல்
வாழ்விக்கும் அரசே!—அருளாயோ?

531. வாசமி குந்திரள்சேர் நீபமி லங்குபுயா!
வாகுமி குந்தழகா!—முருகோனே!
நேசமி குங்குறமா னேடும ணந்தபுயா!
நீயென்முன் வந்தருள்வாய்!—குகநாதா!

---

529. [ ] விளங்கவில்லை. 'அரனுனோர்' என்றிருக்கலாம். சேலையுளவயல்-சேல்மீனையுடைய வயல்.

நாசமி கும்பழியே தான்வரு கின்றசுரோன்
நாடியி லங்கயிலே—விடுவீரா!
தேசர்ப ணிந்தபிரா னே! பணி கொண்டிடுவாய்!
சீர்மிகு குன்றையிலே—வளர்வோனே!

532. அடல்புரி சூருடல் வகிர்பட உடனே
அதிநுதி யிலகிய அயில்விடு கரனே!
நடனம தேபுரி மயில்மிசை வருவாய்!
நளினமென் மலர்நிக ரிருபத சரண!
திடமிகு ராவணன் முடியறு படவே
திகழ்பக ழியைவிடு அரியுட மருகா!
திடமிகு நேமமென் நகர்புகழ் குமரா!
சிகிமலை யிலகிய குக! வெகு அருள்தா!

533. நடனமயில் வாகன! அடியனிடம் ஓடிவா!
நலமுலவு நீபமா—லிகைமார்பா!
அடலுலவு சூரனர் உடல்பதற வேமுனள்
அயிலைவிடு பாணியா!—செயவீரா!
உடலில்வரு நோயதே விலகவருள் நீசெய்வாய்!
உமையுதவு பாலகா!—எனையாளாய்!
கடலுலவு நேமமா மெனும்வளமை நாடனே!
கமழ் சிகியின் மேரிலே—வளர்வோனே!

534. வண்ணக் குவிமுலையாள் பொன்னிற் பொலியுடலாள்
மன்னுற் றிடுகுழலாள்—வனமானள்
தண்ணச் சிவவதனள் பொன்னிக் குறமகளாள்
தன்னைப் புணர்பவனே!—எனையாளாய்!
அண்ணச் சிறைமயில்மேல் என்னைக் கருதிமுன்வா!
அன்னப் பரிஅயனே—பணிதாளா!
குண்ணக் குடியினிலே மன்னுச் சிகிமலையா!
குண்ணிற் றினம்வளர்வாய்!—குகநாதா!

---

531. அசுரோன் நாடி - அசுரனை நாடி.

532. சந்த விருத்தம்.

534. சிவவதனள்: மங்கலமிகு முகத்தினள்; 'தண்ணச் சசிவதனள்' என்றிருப்பது பொருத்தமுடையது. பொன்னிக் குறமகள்: திருவையனைய குறமகள். பொன்னி: திருமாது. குண்ணக்குடி: குன்றக்குடி என்பதன் மரூஉ. குண்ணில் என்பதும் குன்றில் என்பதன் மரூஉ.

535. சந்த்ரசடை முடியார் நம்பர்திரி புரநா
சஞ்செய்அர னிடமே—வளர்மானுள்
அந்தமிகு முமையாள் பைங்கிளியை நிகர்வாள்
அன்பினெடு மருள்பா—லக! வேளே!
கந்தமிகு மலர்நீ பங்கொளிரு புயனே!
கம்புளணி கரனுர்—மருகோனே!
சந்தமிகு குறமான் இன்பமுற அருள்வாய்!
தங்கவொளி சிகிமா—மலையோனே!

536. கங்காசல மணிவேணியர்
கந்தானணி யிருபாணியர்—நலமேசேர்
சிங்காரமென் மலர்நான்முகன்
தென்பாலலே துயில்மால்பணி—முதலானேர்
தங்காசல மரனுருட
தன்பாலக! எனையாதரி!—முருகோனே!
கொங்கார்பொழில் மிகுகோடுள
குன்ருகிய சிகிமீதினில்—வளர்வோனே!

537. காசுலவு முடலான் சூரனுட னெதிரே
காலயிலே யெயுமா—செயவீரா!
ராசியுடன் வனமா னேமருவு புயனே!
நாடிவரு மடியார்—பணிதாளா!
தேசிலகு முனிவோர் வானிலகு மிமையோர்
தேடரிய பொருளே!—எனையாளாய்!
வாசியெனு மயில்மேல் நாளும்வரு குமரா!
மாசிகியின் மலையா!—குகநாதா!

538. கட்டிய மலர்மாலே பொற்புய மதிலேதான்
கட்டமு குடனுவே—அணிவோனே!
மட்டியல் மொழியாளே நற்குற மடமானுள்
மத்தக முலேமேலே—புணர்வோனே!
மட்டில படையாலே கிட்டிய சுரன்மார்மேல்
வைக்கதிர் விடுவீரா!—அமரேசா!
எட்டிய சிகிமேர்மேல் விர்த்திகொள் கணநாதா!
இப்பவென் முனம்வாராய்!—குகநாதா!

---

535. கம்புள் - சங்கு. குறமானுக்கு இன்பமுறும்படி அருள்பவனே!

536. கந்தான் அணி: பிரமகபாலத்தை யணிந்த.

537. காலயில்: கால அயில்: கொல்லும் அயில்.

538. கட்டமுகுடனுவே: ஆவே: ஆகவே. மட்டு - தேன். வைக்கதிர்; வடிவேல். கதிர்: உவமையாகுபெயர். கணநாதா! (367 பார்க்க.)

539. அரவையணி சடையார் உரிவையணி யுடையார்
அரனுதவு புதல்வா! —எனையாளாய்!
உரமுலவு மசுரோ னுடல்பகிர வயிலே
உருவவிடு குமரா!—தமிழ்தாராய்!
கரநெடிரு வரையே உயிர்செகுப கழியார்
கமழ்துளப அரியார்—மருகோனே!
வரமுதவு மயிலா! அமரர்பணி சரண!
மகிமையுள சிகிமா—மலையோனே!

540. எதிர்த்து வந்தொரு சூருடல் கீறிட
எடுத்து கந்திடு வேலதை யேவிய—செயவீரா!
மதிக்கி சைந்திடு வேணிய னருமை
மகிழ்ச்சி யுந்திய பாலக னே! இனி—யெனையாளாய்!
துதிக்கி சைந்திடு நாயக னே! நல
துரைப்பெ ணிந்திரை சேர்புய னருட—மருகோனே!
மதிக்கு வந்திடு தாமரை மாமகள்
மகிழ்ச்சி கொண்டுறை கேகய மாமலை—வளர்வோனே!

541. திரிபுர நாசனர் மதியணி வேணியார்
செகவுயிர் காவலர்—பரமானர்
கரியுரி சூடுவோர் இடபவெள் வாகனர்
கயிலையி னதனர்—தருபாலா!
பரிபுர மேவுகால் அரிவைமை கானிலே
பதியுட வேடமான்—அணைதோளா!
தெரிவுற நீமுனே மயின்மிசை யேறிவா!
சிசிமலை வாழ்குகா!—அமரேசா!

542. கச்சுற் றிடுமுலையாள் விற்குச் சரிநுதலாள்
கற்புற் றிடுவனமான்—விழியாளே
நச்சுற் றிடுகுழலாள் பத்மக் கொடியனையாள்
நத்துற் றிருகையினள்—ரதிபோலே
அச்சுற் றிடுகுறமான் பொற்புப் புயமதிலே
அற்புக் கொளசிதமே—வியதோளா!
தைச்சுற் றிடுமயிலா! இப்பக் ருபைபுரிவாய்!
தைச்சித் துளசிகிமா—மலையோனே!

---

541. மைகான் - இருண்ட காடு. பதியுட - குடியிருப்புடைய.

542. பத்மக்கொடியனையாள் - திருமாது போன்றவள். நத்து: சங்குவளையல் அச்சு - வடிவம். தைச்சு உற்றிடும் - தைத்துச் செல்லும். சித்து - விழா.

543. கோகில மான மொழியாள்
கூரயிலான விழியாள்—நலமேசேர்
வாகிகல் தேவி யுமையாள்
வாசனை யான குழலாள்—கனமேசேர்
மாகிளி யான வடிவாள்
மாதுகௌ மாரி புதல்வா!—எனையாளாய்!
யோகியர் தேடு சரண!
ஓர்சிகி மேரி லரசே!—அருளாயோ?

544. கரியமே னியினன் அருணமார் சிகையான்
கதமுலா வியதோர்—விழியானே
விரியும்வாய் முழையான் பிறையைநே ரெயிறன்
வெருவவே வருகூ—ருடனேதான்
அரியபோ ரிடுவாய்! மயிலின்வா கனனே!
அயில்கொள்பா ணியனே!—எனையாளாய்!
பெரியவார் கலிசூழ் உயர்சிகா மலையா!
பிரியமீ பமென்மா—லிகையாளா!

545. கங்கையணி சடையார் திங்கள்புனை சடையார்
கங்குனிற விடமே—உணும்வாயார்
சங்கையணி கரனார் கொன்றையணி புயனார்
தங்கமலை யரனார்—தருபாலா!
கொங்கையெனு மலையாள் பங்கயமென் வதனாள்
கொண்டணிகர் குழலாள்—நலமேசேர்
மங்கைகுற மகளாள் அன்பினொடு புணர்வாய்!
வந்தருள்செய் சிகிமா—மலையாளா!

546. நச்சைத் தரித்திடு மிடறார்
நட்புற் றிருக்குய ருமையாள்—நலமேசேர்
கச்சைத் தரித்திடு முலையாள்
கற்புப் படைத்திடு கவுமா—ரிசொல்பாலா!
கொச்சைக் குறக்கொடி கணவா!
கொத்துக் கடப்பமென் மலர்மா—லிகைமார்பா!
பச்சைச் சிறைப்பொனன் மயிலா!
பற்பப் பொனுற்றிடு சிகிமா—மலையாளா!

547. கலையைத் தரித்த மதிபோல் நிறமுற் றிருக்கு முடலாள்
கமழுற் றபற்ப மலர்மேல்—வளர்மானுள்
கலையைச் சொலச்செய் குவையே! மயிலிற் சிறக்க வருவாய்!
ககனத் திருக்கு மிமையோர்—பணிதாளா!

அலையைக் கையிற்கு ளடுமா முனிவர்க் குமற்பி னுடனே
அருணற் பொருட்சொல் கனிவாய்—முருகோனே!
கொலையைப் பயிற்று மசுரோன் உடலைக் கிழித்த வயிலா!
குக! நற் சிகிப்பொன் மலையா!—எனையாளாய்!

548. அச்சமிகு கடல்மேல் நெட்டரவி னணைமேல்
அற்பினெடு துயில்வோர்—தடமீதே
நச்சரவின் முடிமேல் நிர்த்தமது புரிவோர்
நற்பதும மலராள்—புணர்தோளார்
மச்சவடி வுளமால் பச்சைநிற வுடலார்
மத்தகமுன் வருவோர்—மருகோனே!
தச்சயர வசுரோ னுக்குவயில் விடுவோய்!
தற்பரம! சிகிமா—மலையோனே!

549. நாகமதி புனைசடையார்
நாடரிய கயிலையினு—ருடனே தான்
பாகமதி லுறையுமையாள்
பார்வதியி னுடபுதல்வா!—எனையாளாய்!
மாகமதி லுயர்சிகியாம்
வாழுமலை தனிலரசே!—குகநாதா!
தேகமதில் வருபிணியே
தீரவர மருள்வடிவேல்—அணிவோனே!

550. அரவி னுடமுடி கிழிபடவே அசுர ருடகுல மழிபடவே
—நடமாடு—மயிலாளா!
குரவி லகுமல ரணிகுழலாள் குறவர் தருமகள் புயமதிலே
—அணைமார்ப!—வடிவேலா!
கரவி னுடனலை யுணுகனிவாய் கரிய நிறவுட லரிமருகா!
—எனையாள்வை!—முருகோனே!
இரவி தனைநிகர் கொடுமுடிசேர் எழிலி லகுசிகி மலைதனிலே
—வளர்நாத!—அருள்தாராய்!

551. செருமிகு சூர னுருடல் கிழிபட வாகு கூருள
கிரணமு லாவு வேல்விடு—செயவீரா!
மருமிகு நீப மாகிய அளிமுரல் தாது லாவிய
மலரணி மார்ப! நீக்ருபை—புரிவாயே!

548. 'அசுரோனுக்குத் தச்சு அயர அயில்விடுவோய்' என்க.

க்ருமுகி லான மேனியர் வளைவுபி ஞக பாணியர்
கனமிகு மாய ஞருட—மருகோனே!
வருமதி தாவு கோடுள வுயர்வளர் காவு லாவிய
வீளர்சிகி மேரில் மேவிய—குகநாதா!

552. கரும்பைநிகர் மொழியாள் சிறந்தவிரு குழையே
கடந்தவிரு விழியாள்—வனமேசேர்
குரும்பைநிகர் முலையாள் இலங்குகுழல் முடியாள்
குணங்கள்மிகு குறமான்—புணர்தோளா!
பெரும்பையுள வரவே கரந்தையித ழிகளே
பிறங்கல்மதி யணிவோர்—தருபாலா!
விரும்பைமிகு மயிலா! துலங்கவென்முன் வருவாய்!
விளங்குசிகி வரையாய்!—அருளாயோ?

553. வஞ்சமிகு அசுரோர் அங்கமது பகிர்வே
மண்டஅயில் விடுவோய்!—செயவீரா!
கஞ்சமிகு மடமான் பங்கிலுறை விறலார்
கங்குல்நிற உடலார்—மருகோனே!
நெஞ்சமிகு துயரே வென்றுவிடு குமரா!
நின்றசிகி மலையா!—எனையாளாய்!
மஞ்சமிகு குறமான் அங்கமொடு புணர்வாய்!
வந்துக்ருபை புரிவாய்!—குமரேசா!

554. எதிராக வருசூர னுடல்கீறு படவே
இலைவேலை யெறிவீர! எனையாளு மயனே!
மதிதாத கியைவேணி யதிலேபு னைவரே
மயலாக வணைதோளி உமைமாது புதல்வா!
கதியான மயிலேறி யடியேன்முன் வருவாய்!
கலையாவு நிதியாவு முதவாய்நன் மிகவே!
விதிநாத ரிமையோர்கள் பணியேசெய் பதனே!
வெகுகோடி கதிர்சூழு சிகிமேரில் வளர்வாய்!

555. சத்திதனை யெதிரே மொய்த்துவரும் அசுரோர்
தட்டுருவ விடுவாய்!—அமரேசா!
சித்தியுயர் குமரா! பத்தனிடம் வருவாய்!
சித்ரமிகு சிறைமா—மயிலாளா!

---

552. விருப்பை என்பது விரும்பை யென மெலிந்தது.

554. அயனே: ஐயனே; சந்தம் நோக்கிய விகாரம். இது சந்த விருத்தம்.

நத்திலகு கரனர் அற்புமிகு மருகா !
நட்புமிகு குறமான்—அணைதோளா !
கத்திகைகொள் புயனே ! இப்பவர மருள்வாய் !
கர்த்தசிகி மலையா !—எனையாளாய் !

556. நிருத்தம்புரி மயிலா !
நினைத்தென்முனம் வருவாய்!—அமரேசா !
செருத்தங்கிய வசுரோன்
செகுக்குங்கதிர் வடிவேல்—எறிவீரா !
விருத்தங்கொளு மதியே
மிலைக்குஞ்சடை யரனர்—தருபாலா !
தருத்தங்கிய நலமே
தழைக்குஞ்சிகி மலையாய் !—அருளாயோ ?

557. கந்தமிகு நீபமலர் மார்பா !
கஞ்சநிக ரானவிரு பாதா !—எனையாளாய் !
அந்தமிகு தோகைமயி லாளா !
அன்பினொடு நாயனிடம் வாராய் !—குகநாதா !
செந்தமிழை நாயெனிடம் நீதா !
செங்கைதனில் வேலையணி நாதா !—அமரேசா !
சொந்தமிகு வேடமகள் பாகா !
துங்கமிகு தோகைமலை யாளா !—நலவேளே !

558. திருப்பங்கய மாதுமி ஞள்புணர்
திகழ்ச்சங்கணி பாணிய ருட—மருகேசா !
செருக்கொன்றிடு சூருட னேயெதிர்
செகுக்கும்படி வேலதை யேவிய—செயவீரா !
மருத்தங்கிய நீபமென் மாலிகை
மணக்கும்புயனே!க்ருபை யாவையும்—உதவாயோ ?
எருக்கும் சுலவேயரி தாகிய
எழிற்குன்றைநன் மாமலைமேவிய—குகநாதா !

559. மதிசூடி நடமாடி மழுவாளி அரனர்
விதிநாதன் அரிநாதன் பணிநாதர் நிதமே
துதிபாகர் கயிலாசர் சொலுபாடல் குமரா !
கதிர்தோகை மலைமீது கருணைநி தியனே !

---

557. 'நாயெனிடம் நீ செந்தமிழைத் தா' என்க.

558. எருக்கும் சுலவுவேய் = வருத்துகின்ற சுழல்கின்ற மூங்கில்.

559. சந்தவிருத்தம்.

560. விருத்த குகமு னுள்வரு நாயக!
மிகுத்த மாநிதி யாவையு மேயினி—அருளாயோ?
கருத்த னே!சிறை மாமயில் வாகன!
கமழ்க்க டாசல னுர்துணை வா!இனம்—எனையாளாய்!
பருத்த வாரண வோசைமு னேவரு
பணைத்த நேமிய னுருயர் மாலுட—மருகோனே!
பொருச்செய் வேலணி பாணிய னே!வெகு
புகழ்ச்சி காமலை மீதினி லேவளர்—குகநாதா

561. நடனமயில் வாகனு! அமரர்பணி நாயகா!
நலமிலகு வேடுவோ—ருடமானுள்
மடமயில்கொள் சாயலாள் அதிகவடி வானதோர்
கமலகுற மாதுசேர்—இருதோளா!
திடமிலகு சூரனுர் உடல்பகிர வேமுனுள்
திகழுயிலை யேவுவோய்!—அருளாயோ?
தடமுலவு கோடுசேர் கிரணமதி தாவுசீர்
தருவுலவு தோகைமா—மலையோனே!

562. திசைநான் முகனுர் இமையோ ரடியார்
தினமே பணியே—புரிவாரே
விசைசேர் மயிலா! எனையா ளுமையா!
மிகுசீ ரயிலா!—அமரேசா!
இசைசேர் சிகிமா மலைவாழ் பவனே!
எனையா ளுமையா!—குமரேசா!
விசையா வசுரோ னுடல்கீ றிடுவாய்!
வெகுவாய் வரமே—புரிவாயே!

563. செச்சையணி புயனே! வித்தைதனை யருள்வாய்!
சித்ரமிகு மயிலா!—எனையாளாய்!
கொச்சைமிகு குறமா னுக்குமய லுடனே
கொத்துமல ரணிவாய்!—அமரேசா!
நச்சையணி மிடறுர் பெற்றதிரு மகவே!
நட்பினுட னடியே—னிடம்வாராய்!
விச்சைமிகு முதல்வா! பத்தர்பணி சரணு!
விர்த்திபெறு சிகிமா—மலையோனே!

---

560. பருத்த வாரணம்: கஜேந்திரன் என்னும் யானை.

564. பத்துமுடி யானொடெதிர் வுற்றகரு மாயனுயர்
பற்பமகண் மேவுபுயன்—மருகோனே!
குத்துமுலை யானகொடி நற்குறவர் மாதுவெகு
கொத்துமலர் சூடுகுற—மகள்வாகா!
நத்துலவு சீர்வயல்கள் உற்றுவளர் நாட! இனி
நட்பினொடு நாயனிடம்—வருவாயே!
வித்துரும வாய! அருள் வித்தைதனை நீயெனிடம்!
விர்த்திபெறு **தோகைமலை**—வருநாதா!

565. பெலத்தில் மிகுத்திடு சூருடல் கீறிட
பிடித்த மிகுக்கும்வை வேலதை யேவிய—செயவீரா!
தலத்தில் மிகுத்திடு தாருகொ ணடினர்
தவத்தை முயற்றிய ஞானிகள் யோகியர்—பணிதாளா!
செலத்தை மிலைத்திடு வேணியர் பாலுறை
சிறப்பி னுமைக்கொடி யாள்தர வேவரு—மக! வேளே!
மலத்தை யொழித்திடு நாயக னேஅருள்!
மகத்துவ முற்றசி **காமலை** மேல்வளர்—குகநாதா!

566. குகநாயகா! எனையாளுவாய்!
குளிர்நீபமா மலர்சூடியேர்—மிகுதோளா!
முகநாலுசே ரயனுருமே
முனிவோருமே மகவானுமே—பணிதாளா!
செகநாயகா! கயிலாசமோர்
சிலையாகவே வளைபாணியார்—தரவேதான்
மகனாகவே வருசோதியே!
மகமேருநேர் **சிகிமேரிலே**—வளர்தேவே!

567. வெற்றிவிழி யயிலாள் முத்துமிகு நகையாள்
விற்குநிகர் நுதலாள்—திருவேசேர்
நெற்றியுயர் பிறையாள் வித்துரும விதழாள்
நித்யசுப கரமான்—அணைதோளா!
வற்றிடமு னலைமேல் விட்டகதி ரயிலா!
மட்டுலவு மலர்நீ—பமென்மார்பா!
சுற்றிவரு மதியே யொப்புமிகு முடிசேர்
சொர்க்கநிகர் **சிகிமா—மலை**யோனே!

---

565. செலத்தை: சலத்தை; மோனை நோக்கிய விகாரம்.

566. இமயத்தின் ஒரு பகுதியே கயிலையாகையால் ஒற்றுமை நோக்கிக் கயிலையைச் சிலையாக வளைத்ததாகக் கூறினார்.

567. அலைமேல் வேல்விட்டது உக்கிரகுமாரபாண்டியராக அவதரித்தபோது.

568. கொச்சைக் குறத்தி கணவா! வித்தைக் குயர்ச்சி தருவாய்!
குத்துக் கிசைத்த வடிவேல்—அணிவோனே!
செச்சைக் கிசைத்த புயனே! பத்துச் சிரத்த னுயிரே
செற்றுக் களித்த மணிமால்—மருகோனே!
பச்சைச் சிறைப்பொன் மயிலா! முத்துப் பதித்த நகையாள்
பெட்புற் றிருக்கு முமையாள்—தருபாலா!
இச்சைப் படச்சொ லருள்வாய்! சித்ரச் சிகிக்கி ரியனே!
எய்ப்பற் றநற்செல் வமதே—அருளாயோ?

569. அரவின்முடி நெளியவே மலைகள்முடி யதிரவே
அசுரர்பட படெனவே—சிறைவீசு—மயிலாளா!
திரமுலவு மசுரனுர் அகலமது பகிரவே
சிகரமலை தகரவே—விடுவேல!—எனையாளாய்!
கரகமல [மாதினுள்] மறவர்தரு [காதலாள்]
[கருணைவேடமா—னணைதோளா!]
பரமர்தர வருகுகா! தமிழையின முதவுவாய்!
பரிவினெடு சிகியின்மா—மலைமீது—வளர்நாதா!

570. கஞ்ச மாமலராள் அன்பு சேர்குறமான்
கண்கள் பார்வையினுல்—மயலாலே
நெஞ்ச வாவலினுல் இன்ப மாள்பவனே!
ரெண்டு பார்வையினுல்—விழியாயோ?
வஞ்ச னுகியசூர் நெஞ்சு கூறிடவே
மண்ட வேலதையே—வியநாதா!
தஞ்சம் வேறிலைநீ வந்து தானருள்வாய்!
தங்க மேர்சிகிமா—மலையாளா!

571. வஞ்சிநிக ரிடையாள் கஞ்சநிக ரடியாள்
மங்குனிகர் குழலாள்—நலமேசேர்
நஞ்சிலகு விழியாள் மஞ்சணிற வுடலாள்
நங்கைகுற மகளாள்—புணர்தோளா!
நெஞ்சிலகு துயரே வென்றுவிடு குமரா!
நின்பதம தனையே—பணிவேனே
மஞ்சுதவழ் வனமார் குன்றைமலை வடிவே!
மஞ்சுமிகு மயிலா!—எனையாளாய்!

---

568. எய்ப்பு - சோர்வு.

569. [ ] இக்குறியிலுள்ளவற்றில் முதலிரண்டு சீர்கள் சந்தம் பொருந்தவில்லை. மூன்ருவதில் சொற்கள் விடுபட்டுள்ளன. இவற்றை முறையே 'உருவினுள்' 'சிறுமியாள்' 'கருணையுறு வேடமான்—அணைதோளா!—குகநாதா!' எனப் படிக்கலாம்.

571. மஞ்சுமிகு மயில் - முகிலைக்கண்டு மகிழ்ச்சிமிகும் மயில்.

572. கோமள மேனியள் கூரயி லார்விழி
[.........]—உமைமானுள்
தாமரை யாரடி காருள சீர்குழல்
தாயெனு நாயகி—தருபாலா!
மாமலர் நீபமென் மாலிகை யேபுனே
மாபுய னே!க்ருபை—புரிவாயே!
காமரு லாவிய தோகையின் வாகன!
காமிகு தோகையின்—மலைநாதா!

573. நந்திதனில் வருவோர் முன்திரிபு ரமதே
நந்தவெகு நகையே—புரிவோரே
சந்திரனை யணிவோர் செஞ்சடையி னரனுர்
தங்கமலை வருவோர்—அருள்பாலா!
வந்திகல்செ யசுரோன் ரெண்டுபட வயிலே
மண்டவிடு கரனே!—எனையாளாய்!
மந்திகுதி வனமார் குன்றைமலை நகரா!
வந்தடிய னிடமே—அருளாயோ?

574. வாகைபுனை யயிலா! சூரனுடல் பகிர்வாய்!
வாசமிகு மலர்நீ—பமென்மார்பா!
ஓகைபுனை யொயிலா! மாவருள்செய் குமரா!
ஓசைமிகு கடல்சூழ்—புவிநாதா!
பாகைநிகர் மொழியாள் பூவைநிகர் விழியாள்
பாவைகுற மகள்சேர்—இருதோளா!
டாகைபுனை யரசே! தோகைமலை மணியே!
நாத சரவணனே!—எனையாளாய்!

575. சிறைமயில் வாகன! அறுமுக நாயகா!
திரிபுர நாசனுர்—அருள்பாலா!
மறைசொலும் வாயினுர் கலைமகள் பாகனுர்
மகிழ்பொரு ளேமுனள்—அருள்வாயா!
பிறைமதி நேரதாய் வருநுதல் வேடமான்
பிரியம தாகவே—புணர்தோளா!
கறைநிற மேகமே தவழுயர் சோலைசூழ்
கனைகடல் சூழ்சிகா—மலையோனே!

---

572. [...] இரண்டு சீர்கள் இல்லை. 'கோதைய ளாரியை' எனப்படிக்கலாம்.

574. ஓகைபுனை ஒயில் - மகிழ்ச்சியைத்தரும் சாயல்; அலங்காரமுமாம்.

576. அரவிற் பெருவால் உயர்பச் சிலைமேல்
அலையிற் றினமே—துயில்மாயோன்—கனமாமே
இரவிற் பொலிவான் மதியைச் சரியாய்
எழிலுற் றிடுமா—னனமாயோன்—நலமேசேர்
உரவிற் கெதிராய் வருதைத் தியனே
ஒழியச் சமரா—டியமாயோன்—மருகோனே!
பரவித் துதியே புரிபத் தர்களே
பணிநற் சிகியா—மலையாளா!—எனையாளாய்!

577. தைப்பூச விழாவுயர் குமரா!
விற்போல்வளை வாகிய நுதலாள்
சக்கோவயில் போல்பவள் குறமான்—வளர்பாகா!
இப்பூமியி னோர்பணி சரணா!
மைத்தோகைகொ ளாடிய மயிலா!
எற்கேக்ருபை யாவையு மருள்வாய்!—குகநாதா!
ஐப்பூவெனும் நீபமென் மலர்தான்
அற்பாயணி மார்ப!மின் வடிவேல்
அத்தா!உனை யேதொழு மடியே—னிடம்வாராய்!
முப்பூவினை நேமநன் வளநா
டுற்றேமிகு தோகையின் மலையா!
முத்தேகனி! யே!முழு முதலே!—அமரேசா!

578. சதுமுக னான வேதன் கலைபயில் பாவை மீது
தயவுள நாத! வானர்—பணிபாதா!
மதுமலர் நீப மாலை தனையணி சீர்கொள் மார்ப!
மகிமைகொள் தோகை மேரில்—வளர்நாதா!
விதுவணி வேணி நாத ரிடம்வரு தேவி மாது
விரைமிகு கோதை நீலி—அருள்பாலா!
பதுமமின் மேவு மார்பர் மருக!பொன் னான சேவல்
வளர்துவ சா!இநாளில்—அருளாயோ!

---

576. அரவின்மேல், பெரிய ஆலின் உயர்ந்த பசிய இலையின்மேல், அலை கடலில் எப்போதும் உறங்கும் மாயவன். ஆனனம் - முகம். திங்களைப்போல் அழகுற்றிடும் முகம்.

577. சக்கோ அயில் போல்பவள்: சக்கு - கண்; ஐப்பூ-அழகியமலர். முப்பூ: இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கவும் இலட்சம் ஆண்டுகள் உயிர் வாழச்செய்ய வும் வல்ல மருந்து என்பர்.

578. 'இந்நாளில்' எனற்பாலது 'இநாளில்' எனக் குறைந்து நின்றது, சந்தம் நோக்கி,

579. கோகில மொழியாள் காருள குழலாள்
கூரயில் விழியாள்—வனவேடோர்
மாகிளை தனிலே தான்வரு கிளியாள்
வாகுள குறமான்—மகிழ்தேவே!
ஆகினில் வருவோர் மாமுகர் துணைவா!
ஆறிரு விழியா!—வடிவேலா!
காகிளர் சிகியா மேருவில் வளர்வாய்!
காமர்மென் மயிலா!—எனையாளாய்!

580. [கன்றையுதை கழலார்] தங்கமலை யரனார்
கங்கையணி சடையார்—இதழேசேர்
கொன்றைமல ரணியார் பங்கில்வள ருமையாள்
கொங்கையுணு புதல்வா!—எனையாளாய்!
மன்றமிகு மலர்நீ பம்புனையு முருகா!
மஞ்சுலவு சிறைமா—மயிலாளா!
குன்றைமலை யரசே! வந்துக்ருபை புரிவாய்!
கொண்டனிற விறலார்—மருகோனே!

581. வெற்றியயில் விழியாள் கச்சையணி முலையாள்
விற்பொருவு நுதலாள்—இழைபோலே
சிற்றிடையி னடமான் பொற்புமிகு குறமான்
சித்தமகிழ் வுடனே—புணர்தோளா!
நெற்றிதனில் விழியார் அத்தமதி யுழையார்
நிர்த்தமிடு மரனார்—தருபாலா!
சுற்றிவரு கடல்சூழ் மெய்ச்சிகியின் மலையா!
சுப்பிரம ணியனே!—அருளாயோ?

582. மலையைச் சிறையே யரிநற் கரனும்
வளர்கற் பகதா—ருவையாள்வோன்
அலையைத் துளியா யுணுமெய்த் தவனும்
அழகுப் பொதியா—சலம்வாழ்வோன்
கலையைச் சொலுவாள் அவளைப் புணர்வோன்
கமலக் கரசா—கியவோன்மால்
தலையைக் கொடுதான் பணியைப் புரிசீர்
சரணச் சிகிமா—மலையாளா!

---

580. [ ] விளங்கவில்லை.

582. முருகனிடும் பணியைத் தலையாலே மேற்கூறியவர்கள் செய்கின்றனர்.

583. திருப்பங்கய [நாதன்]
சிறைக்குந்திட முனமே—செயுநாதா!
மருப்பொன் றுயர் கருமேல்
மதக்குஞ் சரமுகனுர்—துணைவோனே!
பொருப்புஞ்சம மிலதேர்
புடைக்குந்தன மிருவே—டமின்வாகா!
விருப்பங்கொள வெழிலோ
மிகுக்குஞ் சிகிமலைமேல்—வளர்தேவே!

584. கச்சுபுனை மேரு முலையாள் விற்குநிக ரான நுதலாள்
கட்டுமலர் சூடு குழலாள்—நலமேசேர்
மொச்சுநிறை சோதி நகையாள் கட்டழகி வேட மகளாள்
முக்யமய லாகி யுடனே—புணர்தோளா!
நச்சுபுனை சீரின் மிடறுர் அத்தமதில் மேவு மழுவார்
நத்துமுமை மாது புதல்வா!—எனையாள்வாய்!
அச்சுதன்மெய் யாசை மருகா! சித்ரமிகு தோகை மலைமேல்
அற்பினெடு வாழு மரசே!—குமரேசா!

585. வித்துரும விதழாள் நற்கமல வடிவாள்
விற்குநிகர் நுதலாள்—நலமேசேர்
குத்துமுலை யுமையாள் பக்கம்வள ரரனுர்
கொத்திலகு சடையார் தருபாலா!
பத்துமுடி யவன்மேல் விட்டகணை யரிமால்
பற்பமகள் புணர்மால்—மருகோனே!
நத்துகடல் வளைசீ ருற்றபுவி துதிமா
நற்சிகியின் மலையாய்!—அருளாயோ?

586. சித்தி ரத்தைநிக ராகிய காரிகை
சிற்றி டைக்குறமி னுள்தனை மேவிய
—புயநாதா!—வடிவேலா!
அத்தி ரத்தையெதி ரேவரு சூருயிர்
அற்றி டக்கைதனி னுல்விடு மாமிகு
—செயவீரா!—நலமேசேர்!

---

583. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'மலரான்' எனப் படிக்கலாம். மலரான் சிறையிலே குந்திட முற்காலத்திற் செய்தவனே! ஒற்றை மருப்பினரும் உயர்ந்த தரிய மிகுதியான மதமுடைய யானைமுகமுடையவரும் ஆகிய விநாயகர்.

பத்தி ரத்தைமிகு நீரினி லேவளர்
பற்ப முற்றமகள் சேர்புய மாலுட
—மருகோனே !—மதியாமா
வத்தி ரத்தையடி யேன்விழி காணருள்
—மற் சிகிக்கிரியின் வாழ்வுறு [...]
குகநாதா !—எனையாளாய் !

587. வச்சி ராதர னுருட மாமகள்
மைக்கு லாவிய கேசமி னுள்புணர்—இருதோளா !
நச்சு லாவிய மாமிட றுர்நிதம்
நத்து நாயகி யாளுமை யாளுட—புதல்வோனே !
தச்சு லாவிட மாவுட மார்பது
தக்க வேலதை யேவிய மேல்விடு—குமரேசா !
மெச்சு மாமிகு கோடுள கானுள
வெற்றி யேபெறு தோகையின் மேனினில்-வளர்வோனே!

588. செச்சையணி புயனே! வித்தைதனை யருள்வாய்!
சித்ரமிகு சிகிமா—மலையாளா !
நச்சையணி மிடறு ருக்குமய லருள்வாள்
நத்தர்துணை வியினுள்—தருபாலா !
பச்சைமயில் தனிலே நிர்த்தமிடு முருகா !
பற்பமலர் நிகராம்—இருதாளா !
இச்சையுட னடியே னுக்குவர மருள்வாய் !
இட்டமிகு குறமான்—மயலாளா !

589. சத்திதனை யெதிரா யுற்றுவரு மசுரோன்
தட்டழிய விடுமா—செயவீரா !
அத்தியல றியதோர் சத்தமது செவிகேட்
டக்ஷணமுன் வருவார்—மருகோனே !
கத்திகையை யொருமா னுக்குவணி கரனே !
கத்துகடல் வளைநே—மனனுடா !
தத்திநடை பயில்தாள் மைச்சிறையின் மயிலா!
சட்டமிகு சிகிமா—மலையாளா !

590. திருமகள் மேவு புயனுர்
திகழுள நேமி யரிமால்—மருகோனே !
பொருமசு ரோனை யுரமே
பிளவுசெய் கூரி னயிலா !—எனையாளாய் !

586. [...] ஒரு சீர் இல்லை. 'வேலவ !' எனப் படிக்கலாம். மதிஆம்மா வத்திரம்—திங்களேயெனும் பெருமை பொருந்திய முகம். வத்திரம் - முகம்.

கருமுகி,லான குழலாள்
கனமுலை வேட மகள்சேர்—புயவோனே!
தருமிகு சோலை நலமே
தன்முசிகி மேரில் வருவாய்!—அமரேசா!

591. கந்தமிகு நீப மலரா! மங்கைகுற மாது கணவா!
கஞ்சமிகு தாளை யருள்வாய்!—அமரேசா!
அந்தமிகு தோகை மயில்மேல் வந்துஎனை யாளு மயனே!
அன்புமிகு நாத! அடியார்—பணிதாளா!
குந்தமதை மாவி னுடலே ரெண்டுபட ஏவு முருகா!
கொண்டனிற மேனி மருகா!—எனையாளாய்!
சந்தமுலை மாது வுமையாள் பங்கில்வள ரீசர் புதல்வா!
தங்கமலை நேரு சிகிமா—மலையாளா!

592. வாசமிகு குழலாள் வேலைநிகர் விழியாள்
வாரையணி முலையாள்—நலமேசேர்
நேசமிகு குறமான் காதலுட னணைவாய்!
நீயென்முனம் வருவாய்!—அமரேசா!
நாசமிக எதிரே தானும்வரு மசுரோன்
நாடியவ னுடல்மேல்—விடுவேலா!
ஈசர்தரு புதல்வா! தோகையுயர் மயிலா!
ஏருலவு சிகிமா—மலையோனே!

593. கொச்சைக் குறத்தி கணவா!
கொத்துக் கடப்ப மலரே—புனைமார்பா!
நச்சைத் தரித்த மிடறுர்
நட்புற் றிருக்கு முமையாள்—தருபாலா!
பச்சைக் கிளிப்ப ரியனே!
பத்தர்க்குமெத்த வரமே—அருளாயோ?
செச்சைப் புயத்த ரசனே!
சித்ரச் சிகிப்பொன் மலையா!—எனையாளாய்!

594. எதிராக வருசூர னுடல்கீறு படவே
இசைகூரி னயிலேவு மிருபாணி முருகா!
மதிசூடி நடமாடி கயிலாச கிரியார்
மகிழ்மாது வுமைமாது கவுமாரி புதல்வா!

---

591. ‘ ஐயனே ’ என்பது ‘ அயனே ’ என நின்றது, சந்தம் நோக்கி. நேரு - ஒப்பாகிய.

594. சந்த விருத்தம்,

அதிரூப மிகுவேடு வர்கள்சேரி மகளாள்
அணைமீது தனில்மேவு மிருதோளா! நலமார்
கதிர்தாவு நிறைகோடு மிகுதோகை மலையா!
கமலோன்வி ணுயர்தேவர் பணிபாத! அருள்வாய்!

595. செந்திம லைக்கரசே! என்றனை ரெட்சியையா!
செங்கதி ருற்றிடுசூர்—வடிவேலா!
அந்திநி றத்துடலார் தொங்குபு ழைக்கரமோ
டைங்கரர் மத்தகனுர்—துணைவோனே!
நந்தியி லுற்றிடுவோர் கொன்றைம லர்ச்சடையார்
நங்கையு மைக்குரியார்—மயலாலே
தந்திடு புத்திரனே! வந்தரு ளைப்புரிவாய்!
தங்கம லைச்சிகிமா—மலையோனே!

596. நிதியைத் தருவாய்! மயில்வித் தகனே!
நிருதர்க் குலம்வே ரறநற் கதிர்வேல்—விடுவோனே!
கதியைத் தருவாய்! குறவர்க் கொடிசேர்
கணவக் குமரா! கமலத் தயனுர்—பணிதாளா!
மதியைப் புரிவோர் கயிலைக் கிரியார்
மகிழ்புத் திரனே! எனைரட் சியையா!—குருநாதா!
துதியைப் புரிபூ மலரிற் சரணு!
துரைவித் தகனே! சிகியிற் கிரியா!—கணநாதா!

597. கொண்டனிற மேனியார் சங்கையணி பாணியார்
கொங்குமிகு சீர்துழா—யணிமாயோன்
வண்டர்படி பூவிலே தங்குகொடி பாகனுர்
மஞ்சுலவு நாதனுர்—மருகோனே!
அண்டர்பணி தாளனே! யென்றனிடம் வாவையா!
அன்பினொடு வேடமான்—அணைதோளா!
தண்டமுயர் பார்ணியா! குன்றைமலை நாயகா!
சந்த்ரனணி வேணியார்—புதல்வோனே!

598. அரவையணி சடையார் கயிலைமலை யரனுர்
அழகுதிகழ் நடமா—டியபாத—ரிடமேசேர்
பரவைதிகழ் விழியாள் கமலமிகு வதனுள்
பருவமிள வுமையாள்—தருபால!—எனையாளாய்!

---

595. செந்திமலை (93, 128).

597. மஞ்சுலவுநாதனுர்: திருமால். மஞ்சு - முகிலனைய நிறத்துடன் உலாவும் தலைவர்.

மரவுரிகொ ளுடையார் அரவுதிக ழணையார்
மலர்மினுறை புயனர்—மணிமாயன்—மருகோனே!
பரவுமடி யனுநான் உனதுபுதல் வனுநான்
பதவிதனை யருள்வாய்!—சிகிமேரில்—வளர்நாதா!

599. கஞ்சமல ரயனர் நன்றுமிகு மறையார்
கண்டுதொழு மலர்சே—ரிருதாளா!
நஞ்சமிகு மிடறுர் கங்கையணி சடையார்
நம்பரருள் புதல்வா!—அமரேசா!
தஞ்சமெனை யினியாள் கொண்டைமயில் முருகா!
தந்தியுட துணைவா!—எனையாளாய்!
வஞ்சமிகு மசுரோன் றெண்டுபட விடுவாய்!
மங்குல்தவழ் சிகிமா—மலையாளா!

600. கோகில மொழியாள் வேலெனும் விழியாள்
கோதைகொள் குழலாள்—நலமேசேர்
வாகிக லுமையாள் ஈசுரர் துணையாள்
மாமிகு கவுமா—ரிசொல்பாலா!
ஆகினில் வருவோர் தாள்வளர் கையினர்
யானையின் வதனர்—துணைவேளே!
யோகியர் பணிவார் சீர்கழ லரசே!
ஓர்சிகி மலைமேல்—வளர்நாதா!

601. பெலத்த சூரி னோடு மெதிர்த்த போரு லாவு
பெருத்த வேலை யேவு—செயவீரா!
நலத்த பாலை நேரும் மொழிப்பெ ணாளி னோடு
நறைத்த மாலை சூடு—மணவாளா!
செலத்தின் மீத ராவில் துயிற்செய் நாத னர்பொன்
திருப்பெண் மேவு மாயன்—மருகோனே!
தலத்தில் வாழ்வர் தேவர் பணித்த பாத! நாத!
தமிழ்ச்செய் தோகை மேரில்—வருவேளே!

602. குன்றைமலைக்கரசே! என்றனை ரட்சியையா!
கொண்டைம யிற்பரியாய்!—அமசேரா!
குன்றவி லைக்கொடுபோர் வென்றிடு வித்தகனர்
கொன்றைம லர்ச்சடையார்—அருள்பாலா!

---

599. விடுவாய்: விளி.

601. நறைத்த - மணமுள்ள.

குன்றைநிகர்த்திடுமா ரெண்டுமுலைக்கொடியாள்
கொஞ்சுமொழிக்குறமான்—மணவாளா!
குன்றையெடுத்திடுவோர் பைந்துளவுற்றிடுவோர்
கொண்டனிறத்திடுவோர்—மருகோனே!

603. கண்டக்கறை நாயகர் சந்த்ரச்சடை வேணியர்
கங்கைக்கொரு நாயகர்—தருபாலா!
அண்டத்தினில் வாழ்பவர் நன்பத்தர்கள் யாவரும்
அன்புற்றுடனேபணி—யிருதாளா!
துண்டப்பிறை மாநுதல் அம்புக்கெதிராம்விழி
துங்கக்குறநாயகி புணர்தோளா!
கொண்டற்படி சோலைகள் மண்டிப்பொலி கோடுயர்
குன்றைக்கிரி மீதினில்—வளர்வேலா!

604. வாலநிறவயிராபதத்தினில்
வாவுபுனிதன்மினளையற்பொடு—புணர்தோளா!
பாலவிழியரனரிடத்துயர்
பாவையுமைகவுமாரிமெய்க்கொடி—தருபாலா!
ஆலமெனுமயில்வேடர்நற்கொடி
யாளைமருவியநாத! மைச்சிகி—மயில்வாகா!
கோலமிருகனசோலையுற்றிடு
கோடுநிறைசிகிமேரினித்தியம்—வளர்நாதா!

605. குண்ணக்குடிக்குமரனே! வண்ணச்சிகிப்பரியனே!
கொண்ணைச்சடைப்பரமனு—ரிடமேசேர் [யாள்
கொண்ணைக்கனிக்குழலினள் பண்ணுக்குயர்த்துமொழி
கொங்கைக்கொடிப்பெணுமையாள்—தருபாலா!
வண்ணப்பொழிற்குறவர்பால் பெண்ணுக்கிரக்கமிடுவோய்!
மன்னுற்றசித்ரபணிசீர்—இருதாளா!
கண்ணற்குவற்பின்மருகா! என்னைச்சிறக்கவருள்வாய்!
கங்கைக்குமுற்றபுதல்வா!—குகநாதா!

606. திருமாதுபுணர்மார்பர் துளமாலையணிதோளர்
திகணேமியணிபாணி—மருகோனே!
செருவேசெய்பெலசூரன் உடல்கீறுபடநீளு
செயவேலைமுனமேவு—குகவீரா!

---

604. வாலநிறம் - வெண்ணிறம்.

605. கொங்கை, கங்கை யென்பன சந்தத்தொடு பொருந்தவில்லை.

606. திகணேமி: திகழ்நேமி.

மருமாலை புனைநாத! குறமாது மகிழ்தேவ!
மயின்மீது வருலோல!—அமரேசா!
தருசூழு கதிர்தாவு சிகிமேரின் வளர்தூய!
தமிழ்பாட நிதிகூட—அருளாயோ?

607. பூமலி நான்முகன் வான்வளர் தேவர்கள்
பூதக ணுதிபர்—பணிதாளா!
காமலி வாசவ னுருட பாலகி
பூமுலை மேலணி—இருதோளா!
பாமலி நாவல! நீயெனை யாதரி!
பார்புக ழுயக!—அமரேசா!
தேமலி நீபமென் மாலிகை யேபுனை
சீருயர் தோகையின்—மலையோனே!

608. குருகின மேவுவயல் சூழு
குலமிகு சாலிவிளை நேம—வளநாடா!
அருமறை தேடுமிரு பாத!
அலைகடல் மீதுதுயில் மாயன்—மருகோனே!
பெருவரை மீதுவயி லேவி
பிளவுசெய் வீர! எனை யாள—வருவாயோ?
தருவெகு வாகநிரை சீர்கொள்
தழைசிகி மேரில்வரு தூய!—அமரேசா!

609. வன்னச்சிறை மயிலா! குண்ணக்குடி மலையா!
மன்னிப்பொரு மயிலா—யுதவீரா!
கன்னற்சிலை மதவேள் தன்னைப்பொடி படவே
கண்ணைக்கொடு செயுவோர்—புதல்வோனே!
அன்னத்தினில் வருவோர் முன்னைச்சிறை தனிலே
அண்ணப்புரி வரதா!—செகநாதா!
மின்னற்குற மகளாள் சன்னக்குளுள் வருவாய்!
விண்ணற்குயர் குமரா!—எனையாளாய்!

610. கூனப்பிறை போலுள நீளெயிர்
கோடைச்சரி யாகிய மாபுய—அசுரோன்மேல்
மானத்துடன் வேலதை யேவிய
வாசத்தொடை சூடிய நாயக!—முருகோனே!

---

607. புகணுயக! - புகழ்நாயக!

609. சன்னை - சரசம்.

வானத்தவர் யாவரு மேபணி
வானுற்றிடு சீர்பத னே! இனி—எனையாளாய்!
கானக்கொடி மேவிய மாபுய!
காளைக்கும ரா! சிகி யாமலை—வடிவேளே!

611. நிர்த்தமிடு மயிலா! இப்பவென்முன் வருவாய்!
நித்யசுப கரனே!—அமரேசா!
பத்தர்பணி சரண! வட்டமதி வதன!
பச்சைநிற வுடலார்—மருகோனே!
சத்தமிடு கடல்சூழ் வைப்பி லுயர் பொருளே!
சத்தியணி கரனே!—செயவீரா!
அத்தர்கிரி புரண சத்தர்தரு புதல்வா!
அற்பினொரு சிகிமா—மலையாளா!

612. கோகில மொழியாள் காரிகல் குழலாள்
கூரயில் விழியாள்—வனமானுள்
மாகிரி முலையாள் வேடுவர் குறமான்
மாமய லுடனே—புணர்தோளா!
பாகினு மினிதே யாகிய தமிழ்தா!
பாதக வசுரோர்—குலகாலா!
ஆகினில் வருவோர் சீர்துணை முருகா!
ஆரண! சிகியா—மலையோனே!

613. சித்ரமயில் வாகன! வித்தைதனை நீசெய்வாய்!
சித்திபுரி நாதனே!—அமரேசா!
கத்திகைகொள் வேணியார் பக்கமதில் வாழுமான்
கற்புமிகு மாதுமான்—நலமேசேர்
புத்ர! க்ருபை நீ செய்வாய்! சத்தியணி பாணியா!
பொற்புநிறை நாதனே!—எனையாளாய்!
பத்ரமிகு சோலைசூழ் நற்சிகியி னுதனே!
பச்சைநிற மாயனுர்—மருகோனே!

614. அலையாழியி லேதுயில் மாயவன்
அணிமேகம தாகிய நாயகன்—மருகோனே!
சிலைமா நுத லாளுமை நாயகி
திருவேணியி னுருட பாலக!—முருகோனே!
மலைமீதினில் வேலதை யேவிய
வரதா! குமர ரா! சிறை மாமயி—லுளவீரா!
கலையாவையு மேயினி நீயருள்!
கருணாநிதி யே! சிகி மாமலை—வளர்வோனே!

615. கச்சைப்புனை யிருதட முலையாள்
கைக்குத்திரு வளையணி குறமான்—மகள்பாகா!
நச்சைப்புனை மிடறுள வரனார்
நட்புற்றிடு முமையவள் புதல்வா !—எனையாளாய் !
செச்சைப்புய ! சரவண பவனே !
சித்ரச்சிகி மலைவளர் குகனே !—எழிலாளா !
பச்சைச்சிறை மயில்வரு மரசே !
பற்பக்கொடி மகிழுயர் மருகா !—செகநாதா !

616. கருப்பை வளைத்துப் போர்செ லுத்திய
கறுத்த மதற்குத் தாதை யிச்சைகொள்—மருகோனே !
பொருப்பை நிகர்த்துத் தான்மி குத்திடு
புடைத்து விணைத்துச் சீர்ப டைத்திடு—முலைமானுள்
சுரும்பை நிகர்த்துக் கூர்கொள் அக்குயர்
துரைச்சி குறத்திப் பாவை யைப்புணர்—இருதோளா !
விருப்பை மிகுத்துத் தானெ னக்கருள்
வெளிக்கு வளர்ச்சிக் காமலைக்குக !—குமரேசா !

617. கோமள மேனியள் தார்புனை கார்குழல்
கூரயி லாகிய—விழிமானுள்
பூமலர் போல்பத கோகில மாமொழி
பூவைமென் வேடமின்—அணைதோளா !
தாமரை வாழ்பவர் நான்முக னரணர்
தானித மேபணி—சனிதானு !
தேமல ரேபுனை ஆறிரு சீர்புய !
தேவ சிகாமலை—முருகோனே !

618. பூவுற்றிடு நான்முக னுருயர் வானத்தினில் வாழ்பவ னர்வெகு
போதக்கடன் மாமுனி வோரடி—யவரேதான்
காவுற்றிடு வாசவ னுரெழு லோகத்தவர் யாவரு மேவெகு
காதற்கொடு தானித மேபணி—யிருதாளா !
நாவுற்றிடு மாகலை யேயருள் ஆடற்பரி யாகிய கேகய !
நாதக்கும ரா ! எனை யாதரி !—குகநாதா !
சேவுற்றிடு மீசுரர் பாலக ! தோகைச்சிகி மாமலை வாழ்பவ !
சீதக்கடல் சூழுநல் நேமநன்—னகராளா !

---

616. அக்கு = கண். அக்கு உயர் துரைச்சி யென்க. வெளிக்கு - வானளாவி. சிக்காமலை : சிகாமலை யென்பதன் விரித்தல் விகாரம், சந்தம் நோக்கி.

617. சனிதானு ! = சந்நிதானத்தை யுடையவனே !

619. முத்துநிகர் நகையாள் விற்புருவ நுதலாள்
மொய்த்தகுழன் முகிலாள்—நலமானாள்
வித்துரும விதழாள் அற்புதமென் வதனாள்
வெற்புநிகர் முலையாள்—குறமானாள்
குத்துமுலை தனிலே கட்டிமரு வியவா!
கொற்றமிகு மயிலா—யுதவேளே!
சித்துவிளை குகனே! மெத்தவர மருள்வாய்!
சித்ரமிகு சிகியா—மலைநாதா!

620. செருவுற்றிடு சூருட னேயெதிர்
செயவுக்கிர வேலதை யேவிய—செயவீரா!
மருவுற்றிடு நீபமென் மாலிகை
மலரைத்தரி மார்ப! சி காமாலை—வளர்தேவே!
தருவுற்றிடு கானக நாயகி
தனைநட்பொடு மேவிய நாயக!—கணநாதா!
உருவுற்றிடு மாமதி சேர்சடை
உமையைப்புண ரீசுரர் பாலக!—எனையாளாய்!

621. வாசக்க டப்ப மான
மாலைக்கி சைத்த மார்ப!—எனையாளாய்!
நேசக் குறத்தி மாது
நீடுற்ற இச்சை யோடும்—அணைதோளாய்!
காசற்ற பத்தர் நாளும்
காதற்கி சைத்த பாத!—மயிலாளா!
தேசத்தில் முக்ய மான
தேவச்சி கிப்பொன் மேரில்—வளர்நாதா!

622. மலையாகிய பூமுலை வித்தகி யிடத்து
வளரீசுர னார்தரு புத்திர! எனக்கு—அருளாயோ?
மலையையெடு ராவண னைச்சம ரிடத்து
மடிவேசெயும் ராகவ னுக்கும கிழ்வுற்ற—மருகோனே!
சிலைவேள்மன தாசைகொள் மைத்துன! வசித்தர்
செகம்வாழடி யார்பணி நற்கம லமுற்ற—இருதோளா!
அலையாழிகள் சூழ்நலம் மெத்தவு ளசித்ர
நகர்நேமநன் னாடுறு நற்சிகிமலைக்குள்—வருநாதா!

---

622. வசித்தர் - (புகழைப்) பேசுவோர்.

623. திரையா ழியிலே துயின்மா யவனார்
திருநா யகியாள் தனையாள் பவர்மால்—மருகோனே!
வரையார் முலையாள் குறநா யகியாள்
வனவே டுவர்மான் மகிழ்நா யகனே!—எனையாளாய்!
தரைமே லுயர்நே மநனு டுளவா!
தமியே னையிநாள் வளர்வே புரிவாய்—அமரேசா!
விரைவாய் மயின்மீ தினிலே வருவாய்!
விரைசோ லைகள்சேர் சிகிமா மலையா!—குகநாதா!

624. மயில்வாகன மீதினி லேறிமுன்
வருவாயடி யேனிட மேக்ருபை—புரிவாயே!
குயிலாகிய மாமொழி யாள்வளர்
குறநாயகி யாள்தனை மேவிய—இருதோளா!
அயிலாயுத மேயணி பாணிய!
அடுசூருடல் கூறிட வேபுரி—அமராளா!
ஒயிலா! நவ வீரர்ச கோதர!
உயர்கோடுள தோகையின் மாமலை—முருகோனே!

625. கஞ்சமலர் மேவிவளர் பைங்கலையின் மாதுதனை
கண்டுபுரி வேதர்பணி—யிருதாளா!
வஞ்சமிகு ராவணனை மண்டைவிழ வேகணையை
மண்டவிடு மாயனரி—மருகோனே!
நஞ்சமதை யேமுன் அணி கண்டரிட மேவளரும்
நங்கையுமை மாதுதரு—புதல்வோனே!
தஞ்சமினி வேறுஇலை அன்பர்பணி கேகயமின்
தங்கமலை மீதுவளர்—முருகோனே!

626. வேலா யுதத்தை யெதிர்வரு சூருடல்
மேலே தொடுத்து அடல்புரி நாயக!—முருகோனே!
பாலா யிருக்கு மொழிமகி ழீஸ்வரி
பாலா! எனக்கு வரமதை நீயருள்!—குகநாதா!
சேலா யிணைத்த விழிமிகு வேடமின்
சீராய் அணைத்த இருபுய னே! அருள்—உதவாயோ?
மேலார் சிகிக்கி ரியின்மலை நாயக!
வேலா! சிகிப்ப ரியின்மிசை யேவரும்—அமரேசா!

627. நீப மாலை புனைமார்பா!
நீயெ நாளும் எனையாளாய்!—குகநாதா!
கோப மான அசுரோனே
கூற தாக அயிலேதான்—விடுவீரா!

[தீப மான அசுரேசர்
சேவ லான கொடையாளர்—மயிலாளா !]
பாப நாச மிடுதேவே !
பார மான சிகிமேரே—வளர்நாதா !

628. கோபம தாகியசூர் போரினில் வீழிடவே
கூர்மிகு வேலதையே—வியவீரா !
நீபம தாகியதோர் மாலிகை சூடியவா !
நீயென தாவியையா—தரி ! நாதா !
பூபதி நான்மறையார் வானுல காதிபனர்
போதமெய் ஞானிகளே—பணிதாளா !
சாபம டாதருள்வாய் ! பூமிகு சோலைகளே
சார்சிகி மேரினிலே—வளர்தேவே !

629. நடனமிட் டிடுமயில் வாகன !
நறைமிகுத் திடுமலர் நீபமா—லிகைமார்பா !
குடமிணைக் குறுமுலை மாதினள்
கொடியிடைப் பெணள்மற வேடமான்—அணைதோளா!
[திடமிகுத்தசூருடல்கீறிடவே
திகழ்படைத்த கூரயிலேவுவாய்—அருள்வாயே!
கடல்வளைத்த நேமநன் னுடனே
கனசிகிப் பொன் மேரினில்வாழ்—குருநாதா !]

630. அக்கர வம்புனை விட்கிள ரம்புலி
அற்பொடு கொண்டிடு—சடையார்பால்
செக்கர்நி றைந்திடு மைக்கண்ம டந்தைபொன்
சித்தம கிழ்ந்திடு—முமைபாலா !

---

630. செக்கர் - சிவப்பு (செவ்வரி).

627. [ ] பொருள் விளங்கவில்லை ; சந்தமும் பொருந்தவில்லை.
"தீபமான அசுரேசனே
சேவலான கொடியாளா !—மயிலாளா !"
என்றிருக்கலாம்.

629. [ ] சந்தம் பொருந்தவில்லை.
"திடமிகுத் தசூருடல் கீறவே
திகழ்படைத் தனியயி லேவுவாய் !—அருள்வாயே !
கடல்வளைத் திடுநேம நாடனே !
கனசிகிக் கிரியினில் மேவிவாழ்—குருநாதா !"
எனப் படிக்கலாம்.

சக்கர விண்டொரு பத்தென வந்திடு
தக்கன்ம கிழ்ந்திடு—மருகோனே!
மைக்கடல் கொண்டிடு மிப்புவி யும்புகழ்
மைச்சிகி யங்கிரி—முருகோனே!

631. சத்தியைமு ஞக வேகமாய்
தக்கவரு சூரன் மார்பிலே—எயும்வீரா!
உத்திரவி ழாவு லாசனே!
உத்தமிகௌ மாரி பாகமே—வளர்தேவர்
அத்தியுரி ஆசை யீசனுர்
அற்புதம தான பாலகா!—எனையாளாய்!
முத்திகொடு தோகை மேரிலே
முக்கியம தாக நாளுமே—வளர்நாதா!

632. அம்புவிழி மடவாள் கும்பவிணை முலையாள்
அந்தமிகு குறமா—னுடவாகா!
வம்புபுனை முலையாள் பங்கயமி னிகராள்
மங்கைதிரி புரையா—ளிடமேசேர்
அம்புலிகொள் சடையார் தங்கமலை யரனுர்
அண்டர்பணி சரணுர்—தருபாலா!
கொம்புமத களிறுர் தந்துணையி னரசே!
கொண்டல்படி சிகிமா—மலையாளா!

633. திருநாயகி புணர்மார்பினர்
திகழ்நேமியர் [..........]—மருகோனே!
செருவேபுரி பெலசூரொடு
செயமாகிட அயிலேவிய—செயவீரா!
மருநீபமென் இதழேமிகு
மலர்மாலிகை தனையேபுனை—யிருதோளா!
கருமாமுகில் தவழ்சோலைகொள்
கனதோகையின் மலைமேவிய—குகநாதா!

634. இதட்டாமரை மீதினி லேவளர்
எழிற்சீர்மிகு நான்முக னர்பணி—யிருதாளா!
மதக்கார்களி றுகிய வானனர்
மனத்தாசைகொள் மாதுணை வா! இனி-யெனையாளாய்!

---

630. ஒருபத்து என வந்தருன் தக்கன்: பத்து அவதாரங்கள் எடுத்த தகுதியுடையோன் (திருமால்.)

633. [ ] ஒரு சீரில்லை. "திருமால்மகிழ்" எனச் சேர்த்துப் படிக்கலாம்.

634. இதட்டாமரை: இதழ்த்தாமரை.

கதச்சூருடல் கீறிட வேவெகு
கதிர்க்கூரயி லேவிய வா! நல—செயவீரா!
பதத்தேபணி வேனருள் வாய்! குக!
பணைத்தேயுயர் தோகையின் மாமலை—வளர்நாதா!

635. தொங்கலணி புயனே! செங்கமல வயனுர்
துன்றுமிமை யவரே—பணிபாதா!
சங்கமணி கரனுர் மங்குனிற வுடலார்
சந்தமிகு மரியார்—மருகோனே!
பங்கமிகு வயல்சூழ் குன்றைமலை யரசே!
பண்பு செறி யயின்மே—வியநாதா!
துங்கமிகு குறமான் பங்கில்வள ரரசே!
தொண்டர்பணி சரணு!—எனையாளாய்!

636. குன்றைவிலி நலமார் துண்டுமதி புனைவார்
கொங்குதிக ழிதழே—மிகவேசூழ்
கொன்றையணி சடையார் பங்கில்வள ருமையாள்
கொங்கையமு துணுமா—கனிவாயா!
மன்றல்மிகு மலர்நீ பங்கொளிரு புயனே!
வந்தருளை யருள்வாய்!—குகநாதா!
குன்றைமலை யரசே! செந்திமலை யரசே!
கும்பமுனி பணிசீர்—மிகுதாளா!

637. தொங்கலணி புயனுர் இந்துவணி நலமார்
துன்றுசடை முடியா—ரிடமேசேர்
மங்குல்நிரை குழலாள் புண்டரிக வதனுள்
வம்புபுனை முலையாள்—தருபாலா!
துங்கமிகு மயிலா! வந்துஎனை யருளாய்!
தொண்டையிதழ் முருகா!—குகநாதா!
சங்கமிகு புலவோன் கும்பமுனி பணிவோய்!
சந்தமிகு சிகியா—மலையாளா!

638. குயிலைநிகர் மொழியாள் நலமேசேர்
குவியுமிரு முலையாள் குறமானுள்—புணர்தோளா!
ஒயிலைமிகு குமரா! அடியாரே
ஒளிகமல வயனுர் இமையோரே—பணிபாதா!
மயிலையொரு பரியாய் விடுவோனே!
வரதசர வணனே! எனையாளாய்!—அமரேசா!
அயிலையணி கரனே! முருகோனே!
அழகுதிகழ் சிகிமா மலையாளா!—குகநாதா!

636. செந்திமலை: (93, 128, 595.)

639. வேலைநிகர் விழியாள் வனமேசேர்
வேதமெனு மிடையாள் குறமானுள்—புணர்தோளா!
பாலைநிகர் மொழியாள் நலமேசேர்
பாவையுமை யவள்பால் நிதமேதான்—வளர்தேவா!
மேலையிமை யவரே பணிவார்சீர்
மேரில்வரு அரனுர் தருபாலா!—எனையாளாய்!
காலையெதிர் அரியே தவழ்கோடார்
கார்கொள்சிகி மலையா! அமரேசா!—குகநாதா!

640. வட்டம திச்சடையார் நெற்றியில் உற்றகணுர்
வச்சிர நற்கரனுர்—பணிவோர்பால்
இட்டமி குத்திடவே அற்புத மைத்திடவே
யிச்சைவி ளைத்திடவே—வளர்மானுள்
வட்டமு லைக்கொடியாள் பொற்புமி குத்திடுவாள்
மட்டுள மைக்குழலாள்—தருபாலா!
துட்டனெ னப்பொருமா வுக்கயில் விட்டவனே!
சொக்குமி குச்சிகிமா—மலையோனே!

641. கஞ்சமலர் மாது மேவிய
கங்குனிற மேனி மாயவன்—மருகோனே!
வஞ்சமிகு சூரன் மார்பினில்
மண்டஅயில் வேலை யேவிய—செயவீரா!
பஞ்சவன மான கேகய!
பண்புமிகு வேத ணுர்பணி—யிருதாளா!
கொஞ்சவிண்ட வேட நாயகி
கொஞ்சியணை தோழ! தோகைமா—மலைநாதா!

642. கோட்டுக்களி றுடையை யேபுனை
கூத்துப்பயில் நாயக ரீசுர—ரிடமேசேர்
ஏட்டுச்செய தாமரை வீடினள்
ஏக்கப்பணி மாதுமையாள்தரு—குகநாதா!
நாட்டுக்குயர் நேமநன் னுடனெ!
நாற்சொற்றிட மாகவு மேதமிழ்—உதவாயோ?
ஆட்டுப்பயில் தோகையின் வாகன!
ஆக்கத்துயர் தோகையின் மாமலை—முருகோனே!

---

639. காலை எதிர் அரி - காலையில் எழும் ஞாயிறு. ஞாயிறு தவழும் சிகரம்.

641. பஞ்சவனம் - ஐந்து நிறம்.

642. செய - சிவந்த. வீடினள்: இலக்குமி.

643. எதிர்த்திடு சூர னுவி பறித்திடு கூர்மை யான்
இசைத்திடு வேலை யேவு—செயவீரா !
கதித்திடு தோகை யோடு நடித்திடு கேக யா!என்
கருத்தினில் வேண யாவும்—உதவாயோ ?
மதிச்சடை வேணிநாதர் [வெறுக்கையி னேரில் வாசல்]
மதத்தது தோலி னுடை—புனேவோரே
விதித்தலைசூடு மார்பர் மகிழ்ச்சிகொள் பால கா!பொன்
மிகுத்திடு தோகைமேரில்—வளர்கோனே !

644. வாசக்க டப்பமலர் மாலைக்கி சைத்தபுய !—மருகோனே !
நேசக்கு றத்திபுணர் நேடுற்ற நற்சிகியின்—மலைநாதா !
காசற்ற வித்தையருள் காதற்கி சைத்தசிகி—மயிலாளா !
தேசத்தர் அற்பினொடு சீருற்ற பத்தர்பணி—யிருதாளா !

645. கரும்பைநிகர் மொழியாள் சிறந்தவிரு குழையே
கடந்தவிரு விழியாள்—வளமேசேர்
குரும்பைநிகர் முலையாள் வனங்கள்தனில் வளர்வாள்
குறம்பயிலு மடமான்—புணர்தோளா !
அரும்பைநிக ரெயிறுள் இலங்குமுமை புதல்வா !
அலங்கிருத மயிலா !—குகநாதா !
பெரும்பையர வினிலே வளர்ந்தபுவி தனிலே
பிறங்குசிகி மலையா !—அருளாயோ ?

646. வாச மிகுந்த நீப மாலை யணிந்த மார்ப !—எனேயாளாய் !
ஈச ரிடங்கு லாவு ஏர்கொள் சிறந்த மாது !—உமைபாலா !
காச கல்கின்ற மாது கானில் வளர்ந்த வேடர்—மகள்பாகா !
தேசர் பணிந்த மேன்மை சீர்கொள் சிகண்டி மேரில்—வரு
[நாதா !

647. செப்புநிகர் முலையாள் சித்தமிகு மயிலாள்—குறமானுள்
[உப்பகிர] வடிவாள் உத்தமியை நலமாய்—அணைவோனே !
துப்புமிகு சடையார் சுத்தமிகு அரனுர்—தருபாலா !
செப்பரிய அலைசூழ் செப்பமிகு சிகிமா—மலையோனே !

648. திடமிகு அசுருடல் கூற தாகிட
திறமிகு வெகுநுனி வேலை யேவிய—செயவீரா !
கடமிகு களிறெனும் ஆன ஒருட
கனமிகு மகிழ்வுறு சோத ரா!இனி—யெனையாளாய் !

643. [ ] இக்குறிப் பகுதி விளங்கவில்லை. 'மறிக்கையர் மேரின் வாசர்' (அல்லது) 'திருக்கயி லாச வாசர்' என இருக்கலாம்.

647. [ ] இப்பகுதி 'ஒப்பரிய' என்றிருக்கலாம். துப்புமிகுசடை - பவளம் போன்ற சிவப்பு மிகு சடை.

குடமிகு மிருதன வேட நாயகி
குதலையின் மொழிபகர் மாதி னுள்புணர்—இருதோளா!
தடமிகு அலைவளை நேம நாடுள
சகமிகு சிகிமலை மீதி லேவளர்—குகநாதா!

649. செச்சை புனைந்த புயனே!
சித்ர மிகுந்த மயில்வா—கனவீரா!
கச்சை யணிந்த முலையாள்
கட்டி யணைந்த முருகா!—எனையாளாய்!
இச்சை மிகுந்த தென்முனே
இப்ப மகிழ்ந்து வருவாய்!—குகநாதா!
பச்சை மெய்விண்டு மருகா!
பக்க மகன்ற சிகிமா—மலையோனே!

650. திருப்பங்கய நாயகி யாகிய
திருக்கொண்டிடு மார்பினர் மானுட—மருகோனே!
மருப்பைம்பொழில் மீதினி லேவளர்
மதர்க்குங்கரு கூர்விழி வேடமி—னுடவாகா!
பருக்குந்தன வீசுரி யாளுயர்
பசுக்குங்கொடி நாயகி மாதுமை—தருபாலா!
தருக்கொண்டிடு கோடுக ளேநிறை
தழைக்குஞ்சிகி மாமலை மீதினில்—வளர்தேவே!

651. செங்கைக்கதிர் வேலதி னலெதிர்
சென்றுற்றிடு சூருடல் மேல்விடு—செயவீரா!
கங்கைச்சடை வேணியர் பால்வளர்
கஞ்சத்திரு மாதுமை யாகிய—நலமேசேர்
கொங்கைக்கொடி நாயகி யீஸ்வரி
கொண்டற்குழ லாளுமை யேதரு—புதல்வோனே!
மங்கைக்குற மானுட நாயக!
மஞ்சுற்றிடு தோகையின் மாமலை—முருகோனே!

652. எதிர்வரு [மாபெலவ] எனவரு சூருடல்
இருபிள வாகிட—விடுவேலா!
மதியித ழேயணி சடைமுடி யானுட
மனமகிழ் வாகிய—இடமானள்

---

652. [ ] இப்பகுதியை, 'மார்கடல்' எனப் படிக்கலாம்.

விதிமுத லாகிய இமையவ ரேபணி
விரைமலர் மாதுமை—தருபாலா!
கதிர்மிகு கோடுகள் நிரைநிரை யாய்வளர்
கனமிகு தோகையின்—மலையோனே!

653. பங்கயமலர் வாசனுர்
பண்புயர்மறை வாயினுர்—குருநாதா!
செங்கையிலணி வேலையே
சென்றெதிர்வரு சூரனேர்—விடுவீரா!
மங்கைநல்குற வேடமான்
வம்பணிதன மீதிலே—புணர்தோளா!
கொங்குகள்மிகு சோலைசூழ்
கொண்டல்கள்படி தோகைமா—மலையோனே!

654. பூத்த கொடியாள் வார்த்த கிணமே
போற்பொன் முலையாள்—குறமானுள்
கோத்த மலரே சேர்த்த குழலாள்
கூட்டி யணைமேல்—உறைவோனே!
சீற்ற மிகுசூர் கீற்று படவே
சீர்த்தி யுளவேல்—விடுவீரா!
கூத்தன் மதலாய்! வாய்த்த சிகிமா
கோட்டில் வளர்வாய்!—எனையாளாய்!

655. சிறைமயி லாகிய பரியா!
தினம்வரு வாய்!அருள் புரிவாய்!—குகநாதா!
மறைபயில் வோனடி யவரே
மகிழ்வுட னேநித நிதமே—பணிவாரே
இறையவ னே!சர வணனே!
இதயம தேயுனை நினைவேன்—எனையாளாய்!
கறைமுகி லேதவழ் வனமே
கடல்வளை மாசிகி மலையா!—அயிலாளா!

656. வண்டு படிந்த வாச மென்று மிலங்கு நீப
மங்கள முந்து மாலை—புனைதோளா!
செண்டு இரண்டு போல முந்து தனங்கள் மீது
செங்கண் மடந்தை வேட—மகளுடே
கண்டு மகிழ்ந்து மேவு செங்கை யிலங்கு வேல!
கஞ்ச மலர்ந்த வீடர்—பணிதாளா!
மண்டு மிகுந்த சோலை யெங்கு நிறைந்து வாழும்
மஞ்சு கவிந்த தோகை—மலையாளா!

657. கஞ்ச மலரில்வளர் வேதனர்
கண்டு பணியவரு பாத னே! இனி—யெனையாளாய்!
நஞ்சு மிடறிலணி வேணியார்
நந்து மழுவையணி பாணியாருட—இடமேசேர்
கொஞ்ச இடையிலகு மாதினள்
கொண்ட லணிகுழலி பால கா! அரு—ளுதவாயோ?
தஞ்ச மிலைஅருள்செய் நாதனே!
• தங்க மலைசிகியின் மேரி லேவளர்—குகநாதா!

658. தாமரை முகத்தினள் கோடியர் தனத்தினள்
தாரணி புயத்தினள்—நலமேசேர்
காமனை யடத்தின லேவெனு நலத்தினள்
காதல்கொள் குறப்பெணள்—புணர்தோளா!
சேர்மனை முடிக்குளே தானணி உமைப்பெணள்
சோதியி னிடத்தினள்—தருபாலா!
மாமத சலத்தினர் சீர்மிகு துணைக்குகா!
வாழ்வுள சிகிப்பொன்மா—மலையாளா!

659. சத்திதனை யேயெ திர்த்துவரு சூரன்
தட்டுருவி யோட—விடுசூரா!
கத்திகையை யேநி ரைத்தபுய! லோல!
கர்த்த! சிகி யான—பரியாளா!
நத்திலகு பாணி முத்தர்தனை மேவு
நட்புமிகு மாது—உமைபாலா!
சித்திமிகு நாத! நற்சிகியின் மேர!
சித்ரமிகு தேவ!—வடிவேலா!

660. வட்டமதி தனையே நற்சடைய தனிலே
வைத்தவர னிடமே—வளர்மானள்
கட்டழகி யுமையாள் அற்புதமென் வதனள்
கற்புமிகு கவுமா—ரிசொல்பாலா!
பட்டமணி நுதலாள் குத்துமுலை யிணையாள்
பட்சமிடு குறமான்—அணைதோளா!
கொட்டமிடு பரியா! நற்சிகியின் மலையா!
[குட்டினறு] படைவீ—டரசாளா!

---

660. [ ] விளங்கவில்லை 'கொட்பினறு' என்று படிக்கலாம்.

661. மேனுட்டினில் வாழ்வுறு வாசவன்
வீழ்கோட்டிணை மாமலை நாயகி—மருகோனே !
தேனுட்டிய தாதகி யேபுனை
சேயாக்கிளர் வேணிய ரீசுர—ரிடமேசேர்
பானுட்டிய கூர்மொழி யாளுமை
பார்மேற்றினம் வாழுற வேவரு—புதல்வோனே !
கானுட்டிய வேடமி னுயக !
கார்மேற்றவழ் கேகய மாமலை—முருகோனே !

662. மலையையெ டுத்தரா வணனையெ திர்க்கவே
வடிகணை விட்டுமே—செயமானேர்
அலைதனி னித்ரையே புரியிரு மைக்கணர்
அழகுப டைத்தமால்—மருகோனே !
சிலையைவ ளைத்ததாய் நுதல்கள்ப டைத்தமான்
திகழ்செய்கு றத்தியாள்—புணர்தோளா !
கலையையெ னக்கயா ! இனமருள் வித்தகா !
கமழுயர் நற்சிகா—மலையோனே !

663. கான கத்திலுறை வேட நாயகி
காதன் மிக்கவணை மீதில் மேவிய—இருதோளா !
வான கத்திலுறை தேவ னுகிய
வாழ்வு பெற்றசசி நாத னுருட—மருகோனே !
சான கிக்குமண மாலை சூடிய
தாரை யுற்றதிரு மேனி மாலுட—மருகோனே !
ஞான முற்றமலர் நீப மாலைய !
ஞான மிக்கவர்சி காநன் மாமலை—முருகோனே !

664. தந்தி தனைநிகர் மொழியினுள்
தங்க மலைநிகர் முலையினுள்—நலமேசேர்
அந்தி மதிநிகர் வதனமான்
அன்பு மிகுவன மகளையே—புணர்தோளா !
நந்தி லகுகர விறலையே
நண்பு கொளுமல ருறைமினுள்——மருகோனே !
பந்தி நிரையுள சிகரம்வாழ்
பண்பு வுயர்சிகி மலையிலே—வருதேவே !

---

661. சேயா - சிவப்பாக. கான் நாட்டிய வேடமின் - காட்டில் நிலைபெற்ற வாழ்வுறும் வேடர் மகள்.

662. எனக்கயா - எனக்கு ஐயா.

665. கடமத யானை முகனார்
கருதிய சீர்கொள் துணைவா !—எனையாளாய் !
திடமிகு சூர னுடனே
செயமிடு போர்செய் வடிவேல்—அணிநாதா !
மடமயி லான குறவோர்
மகள்தனை மேவு புயவா !—குகநாதா !
தடமுள வாழி யலைசூழ்
சகம்வளர் தோகை மலையாய் !—அமரேசா !

666. ..................ா வந்து யெனக்கு வருள்வாய்
தங்க மலைக்கு நிகர்தோ கையின்மேரா !
......................ா நந்து தரித்த கரனார்
அம்பல நிர்த்த மிடு வோ—ரிடமேசேர்
.....................வாள் செந்திருவுக்கு நிகர்மான்
கொன்றை மலைச் சடை யினள்—தருபாலா !
.....................பைங்கிளி நற்குற மினள்
வங்கண முற்ற கணவா !—எனையாளாய் !

667. ..........ன் களமதனில லறிட்டு வீழிட—வடன்மாயோன்
.........எரிதிகிரி கொளு மத்தனுருட—மருகோனே !
..........ளொரு குறவர்மட மகளைக் கல்யாணம-திடுவோனே !
..........வரத ! சிகியின் மலைக்குகா! இனி—எனையாளாய் !

668. மயிலாகிய வாகன மீதினில்
வருவாய்! அடி யேன்முன மேவெகு—நலமாவே
குயிலாகிய மாமொழி யாளுயர்
கொடியாகிய நூலிடை யாள்குற—மகள்வாகா !
அயிலாகிய வாயுத மேகையில்
அழகாயெடு பாணிய னே!செக—மிகுதேவே !
ஒயிலா!சிகி மாமலை நாயக !
உமைபாலக னே!க்ருபை [..........]—உதவாயோ !

669. கோகில நிகர்த்த மொழியாள்
கூர்விழி படைத்த குறமான்—அணைதோளா !
மாகிளி நிகர்த்த வுமையாள்
வாழ்வுள வுமைப்பெ ணுமையாள்—தனையேசேர்

---

666, 667 : இப்பாட்டுக்கள் இருந்த ஏடு முரிந்த பகுதி தெரியவில்லை.

668. [ ] இங்கு 'யேயினி' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

வாகிகல் சடைப்ப ரமனர்
மால்மிகு குகக்கு மரனே!—எனையாளாய்!
யோகியர்கள் பத்தர் குருவே!
ஓர்சிகி மலைக்கு எரசே!—கணநாதா!

670. மாகன கக்கிரிமேல் வாழ்வுப டைத்தரனர்—தமையேசேர்
கோகன கத்திருவாம் கூர்விழி உற்றமினள்—உமைபாலா!
தாகமி குத்திடவே தானடி யர்க்கருள்வாய்!—குகநாதா!
சேகர முற்றிடுமா சீர்கள்ப டைத்தசிகா—மலைநாதா!

671. எதிர்வரு சூர னுவி யிடறிய வீர னன—வடிவேலா! [ராய்!
கதிமிகு தோகை யான கனமுள வாக னு!என்—இடம்வா
நதியுனும் வாய னன சகமகிழ் மாய னைசை—மருகோனே!
நதிவலை நேம நாட! நகுசிகி மேரில் வாழும்—முருகோனே!

672. கோகன கத்திருவே தானும்நி கர்த்திடுவாள்
கூர்விழி யுற்றமினள்—நலமேசேர்
தாகமி குத்திடவே வேடுவர் பெற்றவளே
தான்மரு விப்புணர்வாய்!—எனையாளாய்!
யாகம திற்றெகையே நூறுவ ளர்த்திடுவோன்
ஆசைம கட்குமுனள்—மணவாளா!
சேகர முற்றிடுசீர் கானமி குத்திடுமா
சேர்சிகி நற்கிரிமேல்—வளர்தேவே!

673. விச்சைமிகு மயனு ருக்குமிகு குருவே!
வித்தைதனை யருள்வாய்!—குகநாதா!
செச்சையணி புயனே! பத்தர்பணி சரணு!
சித்ரமிகு மயிலா!—எனையாளாய்!
கொச்சைமிகு குறமா னுக்குமண மிடுவாய்!
கொத்துமல ரணிவாய்!—அமரேசா!
பச்சைநிற வுடலா ருக்குமரு கையனே!
பற்பமின்மன் சிகிமா—மலையாளா!

674. மலையத் துவசனரு மாமகள்
மயிலைப் பொருவுமுயர் சாயலின்—மடமானள்
சிலையைப் பொருதுவலை மாநுதல்
திருநற் கயிலையர னுருமை—தருபாலா!

---

670. 'படைத்தஅரனர்' என்பது 'படைத்தரனர்' என அகரங் குறைந்தது.

672. நூறுயாகம் வளர்த்தவன்: மகவான்: இந்திரன். சேகரம் - முடி. மா - விலங்கு.

மலையைப் பகிரவெறி வேலவ!
மகிமைச் சிகியின் மலை மீதினில்—வளர்கோனே!
கொலையிட் டசுரனுடல் கீறிய
குக!அச் சுதன்மெய்மரு கா!இனும்—அருளாயோ?

675. மத்தக முலையி னாளை விற்கிணை நுதலி னாளை
மச்சநல் விழியி னாளை—அழகேசேர்
கொத்தணி குழலி னாளை நற்குல மகளி னாளை
குத்துறு முலையின் மீது—புணர்தோளா!
சித்தச னருமை யான மைத்துன! வரமி நாளில்
சித்தமுள் மகிழ நாத!—அருள்வாயே!
பத்தர்கள் பணியும் வேல! அற்புத மயிலின் வாக!
புற்பமி னுறைசி காவின்—மலையாளா!

676. கரும்புநிகர் மொழியாள் குறம்பயிலு மிடருள்
கனங்குழையள் குறமான்—புணர்தோளா!
குரும்பைநிகர் முலையாள் சிறந்ததிரு உமையாள்
குடங்கையெனும் விழியாள்—உமைமானுள்
விரும்புகயி லையில்வாழ் நடங்கள்பயி லரனர்
விடங்களுணு மிடருர்—தருபாலா!
சுரும்புமிசை பயில்சீர் மிகுந்தநிழல் வனமார்
துலங்குசிகி மலைமேல்—வளர்வேளே!

677. கண்டிப் பதிக்க ரசனே!
கங்கைச்'சடைப்ப ரமனுர்—தருபாலா!
மண்டிச் செயிர்த்து வருசூர்
மங்கச் செயித்த வயிலா!—எனையாளாய்!
விண்டிக் குமொத்த விடமே
விஞ்சிப் பறக்கு மயில்வா—கன! வேளே!
வண்டிற் கிசைத்த வனமார்
மஞ்சுற் றநற்சி கியின்மேல்—வளர்நாதா!

678. கோகன கத்திருவே தானணை யச்சுதனுர்
கூர்பக ழிச்சிலையார்—நலமேசேர்
நாகம தைப்பெல்மா வேயெடு மற்புயனுர்
ராவண னைக்கொலுவோர்—மருகோனே!
தார்கமி குத்திடவே வேடர்கு லக்கொடியாள்
தானணை வித்தகனே!—எனையாளாய்!
சேகர முற்றசிகா மேரினி னித்தியம்வாழ்
சேவக! நற்சிகிமா—மயிலாளா!

679. அரவு நெளிபட புடவி யசைவுற
அழகு சிறைவிரி—மயிலாளா!
குரம துபயிலும் வனம தனில்வளர்
குறவர் மடமகள்—புணர்தோளா!
பரவு மடியவர் குடிகள் வளரிட
பரவி னுடனருள்—புரிநாதா!
விரைவி னுடனென்முன் வருவை குருபர!
விமல! சிகிமலை—முருகோனே!

680. நச்சணி மிடறுர் பொற்கயி லையினுர்
நத்தணி கரனு—ரிடமேசேர்
கச்சணி முலையாள் பொற்புயர் வடிவாள்
கட்டழ குமையாள்—தருபாலா!
மச்சமென் விழியாள் நற்குற மடமான்
மைக்குழல் மடவாள்—புணர்தோளா!
பச்சம துடனே இப்பமுன் வருவாய்!
பற்பமி னுறைதோ—கையின்மேரா!

681. சரச ரஞ்சித மிலகு வஞ்சியர்
சரண மென்றடி—தொழுமானுள்
குரம திங்கித மொடுப யின்றிடு
குறம டந்தையை—அணைதோளா!
அரவு செஞ்சுடர் முடிந டுங்கிட
அடிந டந்திடு—மயிலாளா!
பரவு மன்பர்கள் வழிவ ருங்குக!
பரம! தென்சிகி—மலையாளா!

682. குக! சர வணனே! அடிபர விடுவோர்
குலநல முறவே—அருள்வோனே!
மகமொரு சதமே புரிபவர் மருகா!
மயில்தனில் வருவாய்!—அமரேசா!
அகமகிழ் வுறவே யடியன்முன் வருவாய்!
அசுரர்க ளுடனே—அடுவோனே!
இகல்புரி அயிலா யுதமணி கரனே!
எழின்மிகு சிகிமா—மலையாளா!

679. குரம் - ஒலி. குறம் என்ற பொருளிலும் வழங்குகிறுர் (681). வளரிட - வளருற.

683. மாலைத ரித்தவனே! நீயெனை ரட்சியையா!
மாமயி லிற்றினமே—வருவாயே!
சேலைமி குத்திடுகூர் பார்வைவி ழிக்குறமான்
சீரணை யிற்புணர்வாய்!—எனையாளாய்!
வேலையெ திர்த்திடுசூர் மார்கிழி யச்செய்குவாய்!
மேன்மைப டைத்திடுவாய்!—குகநாதா!
காலையு தித்திடுமா சூர்யன்மி குத்தொளிசேர்
காமிகு நற்சிகிமா—மலையாளா!

684. வென்றிதர வேயசுரன் ரெண்டுபட வேசெருவில்
வெம்புமுர மீதிலயில்—தொடுவீரா!
துன்றுமதி தாதகிகொள் செஞ்சடையி னீசருயர்
துங்கமிகு மேரிலரன்—இடமேசேர்
மன்றுமிகு தேவியுமை பங்கயமென் மாதுவுமை
மங்கைகவு மாரியுமை—புதல்வோனே!
அன்றுஇமை யோரெவரும் இன்பமுற வேயருள்செய்
அந்தமிகு தோகைமலை—முருகோனே!

685. பிறையைநிக ரெயிறுன் ப்ரபலமிகு மசுரோன்
—உடல்கூறாய்—விடுவேலா!
குறையும்நுணு கிடையாள் குவியுமிரு முலையாள்
—குறமானுள்—புணர்தோளா!
சிறையின்வளர் பவளே சிறையையக லிடவே
—செய்மாயோன்—மருகோனே!
மறைகள்பயில் சரணு! வரத!சிகி மலையா!
—[......]—அருளாயோ?

686. கஞ்ச மலரில்வளர் நாத னுருயர்
செந்த மிழினின்மகிழ் மேவும் நாயகர்
கண்டு பரவஅரி தான வேணியர்—நலமேசேர்
மஞ்சு நிறமுலவு மேனி நாயகர்
சங்கை யணியுமிரு பாணி நாயகர்
வம்பு மலரிலகு பாத மேபணி—அரனர்பால்

---

685. [......] இங்கு 'மயிலாளா!' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

686. செந்தமிழினில் மகிழ் மேவும் நாயகர்: பிரமன்? 'செங்கை கலை மின்மகிழ் மேவும் நாவகர்' என இருப்பின் பொருந்தும். தஞ்சிறொடு = ஆதரவுடன்.

தஞ்சி னெடுவளரு மாது நாயகி
சந்தி ரனைநிகரும் சீர்கொள் மாமுக
தங்க வரையைநிகர் மார்பி னுள்உமை—தருபாலா!
வஞ்சி குறவர்மகள் மேவும் வேலவ!
அன்பி னுடன்மயிலில் ஏறி வா! குக!
மங்குல் படிசிகியின் மேரி லேவளர்—குகநாதா!

687. சரவணப் பொய்கை தனிலுதி நாயக!
தமிழெனக் கைய! இனியருள் வாய்!குக!—அமரேசா!
திரவிடப் பைய ரவையணி வேணியர்
திகழ்மிகத் துய்ய விதழியை யேயணி—அரனுர்பால்
விரைமலர்த் தைய லெனுமுமை நாயகி
விளைகுகத் தொய்யில் முலைமற மானணை—யிருதோளா!
திரைகடற் செய்ய வரிதவழ் கோடுள
திகழ்சிகிக் கைய! எனையினி தாவருள்—புரிவாயே!

688. வேலைத் தரித்த கரதல! வேளே! [யாளாய்!
மேன்மைக் குறப்பெ ணணையிரு தோளா!—எனை
சோலைக் கிளிக்கு நிகர்மொழி யாளே
கூனப் பிறைப்பொன் னுதலுமை யாளே—தருபாலா!
மாலைப் புயத்தி னுயர்குக நாதா!
வாசக் கடப்ப மலர்புனை நாதா!—அமரேசா!
ஆலைக் கருப்பை நிகர்மொழி யாளே
ஆசைச் சிகிக்கிரி யின்வளர் கோனே!—வருவாயே!

689. பச்சைமயில் வாகன! பற்பமகள் மேவுமால்—மருகோனே!
செச்சைமலர் சேர்புயா! சித்தியருள் கூர்மையா—கியவேலா!
நச்சையுணும் நாதனர் நட்புமிகு தேவியார்-தருபாலா!
[யோனே!
விச்சையருள் நாதனே! விர்த்திபெறு தோகைமா—மலை

690. கடம்பம லர்ப்புயனே! சிகண்டிம லைக்கரசே!
கனிந்தக னிக்கனிவாய்—அமரேசா!
நடம்பயில் நற்சிகிமேல் வருந்தடி யற்குமுன்வா!
நலந்திகழ் வித்தகனே!—எனையாளாய்!

---

687. திர விடப்பை அரவு = நிலைத்த நஞ்சையும் படத்தையும் உடைய பாம்பு. உமை நாயகி விளைகுக! = உமையவள் பெற்ற குகனே!

திடம்பயில் மற்புயனும் கனங்கொளு நற்றிறல்சூர்
சிதைந்திட விட்டிடுவேல்—அணிவீரா!
குடங்கொள்த னத்தினலாள் குரம்பயில் நற்குறமான்
குளிர்ந்தவ னத்திலனுள்—அணைதோளா!

691\. சூரனுட மார்புவிரு கூறுபட [வேழுனம்
தேர்மிகு வேலையே—வியவீரா]
பாரமுலை வேடன்மகள் மேவுபுய! நீபமணி
பாவினம தேஅருள்செய்—குகநாதா!
கோரமிகு தாடகையின் ஆவியது ஓடிடமுன்
கூர்மைமிகு பாணமிடும்—அரிமாயோன்
சீரமரு மால்மருக! தோகைமலை மீதில்வளர்
தேவ! மயில் மீதில்வரும்—அமரேசா!

692\. சிகர கிரியெனமி குந்த மாமுலை
திகிரி தனைநிகரு யர்ந்த தோளினள்—தடமேசேர்
மகர நிகர்குழைய டர்ந்த பார்வையள்
மறவர் குலமதனில் வந்த நாயகி—புணர்தோளா!
பகர உயருகிர வுஞ்ச மீதினில்
பதிய மலர்களணி குந்த மேவிய—குகநாதா!
சகர வனைபுவிகள் அன்ப ரேபணி
சரவ ணபவ!சிகி குன்றை மாமலை—முருகோனே!

693\. காவி னுற்றிடு வேட நாயகி
காதல் முக்கிய மாக வேபுணர்—இருதோளா!
ஆவி பட்டிட மாவின் மார்பது
வீழ விட்டிடு மாலை சூடிய—கதிர்வேலா!
பூவின் வித்தகி யாளை மாலொடு
போக முற்றிடு மாய னுருட—மருகோனே!
வாவி நற்புவி சூழ்சி காமலை
வாழ்வு பெற்றிடு நாய கா!இனம்—எனையாளாய்!

694\. அரவின்முடி கிடுகிடென மலைகள்முடி படபடென
அதிரநட மிடுமயிலில்—வருவாயே!
பரவுமடி யவர்கள்குடி மிடிதவிர அருள்புரிவை!
பருவமதி யிதழியணி—முடியார்பால்

---

690\. நலாள் : நல்லாள் அனுள் : அன்னுள் - அன்னை.

691\. [ ] விளங்கவில்லை. "வேழுனைய, தேர்மிகுநல் வேலைவிடு—சய வீரா!" எனப் படிக்கலாம்.

692\. திகிரி = மூங்கில்.

உரவுமிக நிதம்வளரும் இமயமலை அரசனருள்
உமைகவுரி திரிபுரைசொல்—புதல்வோனே
குரமதுசொல் மறவருட குலமகளை மருவுபுய!
குருமணிகொள் சிகிமலையில்—வருதேவே!

695. நவரத்தின முடிவைத்திடு
நலமுற்றிடு புனிதர்க்கொரு—மருகோனே!
பவளத்தினை நிகரொத்திதழ்
பணியைத்தரி குறநற்கொடி—புணர்தோளா!
தவமுக்கிய மொடுபெற்றவர்
சகமுற்றவர் பணியைப்புரி—இருதாளா!
கவனத்தொடு மடியர்க்கருள்
கனநற்சிகி மலையிற்றினம்—வளர்வோனே!

696. வல்லுற் றிடுமிரு பூமுலை
வன்னக் கமலம தாகிய—முகமானள்
அல்லுற் றிடுகுழல் நாயகி
அன்னத் தினைநிக ராகிய—நடையானள்
வில்லுற் றிடுநுதல் வேடுவர்
மின்னைப் புணர்புய வா! இனி—எனையாளாய்!
சொல்லுற் றிடுவரு கோடுயர்
தொல்லைச் சிகிமலை மீதினில்—வளர்தேவே!

697. சசிதேவியாள் புணர்தோழனர் தருநாயனர்—மடமானள்
நிசியானதோர் குழலாளையே நெடிதாசையா—அமர்மார்பா!
வசியானதோர் அயிலாளனே! மயிலாளனே!—எனையாளாய்!
பசியாகுதே அருள்பாடவே பதிசூழ்சிகா—மலையாளா!

698. மயில்வாகன மீதினி லேறியும்
வருவாய்! குக! நாயக னே! இனி—எனையாளாய்!
ஒயிலாள்குற நாயகி யாள்தனை
உயர்கான க மீதினி லேபுணர்—இருதோளா!
அயிலாயுத மேயணி பாணிய!
அமரோர்பணி சீர்பத னே! சர—வணவேளே!
குயிலாமொழி மாதுமை பாலக!
குகனே! சிகி மாமலை மேவிய—முருகோனே!

---

696. தொல்லை - பழமை.

697. வசி - கூர்மை.

699. வாச நீபமா மாலை மார்பனே !—அருளாயோ ?
நேச மானதோர் நேர்மை யானவே—டுவூர்மானாள்
ஆசை யாகவே ஆர்பு யாசலா !—குகநாதா !
தாசன் நேரில்வா ! சாமி தோகைமா—மலையாளா !

700. பச்சைக் கிளிப்பு ரவிமேல்—வருவோனே !
பத்மப் பதச்ச ரணமே—தருவாயே !
செச்சைப் புயக்கு மரனே !—எனையாளாய் !
சித்ரக் கடப்ப மலரே—அணிதோளா !
கச்சைத் தனக்கு றமினாள்—புணர்தோளா !
கற்புப் படைத்தி டுமுமா—பதிபாலா !
இச்சைக் கிசைப்ப டியிநாள்—அருளாயோ ?
எட்டுக் கிரிக்கு யர்சிகா—மலையோனே !

701. பஞ்ச வனக்கிளியாள்
பைம்பொ னிறத்தினளே—உமையாளே
கஞ்ச மலர்க்கணினாள்
கங்கை தனைப்புணர்வார்—தருபாலா !
மஞ்ச மிசைத்தினமே
வம்பு முலைக்குறமா—னொடுசேர்வாய் !
தஞ்ச மெனக்கருள்வாய் !
சங்க ரநற்சிகிமேல்—வளர்வோனே !

702. வேலை யெடுத்து எதிரேதான் [னே!
வீறு செலுத்தி வருசூரோன்—உடல்மீதே—விடுவோ
பாலை நிகர்த்த மதியேசேர்
பார்வ தியுற்ற அரனார்பால்—நிதமேதான்—வளர்மானாள்
சேலை பழித்த விழியாளே
தேனை பழித்த மொழியாளே—உமையாளே—தருபாலா!
வாலை குறத்தி கணவோனே !
வாழ்வை படைத்த சிகிமேர்மேல்—வருநாதா ! [....]

703. வாசக்க டப்பமலர் மாலைக்கி சைத்த புய !—அருளாயோ !
நேசக்கு றத்திதனை நீள்பொறப்ப தற்குமரு—வியதோளா !
நாசப்ப டப்பொருது நாமக்க திர்க்கொலைகொ—ளயிலாளா !
தேசத்தர் பத்தர்பணி சீருற்ற நற்சிகியின்—மலையோனே !

---

702. பின்னிரண்டடிகளிற் சந்தம் நோக்கி வலிமிகவில்லை. [...] ஒரு சீர் இல்லை. 'குகவேளே !' எனச் சேர்க்கலாம்.

704. வாதிட்டிடு சூருடல் [......]
கூர்சத்தியை யேயணி பாணிய!
வாசக்கம லாசன னருட—குருநாதா!
சூதுற்றிடு பூமுலை யாள்குயில்
போல்சொற்சொ லும்மாமொழி யாளுயர்
தோகைக்குற நாயகி யாள்மரு—வியதோளா!
தாதிட்டிடு சேயிதழ் சேர்மலர்
நீபத்தினை யேபுணர் சீர்புய!
தாவித்திரி பூமயி லாகிய—பரியாளா!
வாதிட்டிடு சோலைகள் சூழ்சிகி
மேலிற்றினம் வாழ்பவ னே!இன
மாசற்றிடு சீர்தமிழ் மாநிதி—தருவாயே!

705. மயில்வாகன மீதினி லேறிமுன்
வருவாய்!க்ருபை யாவையு மேயினி—உதவாயோ?
குயிலாகிய மாமொழி யாளுயர்
குறநாயகி மீதினி லேவெகு—மயலாளா!
அயிலாயுத மேகொடு சூருடன்
அடலேபுரி மாசெய மேமிகு—குகநாதா!
ஒயிலா!கன மாமதி யேதவழ்
உயர்தோகையின் மாமலை மேவிய—செகநாதா!

706. மருமி குத்திடு நீப மாலிகை
மலர்த ரித்திடு மேரு போலவும்—இருதோளா!
திரும கட்கொரு நாத னருயர்
சிலைவ ளைத்திடு மாய னர்தரு—குறளானோர்
கருநி றத்திடு மேனி யார்வெகு
கதைபி டித்திடு பாணி யாருட—மருகோனே!
பரும யிற்பரி வாக னு!அருள்
பழைய மெய்ச்சிகி மேரில் வாழ்வுறு—குமரேசா!

707. கொங்கை யுமையவளே கொண்டல் படிகுழலாள்-நலமேசேர்
செங்கை யணிவளையாள் செங்க மலவதன—ளிடமேசேர்
சங்கை யணியரனர் தந்த புதல்வ!இநாள்—அருளாயோ?
மங்கை மலர்மகள்சேர் மைந்து மிகுசிகிமா—மலையோனே!

---

704. [......] ஒரு சீர் விடப்பட்டுள்ளது. 'கீறிடு' எனச் சேர்த்துப் படிக்கலாம். பாணிய! = கையா!

708. கோட்டை நிகர்முலையாள்
கூர்க்கும் விழியுமையா—ளிடமேசேர்
வீட்டை யருளரனர்
மேற்கொள் மதியணிவோர்—அருள்பாலா!
நாட்டை மிகுசிகியாம்
நாட்டு மலைவளர்வோய்!—அருளாயோ?
ஆட்டை யுளமயிலா!
ஆர்த்த கடல்வணனர்—மருகோனே!

709. வாச மிகுந்த நீப மாலை யணிந்த மார்ப!—அருளாயோ?
தேசர் மிகுந்து நாளும் தேவர் பணிந்து தாழு—முருகோனே!
ஈச ரிடங்கு லாவும் ஏர்கொள் மடந்தை மாது—தருபாலா!
ஆச கல்கின்ற தோகை மாமலைவந்த தேவ!—எனையாளாய்!

710. ஆடு தோகைமயி லேறி வேகமொடு
ஆவ லாகவென்முன்—வருவாயே!
கோடு லாவிவளர் நீப மாலைபுனை
கோல மானவிரு—புயநாதா!
வீடு சூரனுடல் கீறி வீழவொரு
வாது தான்முனிடு—செயவீரா!
மாடு தோறுமுயர் சோலை சூழ்சிகியில்
வாக தாகவளர்—குமரேசா!

711. தந்தி யிலகுமுக கொம்பு புரைவதனர்
தங்கை கரமுளவர்—துணைவேலா!
அந்தி மதியையணி கொன்றை மலரையணி
அந்த மிகுபரமர்—குருநாதா!
வந்தி யெனவும்வரும் அன்று அடர்கள்புரி
வம்பு செயுமசுரை—வெலும்வீரா!
கொந்து மலர்கள்மிகு மஞ்சு தவழடவி
கொண்ட சிகிமலையில்—வளர்நாதா!

712. அலைதனிற் றுயிலு மாயனர்
அசுரரைப் பொருதும் நாயனர்—மருகோனே!
சிலைதனக் குவமை போலவே
திகணுதற் பொருவை வேலினள்—நலமேசேர்

---

709. ஈற்றடியின் சந்தம் சிறிது மாறியுள்ளது.

711. 'தந்தி கொம்பிலகு முகம் புரைவதனர்' என இயைக்க. தங்கு ஐகரம் உளவர். கொந்து - கொத்து.

மலைமுலைக் குறமென் கோலமார்
மறவருக் கருமை யானமான்—புணர்தோளா!
கொலைதனைப் புரியு மாவையே
கொலுநலச் சிகியின் மேரிலே—வளர்தேவே!

713. அந்தி மதியையணி சடையார்பால்
அன்பு மிகுமுமைமி னருள்பாலா!—எனையாளாய்!
கொந்தி லகுமணமென் மலர்நீபா!
கொண்டல் நிறமுடைய செயமாயோன்—மருகோனே!
தந்தி யெனவமுத மொழியாளே
தங்க மலைமுலைமி னுயர்வேடோர்—குலமானுள்
இந்த்ர விதழிமரு வியதோளா!
என்றும் வளர்சிகியின் மலைமேலே—வருதூயா!

714. வேலை யெடுத்து எதிர்த்த சூருடல்
மீதுவிடுத்த பெலத்த மாசெய—மிகுவீரா!
காலை யுதித்த கதிர்க்கு நேரொளி
கானு நலத்த உடற்பொன் மேரினில்—வளர்வோர்பால்
சேலைநிகர்த்த விழிப்பெண் மாதுமை
தேவி தனக்கு மனத்தி லாசைகொள்—புதல்வோனே!
பாலை நிகர்த்த நிறத்த பான்மதி
பாயு முயர்த்த சிகிப்பொன் மேரினில்—வருதேவே!

715. படையெ டுத்துவரு மசுரன்மார்
பகிர வெற்றியயி லதனையே—விடுசூரா!
நடைப யிற்றிவரு சிறைகொண்மா
நலமி குத்தமயி லதனிலே—வருவீரா!
இடைபி டிக்குள்வளர் குறமினுள்
இசைய மெத்தைதனி லணைகுகா!—குமரேசா!
விடைப டைத்தவர னருளையா!
வெளியில் மெத்தவுயர் சிகியின்மா—மலைநாதா!

716. கோபநிக ரிதழார் தாமரையின் விழியார்
[கூர்மைமிகு வடிவார்—மயிலாளா!]
சாபமதை முனமே வீரமிக வுடனே
தான்வளைவு செயுமால்—மருகோனே!

---

713. தந்தி - யாழ் நரம்பு; கருவியாகு பெயராய் இசையை உணர்த்தியது. இந்திர இதழி - இந்திர கோபப் பூச்சிபோல் சிவந்த இதழையுடையவள்.

716. [ ] பொருள் விளங்கவில்லை, 'கோலமிகு மடவார் - மயலாளா!' என இருக்கலாம்.

தீபநிற வுடலார் மாமதிகொள் சடையார்
தேவியுமை தருபா—லகவேளே!
நீபமலர் புனைவாய்! நாயன்முனம் வருவாய்!
தேவ! சிகி மலைமேல்—வருநாதா!

717. தேனை நிகர்த்த மொழியாள் மேரை யிணைத்த முலையாள்
சீதை தனக்கு மலர்சூ—டியமாயோன்
மானை யடர்த்த கணையார் ராவ ணனுக்கு எதிரே
மாயை யெதிர்த்து அடலே—புரிமாயோன்
கானை யெரித்த விறலார் பூவை நிறத்த வுடலார்
காதல் மிகுத்த மருகா!—குகநாதா!
வானை யுயர்த்த முடியே சேர நிரைத்த சிகியா
மாம லையிற்குள் வளர்வாய்!—எனையாளாய்!

718. கோகில விசையாள் பூவுள கணையான்
கோதக னலமா—ரனைதானே
தாகம துடனே சீரொடு பெறுவோன்
தார்புனை யுயர்மால்—மருகோனே!
பாகினி மொழியாள் வேடுவர் குலமான்
பாரமு லையின்மே—லமர்தோளா!
தேகம தனிலே சூழ்துயர் விடவே
சீர்சிகி மலையா!—அருளாயோ?

719. பணமி லங்கும ராவின் றலை
படபடென் றிட வேநின் றெரு—நடமாடு—மயிலாளா!
தணமி லங்கிய வானம்புலி
தனைய ணிந்திடு தேவன் தரு-வடிவான—புதல்வோனே!
குணமி லங்கிய மாதின்புறு
குறவர் தங்குல மேவந்திடு—மடமானை—அணைதோளா!
மணமி லங்கிய சீர்தண்டலை
மருவு குன்றையி லேவந்திடு - கணநாதா!—எனையாளாய்!

720. நடனமிட் டிடுமயிலா! நலமிகுத் திடுகுமரா!—எனையாளாய்!
கடமிகுத் திடுமுகனர் கருதுமெச் சியதுணைவா!—குகநாதா!
வடமதிற் றுயில்விறலார் மகிழுமற் புதமுருகா!—முருகேசா!
இடமிகுத் திடுசிகியாம் எழில்மிகுத் திடுமலையா!-அருளாயோ?

---

717. கான் : காண்டாவனம்.
718. கோது அகல் நல மாரனை.
719. தணம் : தண்ணம் - குளிர்ச்சி.

721. வஞ்ச மாகிய வேட நாயகி
வம்பு சேர்முலை மீதி லேமரு—வியதோளா!
வஞ்சி யாகிய நூலு போலிடை
மங்கை யாளுமை பாக மேவளர்—பரமானோர்
கொஞ்ச வான்மதி சூடும் வேணியர்
கொன்றை மாலையர் ஈச ஞர்தரு—புதல்வோனே!
மஞ்சு லாவிய சோலை யேவெகு
மண்டு தோகையின் மேரி லேவளர்—குகநாதா!

722. சந்தமிகு முலையாள் மங்குனிகர் குழலாள்
சங்கைநிகர் குழையாள்—உமைமானுள்
அந்தமிகு குயில்போல் வந்தவிசை மொழியாள்
அம்பையெதிர் விழியா—ளிடமேசேர்
கந்தமிகு மலரே கொண்டதொரு சடையார்
கங்கையணி முடியார்—அருள்பாலா!
நந்தமிகு வயல்சூழ் தண்டலைகள் நிரைசேர்
நந்துசிகி மலையா!—எனையாளாய்!

723. பைய ரவினிற் றுயின்மாயவன்
பண்ணு லவுகுழற் கனிவாயினன்—மருகோனே!
செய்ய திகழ்கடப் பமென்மாலைய!
செங்நெல் விளைவயற் பொழில்சூழ்சிகி—மலையாளா!
துய்ய நிறைமதிச் சடைவேணியர்
துன்னு திரிபுரைக் கவுமாரிசொல்—புதல்வோனே!
வைய மதுதுதிக் கழுனயக!
வன்ன மிகுமயிற் பரியாய்! இனி—எனையாளாய்!

724. சோதி மதிதனை வேணி யேயணி
தூய விதழ்மலர் தாத கீபுனை—அரனுர்பால்
மாதி லுயர்தெய்வ மாது மாமணி
மாலை யணிதிரு மார்பி னுைத—வியபாலா!
போதில் வளர்பவர் வேத ஞர்பெற
போத முளபொரு ளோது நாயக!—எனையாளாய்!
வாதி லருபெல மாவை யேவெனு
வாய்நல் சிகிமலை மீதி லேவளர்—குகநாதா!

---

721. நந்தம் - சங்கு.

723. குழல் உலவு பண் கனிவாயினர் - குழலில்வரும் பண்கனியும் வாயினர் (திருமால்).

725. வில்லை வளைத்திடுவோர் பொன்னி தனைப்புணர்வோர்
வெண்ணெ யுண ற்கனியாய்—ஒளிர்வாயார்
கல்லை மிதித்துமுனள் பெண்ணெ னவைத்திடுவோர்
கண்ணர் மகிழ்ச்சியதாம்—மருகோனே!
வல்ல மையுற்றிடுமா மல்லி டதிர்த்திடவே
வன்ன வயிற்கொடுபோர்—செயும்வீரா!
சொல்ல யனற்புதனுர் வன்ன மிருத்திடவே
துன்னு சிகிக்கிரிமேல்—வருதூயா!

726. மின்ன லாகிய இடையாள்
விண்ணு லாவிய மதிபோல்—முகமானுள்
கன்ன லாகிய மொழியாள்
கன்னி வேடுவர் குலமா—தணைதோளா!
முன்ன மாமயில் முருகா!
வன்ன வேல்கொடு அசுரோ—டெதிர்வீரா!
அன்ன மேறுவர் குருவே!
அன்னை யாதரி சிகிமா—மலையாளா!

727. கஞ்ச மாமல ரினில்வாழ்வோன்
கண்டு மேபணி செயுமீச—ரிடமேசேர்
நஞ்ச மார்நெடு விழியாளே
நங்கை மாதுமை புதல்வோனே!—எனையாளாய்!
வஞ்ச மாவரு மசுரோன்மேல்
மண்ட வேகதி ரயிலேதான்—விடுவோனே!
தஞ்சம் வேறிலை யருளாயோ?
தங்க மேருயர் சிகிமேரே—வருவேளே!

728. திருமாது விளையாடு மணிமார்ப! அடலே
செயும்ராவ ணனையேவெல்—நலமாயோன்
கருமேக மெனுமேனி வளைமேவு கரனுர்
கனமாயன் அதிகாசை—மருகோனே!
பொருசூரன் உடல்கீற உருவேலை விடுவாய்!
குறமாது தனைமேவு—மிருதோளா!
தருசூழு மலகோர்கள் பணிதோகை மலையா!
தமியேன்முன் மயில்மீது—வருவாயே!

729. குன்றை வளைத்தவிலார்
கொங்க லருற்றபொன்மா—லிகையாளார்
கொன்றை தரித்திடுவோர்
கொண்ட வுமைக்கொடியார்—தருபாலா!

மன்ற மிகுத்திடுபூ
மண்டு கடப்பமென்மா—லிகைமார்பா!
குன்றை மலைக்கரசே!
குஞ்ச ரியைப்புணர்வாய்!—எனையாளாய்!

730. கங்கை தனைச்சடை மீதி லேயணி
கஞ்ச மலர்ப்பிர மாவின் மாமுடி—புனைவோர்பால்
மங்கை வலிக்கொடி யான தோரிடை
மஞ்சு நிகர்த்திடு கேச மானுமை—தருபாலா!
கொங்கை குடத்திணை வேட நாயகி
கொஞ்சி யணைத்திடு சீர்பு யாசல!—முருகோனே!
பங்க யமுற்றவள் நாளு மேயுறை
பண்பு மிகுத்திடு தோகை மாமலை—வளர்கோனே!

731. குஞ்சரி மருவு தோளா!
கொங்கல ரணியு மார்பா!—எனையாளாய்!
பஞ்சவ ருடைச காவாம்
பண்புகொ ளரிநன் மாயோன்—மருகோனே!
கஞ்சமென் மலரின் வாழ்வோர்
கண்டிட வரிய ரான—அவர்பாலா!
மஞ்சது படிகொள் சோலை
மண்டிய சிகியின் மேரில்—வருவாயே!

732. கந்த மலரணியு மார்பா!
கங்கை யணிசடையர் பாலே—வளர்மானுள்
அந்த மிகுகவுரி நீலி
அம்பு விழியுமைகௌ மாரி—தருபாலா!
சொந்த மிகுமறவர் மாது
துங்க மிகுகுறமி ஞாளை—யணைதோளா!
வந்த ருளஉதவு வேத!
மங்குல் தவழ்சிகியின் மேரில்—வருதேவே!

733. தினகர னைச்சரி யான மேனியர்
திறமிகு நற்கரி யான ஆனனர்—துணைவோனே!
தனகிரி யுற்றிடு வேட நாயகி
தனைவெகு இச்சைய தாக வேபுணர்—இருதோளா!
கனகம லைக்கர சாக வேவரு
கறையின்மி டற்றினர் ஆசை யாகிய—புதல்வோனே!
வனமிகு நற்சிகி மேரி லேநிதம்
வளர்சண்மு கக்குரு நாத னே! இனி—எனையாளாய்!

734. வாசமி குத்த நீப மாலைத ரித்த மார்ப!—இருதோளா!
தேசசு உற்ற தேகர் சீர்கள் படைத்த தேவர்—பணிதாளா!
நாசமி கச்செய் சூரை நாடி எதிர்த்து வேலை—விடுசூரா!
ஈசர்சொல் புத்ர! நாளும் ஏர்கள் படைத்த தோகை-மலையாளா

735. சீதைக்கி சைந்த நாதர்
சீருற்ற பைந்து ழாயர்—மருகோனே!
வாதைக்குள் நொந்து போக
மாவைக்கொல் குந்த பாணி!—எனையாளாய்!
தாதைக்கு முந்து வேதம்
தான்மிக்க அன்ப தாக—உரைவாயா!
கோதைக்கு றஞ்சொல் மாது
கோரிச்சை கொண்ட தோகை—மலையாளா!

736. பாலாகிய வான்மதி சூடிய
பாராகிய நீள்சடை வேணிய—ரொருமானுள்
சேலாகிய கூர்விழி யாளுமை
தேனுர்குழல் நாயகி யார்தரு—புதல்வோனே!
வேலாகிய ஆயுத மேகொடு
வீறுய்வரு சூருடல் கீறிய—குகநாதா!
மாலாகிய வேடமி ளுள்புணர்
வாகா!சிகி மேரினி லேவளர்—முருகோனே!

737. திரும ருவிய புயனுர் திரள்து ளவணி உரனுர்—எதிராவே
[னே!
வரும வுணர்கள் குலமே மடிவு றகணை விடுவோர்—மருகோ
தருநி ழலினி லரசாள் சதகி ருதுகள் புரிவோர்—மருகோனே!
மருவ ரைமகள் புதல்வா! மயின்மி குசிகி மலையா!-எனையாளாய்!

738. நடன மிட்டிடு மயிலி லுற்றிடு
நலமி குத்திடு—குமரோனே!
அடமி குத்திடு அடல்செ லுத்திய
அசுர ரைப்பொரு—செயவீரா!
வடம திற்றுயில் அரிம கிழ்ச்சிகொள்
மகிமை பெற்றிடு—மருகோனே!
குடமு லைக்குற மகள்பு ணர்ச்சிகொள்
குக!சி கிக்கிரி—மலையாளா!

---

736. 'பாரமாகிய' என்பது 'பாராகிய' என நின்றது.

739. கோகுல மதிலே தான்முனம் வளர்வோர்
கூர்திகி ரியினர்—நலமேசேர்
பாகுயர் மொழியாள் வாரிச மலராள்
பாவையை யணைவோர்—மருகோனே!
மாகொலை புரிவோன் போர்புரி அசுரோன்
மார்பினில் அயிலே—விடுசூரா!
வாகுள மயில்மேல் ஏறிமுன் வருவாய்!
வாழ்சிகி மலையா!—எனையாளாய்!

740. கயிலைக் கிரியில் மேவு கருணைக் கடலி னுதர்—அலைமீதே
துயிலைப் புரியு மாயன் துரிசிற் றினமு நாடி—அடிகாணர்
மயிலைப் பொருது சாயல் மடவிக் குமரி நாதர்—தருபாலா!
ஒயி லுற் றிடுமுலாச! உயர்நற் சிகியின் வாச!—எனையாளாய்!

741. எதிர்த்து வந்திடு சூருட லாவியை
இறக்க வுந்திற லாகிய கூரயில்—விடுசூரா!
கதித்து நின்றிடு ஆடிய மாமயில்
கனத்த நன்றுள வாகன மேல்வரு—குகநாதா!
மதிக்குள் ரெண்டிசை பாதியை நேர்நுதல்
மகிழ்ச்சி மிஞ்சிய வேடமி னுளொடு—புணர்தோளா!
துதிக்கு மம்புய மாகிய சீர்பத!
சுமக்கும் அங்கத மேல்வளர் தோகையின்—மலைநாதா!

742. கஞ்ச மலரின் மாது கங்குல் நிகரு கேச—மடமானுள்
நஞ்சை யிலகு பார்வை நங்கை மருவு மாயன்—மருகோனே!
[வோனே!
கொஞ்ச மதிகொள் வேணி கொண்ட கயிலை நாதர்—புதல்
வஞ்ச அசுர னேடு மண்ட அடல்செய் தோகை—மலையாளா!

743. வால மதியையணி வாகு திகழ்சடைய—ரிடமேசேர்
நீல மிகுகுழலி நீண்மை மிகுவிழியின்—உமைபாலா!
ஆல மிகுவிழியின் ஆசை யுடகுறமின்—புணர்தோளா!
கோல மிகுமயில! கூர்மை மிகுமயில!—சிகியாளா!

---

740. துரிசு - துன்பம்; குற்றமுமாம்.

741. அங்கதம் - பாம்பு. (ஆதிசேடன்) ஆதிசேடன் பூமியைச் சுமக்கின்றனன். என்பது புராணக் கொள்கை. பூமியில் தோகைமலை யிருப்பதால் இவ்வாறு கூறினர்.

744. நிருத்த மிடுமயிலா ! நினைக்கு மடியன்முனே—வருவாயே !
கருத்த முகில்நிகரா கனத்த குழல்மறமான்—அணைதோளா!
வருத்து மசுரனையே மடிக்க அயில்விடுவாய் !—குகநாதா !
[ வோனே !]
திருத்து முடிகொளுமோர் சிகிக்கிரியில் அயிலா !—[விடு

745. சீதை தனக்கு மாலை சீரொ டுவிச்சை யாக—புனைமாயோன்
வாதை படுத்து சூரர் வாழ்வு குலைத்த நாதன்—மருகோனே !
கோதை குறத்தி மேவு கோல மிகுத்த மார்ப !—எனையாளாய் !
தீதை யகற்று சோலை சேர்சி கியிற்கு லாவு—குகநாதா !

746. விடத்தை மிகுந்து முனமே
மிடற்றில் அணிந்த அரனு—ரிடமேசேர்
குடத்தில் மிகுந்த முலையாள்
குறைத்த நலங்கொள் மதிநேர்—நுதலாளே
வடத்தில் மிகுந்த வயிறுள்
மகிழ்ச்சி நிறைந்த உமையாள்—தருபாலா !
நடத்தில் மிகுந்த மயிலா !
நலத்த சிகண்டி மலையா !—அருளாயே !

747. மிஞ்சிய நடன மயிலாள்
மின்புரை யிடையி னுமையாள்—இடமேசேர்
நஞ்சுகொள் மிடறின் அரனுர்
நன்றணி கயிலை மலையார்— தருபாலா !
கொஞ்சிய மொழியின் நலமார்
கொங்கைகள் உடைய குறமான்—அணைதோளா !
மஞ்சுகொள் சிகியின் புயவா !
வந்தென்முன் கிருபை புரிவாய் !—குகநாதா !

748. கொஞ்சிய மொழியி னளை அம்புகொள் விழியி னளை
கொண்டல்கொள் குழலி னளை—நலமேசேர்
ரஞ்சித நயமி னளை வம்புகொள் குழலி னளை
நண்பொடு குறமி னளை—அணைதோளா !
வஞ்சியி னிடையி னளை சந்திர வதன மானை
மங்கள உமையி னளை—அமர்தோளார்
நஞ்சிவர் மிடறி னுதர் அன்பொடும் அருள்செய் பால !
நன்றணி சிகியின் மேரில்—வருதேவே !

---

744. [ ] பொருள் விளங்கவில்லை. 'முருகோனே !' என்றிருக்கலாம்.
747. 'சிகியின்மலையா' என்றிருப்பின் அழகாகும்.

749. கொண்டைமயில் வாகன!
கொம்பின்மத யானையார்—துணைவேளே!
கெண்டைநிகர் பார்வையாள்
கெங்கையுட பாலகா!—எனையாளாய்!
தொண்டையெனும் வாயினுள்
துங்கமிகு வேடமான்—அணைதோளா!
பண்டைமறை தேடுவாய்!
பண்புமிகு தோகைமா—மலையாளா!

750. செங்குமுத மான வாயினள்
தெண்டிரையை நேரு பார்வையாள்—நலமேசேர்
மங்குல்நிக ரான கேசமான்
வஞ்சியிடை வேட மாதினுள்—புணர்தோளா!
பொங்குபெல மான சூரனுர்
பொன்றுபட வேலை யேவியே—அடுவீரா!
கொங்குலவு நீப மாலையா!
கொண்டல்படி தோகை மேரிலே—வளர்வோனே!

751. சங்கத்தினி லேயொரு பாவல!
தந்திக்கொரு மாதுணை வா!சிறை—மயிலாளா!
தங்கக்கிரி மீதினி லேவளர்
சந்த்ரச்சடை நாயக னுருட—புதல்வோனே!
பங்கப்பழ னுர்புவி யேபுகழ்
பண்புற்றிடு நேமநன் னுடுள—குகநாதா!
பொங்குச்சிகி மேரினி லேவளர்
பொன்பைத்துழை மாயவ னுருட—மருகோனே!

752. சூதுபோல் வருமிரு முலையினுள்
தோகைபோல் வருமொரு உவமையாள்
—குறமானுள்—புணர்தோளா!
கோதுதா னுலவெதி ரசுரன்மார்
கூறதா வயில்தனை விடுகுகா!
—முருகேசா!—எனையாளாய்!

---

751. பழனுர்: பழனமார். பங்கட்பழனம் - சேறு நிறைந்த கழனி. 'துழாய்'. என்பது 'துழை' என நின்றது.

[பேர்துமண நளின மலரதனி லேவாழ்
பூவைநித மருவுமரி மகிழுமா
—மருகோனே—அமரேசா !
ஈதுசிறுமை யெனவருள் புரிகுவாய்
ஈசர்மலையை நிகர்சிகி மலையிலே
—வருநாதா !—குருநாதா]

753. நீபத்தினை மார்பினி லேயணி
நேசக்குற நாயகி மேவிய—இருதோளா !
கோபத்தினி லேயெதிர் சூருடல்
கூருற்றிடு கூரயி லாயுத !—எனையாளாய் !
சோபத்தினை நீதவிர் வாய்! குக!
தோகைச்சிகி வாகன மேல்வரு—வடிவேலா !
மாபத்தர்க ளேபணி சீருடன்
வாழ்வுற்றிடு தோகையின் மேரினில்—வருதேவே !

754. தந்தி முகத்தர் துணைவனே !
சங்க மதிற்சொல் புலவனே !—முருகோனே !
அந்தி மதிக்கொள் சடையினர்
அன்பு மிகுத்த உமையினள்—நலமேசேர்
நந்தின் மிகுத்த மிடறினள்
நங்கை தனக்கு அருமையாய்—வருபாலா !
செந்தி மலைக்கு அரசனே !
செந்தி ருவுற்றசிகியின்மா—மலையோனே !

755. [வாச முற்றிடு நீபமா மாலையை
தரிமார்பனே—செயவேலா !]
நாச முற்றிடு சூர னுருட
ுடிமுக்கிய மாக வேயடல்—புரிவீரா !

---

752. [ ] இப்பகுதி முன்னிரண்டடிபோன்ற சந்தத்திலுமில்லை ; சரியாகவு மில்லை.

"போதுதா மரைமல ரதனில்வாழ்
பூவையாள் மருவரி மகிழுமா—மருகோனே !—அமரேசா !
ஈதுபோ தெனவருள் புரிகுவாய் !
ஈசர்மேர் நிகர்சிகி மலையிலே—வருநாதா !—குருநாதா !"

எனப் படிக்கலாம்.

753. தவிர்வாய் - தவிர்ப்பாய்.

755. [ ] சீர்கள் குறைவு.

"வாச முற்றிடு நீப மாகிய-மாலை யைத்தரி மார்ப னே! செய-வடிவேலா!"

எனப் படிக்கலாம்.

ஈச ருக்கொரு ஆசை யாகிய
ஏர்ப டைத்திடு தேவி மாதுமை—தருபாலா!
தேசர் பத்தர்கள் நாளு மேபணி
சீர்ப டைத்திடு தோகை மாமலை—வளர்வோனே!

756. வானிற்பொலி மாமதி சூடிய
வாசச்சடை யீசுர னருட—இடமேசேர்
தேனிற்பொலி கூர்மொழி யாளுமை
சீருற்றிடு பாலக னே! இனி—எனையாளாய்!
மானிற்பொலி கூர்விழி யாள்குற
மாதைப்புணர் மாபுய னே! அடி—யவர்நேயா!
கானிற்பொலி கேகய வாகன!
கார்மொய்த்திடு தோகையின் மாமலை—வளர்வோனே!

757. மழையைப் பொருத நிறத்தார்
மருதைப் பொருத பதத்தார்—முனமேதான்
அழையைத் திருடு கரத்தார்
அரவிற்றுயிலு முரத்தார்—மருகோனே!
குழையைப் பொருந யனத்தாள்
குறவர்க் கொடியை அணைத்தே—புணர்தோளா!
பிழையற் றிடுபொன் மலர்க்கா
ப்ரபலச் சிகியின் மலைக்கே—வருதேவே!

758. நடன மிட்டிடு மயிலி லேறிய
நளிர்மி குத்திடு மிதழி மாலிகை—புணர்தோளா!
வடவ ரைக்கிரி யரச ராகிய
மதன னைப்பொரு விழியி னயகர்—தருபாலா!
குடமி ணைத்திடு முலையி னளுயர்
குறவர் நற்குல மடமி னளொடு—புணர்தோளா!
திடவ ரைக்குல நிகர்சி காமலை
திருமி குத்திட நிதமு மேவளர்—குகநாதா!

759. செந்திரு மாது மேவு புயனுர்
செங்கையில் வாளி நேமி [......]—புனைவோரே
பங்கய மான பார்வை அரியார்
பண்புள மேக மான உடலார்—மருகோனே!

---

757. அழை: அளை என்பதன் விகாரம்.

759. [ ] ஒரு சீர் இல்லை 'வளையே' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

சங்கரி பூக மான மிடறுள்
தந்திரி நேர்மை யான மொழியாள்—குறமானுள்
கொங்கையை மேவி நாளும் அணைவோய்!
கொண்டல்கள் தாவு தோகை மலைமேல்-வளர்வோனே!

760. மதியை யணிசடை அரனுர்
மகிழும் உமையவள் புதல்வா!—எனையாளாய்!
கதிகொள் சிறைமயில் தனிலே
கருணை யுடனென்முன் வருவாய்!—வருவாயே!
விதியி னுடசெவி தனிலே
விரைவி னெருபொருள் சொலுசீர்!—கனிவாயா!
அதிக மதுரித தமிழ்தா!
அருமை யொடுசிகி மலைமேல்—வருதூயா!

761. நூலைநிக ரிடையார் நூபுரம தணிசீர்—இருதாளா!
வேலைநிகர் விழியாள் வீணைநிகர் மொழியாள்—நலமேசேர்
ஓலையணி குழையாள் ஓதிமமென் னடையாள்—குறமானுள்
மாலையொடு புணர்வாய்! வாழ்வுமிகு சிகிமா—மலையாளா!

762. மதுரித மிகுதமிழ் மதுரையில் வளர்நா—வல!வேளே!
புதுமலர் கமழ்மிகு விரையம ரிதழ்நீ—பமென்மார்பா!
கதுமென அடியன்முன் கனகமின் மயில்மேல்—வருவாயே!
பதுமமின் உறையுயர் பழையசி கியின்மா—மலையாளா!

763. கச்சைப் புனைந்தவிரு தனத்தினுள்
கற்பில் சிறந்தவுமை மடப்பெணுள்—இடமேசேர்
நச்சைப் புனைந்தகறை மிடற்றினுர்
நர்த்தத் [தைமுனம்புரி] பதத்தினுர்—அருள்பாலா!
செச்சைப் புனைந்தவனு புயத்தினய்!
சித்ரச் சிகண்டியுயர் கிரிக்குளே—வளர்தேவே!
இச்சைக் கிசைந்தபடி அருட்செய்வாய்!
இட்டத் திருந்தகுற மயிற்குமால்—புரிவேளே!

764. குலத்தினுயர் மடமான் குறத்திதனை மணமே—புரிவோனே!
பெலத்தில்மிகு மசுரோன் பிழைப்பகல அயிலே—வியவீரா!
[னே!
செலத்தினுறை மலராள் திருப்பொலியும் உரனுர்—மருகோ
தலத்திலடி யவர்சூழ் தருப்பொலிசி கியின்மா—மலையாளா!

---

763. [ ] சந்தம் பொருந்தவில்லை. "தைநன்றுபுரி" என்று படிக்கலாம்.

765. சேதை புனையும் நீப சீரின் மலரின் மாலை—புனைதோளா!
வாதை புரியும் வீர மாவை யெதிர தாக—அடுசூரா!
கோதை குறமி னாளை கோல மணமு னாளை—புனைவோனே!
சீதை மருக னை தேவ! சிகியின் மேரில்—வளர்வோனே!

766. மற்பு யப்ப லத்த னை சூரன் மார்பினில்
வைக்கெ திர்க்கொள் சத்தி யேவு நாத னே! அருள்-உத
சிற்ப ரத்தை யுற்ற மோன ஞான தேவர்முன் [வாயோ?
சிற்ற டிப்ப தத்தை நாளு நாளு மேபணி—புரிவாரே
அற்பு தத்தி ருப்பெ ணாளை மேவு மாயவன்
அப்பி னிற்று யிற்செய் மாயன் ஆசை யாகிய—மரு
பற்ப லக்கி ரிக்குள் மேன்மை யான வானுயர் [கோனே!
பத்தி ரச்சி னைக்குள் சோலை சூழ்சி காமலை-வளர்தேவே!

767. அரவி னிற்றுயில் வனச முற்றகண்
அலைக டற்றனை முனம டைத்திடு—சயமாயோன்
கரவி யற்றிய திருட ரற்புத
கமல முற்றவள் புணர்ப வர்க்குறு—மருகோனே!
புரவி நற்சிறை மயிலி லுற்றவ!
பொருவ யிற்படை தரிம லர்க்கர—தலவேளே!
குரவி ருக்குமின் புய! கடப்பணி
குக! சி கிக்கிரி தனில்வ ளர்ச்சிகொள்—முருகோனே!

768. கோகில மொழியினள் கோமள வுருவினள்—நலமேசேர்
வாகுள கவுரியாள் மாதுமை புதல்வனே!—ஏனையாளாய்!
மோகினி யெனுமினள் மோடிகொள் குறமினள்—புணர்
[தோளா!
ஆகினர் துணைவனே! ஆளிகொள் சிகியின்மா-மலையாளா!

769. அரவுமுடி படபடென அதிரநட மிடுமயிலின்—வருவோனே!
உரவுமலர் தனிலிலகு குதலைமொழி கமலைபுணர்—நெடு
[மாயோன்
பரவுமிகு திகிரிஅணி பசியநிற உடலின்அரி—மருகோனே!
கரியநிற முகில்கள்தவழ் எழிலுலவு சிகியின் மலை-வருதேவே!

---

765. சேதை - சிவப்பு நிறத்தை. சேது - சிவப்பு.

768. ஆகினர் - ஆகு வாகனமுடைய விநாயகர்.

770. கச்சுவரி யுமையாள் பற்பமலர் வதனள்
கட்டழகி யிமையா—சலமானள்
நச்சிலகு மிடறுர் நிர்த்தமிடு கழலார்
நத்துலவு கரனர்—அருள்பாலா!
வச்ரமணி கரன்ர் நற்சசியை யணேவோர்
வர்த்தனேகொள் தருவோர்—மருகோனே!
நொச்சிலகு புயனே! வித்தைதனே யருள்வாய்!
நொச்சியுயர் சிகிமா—மலேயாளா!

771. சிறையில கியமயில் வாகனர்
திடமில கியஉயர் சூரன்மார்—பதிலேதான்
குறையுல விடஅயில் வேலேயே
[கொடுமையுடன்விடு] செய சூரனே!—எனேயாளாய்!
மறையுல வியஅய னருமே
[மகிமையுடனவர்] அறி யாதநல்—லரனரே
கறையில கியமிட றுருணர்
கமழ்சிகி மலேயதில் வாழும்நா—யகவேளே!

772. அயிலே யுற்றிடு பாணியாய்! உயர்க டப்பணி! மார்பினய்!
அசுர ரைக்குல நாசமே—புரிநாதா!
மயிலே முக்கிய மாகவே நடைப யிற்றிய வீரனே!
மதுரி தத்தமிழ் பாடவே—அருளாயே!
குயிலே மெத்தவு நாணவே அமிர்த மத்தையு நாணவே
குரல்ப யிற்றிய வேடமான்—அமர்தோளா!
கயிலே நற்கிரி போலவே வளமை யுற்றிடு தோகையாம்
கதிர்சி கிக்கிரி மீதிலே—வருதேவே!

773. தந்திரிநிகர் மொழியினள்
சங்கரியுமை கவுரியா—ளிடமேசேர்
அந்தியின்மதி யணிவர்மா
அண்டர்கள்பணி புரிவரே—தருபாலா!
வந்தினியருள் புரிகுவாய்!
மங்களமிகு சிகியின்மா—மலேயாளா!
செந்திருமகிழ் மகிமையார்
தெண்டிரைதுயில் அரியினர்—மருகோனே!

770. சசி - இந்திராணி. நொச்சி: ஒரு மலர்; மதில்.

771. [ ] இக்குறியிலுள்ளவை சந்தப் பொருத்தமில்லாதவை. முறையே, "கொடிதுற விடு" "மகிமைய தனே" எனப் படிக்கலாம்.

774. மாலை யுதித்த சசிபோல்
வாவி மலர்த்த மரைபோல்—முகமானள்
சேலை யிணைத்த விழியாள்
தேவி குறத்தி தனையே—புணர்தோளா!
காலை யுதித்த வெயில்போல்
காவு நிறத்த பரமே—சுரர்பாலா!
வேலை யெதிர்த்த அசுரோன்
மீது தொடுத்த சிகிமா—மலையாளா!

775. பைந்தரு வுற்ற நாதர் அண்டர்கள் நித்ய மாக
பண்பொடு [அற்ப தாக]—ரிடமேசேர்
இந்திர னுக்கு ஆசை தந்தம கட்கு மேவி
இன்பமி குக்க வேசெய்—வடிவேளே!
செந்தமிழ் வித்தை நீசெய் வஞ்சசு ரர்க்கு வேலை
சென் றிட விட்ட கோல—மயிலாளா!
சுந்தர முற்ற தோகை யங்கிரி யிற்கு லாவு
தொங்கல்த ரித்த மார்ப!—எனையாளாய்!

776. வேலைத் தரித்தவனே! சூரைப் பகைத்திடுவாய்!
மேன்மைக் குகக்குமரா!—எனையாளாய்!
சேலைத் தரித்திடுகூர் பார்வைக் குறப்பெண்மினள்
சீதப் பொன்மெத்தையின்மே—லணைதோளா!
மாலைக் கதிர்ச்சடையே சூடிக் கொள்வித்தகனர்
வாழ்வுற் றநற்கொடியாள்—தருபாலா!
மாலைப் புயத்தவனே! தோகைச் சிகிப்பரியா!
வாசச் சிகிக்கிரிமேல்—வருதேவே!

777. காரை நிகர்த்த குழலினள்
காதல் மிகுத்த மனதினள்—குறமானள்
மேரை நிகர்த்த முலையினள்
வேலை மிகுத்த விழியினள்—புணர்தோளா!
பாரை யருத்து வடிவினர்
பாவை பொறிப்பெண் அணைவர்மா—மருகேசா!
சீரை மிகுத்த பொழில்களே
சேர்சி கிநற்கி ரியதன்மேல்—வளர்வோனே!

---

775. [ ] இது பொருள் விளங்கவில்லை.

777. பாரையருத்த வடிவு - உலகமுண்ட உருவம்.

778. சீத மதியணி வேணியார்
சீர்கள் மிகுகயி லாசனு—ரிடமேசேர்
காத லுமைகவு மாரியாள்
கார்கொள் குழலுமை பாலகா!—எனையாளாய்!
போத மிகுமுனி வோர்களே
பூவின் மிசையவ னூர்முனே—பணிதாளா!
ஆத ரவுசெய்கு வாயையா!
ஆழி வளைசிகி மேரிலே—வளர்தேவே!

779. வஞ்சக ரவுணர்கள் குலம ழியவே
வம்புயர் தருவுல கர்கள்வ ளரவே
மிஞ்சிய முடிகிரி பிளவு படவே
மின்கலை மகிழ்புல வர்கள் வளரவே
வெஞ்சமர் புரியயி லதனை விடுவாய்!
விஞ்சைய ரமரர்க ளடியர் நிதமே
அஞ்சல்கள் புரிசிகி மலையி னிதமே
அன்பொடு வருபவ! கிருபை யருள்வாய்!

780. மாலை யுதித்திடு மதிபோலு மாமை முகத்திடு முகமானுள்
பாலை நிகர்த்திடு மொழியாளே பாவை குறக்கொடி புணர்
[தோளா!
வேலை யெதிர்த்திடு பெலசூரோன் மீது தொடுத்திடு குகநாதா!
மேலை யுயர்த்திடு முடியேசேர் மேன்மை மிகுத்திடு சிகிமேரா!

781. நீப மாலையணி மார்பனே! நேர தாகவரு சூரன்மேல்
கோப மாகஅயி லேவுவாய்! கோ திலாதசிகி வாகனு!
தாப மோடஅருள் நீசெய்வாய்! தாழ்வி லாததமிழ் நீசெய்வாய்!
தீப மாகளி கோடுசேர் சீர்சி காமலையின் வாசனே!

782. எதிர்த்து வந்திடு சூருடல் கீறிட
எடுத்து மிஞ்சிய கூரயி லேவிய—செயவீரா!
கதிர்த்து நின்றுவிண் மேல்நட மாடிய
கனத்த கொண்டையின் மாமயி லேறிய—குகநாதா!
மதிக்கி சைந்திடு ஆனன மாகிய
மலர்ப்பெ ணிந்திரை யாள்புணர் மாலுட—மருகோனே!
விதிக்கு மந்திர மேபுரி நாயக!
மிகுத்த தண்டலை சூழ்சிகி யாமலை—வளர்தேவே!

783. கஞ்ச மலரில்வளர் நாதனர்
கண்ட ரியஅரிய ஆதியார்—[.......]
[நஞ்ச மிலகியநன் மிடறினர்]
நந்த மிலகியகை லாசனர்—அருள்பாலா!
வஞ்ச னையின்முன்வரு சூரன்மார்
[பதி அண்டஅயி லேவியநாதா!]—எனையாளாய்!
தஞ்ச மிலைஅருளை நீசெய்வாய்!
தண்ட லைகளுலவு தோகைமா—மலைதேவே!

784. சூரன் மீதிலே தோண வேலையே—வியசூரா!
[மாரன் நாசமாய் மாய வோர்கணே—விழியாமல்
சூரர் நாளையே தாயே யாகவே—சொனும்வாயா!]
சீர தாகவே சீர்கி சிகாபொன்மா—மலையோனே!

785. வீறுப டைத்திடுசூர் மீதுப டப்பொருபோர்—எதிராக
கூறுப டைத்திடுவேல் கோபமி குக்கமுனுள்—எயுவோனே!
ஆறுமு கத்தவனே! மாதுமை பெற்றவனே!—எனையாளாய்!
சீறுப ணிப்புயனர் சேய்! சிகி நற்கிரிமேல்—வருதேவே!

786. கோல மயிலில் வரு நாதனே! கூர்மை மிகுவயிலி னயுதா!
நீல மிகுகுழலி வேடுவோர் நேரி ழையைமருவு நாதனே!
ஞால மடியவர்கள் வானுளோர் நார தர்கள்முனிவர் வாசனே!
பால விழியர்தரு பாலனே! பார்மி குசிகியின் நாதனே!

787. நடனமிட் டிடுமயிலாள்
நளினமுற் றிடுமகளார்—புணர்தோளரர்
படமிகுத் திடுஅரவே
படபடத் திடநடமா—டியதாளார்
திடமிகுத் திடுமசுரோன்
சிரசறுத் திடுவிறலார்—மருகோனே!
[அடியர்நித் தம்பணிவோர்]
அருமையுற் றிடுசிகிமா—மலையாளா!

---

783. [ ] தனிச் சீரில்லை. 'பரமேசர்' எனச் சேர்க்கலாம்.
[ ] இப்பகுதி சந்தம் சரியில்லை. முறையே,
'நஞ்ச மிலகுமிட றீசனர்' எனவும்,
'மண்ட அயிலதனை ஏவுவாய்' எனவும் படிக்கலாம்.

784. [ ] இப்பகுதிகள் விளங்கவில்லை.

786. பால விழி - நெற்றிக் கண்.

787. [ ] சந்தம் பொருத்தமில்லை, 'அடியருற் றடிபணிவோர்' எனப் படிக்கலாம்.

788. சித்தி விளைத்திடுவோர் செக்கர் நிறத்திடுவோர்-அடியார்பால்
முத்தி கொடுத்திடுவோர் முத்தர் கலைச்சசியே-அணிவோரே
அத்தி யுரித்திடுவோர் அற்பு மிகுத்திடுவோர்—தருபாலா!
சத்தி பிடித்திடுவாய்! சற்கு ரு! நற்சிகிமா—மலையாளா!

789. கங்கை யைத்தலை யிற்ற ரித்தவர்
கந்த ரக்கறை யுற்ற வற்புதர்—மணமேசேர்
பங்க யர்ச்சனை யைச்செய் வித்தகர்
பண்ப யிற்றும றைச்சொல் பொறப்வர்—இருவோரே
செங்கை யிற்றெழு மத்தர் புத்திர!
செந்த மிழ்ப்புல மைக்கு முக்கிய—மிகுதேவே!
மங்கை கற்புயர் நற்கு றக்கொடி
மன்றல் பெற்றவ! பொற்சி கிக்கிரி—மலையாளா!

790. சிறையில கியமயிலா! தினமடி யன்முன்வருவாய்!
மறையில கியமுனிவோர் மகிழ்வொடு பணிசரணு!
பிறையில கியமுடியார் ப்ரியமுட னருள்புதல்வா!
இறையில கியமுடிசேர் எழில்சிகி மலைமுருகா!

791. நஞ்சத்தை யுண்ட பார்வையள்
[நன் றுநற்கின்ற மாமிகு]—மணமேசேர்
கஞ்சத்தை வென்ற வானன
கங்குற்கி சைந்த சீர்குழல்—நலமேசேர்
வஞ்சத்தை யுண்ட மாமண
வஞ்சிக்கு றஞ்சொல் நாயகி—புணர்தோளா!
மஞ்சத்தை மிஞ்சு சோலைகள்
மண்டுற்ற குன்றை மாமலை—வளர்வாசா!

792. கருப்புச்சிலை மாமத னணிநுதல்
[கணிலக் கொடியொடு முளறிக் கொடியெறி]-அரனுரை
பொருப்புக்கெதி ராகிய இருதன
[போகிச்சிடு] மாதுமை யவள்தரு—புதல்வோனே!

---

789. பங்கய அர்ச்சனையைச் செய்வித்தகர்: திருமால்.

பங்கயர்ச்சனை: அகரம் தொக்கது. மறைச்சொல் பொறப்வர்: பிரமன்.

791. [ ] விளங்கவில்லை. 'நன்றுற்ற குன்ற மேவுறு' எனப் படிக்கலாம்.

792. [ ] இப்பகுதிகளை "கணுற்றக்கொடி தாகிய கனலெரி—அரனுரை" எனவும், 'பொறைச்சிக்கிடு' எனவும் படிக்கலாம்,

அருப்புக்கெதி ரர்கிய நிரைநகை
அரைப்பொற்றக டாகிய குறமகள்—புணர்தோளா!
மருப்புக்கரி மாதுணை படைகுக!
வளர்ச்சிச்கிகி மேரினில் வருகுரு—பரவேளே!

793. கோகுல மேய்த்த மாயன் கூர்மைகொள் நேர்த்தி யான
—சரமாயோன்—மருகோனே!
பாகுள யோக்யமான பாலிலும் யோக்யமான
—மொழியாள்மா—நலமேசேர்
வாகுயர் காட்டில் வாழும் மாதைமு ணர்த்த மார்ப!
—எனையாளாய்!—முருகோனே!
சோகுட னேற்க வா!முன் சூர்பொரு சீர்த்தி வேல!
—சிகியாமா—மலையாளா!

794. போர்புரி சூர ணர்த மார்பிரு கூற தாக
பூண்மிகு வேலை யேவு—செயவீரா!
கார்புரி மேக மான சீருள கேச பார
காசுள பார்வை பூவின்—வதனனே
வார்புரி மார்பி னள்நல் வேடுவர் மாது மேவு
மாமண மாலை சூடு—மிருதோளா!
சீர்புரி சோலை சூழும் கோடுயர் தோகை யான
தேசுறு மேரில் வாழு—முருகோனே!

795. கறையணி மிடற்றினர் தொடையணி புயத்தினர்
கயிலையச லத்தினர்—அளியேசேர்
பிறையணி சிரத்தினர் திரிபுர மெரித்தசீர்
பிணையணி கரத்தினர்—இடமேசேர்
நறையணி மலர்க்குநேர் ஒளிமிகு முகத்தினள்
நலமிகு உமைப்பெணள்—தருபாலா!
முறையணி சிறக்கவே முடிசிகி மலைக்குகா!
முளரிகள் பதத்திலாள்—வடிவேலா!

796. மழையைச் சரியென வளர்ந்த கேசமான்
மலையைச் சரியெனு மிரண்டு மார்பினள்—நலமேசேர்
கழையைச் சரியெனு மிலங்கு தோளினள்
கமழற் புதமென மலர்ந்த வானனள்—குறமானள்
குழையைப் புணர்பல மிரண்டு மாபுயா!
குதலைக் கிசைமொழி சிறந்த நாயகா!—எனையாளாய்!
அழையைத் திருடிய கரங்கொள் மாயனர்
அருமைத் திருமரு க!அன்ப னனருள்—சிகியாளா!

---

793. சோகு - ஒளி.    796. அழை: அளை (விகாரம்).

797. கஞ்சம லரின்வளர் வேத நாயகர்
கண்டு பணியரிய தான நாயகர்—இடமேசேர்
நஞ்ச மிலகுவிழி மாதி னுளுயர்
நங்கை திரிபுரையு மாமி னள்தர—வருபாலா!
பஞ்சவர் களுடைய தூத னுகிய
பங்கய மலரினள் நாத னருட—மருகோனே!
அஞ்சவ ருமசுர நாச னே! அருள்
அண்டர்கள் பணிசிகி மேரி லேவளர்—குகநாதா!

798. திருவி ளங்கிய மார்பினர்
செயம்வி ளங்கிய மாயனர்—அவுணோர்பால்
செருவி ளங்கிய வாழியார்
திரையி லன்பொடு [துயில்வர்மா]—மருகோனே!
கருவி ளங்கிய மேகமே
கதிகொள் பைங்குழல் வேடமான்—புணர்தோளா!
பொருவி ளங்கிய வேலனே!
புகழ்சி கண்டியின் மேரிலே—வருதேவே!

799. கடமத யானை முகனர்
கருணைய தான துணைவா!—அமரேசா!
திடமுள சூர னுடனே
திகழுள வேலை விடுவாய்!—செயவீரா!
வடவரை மீது வளர்வார்
மகிமைகொ ளீசர் துணைவா!—குகநாதா!
நடமிடு தோகை மயிலா!
நலமிகு தோகை மலையா!—எனையாளாய்!

800. புவனரட் சகனே! பொருதுசத் தியினய்!—புகழ்வேளே!
கவனநற் சிறைசேர் கதிகொள்பொற் சிகிமேல்-வருவோனே!
எவனமெய்க் குறமான் இனியவற் புதனே!—எனையாளாய்!
சிவனருட் புதல்வா! சிகியின்நற் கிரியாய்!—முருகோனே!

801. கங்கை யணிந்த சடையாளர்
கங்கு னிறைந்த மிடறுள—ரிடமேசேர்
மங்கை யிலங்கு வுமைமாது
மஞ்சு நிறைந்த குழலாள்சொல்—புதல்வோனே!

---

798. [ ] சந்தம் மாறுகிறது. 'மேவுவார்' என இருக்கலாம்.

சங்கை யணிந்த இருபாணி
தண்டுள வங்கொள் புயமாயன்—மருகோனே!
செங்கை யிலங்கும் அயிலாள!
திங்கள் தவழ்ந்த சிகிமேரில்—வருதூயா!

802. ஓதி தனில்வரு நாதனர்
ஓகை யொடுபணி யேபுரி—இருதாளா!
வாதி லெதிர்வரு சூரனுர்
மார்பில் பிளவிட வேலையே—வியசீலா!
பாதி மதியணி வேணியார்
பாக மதிலுறை தேவியாள்—தருபாலா!
போதி லுயர்நிப மாலிகை
பூணு புய! சிகி மேரில்வாழ்—முருகோனே!

803. பச்சைநிற மேனி வரனுர்
பற்பமகள் மேவு புயனுர்—மருகோனே!
செச்சைபுனை சூர னுடனே
சித்ரமிகு வேலை விடுவாய்!—செயவீரா!
நச்சையணி நாத ருடனே
நட்புமிகு தேவி தருபா—லக! வேளே!
விச்சைதனை நீசெய் குவையே!
விர்த்திபெறு தோகை மலையா!—எனையாளாய்!

804. அயிலாகிய வேலை அடமாகிய சூரன்-உடல்மீதே—விடுசூரா!
குயிலாகிய நாத குறநாயகி மேவு-மிருதோளா!—எனையாளாய்!
ஒயிலாஅடி யேன்முன் உயர்தோகையின்மீது-வருவோனே!—
[அமரேசா!
மயிலாகிய வாக! மணநீபமென் மாலை—புனைவோனே!—
[குகநாதா!

805. வாச மிகுத்த நீப மாலை தரித்த மார்ப!—எனையாளாய்!
தேச மதிற்கு லாவு சீரு ளபத்தர் நாளும்—பணிபாதா!
பூச னையுற்ற பாத! பூர ணவித்தை தானும்—அருளாயோ?
ஈசர் கிரிக்கு நேர்செய் ஏர்மி குபொற்சி கரநன்—மலையாளா!

806. நிருத்த மிடுமயில் வாகனு!
நிலைக்கும் வரமினி நீசெய்வாய்!—குகநாதா!
வருத்த மிடவெதிர் சூரன்மேல்
மகிழ்ச்சி யொடுஅயி லேவுவாய்!—அமரேசா!

---

804. நாத—குரலையுடைய.

கருத்த முகிலுடல் மாயனார்
கருத்தில் மகிழ்வுறு மாசையாம்—மருகோனே !
திருத்த மிகவளர் சோலைசூழ்
சிகிக்கி ரியில்வரு தேவனே !—எனையாளாய் !

807. சூர னாவி போகவே தூய வேலை யேவுவாய் !—குகநாதா !
வீர னான நாதனே ! மேன்மை யான பாடலே—அருளாயோ ?
மார னோடு போர்செய்வோர் வாழு மீசர் பாலனே !—
[அருளாயோ ?
பார மேரை மேலதாய் பாரில் வாழ்சி காநன்மா—மலையாளா !

808. மறையுற்ற வேத னார்பணி
மணியுற்ற க்ரீவ னருட—இடமேசேர்
பிறையுற்ற வேணி யாருயர்
ப்ரபலக்கயி லாய னருட—புதல்வோனே !
குறையுற்ற சீரின் மாவிடை
குறவர்க்குள் வாழ்மி னாள்புண—ரிருதோளா !
சிறையுற்ற தோகை வாகன !
சிகிநற்கி ரீயின் வாழ்வுயர்—குகநாதா !

809. சித்திதனை விளைத்து ஆடிய
சிற்சபையில் நடித்த நாடக—உயர்வானார்
விர்த்திபெறு சசிச்ச டாடவி
விட்ணுபரி நடத்து நாயகர்—தருபாலா !
பத்தியொடு பதத்தி லேபணி
பத்தனிடம் அருட்செய் வாய்! குக—குமரேசா !
முத்திதரு சிகிப்பொன் மேரினில்
முக்யமொடு வளர்ச்சி யேபுரி—செகநாதா !

810. கருணை மிகவுள நயன மிலகிய கமல மலர்வளர்—திருமானாள்
மருவு மிருபுய முகிலை நிகர்நிற மகிமை யுயரரி—மருகோனே !
பொருது அசுரனை பிளவு படஅயில் பொருது சரவண—
[பவ ! வேளே !
குருவின் மகிமைகொள் குமர! அருள்புரி குக!சி கியின்மலை—
[வருதேவே !

811. கனக மலையைநிகர் முலையினாள்
கமழு மலரையணி குழலினாள்—விடமேசேர்
பனக முடியைநிக ரரையினாள்
பணியை யணியுமொரு குறமினாள்—புணர்தோளா !

அனமெ னடைபயிலு முமையினுள்
அழகு மிகுபரமர் புதல்வனே !—எனையாளாய் !
வனச மலரினுறை திருமினுள்
மருவு சிகிமலையில் வளர்குகா !—முருகோனே !

812. மலையை யெடுத்த ராவணனுர்
மடிய வெடுத்த வாழியினுர்—மலரேசேர்
தலைவி தனக்கு நாயகனுர்
சகல வுயிர்க்கு நாயகனுர்—மருகோனே
கலையில் மிகுக்க நீயருள்வாய் !
கருணை மிகுத்த ஈசுரனே !—எனையாளாய் !
அலைக ளடித்த ஊர்வருவாய் !
அருள்செய் ! சிகிப்பொன் மேரினிலே—வருதேவே !

813. மறையாவையு மேபகர் நான்முகன்
மலர்நாயகி சேர்புய ருருட—குருவாளா !
சிறையேயழ காகிய தோகைய !
செகநாயக ! நீயெனை யாதரி !—குகநாதா !
குறையாகிய சீரிடை யாளுயர்
குறமானனை மாபுய வா ! க்ருபை—புரிவாயே !
பிறையேதவழ் கோடுக ளேவெகு
பிரகாசம தாகிய கேகய—மலையாளா !

814. சூர ருருடல் கீறவே தூய வேல்விடு பாணியா !—எனையாளாய் !
மார ருருடல் நீறதாய் மாய வேவிழி யீசனுர்—புதல்வோனே !
மேர தாகிய மார்பினுள் மேன்மை வேடமி னுளையே—
[புணர்தோளா !
ஆர மேயணி மாபுயா ! ஆனை யா ! சிகி மேரிலே—வருதேவே !

815. கங்கை யணிந்த சடையாளர்
கஞ்ச முகந்த மறையாளர்—குருநாதா !
மங்கை குறஞ்சொல் குறவோர்பெண்
மங்க லமுன்செய் குகநாத !—எனையாளாய் !
கொங்கை குலுங்க வருமாதர்
கொஞ்சு நயஞ்செய் மயலாள !—வடிவாளா !
செங்கை சிறந்த வயிலாள !
திங்கள் தவழ்ந்த சிகியான—மலையாளா !

816. கொஞ்சிய கிளிமொழியாள்
கொண்டலி னுயர்குழலாள்—குறமானுள்
வஞ்சிநல் வனமடவாள்
வம்புகொ ளிருமுலையாள்—புணர்தோளா!
பஞ்சினு மெலியடியாள்
பங்கய மலர்மடவாள்—மருகோனே!
அஞ்சிய அசுரனையே
அன்றுகொல் சிகிமலையா!—எனையாளாய்!

817. வஞ்சி நுணுகிடையாள் மங்குல் நிகர்குழலாள்—உமைமானுள்
நஞ்சின் விழிமடவாள் நங்கை புணர்புயனுர்—அருள்பாலா!
பஞ்சி னடிவனமான் பங்கில் வளர்குகனே!—எனையாளாய்!
மஞ்சு படிசிகியாய்! வந்து வரமருள்வாய்!—செகநாதா!

818. கடமத யானையின் முகமானோர்
கரமது நாலொரு திறமானோர்—மையின்மேலார்
மடமக ளாகிய அவுணோர்மான்
வலவையை மேவிய புயமானோர்—பிறைபோலே
திடமிகு கோடுள குறளானோர்
திருநுதல் மேலொரு விழியார்சோ—தர! வேளே!
தடவரை யாவினு முயர்சீர்சேர்
சகவடி யார்பணி சிகிமேரா!—எனையாளாய்!

819. பிறையைச் சூடிய சடையார்
பிணையைத் தானணி கரனுர்—இதமேசேர்
நறையைச் சூடித முயினர்
நமனைக் கால்கொடு உதைவோர்—பலமானோர்

---

818. மையின் மேலார்: மை: ஆணவமலம்; ஆணவமலத்தை அடக்கியாள் பவர்.

வல்லபையின் வரலாறு:

1. மரீசிமுனிவர் குளிக்கச் சென்றபோது குளத்தில் தாமரைமேல் இருந்த பெண் குழந்தையைக் கொண்டுவந்து வளர்த்தார். வல்லபை யென்று பெயரிட்டார். வல்லபை விநாயகரை யடையத் தவம்புரிந்தாள். விநாயகர் வேதியராக வந்து சோதித்து மணம்புரிந்து கொண்டார். (பார்க்கவ புராணம்).

2. இரணியபுரத்தை யாண்ட கேசி என்னும் அசுரனுக்கு வல்லபை மகளாகப் பிறந்திருந்தாள். விநாயகர் மணந்தார் (காஞ்சி புராணம்). இரண்டாவது வரலாற்றை யுட்கொண்டு ‘அவுணோர்மான்’ என்றார் போலும்.

கறையைத் தானுண மிடறூர்
கயிலைக் கோடினில் வருவோர்—தருபாலா!
மறையைப் பாடிய துரையே!
**மயில்நற்கோடினில்** வருவோய்!—எனையாளாய்!

820. மறவர் குலத்து மாது வடிவு மிகுத்த சூது—முலையாளே!
அறலை நிகர்த்த கேச மழகு படைத்த ரூபம்—கடமானள்
மறமிகு வெற்றி வேலின் வளமை படைத்த பார்வை—உயர்
[தேனள்
குறமகள் பக்க மேவு குக! **சிகி** யிற்கு லாவு—குருநாதா!

821. எதிரவரு ராவண னர்முடி
யிடறிவிழ பாணம தேவிடு—செயமானேர்
கதிரையொரு நேமியி னுல்மறை
கமலைவரு சீதையி னுள்புணர்—இருதோளார்
மதிகொடுமுன் நேமியை யேகடை
வனசமலர் சேர்புரி மாயவர்—மருகோனே!
விதியினிட மேகுரு வாகிய
விமல! **சிகி மேரி**னி லேவளர்—குகநாதா!

822. வஞ்ச னகிய வம்ப தேபுரி—செயசூர்மா
அஞ்ச வான்வளர் அண்டர் மேலடல்—புரிசூர்மா
நெஞ்ச மேல்விழ நின்று வேல்விடு—செயசூரா!
கஞ்ச மாதுறை கங்கு தாவிய—**சிகிமேரா**!

823. காளிமுடி மீதி லாடிய
காயமலர் போலு மேனியர்—எதிராவே
சூழவரு தான வோர்குலம்
தூளுபட ஆழி யேவிடு—செயமாயோன்
வீழணைய ராவி லேதுயில்
மேன்மைமிகு ராக வோர்மகிழ்—மருகோனே!
பாழிவிடு கோடு லாவிய
பாரில்வளர் **தோகை யாகிய**—மலையாளா!

---

821. மதிகொடுமுன் நேமியை யேகடை: நேமி - கடல். அமுதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்தபோது சந்திரன் தூணக இருந்தான்.

822. கங்கு தாவிய - (நாற்பக்க) எல்லையிலும் பரவிய.

823. காளி: காளிங்கன் என்னும் பாம்பு. 'ராகவர்' என்பது 'ராகவோர்' என நின்றது.

824. தருவி னீழலிலே [தருவாசனமேல்]—ஒயிலாவே
திருவி னேருமினுள் திரைகொள் வாரிதிமேல்—வருமானுள்
சருவு பூமுலையாள் சசியின் மேவியவோர்—மருகோனே!
பொருது கூரயிலா! பொருள்செய் **தோகையின்மா—மலை**
[யாளா!

825. பூமேவிய நான்முக ஞருயர்
பூணூலணி மார்பின ஞரனு—தினமேதான்
நாமேவிய மாமறை யார்வெகு
நாவார்கலை யாள்தனை யேபுண—ரிருதோளார்
காமேவிய சீரன வாகனர்
[காசேயர்க] ளோரரு ளேசொலு—குருநாதா!
மாமேவிய சோலைக ளேநிரை
வாழ்**தோகையின் மே**ரினி லேவரு—குகநாதா!

826. வஞ்சியை நேரிடையாள் மங்குலை நேர்குழலாள்—முகமீதே
மஞ்சிகை வேடமினுள் வம்புயர் பூமுலைமேல்—அணைதோளா!
பஞ்சினு மேல்நடையே பண்பொடு நோகிடுசீ—ருமைபாலா!
மிஞ்சிய சோலைகள்சூழ் மின்பயில் **தோகையின்மா—மலை**
[யாளா!

827. அரவினுட படமுடிக ளசையவொரு நடனமிடு-மிருதாளால்
பரவரிய திசைதிசைகள் படபடென விசிறிவிடு—சிறையாலே
உரகமதை நெளிவுபடஉயரிலகுகொடுமுடிபொன்-மயிலாளா!
பரமசிவ னருள்புதல்வ! பதுமமக ளுறைசி**கியின்-மலை**யாளா!

828. எதிராக வருசூரன் இனிதான வுயிர்போக—விடுவேலா!
மதிசூடி நடமாடி வளர்தாத கியின்வேணி—யருள்பாலா!
பதியோர்க ளடியார்கள் பணிதோகை மயிலேறி-வருதேவே!
கதியேசெய் அமரேச! கயிலாச நிகர்**தோகை—மலை**யாளா!

829. கோகில நிகர்மொழியாள் கூரிய அயில்விழியாள்-குறமானுள்
வாகிகல் மூலைதனிலே மாலொடுபுணர்புயவா!—எனையாளாய்!
பாகிகல் தமிழ்தருவாய்! பாவையளுமைபதியார்-அருள்பாலா!
**மாகினி யணிகரனே!** வாழ்வுயர் **சிகிமலை**மேல்—வளர்தேவே!

---

824. [ ] இது 'தகுபொ ருசனமேல்' என்றிருக்கலாம். இந்திராணி பாற் கடலில் பிறந்தவள். சருவு - கொஞ்சிக் குலாவுகிற. சசி - இந்திராணி.

825. [ ] விளங்கவில்லை.

826. **மஞ்சிகை :** காதணி.

829. மாகினி : அருணகிரியார் (833).

830. கங்கையை யணிசடையார்
கங்குலை நிகர்மிடறுர்—நலமேசேர்
சங்கியை யிருகரனுர்
சங்கம தனிலொருநா—வலரானேர்
பங்கய மலர்குறையாய்
பண்பொடு விழிசொரிவோர்—பணிதாளார்
மங்கைய ளுமைபதியார்
மங்கல மொடுதருதோ—கையின்மேரா !

831. மாதர் யாவருமே மாலை யாகிடவே
செயுவோ னே ! அற்—புதமானுள்
காத லாயணைவோர் காரை நேருடலார்
செயமா யோன்புத்—திரனுனேன்
சீத மேவியபூ சீரை பாணியன்மேல்
வருவா னேன்மைத்—துனவேளே !
நாத னே ! எனையாள் நாவ லா ! அருள்வாய் !
சிகியா மாநற்—கிரியாளா !

832. கேக யப்பரீ நடத்து சேவக !
கீர னைச்சிறை விலக்கு நாயக !—எனையாளாய் !
மாக யத்துமு னுதித்த சீதர
மாய னுக்குறு மகிழ்ச்சி யாகிய—மருகேசா !
சாக ரத்தினை யெடுத்துண் மாமுனி
தாம ரைக்குறு வளர்ச்சி யானவர்—குருநாதா !
மாக முற்றுயர் சிகிப்பொன் மேரினில்
வாச முற்றிடு கடப்ப மாலிகை—புனைமார்பா !

833. கஞ்சத் திலுறை வேதனர்
கங்குற் கறைகி ரீபனர்—நலமேசேர்
கொஞ்சக் குறுகி ஞானியார்
கொண்டற் புமிக ஞானமே—சொலும்வாயா !
மஞ்சக் குறமி னளையே
வம்புற் றதன மீதிலே—புணர்தோளா !
அஞ்சொற் கிளிகொள் பாணியா !
அன்பற் கருள்செய் தோகைமா—மலையாளா !

---

831. சீர் ஐ சீதம் மேவியபூ : அழகிய ஐந்து தண்ணிய மலர்க்கணை.

833. ‘ஞானியார் குறுகிக் கொஞ்ச ஞானம் சொலும் வாயா !’ என்க. ஞானியார் : சிவபெருமான். மஞ்சம்-மஞ்சத்தில். அஞ்சொற்கிளி : அருணகிரியார். (829)

834. கடம்ப மாலை யணிபுயனே!
கரந்தை சூடு சடையரனு—ரிடமேசேர்
குடங்கள் போலு மிருமுலையாள்
குடங்கை போலு மிருவிழியாள்—வனமேசேர்
நடஞ்செய் தோகை மயிலுமையாள்
நலங்கொள் பால! வரமருள்வாய்!—குகநாதா!
வடங்கொள் பூமு லையள்குறமான்
மணந்த தோளா! சிகிமலையா!—அருளாயோ?

835. வாச மிகுத்த நீப மாலை தரித்த மார்ப!—எனையாளாய்!
நேச மிகுத்த மாது நீல நிறத்து வேடர்—மகள்தோளா!
நாச மிகுக்க மாவை நாடி யெதிர்த்து வேலை—விடுசூரா!
ஈசர் மகிழ்ச்சி யான ஏர்மி குபுத்ர! தோகை—மலையாளா!

836. கோகில முற்ற வோசை கோலமி குத்த கேசம்-நலமேசேர்
பாகினை யுற்ற மாது பாவைகு றப்பெ ணுளை-அணைதோளா!
வாகிகல் நற்சிகாபொன் வாழ்வுப டைத்த மேரில்—வருதூயா!
தாகிட திந்தியாக தானட முற்ற தோகை—மயிலாளா!

837. மறையைப்புகல் வாயினர் தாமரை
மலரைத்தரி நான்முக னுகிய—அயனுரே
குறைநற்றிரு மேனியின் மாமுனி
குளிர்மைக்கட லேயுணும் வாயினர்—குருநாதா!
சிறையுற்றிடு சீதையி னுள்புணர்
திரையிற்கட லேதுயின் மாயவன்—மருகோனே!
பிறையுற்றிடு கோடுகள் சூழுயர்
ப்ரபலச்சிகி மேரினி லேவளர்—குகநாதா!

838. வச்சிர பாணி ரூபம் வர்ச்சித மான தேவி—சசியாளே
மெச்சிய வான ராசன் விர்த்திகொள் வேள்வி நாதன்—
[மருகோனே!
நச்சிரு மார்பி னுளை நட்பொடு வேட மாதை—அணைதோளா!
மொச்சிடு சோலை சூழும் முக்கிய மான தோகை—மலையாளா!

839. தாதகி சூடிய வேணியார்
தார்புனை மார்பின ரீசனுர்—ஒளியேசேர்
வாதகல் மூபுர வாதியோர்
மாய்வுற வேநகை நாதனுர்—செயமாயோன்

சோதரி சீர்கவு மாரியாள்
 தூயமி னுள்புணர் நாயனார்—அருள்பாலா!
போதனை யேசிறை யேசெய்வோய்!
 பூமலர் சோலைகள் சூழ்சிகா—மலையாளா!

840. வாச நீபமதா மாலை சூடியவா!—எனையாளாய்!
தேசர் யாவருமே சீர தாநிதமே—பணிதாளா!
நாச மாகிடவே நாடு சூருடல்மேல்—விடுவேலா!
தாச னுனருளே தா! சி காமலைமேல்—வளர்தூயா!

841. பிறையை யணிந்த சடையாளர்
 பிணையை யணிந்த கரனார்தம்—இடமேசேர்
குறைசெய் மருங்கு லுமைமாது
 குமரி நலங்கொள் கவுமாரி—தருபாலா!
மறையை மிகுந்து சொலும்வேதன்
 மகிமை சிறந்த குருவான—முனிநாதா!
கறையை மிகுந்த முகில்தாவு
 கமழ்பொ ழில்கொண்ட சிகியான—மலையாளா!

842. டாகை மிகுந்த சூரை நாடி யிலங்கு வேலை—விடுவீரா!
வாகை யணிந்த தோளா! வாச மிகுந்த நீப—மலராளா!
தோகை யணிந்த சீர்கொள் தூய மிகுந்த ஏர் கொள்—
 [சிகியாளா!
ஓகை யணிந்த நாத! ஓர்சி கிகுன்றை யான—மலையாளா!

843. கோகில மொழியினள் மாமதி நுதலினள்
 கூரயில் விழியினள்—நலமேசேர்
மாகிளி வடிவினள் வேடுவர் குலமினள்
 மாலைகொள் குறமினள்—புணர்தோளா!
யோகியர் முனிவரே வானவ ரடியரே
 யோகொடு பணிசெய்மா—இருதாளா!
வாகிகல் வனமதே சூழ்சிகி—மலையிலே
 வாழ்குக! கிருபையே—புரிவாயே!

844. நடனஞ் செயுமயில் வாகனு!
 நலநன் பொடுமினி நீசெய்வாய்!—குமரேசா!
அடமிஞ் சியவரு சூருயிர்
 அழியும் படிஅயி லேவிய—செயவீரா!

---

840. 'நான்தாசன், அருளேதா' என்று இயைக்க.

படமென் றுசொலல்கு ளாளுயர்
பணிகொண் டிடுகுற நாயகி—புணர்தோளா!
இடமிஞ் சியபொழில் சூழ்சிகி
எனவுந் திடுமலை மேல்வளர்—குருநாதா!

845. நிருத்த மிடுமயிலா!நினைக்கு முனம்வருவாய்-என்முனேதான்!
வருத்த மிடுமசுரோன் மரித்தி டமுன்அயிலே—வியசூரா!
கருத்த முகில்நிறமால் கருத்தில் மகிழ்மருகா!--எனையாளாய்!
விருப்ப மொடுசிகியாய் மிகுத்து வளர்மலைமேல்-வருதேவே!

846. படையி லேமிகு சூர னுருயிர்
படமுன் வேல்விடு செயம தாகிய—குமரேசா!
குடையி லேமிகு தாரு நீழலில்
குலவு வாசவன் மகிழ வேவரு—மருகோனே!
நடையி லேமிகு ஓதி யேறிய
நளினி வாசவன் அமரர் யாவர்கள்—பணிதாளா!
விடையி லேமிகு ஈசர் பாலக! [தேவே!
விரைகொள் சோலைகொள் சிகியின் மாமலை—வளர்

847. கந்த நீபமலர் மாலை சூழ்புயா!
கண்டு தேவர்பணி பாத நாயகா!—எனையாளாய்!
சங்க நாவலவ னுக வேசெய்வாய்!
சங்க நாவலரி லோர்வ லாளனே!—குகநாதா!
குந்த வாயுதம தேமுன் னுசூர்
கொண்ட தானைவிழ ஏவு சூரனே!—அருளாயோ?
எந்த னுசையது போல வாமுனே!
இந்து தாவுசிகி யானமேரிலே—வருதூயா!

848. சங்கத்தினி லொருநாவல!
சண்டைக்குமுன் வருசூருயிர்—படவேதான்
பொங்கத்திரி யயிலால்வெகு
புண்பட்டிட வெறிமாபெல—மிகுசூரா!
திங்கட்பிறை யுயர்வேணியர்
செண்டுத்தன வுமைநாயகி—புதல்வோனே!
தங்கக்கிரி யதனேர்பொரு
சங்கப்பொழில் மிகுதோகையின்—மலைநாதா!

849. பொங்கு திரைக்கடல்வாழ் புண்ட ரிககணனுர்-நலமேசேர்;
சங்கு தரித்திடுவோர் தண்ட லையிற்றிரிவோர்—பசியாமே
கொங்கு துளப்புயனுர்கொண்டல்நிறத்திருமால்-மருகோனே!
செங்கை முகத்துணைவா! திங்கள்தவழ்ச் சிகிமா—மலையாளா!

850. எதிராகவே வருசூரன்மே லெழிலானவேல்—விடுவோனே!
கதிரானதோர் மதிவேணியர் கமழ்தாதகி—அணிவோரே
பதிமூவர்மேல் நகையேசெய்வோர் பரமேசனுர்—தருபாலா!
முதிர்ஞானியார் பணிதாளனே! முருகா! சிகா—மலைநாதா!

851. மயிலை நடத்து தேவ!
மகிமை யெனக்கு நீசெய்!—அமரேசா!
குயிலின் மொழிச்சி வேடர்
குறம களுக்கு வாசை—புரிதோளா!
அயிலை யெடுத்து வாரி
யதில்வி டுசுத்த வீர!—எனையாளாய்!
ஒயிலுள வித்த கா!நல்
ஒளிவி டுநற்சி கா நன்—மலையாளா!

852. தானப்பிறை சூடிய வேணியர்
கோலக்கதிர் போலவு மேனியர்—நிதியாமே
வானத்துயர் மாமக மேருவில்
வாழ்வுற்றிடு மீசுர னுர்தர—வருபாலா!
ஞானத்தவர் யோகியர் யாவரும்
நாடித்தின மேபணி யேபுரி—யிருதாளா!
கானக்குற நாயகி மேவிய
காளைக்கும ரா! சிகி மாமலை—முருகோனே!

853. வட்ட ஆழி தனிலே மச்ச ரூபமுடனே—வருமாயோன்
துட்ட ராவ ணனையே சுத்த வீர முடனே—யெதிர்மாயோன்
சிட்ட தேவ னிடுபோர் சித்ர மேவு விறலார்—மருகோனே!
சட்ட மான சிகியா! சத்தி மேவு கரனே!—அருள்வாயே!

---

849. தண்டலையிற் றிரிவோர் பசியாமே கொங்கு துளப்புயனுர் - வண்டுகள் பசியாமல் தேனைத்தரும் துளவணியும்புயனுர். கொங்கு - தேன். தண்டலை - சோலை. அங்குத் திரிவோர்: வண்டுகள். செங்கைமுகம் - யானைமுகம்.

854. நீலச்சிறை மாமயில் வாகன !
நீதிக்கும ரா! எனை யாதரி—அமரேசா!
ஞாலத்தைமு ளுளினி லேயுணும்
நானத்துள மாலிகை யேபுனை—இருதோளார்
கோலப்பெரு வாழியி லேதுயில்
கூர்மைக்கதி ராழியி னுருட—மருகோனே!
வேலத்தைமுன் மாவிலெய் வாய்!குக!
மேன்மைச்சிகி மாமலை மேல்வளர்—குருநாதா!

855. வாசனை மிகுத்த பூமலர் தரித்த
மார்பினள் சசிக்கு—நயமாமே
ராசனை யெதிர்த்து ஓர்முடி தகர்த்த
நாமவ யில்பெற்ற—கரவேளே!
ஈசனை நிருத்த மேசெய்ப வருக்கு
ஏர்மிகு மலர்க்கொ—டசலாயே
பூசனை புரித்த மால்மரு க! வித்தை
யேசெய்சி கிநற்கி—ரியினுதா!

856. ஓவிய மான ரூபி தாமரை வீடு லர்வும்
ஓர்மக ளான மாது—நலமேசேர்
காவினில் வாழு மாது வேடுவ ராசை மாது
காதல! தாம மேவும்—இருதோளா!
பூவினில் மேன்மையான நீபமென் மாலை மார்ப!
போகநல் வீடு நீசெய்—அமரேசா!
பாவியென் ஆசை யோட நீயனு பூதி யேசெய்!
பார்வதி பால! தோகை—மலையாளா!

857. கொலையைப்புரி சூருயிர் போகிட
குருதிக்கதிர் வேலதை யேவிய—செயவீரா!
மலையைப்பொரு மாமுலை யாள்சிறை
மயிலைப்பொரு சாயலி னுள்குற—மகள்தோளா!
அலையிற்றுயில் மாயவ னுருயர்
அமரர்ச்சிறை தீரவு மேசெய்வர்—மருகோனே!
கலையைத்தரு வாய்குக! நாயக!
கதியைத்தரு தோகையின் மாமலை—வருதேவே!

858. பிறைக்கு நேரு நுதலாள்
சிலைக்கு நேரு நுதலாள்
பிணைக்கு நேரு விழியாள்—நலமேசேர்

குறைக்கும் நூலி னிடையாள்
மிகுத்த ரூப முடையாள்
குறத்தி மாது தனையே—புணர்தோளா!
மறைக்கும் நீல உடல்மா
யவர்க்கு நாளு மறியா
வளர்ச்சி யான கயிலா—சர்சொல்பாலா!
நறைக்கும் நீப மலராய்!
எனக்கு நீசெய் வரமே!
நலத்த **தோகை மலைமேல்**—வளர்வோனே!

859. சட்டியில் மாவை வென்றிடவே
சத்தியை யேவு கின்றமகா—பெலவோனே!
கெட்டிடு நோய கன்றிடவே
கிட்டிமு னுக வந்திடுவாய்!—அமரேசா!
† பட்டிட வாழும் லங்கையின்மேல்
பட்டிட வாழி கொண்டகைமால்—மருகோனே!
எட்டிய தான தண்டலைசூழ்
இச்சைகொ ளான **குன்றையின்மா—மலையாளா!**

860. வேலை யெடுத்து மாவின் மீது விடுத்த வீர!—செயலாளா!
மாலை தரித்த மார்ப! மாது குறத்தி மேவும்—இருதோளா!
சேலை நிகர்த்த பார்வை தேவி யுமைப்பெ ணுசை-மக! வேளே!
சோலை வளைத்த கோடு சூழ்சி கிநற்பொன் **மேரில்**—வரு
வோனே!

861. அரவினுட படநெளிய
அதிரநட மிடுகழலின்—நலமாபொன்
உரமுலவு மசுரன்விழ
யொருபகழி கொடுவெல்பவர்—மருகோனே!
பரமருட பதமதனில்
பரவுமுமை யவளுதவு—புதல்வோனே!
வரமுதவி செய்குவை! குக!
மகிமைமிகு **சிகிமலையில்**—வளர்தேவே!

862. மலையை யெடுத்த ராவணனுர்
மடிய வெடுத்த வாழியினு—ரிடமேசேர்
அலையை யெடுத்த வாழியிலே
அரவ ணையிற்கண் மாயவனுர்—மருகோனே!

---

859. '† பட்டிட வாழும்' என்பது 'பட்டிகள் வாழும்' என இருக்கலாம்.

861. நலமா பொன் உரமுலவு - நலந்தரும் இலக்குமி தம் மார்பில் உலவுகின்ற (திருமால்) மா பொன்: இலக்குமியின் பெயர்கள்.

கொலையை யெடுத்த சூரனையே
குருதி பிடித்த வேல்கொடுமேல்—விடுவோனே!
கலையை யெடுத்த மாமதியே
கமழ்சீ கிரற்கி ரீயினிலே—வளர்தேவே!

863. கங்கை சூடிய சடையார்
கஞ்ச னார்பணி கழலார்—நலமேசேர்
மங்கை பார்வதி பதியார்
வஞ்ச மூவரை யெதிர்வோர்—புதல்வோனே!
கொங்கை வேடமி னமர்சீர்
கொண்ட மாபுய! அருள்வாய்!—வடிவேசேர்
செங்கை வேலவ! அருள்வாய்!
செந்தி யாய்! சிகி மலைமேல்—வருதேவே!

864. நடஞ்செய்மயில் வாகா!
நலஞ்செய்குரு நாதா!—எனையாளாய்!
படசெய்அர வேதான்
பதிந்தவித ழீயோ—டணிவோரே
அடஞ்செயொரு மூவோர்
அடங்கநகை யாரே—தருபாலா!
தடஞ்செய்வளர் காசூழ்
தழைந்தசிகி மேர்மேல்—வருதேவே!

865. முப்புரத்தை யெரித்தவோர்
மொய்த்தபற்ப மலர்க்குளார்—பணிதாளர்
[அப்புவைத்] தரித்தவோர்
அக்கெருக்கு முடித்தவோர்—தருபாலா!
செப்புவைத்த தனத்தினள்
சித்திரப்ரத மைக்குநேர்—குறமாது
ஒப்புணர்ச்சிசெய் வித்தகா!
அட்டலட்சுமி யுற்றதோ—கையின்மேரா!

866. ரதத்தி லேறி வருபெல ராவணன்
நலத்தை நாச மிடுமவ தாரனர்—மருகோனே!
மரத்தை யேற வருகரு மேருவும்
மலைக்க வோடி வருகளி றனவோர்—துணையாளா!

---

862. கிரீ : நீட்டல் விகாரம்.

864. இதழீ : நீட்டல் விகாரம்.

865. [ ] இதனை 'அப்பு வைத்து' எனப் படிக்கலாம்.

விதத்தி னாறு கவிசொல வேசெய்வை !
    விருப்ப மான குறமகள் தோழனே !—எனையாளாய் !
கதத்தில் மாவை வெலுமயி லாயுத !
    கமழ்ச்சிகாம லைவரு தேவனே !—அருளாயோ ?

867. கோகன கத்திருமான் கூர்விழி யுத்தமியாள்—வடிவேசேர்
மாகன கத்தனமான் மாதுகு றப்பெணினாள்–புணர்தோளா !
பாகன நற்சொலினாள் பாவையு மைப்பெணினாள்—தருபாலா !
மாகம திற்பொருசீர் வாழ்வுமி குத்தசிகா—மலையாளா !

868. கொன்றை மாலை யணிமுடியார்
    கொஞ்ச மான பிறையணிவோ—ரிடமேசேர்
மன்று ளாடு மிருபதனார்
    மஞ்சு லாவு மொருமிடறு—ரிடமேசேர்
குன்று போல விலகியதோர்
    கொங்கை மாது தருபுதல்வா !—எனையாளாய் !
**குன்றை மேரில்** வளரையனே !
    கொண்டல் மேனி மருகையனே !—அருளாயோ ?

869. குயிலைப் போலும் மொழியாள்
    குழலைப் போலும் மொழியாள்—அதிகூர்சேர்
அயிலைப் போலும் விழியாள்
    அலையைப் போலும் விழியாள்—சிறையேசேர்
மயிலைப் போலும் வடிவாள்
    மணியைப் போலும் வடிவாள்—குறமான்சேர்
வெயிலைப் போலு மலைபோல்
    மிகுநற் **ரேகை மலை**மேல்—வளர்தேவே !

870. காருக் கிசைந்த முடியி னாயகி
    காவுக் கிசைந்த மறவர் நாயகி—புணர்தோளா !
போருக் கிசைந்த அயில்கொள் பாணிய !
    பூவுக் கியைந்த மலர்ந னீபம—தணிமார்பா !
வாருக் கிசைந்த தனமின் மாதுமை
    மானுக் கிசைந்த புதல்வ னே ! க்ருபை—தருவாயே !
பாருக் கிசைந்த சிகியின் மேல்வளர்
    பாசத் துழன்று விடவொ ணாதருள்—குகநாதா !

---

868. மஞ்சு உலாவும் - முகிலனைய கருநிறம் பொருந்திய (மிடறு) ; கறை மிடறு. கொண்டல் மேனி : திருமால் ; பண்பாகு பெயர்.

869. வெயில் : ஞாயிறு ; ஒளிக்குவமை.

870. ‘ வளர் குகநாதா ’ என இயைக்க.

871. அனத்தை நேரு நடையாள்
அலர்க்கு நேரும் வதனள்—குறமானள்
தனத்தில் மேவு புயனே!
தமிழ்ச்சொல் நாவ லவனே !—எனையாளாய்!
வனத்தில் வாழு முனிவோர்
மகிழ்ச்சி யாக நிதமே—பணிபாதா!
சினத்த சூர னுடனே
செகுத்த வீர! சிகிமா—மலையாளா!

872. வேலாயு தத்தை யெடுத்த பாணிய!
மேலாயி ருக்கு மெவர்க்கு மேயறி—வரிதானய்!
கோலாக லக்கு மரப்ப னே! உயர்
கோபால கிட்னன் மகிழ்ச்சி யாகிய—மருகோனே!
பாலிம திக்கு இசைத்த வேணியர்
பாகேயி ருக்கு முமைப்பெ ணாயகி—தருபாலா!
நாலாக லைக்கு மிகுத்த நாவல!
நாவே யிருக்கு மருட்செய் தோகையின்—மலைநாதா!

873. தந்தி முகத்தன் மகிழ்துணையாம்
தம்பி! எனக்கு வரமருள்வாய்!—குகநாதா!
செந்தி மலைக்குள் வருதுரையே!
செங்க மலத்தின் மறைவலனர்—பணிதாளா!
நந்து கரத்தர் மகிழ்மருகா!
நங்கை குறத்தி புணர்கணவா!—எனையாளாய்!
மந்தி குதித்த அடவிகள்சூழ்
மங்க ளமுற்ற சிகிமலைமேல்—வருதேவே!

874. சகல கலைக்கி யானனே!
தமிழை யெனக்கு நீசெய்வாய்—அமரேசா!
அகம கிழ்க்குற மாதையே
அணைமி சையிச்சை யாகவே—புணர்தோளா!
பகிரி டவெற்பில் வேலெய்வாய்!
பதும மகட்கு மால்செய்வோர்—மருகோனே!
திகழ்க யிலைக்கு நேருநேர்
சிகிம லையுற்ற நாதனே!—எனையாளாய்!

875. மாலைக் குயர்ந்த நீப
மாலைக் கிசைந்த மார்ப!—எனையாளாய்!
வேலைக் கிசைந்த கூர்மை
வேலுக் கிசைந்த பார்வை—உமைபாலா!

லீலைக் கிசைந்த மாது
நேர்மைக் குறஞ்சொல் தேவி—புணர்தோளா!
மாலைக் கிசைந்த சோமன்
வாவுற் றகுன்றை மேரில்—வருதேவே!

876. சிறைவி ரித்துநட மாடிய கேகய!
திருவி ருக்குமணி மாடம தேநிறை—வளநேமா!
மறைவி ரித்துரைசெய் வாய்!கனி வாயென்முன்
வருவை வித்தைநிதி யாவையு மேயின—முதவாயோ?
பிறைமு டித்ததொரு நீண்முடி நாயகர்
பிடியி டைக்குமகிழ் வாகிய பாலக!—எனையாளாய்!
நறைவி ரித்துவளர் நீபமென் மாலைய!
நலமி குத்தசிகி மாமலை மேல்வரு—குகநாதா!

877. கொஞ்சிய வாயி லங்கவே
கொஞ்சடி மீது தண்டையா—டிடவேதான்
அஞ்சிய சூரை வென்றவேல்
அங்கையின் மீது தங்கவே—யென்முன்வாராய்!
வஞ்சியை நேர்ம ருங்குலாள்
மங்கைசி [கண்டி சாயல்வே]—டமினதா!
மஞ்சுகள் தாவு கின்றசீர்
வம்பலர் காகொள் குன்றைமா—மலையாளா!

878. பச்சை நிறத்திருமால் பற்ப மலர்க்கொடியாள்—புணர்
[தோளார்
செச்சை தரித்திடுவோர் சித்த மகிழ்ச்சிதரு—மருகோனே!
நச்சை யுண்வித்தகனர் நட்பு படைத்திடுமா—துமைபாலா!
விச்சை யெனக்கருள்வாய்! விர்த்தி படைத்தசிகா —மலைநாதா!

879. மதியணி சடையார் கயிலையின் மலையார்
மணமிகு மலர்தா—தகியாரே
விதிமுடி யணிவோர் வளையணி கரனர்
விடையினில் வருவோர்—தருபாலா!
ததிதிரு டியவோர் பருவத குடையார்
தனுவளை கரனர்—மருகோனே!
பதிபுகழ் சிகிமா மலைவரு குகனே!
பசியபொன் மயிலா!—எனையாளாய்!

---

876. பிடியிடை : உமாதேவி.

877. [ ] சந்தம் வேறுபடுகிறது. வேடமின் நாதா.

878. செச்சை - செந்துளசி.

880. கஞ்சனைமுன் வென்றவோர் நஞ்சதைமுன் வென்றவோர்
கங்கையணி கின்றவோர்—நலமேசேர்
வஞ்சனைசெய் கின்றவோர் வண்டரைவெல் குந்தனே!
அன்பொடென்முன் வந்துதான்—அருளாயோ?
நஞ்சினைகொ ளம்புபோல் ரெண்டுவிழி யின்பமார்
மங்கைகுறம் அன்பதாய்—அணைதோளா!
மஞ்சுதவழ் கின்றதோர் பொன்பயில்கொள் குன்றையாம்
மஞ்சுறுசி கண்டியே—வளர்தேவே!

881. வேலா யுதத்தை நாடி வீறு யெதிர்த்த சூரை—அடுவோனே!
பாலாய் நிறத்த சோமன் பாவே முடித்த நாதர்—தருபாலா!
சேலா யிணைத்த பார்வை சீரார் குறத்தி மீது—மயலாளா!
மேலார் சிகிப்பொன் மேரில் மேலே வளர்ச்சி யான—
[குகநாதா!

882. கயிலா சத்தினில் வாழு நாயகர்
கமழ்ஆ ரைத்தரி வேணி நாயகர்—தனையேசேர்
மயிலா யுற்றிடு சாயல் நாயகி
மணிமே கக்குழல் மாது ஈஸ்வரி—தருபாலா!
குயில்போ லச்சொலி கானி லேயுறு
குறவோர் நற்கொடி யாளை மாமணம்—இடுவோனே!
அயில்வே லைத்தரி பாணி யாய்! அருள்!
அசுராண் மைக்குல காலனே! சிகி—மலையாளா!

883. வீறு புரிந்த சூரன் மேலு பிளந்து போக—விடுவோனே!
சீறு புயங்கன் மீது சீர்த டனஞ்செய் மாயன்—மருகோனே!
ஏறு வுகந்த நாதர் ஈஸ்வ ரிபைங்கின் மாது—தருபாலா!
நீறு புனைந்த தேக! நீள்சி கரங்கள் சூழு—சிகியாளா!

884. இலங்கை ராவணனையே யிசைந்த வேணுகொடுபோர்
—புரிமாயோன்—பிணையாமே
விலங்கை நாசமிடுவோர் விருந்தை மாலைபுனைவோர்
—மனதாசை—மருகோனே!
சிலங்கை யோசைமிகவே சிகண்டி யேறியென்முனே
—வருவாயே!—அறியாயோ?
நலங்கை மீதுதருவாய்! நறுங்கொள் சோலைமிகுதோ
—கையின்மோர்மேல்—வளர்தேவே!

---

881. பா - ஒளி.

884. விருந்தை - துளசி. நலம் கைமீது தருவாய்.

885. வளைபிறை போலு மருப்புளார்
மதகரி போலு முகத்தினர்—வடிவேசேர்
புழையுள நீடு கரத்தினர்
புதுமய மான நிறத்தினர்—மயலாமே
வளையணி சீர்வ லவைப்பெணாள்
மகிழ்வுடன் மேவு புயத்தினர்—துணையாளா!
களமிகு சோலை வளைத்ததோ
கையின்மலை யாளா! எனக்குநீ—அருள்தாராய்!

886. நாலு வேதமு நீயே வேத வாதியு நீயே
நாம வேலனு நீயே சூர காலனு நீயே
பாலு மாமதி யேதான் சூடும் வேணியர் பால்வாழ்
பாவை மாதுமை யாளே மால்கொள் பாலனு நீயே
சேலு போல்விழி வேடோர் மாது சேர்புயன் நீயே
தேவ தேவனு நீயே தோகை வாகனும் நீயே
நூல்கொள் பாவல னீயே வாச நீபனு நீயே
நோய்கள் போகருள் வாயே! தோகை மாமலை யானே!

887. நீப மாலையணி இருதோளா!
நீல மானசிறை மயிலாளா!—எனையாளாய்!
கோப மானநல இதழ்மானள்
கூர்மை வேல்விழியின் மறமானள்—புணர்தோளா!
சாப பாணிமகிழ் மருகேசா!
சாமி நாத! தமிழ் தருவாயே!—மறையாளா!
ரூப மானசிகி மலையாளா!
நோய்கள் தீரவருள் புரிவாயே!—அமரேசா!

888. கோவைக் கனியிதழாள் கானக் கிளிமொழியாள்
கூர்சத் தியின்விழியாள்—வடிவேசேர்
பாவைக் குறமகளாள் ஆசைக் கிசைகணவா!
பாடக் கலைதருவாய்!—மயிலாளா!
பூவைக் கெதிர்நிறனர் மானைப் பொருசிலையார்
பூவிற் றிருபுணர்வோர்—மருகோனே!
சேவைக் கொடியரனர் சீர்புத் திர! அருள்வாய்!
ஏர்நற் சிகிமலையா!—அமரேசா!

---

886. இது சந்த விருத்தம்.

889. கலைமதி சூடு சடையார்
கலையணி பாணி யரனு—ரிடமேசேர்
சிலைநுதல் மாது உமையாள்
திருகவு மாரி புதல்வா !—எனையாளாய் !
அலைமிகு ஆழி தனிலே
அரவணை மீது துயில்வோர்—மருகோனே !
கொலைபுரி சூரை அடுவாய் !
குக!சிகி மேரில் வருவாய் !—அருள்வாயே !

890. கனகப் பருவதமேல் வளரற் புதஅரனர்
கறையுற் றிடுமிடறூர்—முனிவோர்பால்
கனகப் பொதுவினிலே நடமிட் டிடுகழலார்
கதியுற் றிடுவிடையார்—தருபாலா !
பனசப் புரமதிலே திருநித் திரைபுரிவோர்
பதுமத் திருமகிழ்வோர்—மருகோனே !
வனசப் பொய்கையுரைசேர் பொழில்சுத் தியசிகியா
மலையிற் றினம்வளர்வாய் !—அருள்வாயே !

891. திருத்தங்கிய மார்பு திகழ்த்தண்டுள மாயன்—மருகோனே !
மருத்தங்கிய நீப மலர்க்கொண்டிடு தோள !—எனையாளாய் !
செருத்தங்கிய சூரை செகுக்கும்படி வேலை—விடுசூரா !
தருத்தங்கிய சோலை தழைக்குஞ்சிகி மேரில்—வருதேவே !

892. மன்று ணடன மிடுமணித் தாளினர்
மங்கு னிறமு லவுமிடற் றூரையே—புணர்மானுள்
குன்று நிகரு மிருமுலைத் தேவியாள்
கொஞ்சு கிளிகுயிலின்மொழிப் பாவையாள்—தருபாலா!
வென்று குருதி படியயிற் பாணியாய் !
விந்தை புணர வருவிறற் சாமியார்—மருகோனே !
நன்று மிகுசி கியின்மலைத் தேவனே !
நங்கை குறமின் மகிழ்புயக் காவலா !—எனையாளாய் !

893. கந்த நீபமணி மார்பனே !
கஞ்ச னுர்பணிசெய் தாளனே !—எனையாளாய் !
அந்த மேவுசிறை வாகனு !
அன்ப தாயென்முன் வா!ஐயா !—குகநாதா !

---

890. பனசப்புரம் = பாம்பின் உடம்பு.

சந்த நாவலவ னே!ஐயா !
சங்க பாணியெனு மாயனர்—மருகோனே !
சொந்த மானகுற மாதுசேர்
துங்க தோகைமலை மீதிலே—வருதேவே !

894. சங்கு தரித்தவனர் தண்டுள வுற்றவனர்—நலமேசேர்
கொங்கு மிகுத்திடுசூல் கொண்டல் நிறத்திருமால்—
[மருகோனே !
மங்குல் நிறக்குழலாள் வஞ்சி குறப்பெணினள்-புணர்தோளா!
கங்குல் நிறப்பொழில்சூழ் கஞ்ச மினுற்றசிகர—மலையாளா!

895. தானவர் குலத்தில் வாழும் சூரனை யெதிர்த்து நீடு
தாவும யில்விட்ட தேவ !—எனையாளாய் !
கூனவில் ஒடித்த ராமர் ராவணனை வெற்றி யேசெய்
கூர்பக ழியுற்ற மாயன்—மலர்மானுள்
சானகி தனக்கு மாலை சூடிய கரத்து மாயன்
தான்மன மகிழ்ச்சி யான—மருகோனே !
வானள வுமுற்ற சோலை சூழ்சிகி மலைக்குள் நாளும்
வாழ்குக ! எனக்கு மேன்மை—தருவாயே !

896. வேலை யொத்த விழியாள் கோகி லத்தின் மொழியாள்
மேரை யொத்த முலையாள்—நலமேசேர்
பாலை யொத்த மதிபோல் ஆன னத்தின் மடமான்
பாவை யொத்த குறமான்—அணைதோளா !
மாலை பெற்ற புயனே ! தோகை யுற்ற மயிலா !
வார ணக்கை யரசே !—எனையாளாய் !
சோலை சுற்று சிகியா மேரி லுற்ற குகனே !
தூய சத்தி யணிபா—ணியின்வேளே !

897. மயிலை நடத்து தேவ! முருகு படைத்த நீப
மலரை முடித்த மார்ப !—குமரேசா !
அயிலை யெடுத்து மாவை உடலை யிரட்டி யாக
அலர விடுத்த சூர !—அமரேசா !
குயிலை நிகர்ச்சொல் மாது [....]
குமரி குறத்தி மேவும்—இருதோளா !
வெயிலை மிகுத்து வீசு மணிக ளழுத்து கோடு
மிகுசி கிநற்பொன் மேரில்—வளர்தேவே !

---

897. [...] விடப்பட்டுள்ளது. ' திருவை நிகர்த்த மாது ' எனச் சேர்க்கலாம்.

898. வீறு யெதிர்த்த சூருடல்
மீதே பகிர்க்க வேகம—துடனேதான்
கூறு யிருக்கும் வேல்விடு
கோவே! தமிழ்ச்சொல் நாவல!—எனையாளாய்!
நீறார் புயத்த ஞருட
நீண்மேர் நிகர்த்த கேகய—மலையாளா!
ஈறு யருட்செய் வேலவ!
ஈரார் புயத்த னே! மயில்—முருகோனே!

899. அலையாழி யிற்றுயி லு மாய ஞர்பெல
அசுராள் குலக்கலக வாழி யார்பொது—வியராமே
மூலமாத ரைப்புணர்நன் மேனி யார்வெகு
முருகார்து ளக்கணிகொள் மார்பி ஞருட-மருகோனே!
சிலைவாணு தற்குமரி வேட நாயகி
திகழ்மாமு லைக்கைகொடு மேவு நாயக!—எனையாளாய்!
கலையாவு முற்றதொரு நாவ லா! அருள்
கனகாச லச்சிகியின் மேரி லேவளர்—குகநாதா!

900. குருதிகள் தோயும் வேலவா!
குறமக ளாசை நாயகா!—அரிதாமே!
சுருதிகள் தேடு நாயகா!
துரைமகள் மேவு நாயகா!—அமரேசா!
கருதிய நாவ லாளனே!
கமழ்மலர் நீப மாலையாய்!—எனையாளாய்!
பருதிகொள் கோடு சேர்சிகா
பருவத மீது வாழ்குகா!—குகநாதா!

901. சிறைவிரித் தாடு மயிலா!
திகழுயிற் பாணி முருகா!—வனமேசேர்
குறையிடைப் பாவை நலமார்
குறவர்சொற் றேவி தனையே—புணர்தோளா!
மறையவர்க் கோது பொருளா!
வளர்சிகிக் கோடில் வருவாய்!—அமரேசா!
நறைமலர்ப் பூவை மருகா!
நலமெனக் கியாவு மினிநீ—அருளாயோ?

---

898. 'கூர்' என்பது சந்தம் நோக்கிக், 'கூறு' என நின்றது. 'ஈராறு புயம்' என்பது சந்தத்திற்கிசைய 'ஈரார் புயம்' என நின்றது.

899. பொதுவியர் - ஆயர்குல மகளிர். துளக்கணி - துழாய்க்கண்ணி. கனகாசலச் சிகியின் மேரு - பொன்மலைக்கு நிகரான மயில்மலை.

902. நாடக பதத்தினர் தோடணி கனத்தினர்
நான்மறை முகத்தினர்—பணிதாளார்
பாடக பதத்தினள் வாழ்வுள நலத்தினள்
[பாகம்வளர் கர்த்தனர்]—தருபாலா !
ஏடவிழ் கடப்பமா மாலையணி நற்புயா!
ஏர்மிகு சிகிக்குகா !—எனையாளாய்!
தேடரிய வித்தையே தானருள் ! எனக்கு நீ
சீர்மிகு சிகிப் பொன்மா—மலையாளா !

903. வருசூரன் உடல்கீறும் வடிவேலை யணிபாணி—அமரேசா!
ஒருசூர்யன் நிறமான ஒளிர்மேனி முருகேச!-எனையாளாய்!
பெருநாலு மறைதேடு ப்ரபலாள ! மயிலேறு—வடிவாளா !
தருசூழு சிகியான சகமேவு கிரியாள !—அருளாயோ ?

904. ஒருவர்களு மின்றிநான்
உனதடிவ ணங்கினேன்—எனையாளாய் !
மருமணமி குந்தசீர்
மலருயர்க டம்பமா—விகைமார்பா !
பொருதுஅயில் கொண்டுநேர்
பொருஅசுரை வென்றவா !—க்ருபைதாராய் !
அருமறைசி றந்தவா !
அழகியசி கண்டிமா—மலையோனே

905. கனக மலையைநிகர் தனகி ரிகளுலவு
கமல மலர்மகளை—நிகர்மானுள்
வனம தனிலுலவு மறவர் தருகுமரி
மருவு புயசயில !—அமரேசா !
வனச மலரைநிகர் வதன வடிவியுமை
மகிழ வருபுதல்வ !—எனையாளாய் !
பனக சயனருட மருக ! கிருபைபுரி !
படியி லரியசிகி—மலையாளா !

---

902. [ ] சந்தம் சிறிது மாறியிருக்கிறது. மற்றவற்றில், 'தானன தனத்தன' என வருவது இங்கு, 'தானதன தத்தன' என வருகிறது. எனினும் இரண்டு சீரும் சேர்ந்து ஓசையைச் சரியாக அமைக்கின்றன. மேலும் இவ்வாறு வருமிடங்களில் இரண்டு சீரையும் சேர்த்து ஓசை கெடாமலிருப்பவற்றைக் கண்டு அமைத்துக் கொள்ள வேண்டும்.

906. கஞ்ச மாமலரில் வாழுநான் முகனுர்
கண்டு தேடவரி தானசீர் முடியா—ரிடமேசேர்
நஞ்ச மேவுமிரு பார்வைமா துமையாள்
நந்து பாணியில்லை மால்சகோ தரியாள்—அருள்பாலா!
கொஞ்ச மானபிறை போலநீ ணுதலாள்
கொண்டல் போலநிற மேனிவே டமினுள்-புணர்தோளா!
அஞ்ச மாவைவெனு நீளவே லவனே!
அண்ட மீதளவு தோகைமா மலையாய்!—எனையாளாய்!

907. கடம்பமலர் மாலைபுனை புயனே!
கரந்தைபுனை வேணியர னருள்பா—லகவேளே!
மடந்தைகுற வேடுவர்கள் குலமே
வழங்கவரு தேவிபுணர் புயனே!—எனையாளாய்!
நடம்புரியு மாமயிலில் வருவாய்!
நலங்கள்தனை நீயருள்செய் குமரா!—அமரேசா!
திடங்கொளுட னேமுன்வரு மசுரோன்
தினம்பரவு தோகைமலை தனிலே—வருவீரா!

908. நாடக பதத்தினுர் நூபுர மெரித்தவோர்
நாகணி தரித்தவோ—ரிடமேசேர்
பாடக பதத்தினுள் காதளவு வுற்றதோர்
பார்வையுமை பெற்றபா—லகவேளே!
ஏடகல் கடப்பமா மாலைதரி மற்புயா!
ஏர்சிகி பரிக்குகா!—எனையாளாய்!
ஆடக மலைக்குநேர் தான்வளர் சிகிக்கல்மேல்
ஆவலொடு நித்தமே—அருளாயோ?

909. கடப்ப மாலைபுனை புயனே! எனக்கு நீகிருபை தருவாய்!
கருத்தில் நோய்தவிர இனிநீ—அருளாயோ?
விடத்தின் மீறியப னகமேல் உறக்க மேபுரிவர் முகில்போல்
மிகுத்த மேனிவிறல் மகிழ்வா—மருகோனே!
படத்தி லேயெழுது வடிவாள் மடப்பெ ணுள்குறவர் குலமான்
பருத்த மார்பிலணை முருகா!—குகநாதா!
திடத்தி லேயெதிர வருசூர் படச்செய் கூர்மையுள அயிலா!
சிகிப்பொன் மேரில்வள ரரசே!—எனையாளாய்!

---

907. அசுரோன்: இடும்பன்.

909. விறல்: பெருமையுடைய திருமால்; பண்பாகு பெயர்;
விறல்: வெற்றியுமாம்.

910. வண்டுமொய்த் திடுகுழலாள் கெண்டையுற் றிடுவிழியாள்
வம்பையுற் றிடுமுலையாள்—ரசமேசேர்
கண்டுவுற் றிடுமொழியாள் தண்டலைக் குறமடமான்
கண்டுமுக் கியமயலாய்—அமர்தோளா!
தண்டெடுத் துமுனெதிரே வந்தெதிர்த் திடுமசுரோன்
சண்டையிட் டிடவயிலே—வியசூரா!
விண்டுவற் புயர்மருகா! பைந்தமிழ்ச் சொலவருள்வாய்!
விண்டலத் தவர்சிகிமா—மலையாளா!

911. பனகமிசை துயிலுமாயன்
பதுமமகள் மகிழ்செய்வாகன்—மருகோனே!
வனமதனி லுறையும்வேடர்
வளவில்தரு குறமினளை—அமர்தோளா!
கனககிரி வளருமீசர்
கறைமிடறை மருவுமாது—தருபாலா!
இனமணிகொள் சிகரநீடு
எழிலதுயர் சிகிமின்மேரில்—வருதேவே!

912. பொதுவி னடனமிடு பதத்தி னர்மூ
புரம தனையெரிய நகைத்த சீர்மா—விழிபாரே
மதுகொ ளிதழியணி புயத்தி னர்வான்
வளரு மிறைபரவு நலத்தி னர்பால்—வருமானுள்
பதும மலரைநிகர் முகத்தி னள்நீள்
பனக சயனர்துணை படைத்த மானுள்—அருள்பாலா!
வதுவை மிகுமுடிகொள் குறப்பெ ணளை
மருவு கணவ!சிகி மலைக்கு ளேதான்—வருதேவே!

913. மயில்வாகன மதிலேறிமுன்
வருவாய்சர வணனே! உயர்—அமரேசா!
அயிலாலெதிர் வருசூருடன்
அமராடிய குகநாயக!—எனையாள்வாய்!
குயிலாகிய மொழியாள்வன
குறநாயகி தனையேமரு—வியதோளா!
உயிலேபுனை புயனே! அருள்
உதவாய்! சிகி மலைமீதினில்—வளர்தேவே!

---

910. விண்டு அற்பு உயர்மருகா! - திருமாலின் அன்புறும் உயர் மருகனே!

911. கறைமிடறை - கறை மிடற்றினரை.

914\. நடன மிட்டிடு மயிலி லுற்றவ!
நலமி குத்திடு குருப ரக்குக!—எனையாளாய்!
அடமி குத்திடு வலிப டைத்திடும்
அசுர னைப்பொரு மயில்த ரித்தகை—முருகோனே!
குடமு லைக்கொடி யிருணி றத்தவர்
குலம திற்கன மகிமை நற்குற—மகள்பாகா!
வடவ ரைக்கெதிர் குடுமி யுற்றிடு
வடிவு பெற்றிடு சிகிம லைச்சர—வணவேளே!

915\. பாகை நிகர்த்த மொழியாளே
பாளை நிகர்த்த குழலாளே—நலமேசேர்
பூகை நிகர்த்த மிடருளே
பூவை நிகர்த்த மொழியாளே—குறமானுள்
வாகை யணைத்த புயவேளே!
வாச மிகுத்த மலர்நீபா!—எனையாளாய்!
ஓகை தரித்த குகநாதா!
ஓது சிகிக்கி ரியின்வாசா!—அமரேசா!

916\. சிதம்பர நடராயனுர்
சிலம்பணி யிருபாதனுர்—இடமேசேர்
கதம்பணி தனமார்பினுள்
கருங்குழ லுமைமாதினுள்—அருள்பாலா!
பதம்பணி யடியேன்முனே
பரிந்துபொன் மயிலேறியே—வருவாயே!
கதம்பமென் மணிமாலையா!
கனங்கொளு மயின்மேரிலே—வருதேவே!

917\. கோவை யைநிக ரிதழினுள்
கோக னகநல் வதனமான்—வடிவேசேர்
பாவை யைநிகர் குறமினுள்
பாக மதனி லுறைகுகா!—எனையாளாய்!
மாவை முனுர மதனிலே
வார யில்விடு கரதலா!—அமரேசா!
யாவை யுமருள் புரிகுவாய்!
ஆரண் யமிகு சிகியின்மா—மலையாளா!

918\. கோங்கி ளமுகிழ் முலையினுள்
கூன்பி றையெனு நுதலினுள்—வளமேசேர்
பூங்கி ளிநிகர் மொழியினுள்
பூங்கொ டிகுற மகளையே—புணர்தோளா!

தேங்கி னமுதல் வளனெலாம்
சேர்ந்தி டுவயல் செறியுநே—மனநடா!
ஓங்கி யசிகி மலையில்வாழ்
ஊர்ந்தி டுமயில் முருக! நீ—அருளாயோ?

919. சூர னுருடல் பாதி யாகிட
தூய கூரயில்—தொடுதேவே!
மார னுருட தாதை கீதையின்
மால்கொள் மானுட—மருகோனே!
ஆர மேகிரை வாவி சூழ்மயில்
ஆடு சோலைகொள்—வளர்நேமா!
சார மாகிய பாடல் நீயருள்!
சால்சி காமலை—முருகோனே!

920. சிந்துர முகத்தனுர் தொங்கிய கரத்தினுர்
செம்பிறை மருப்பினுர்—துணையாளா!
பந்துகொள் முலைப்பெணுள் அன்புயர் குறத்தியாம்
பைங்கிளி தனக்குமால்—தருதேவே!
வந்தடல்செய் மற்புயோன் ரெண்டுபட உக்ரமாய்
வஞ்சமொடு சத்தியே—வியசூரா!
சிந்துவினி னித்ரையே கொண்டமரு கக்குகா!
திங்கள்தவழ் நற்சிகா—மலையாளா!

921. வாசனை மிகுத்த நீப மாலிகை தரித்த மார்ப—எனையாளாய்!
பூசனை புரித்த வேதன் பூமலி மகட்கு லாசன்—பணிதாளா!
ஈசனை மகிழ்ச்சி யாக வேபுணரு சத்தி மாது—தருபாலா!
யோசனை மிகுத்த வாச மோர் பொழிலு முற்ற தோகை—
[மலையாளா!

922. மணமுற்றிடு நீபமென் மாலிகை
மலரைத்தரி மாபுய னே! இனி—எனையாளாய்!
தணமுற்றிடு பூவன மேவளர்
தனமுற்றிடு வேடமி னுள்மரு—வியதோளா!
குணமுற்றிடு தேவர்க ளேபணி
குக! வித்தக னே! க்ருபை யாவையும்—உதவாயோ?
பணமுற்றிட ராமுடி மேல்வளர்
பருவத்திரு சேர்சிகி மேல்வளர்—அமரேசா!

---

920. சிந்துரம் - யானை. சிந்து - கடல்: முன்னிரண்டடிகள், 'தந்தன தனத் தனு' எனவும் பின்னிரண்டடிகள், 'தந்ததன தத்தனு' எனவும் அமைந்திருத்தல் காண்க. பின்வரும் பாடல்களில் வேறுபாடு வரின் இவ்வாறே கொள்க.

922. தணம்: தண்ணம் - குளிர்ச்சி.

923. வருத்த மேபுரி சூருட னாவியை
வலக்கை வேல்கொடு ஏவிய வா! செய—மிகுசூரா!
கருத்த மேகம தாகிய மேனியள்
கனத்த மார்பினள் வேடுவர் நாயகி—புணர்தோளா!
பருத்த மேருவை நேர்முலை யாருட
பகட்டு பார்வையி லேபடு மாசையை—அகலாயோ?
விருத்த மேன்முடி சூழ்ப்ரபை சேர்நலம்
மிகுத்த கேகய மாமலை வாழ்வுறு—குகநாதா!

924. கறைமி டற்றனர் மதித ரித்ததோர்
கமழ்ந திச்சடா—தரர்பாலே
உறைதி ருப்பெணுள் வழுதி புத்ரியாள்
எழில்ப டைத்தமா—துமைபாலா!
பிறையெ யிற்றுமா வுடல்கி ழிக்கவே
பெயர யிற்கையால்—விடுதேவே!
மறைபு கழ்க்குகா! அருள்செய் வித்தகா!
மயின்ம லைக்குமேல்—வளர்நாதா!

925. சுகமுற்றிடு லீலைக ளேபுரி வடிவுற்றிடு ரூபமி னுருயர்
சுபமுற்றிடு வேடமி னள்புண—ரிருதோளா!
மகமுற்றிடு மாதவர் ஞானிகள் தருவுற்றிடு தேவர்கள் சூழ்பதி
மகிழ்வுற்றுட னேபணி நாயக!—எனையாளாய்!
அகமுற்றிடு சூருட லாவியை பெலமுற்றிடு கூர்நுதி யேமிகு
அயில்விட்டறு சூர! செ யாதிப!—அமரேசா!
செகமுற்றிடு நேமநன் னுடுயர் சிகிநற்கிரி மாமலை யாதிப!
செகமெய்க்கரு ணீசெய்கு வாயடி—யவர்பாலே

926. திருமாது விளையாடு புயநாதன் நலமேவு
செயமாயன் மகிழ்வான—மருகோனே!
பொருசூர னுடல்கீறு படவேலை யெயுநாத!
புயமீது மணநீப—மணிதேவே!
கருமேக நிறவேடர் மகமேவு மயலாள!
கனதோகை மயிலேறு—பெருமாளே!
தருசூழு மதிதாவு சிகிமேரில் வருதேவ!
தமிழ்பாட வரமேசெய்!—அமரேசா!

927. கோகனக மாதுவிளை யாடு
கூர்பகழி மாயன்மகிழ் வான—மருகோனே!
பாகனைய தானமொழி மாது
பூரவகுற மாதுபுணர் தோள!—எனையாளாய்!

தேகமிரு கூறுபட வேசெய்
சீருலவு கூரினயி லாள !—அமரேசா!
நாகமுடி மீதுவளர் தோகை
நாகமுறை தோகைமலை யாள !—அருளாயோ?

928. கச்சைத் தரித்த முலையினள்
கட்டித் தரித்த மலர்கொள்கே—சமினளே
பச்சைக் கிளிச்சொல் மொழியினள்
பக்கத் திருக்கு மறவர்மான்—அணிதோளா!
நச்சைக் கழுத்தி லணிகுவோர்
நத்தைக் கரத்தி லணிகுவோர்—அருள்பாலா!
செச்சைப் புயத்தி னரசனே!
சித்ரச் சிகிப்பொன் மலையனே!—எனையாளாய்!

929. கடம்ப வனத்தி லுறைவோர்
கரந்தை தரித்த சடையா—ரிடமேசேர்
குடங்க ளிணைத்த முலையாள்
குழந்தை மதிப்பொ னுதலாள்—தருபாலா!
அடஞ்செய் திறத்தி னசுரோன்
அடங்க வயிற்கொ டெயுமா—செயவீரா!
நடங்கொள் மயிற்[கு ருவியாய்!]
நரந்த மிகுத்த சிகிமா—மலையாளா!

930. கயிலை மலைக்கு நாத ராகிய
கரிய முகிற்கு நேரு மேனியர்—நலமேசேர்
ஒயிலை மிகுத்த வான நாயகன்
உரிய மறைச்சொல் வேத நாயகர்—பணிதாளா!
குயிலை நிகர்த்த சீனி யாமொழி
குறவர் மகிழ்ச்சி யான தேவியை—அணிதோளா!
மயிலை நடத்து சூர னே! வெகு
மணம துவுற்ற சோலை சூழ்சிகி—மலையாளா!

931. கொஞ்சிய மொழிக்கு யிலினள்
கொண்டலை நிகர்க்கு ழலினள்—வடிவேசேர்
வஞ்சியை நிகர்க்கு மிடையாள்
வங்கண மிகுத்த குறமான்—அணிதோளா!
நஞ்சியல் மிடற்றி னரனர்
நந்துகொள் கரத்த ரிடமான்—மகவேளே!
மஞ்சிகல் சிகிக்கி ரியனே!
வண்டமி ழெனக்க ருளுவாய்!—அமரேசா!

---

929. [ ] 'பரியினுய்!' என்றிருக்கலாம்.

932. முன்னொரு செனன மெடுத்தே[யதில்]
 மும்மல வலையி னிலைக்காமலே—அலைவேனே
இன்னொரு செனன மெடுக்காமலே
 என்னையு னிருச ரணத்தாளனு—யுதவாயோ!
பன்னொரு வொருந யனத்தாய்! குகா!
 பன்னக முடிக ணெளிக்காடுசேர்—மயிலாளா!
மின்னொரு வடிவி குறப்பாவைசேர்
 விண்ணுயர் சிகியின் மலைத்தேவனே!—எனையாளாய்!

933. வந்த சூர னுடனே மஞ்சின் வேலை விடுவாய்!—அமரேசா!
கந்த மேவு சடைமேல் கங்கை சூடு சடையார்—அருள்பாலா!
அந்த மான குறமான் அங்க மூடு புணர்வாய்!—குகநாதா!
நந்தம் வாழும் வயல்சூழ் நன்று லாவு சிகிமா—மலையாளா!

934. சினத்தே யெதிர்த்த சூருடல்
 தெரித்தே களத்தில் வீழிட—முனமேதான்
கனத்தே யயிற்கொ டேவிய
 கலைச்சோ மனுக்கு நேருள—வதனு! சீர்
தனத்தாள் குறத்தி நாயகி
 தனக்கே மயற்செய் வாகுள—மயிலாளா!
மனத்தே வருத்து நோய்தவிர்!
 மலர்க்கா மிகுத்த தோகையின்—மலையாளா!

935. திங்க ளணிசடை யாளனுர்
 செம்ப வளவொளி மேனியா—ரிடமேசேர்
கொங்க லரையணி கேசமான்
 கும்ப முலையுமை மாதினுள்—தருபாலா!
துங்க மிகுமயில் வாகனு!
 தொங்க லணிபுய பூதரா!—அருளாயோ?
தங்க மலைநிகர் தோகையாம்
 சந்த மலைவளர் தேவனே!—அருளாயோ?

936. பாவையை நிகர்த்த ரூபி
 பாரகல் குழைக்கு லாவு—விழிமானுள்
கோவையை நிகர்த்த வாயள்
 கோகன கமுற்ற மாது—இவளாமே
பூவையை நிகர்ச்சொல் தேவி
 பூமலி குறத்தி மேவும்—இருதோளா!
தேவையை எனக்கு நீசெய்!
 சீர்கெழு சிகிப்பொன் மேரில்—வருதேவே!

---

932. [ ] 'விடா' எனப் படித்தால் சந்தம் பொருந்தும்.

937. சோமனை மடித்த வேணி தூயஉ மையுற்ற பாணி—அதிரூப
காமனை யெரித்த கோபி காளமுண் மிடற்ற ராவல்-மிகுபாலா!
பூமனை மகட்கு வாகன் போர்புரி பவர்க்கு நீதி—மருகேசா!
தேமலர் தரித்த மார்ப! சீர்சிகி மலைக்கு வாச!—அருளேசெய்!

938. ஆழியில் அரவிற் றுயில்வோர்
ஆவல்கொள் மருகக் குமரா!—எனையாளா!
வாளியி னயனத் தினளே
வாரைய ணிதனத் தினளே—உமைபாலே
வாழ்கயி லையினற் கிரியார்
மாலையர் சடைவித் தகனுர்—தருபாலா!
நீளிரு பதுமப் பொழில்சூழ்
நீண்மயில் மலைஅற் புதனே!—குகநாதா!

939. படையெ டுத்துவரு சூர னுரையும்
படரு திக்கதிரின் வேலை யேவிய—செயவீரா!
விடையெ டுத்துவரு நாய னுர்முனம்
விறகெ டுத்துவரு தேவ னுர்பிறை—மதியேசேர்
சடையெ டுத்தஅம ரேச னுருமை
தருகு கக்குமர! நீயி னுளினின்—அருள்வாயே!
நடையெ டுத்தமயில் வாக னு! வளம்
நலமி குத்தசிகி யான சீர்மலை—முருகோனே!

940. சங்கணி பாணி மாயன் தந்தியி னுசை யால்முன்—வருவோரே
செங்கம லாலை மேவு செங்கணி னுர்த மாசை—மருகோனே!
சங்கரி தேவி வாமி தண்ணலர் சூடி மாது—தருபாலா!
கொங்கலர் நீப மாலை கொண்டிடு மார்ப! தோகை-மலையாளா!

941. செந்திரு [1 மடந்தை] மேவு
[2 செங்கம லங்கள்] போல—விழியாரே
வந்திகல் [3 கொண்ட] தான
வன்றனை நாச மேசெய்—விறலானோர்
தந்திமுன் ஆன தேவர்
தண்டுள மாலை மாயன்—மருகோனே!
கொந்திகல் நீப மாலை
கொண்டிடு மார்ப! தோகை—மலையாளா!

---

941. [ ] இவை சந்தம் பொருந்தவில்லை. இவற்றை முறையே,
1. 'மாது' 2. 'பங்கய போது' 3. 'மோது' எனப் படிக்கலாம்.

942. நதிதரித் திடுவேணி கயிலைநற் கிரிவாசர்
நலமிகுத் திடுமீச—ரிடமேசேர்
மதிநுதற் கொடிதேவி யுமையவட் கரிதான
மக! குகக் குமரேச!—எனையாளாய்!
விதிநுதித் திடுபாத! தமிழின்வித் தக!பீப
மெலியபொற் கணிசூடு—புயவேளே!
கதிமிகுத் திடுதோகை மயிலினற் பரியாள!
கனமிகுத் திடுதோகை—மலையாளா!

943. கூர்மி குத்தபடை வேலையே
கோது பெற்றபெல மாவின்மேல்—எறிவோனே!
வார்மி குத்ததன மார்பினள்
வாகெ டுத்தகுழல் வேடர்மான்—அணைதோளா!
பார்மி குத்தவள நேமனே!
பாவ லர்க்குளெனை மேன்மையாய்—அருளாயோ?
கார்மி குத்தவன மேவுசீர்
கார ணச்சிகியின் மேரிலே—வருதேவே!

944. நீலமயில் வாகன! நீயென்முனம் வா!ஐயா!—அமரேசா!
ஞாலவடி யார்களே ஞானியர்கள் தேவரே—பணிதாளா!
பாலவிழி நாதர்சேர் பாவையுமை மாதினுள்—அருள்பாலா!
வாலவடி வேலவா! வானமுயர் தோகைமா—மலையாளா!

945. இந்த வயதி லெனக்கருளா
தெந்த வயதி லெனக்கருள்வாய்?—முருகோனே!
கந்த முலவு கடப்பணிவாய்!
கஞ்ச மலரின் மனைக்கொடியாள்—மருகோனே!
சந்த மறவர் குலக்குறமான்
தந்த மயல்கொ டணைத்திடுமா—புயவோனே!
தொந்த நடன மயிற்பரியா!
துங்க மயிலின் மலைக்குமரா!—எனையாளாய்!

946. நீல நிறத்து மயிலாளா!
நீயெ எனக்கு அருளாயோ?—அமரேசா!
கோல மிகுத்த வடிவேலா!
கோக னகத்து மலராமே—பிருதாளா!

---

942. குக: விளி. கணி: கண்ணி.

946. நீயெ: நீயே: சந்தம் நோக்கிய விகாரம்.

ஆல மிடற்ற ரரனுர்பால்
ஆசை பிலிற்று முமைமானுள்—அருள்பாலா!
வால மதிக்கு நிகராமே
மாமுக! சித்ர சிகிமேர்மேல்—வளர்தேவே!

947. பிறையையொன் ருன எயிருன்
பெருகுசங்க் ராம மகிழ்வான்—நலமேசேர்
கறைநிறம் போலு மெயினன்
கனமிகுஞ் சூர னுடன்வா—திடுவேலா!
மறைநலஞ் சேரு மயனுர்
மகிழுடன் தேவர் முனிவோர்—பணிதாளா!
நறைமிகுந் தோடு புனேபூ
நளிர்வனஞ் சூழு சிகிமா—மலேயாளா!

948. திங்களை யணிந்த சடையினுர்
திண்புர மழிந்து விடுகவே—விழியார்பால்
தங்கிய நிறைந்த விழியினுள்
சங்கரி மணந்த குழலினுள்—அருள்பாலா!
கொங்கலர் கடம்ப மலரையே
கொண்டிடு நல்மொய்ம்ப! என்முனீ—வருவாயே!
தங்கம திலங்கு சிகரமே
தங்கிய சிகண்டி மலேயிலே—வருதேவே!

949. மலையைக்குடை யாகவு மேபிடி
மணியைத்தரி மாயவ ஞருட—நலமேசேர்
சிலையைப்பொரு மாநுத லாளொரு
திருமெச்சிய மாமரு கா! இனம்—எனேயாளாய்!
கொலையைப்புரி சூருட வாவியை
கொலுசத்தியை யேயணி பாணிய!—அமரேசா!
கலையைத்தரு வாய்!குக! நாயக!
கமணற்சிகி மாமலே வாழ்வுறு—குருநாதா!

950. நடன மிட்டிடு மயிலி லுற்றவ! நலமெ னக்கினி—அருளாயோ?
குடமி ணேத்திடு முலேபி லுக்கிய குறம கட்கொடி—அணே
[தோளா!
அடமி குத்திடு மசுர னேப்பொரு அயில்த ரித்திடு—குகநாதா!
தடவ ரைக்குயர் சிகிம லேக்கிரி தனில்வ ளர்ச்சிகொள்—
அமரேசா!

---

947. சங்க்ராமம் - போர். கறை - இருள். மெயினன் : மெய்யினன்.

951. வாதை பண்டுபுரி சூரனும்
மாவை வென்றவயி லாயுதா!—செயவீரா!
சீதை யென்றமட மானையே
சேரு மம்புயமென் மாயனார்—மருகோனே!
கோதை கொண்டவிரு தோளனே!
கூர்மை கொண்டவிழி வேலினள்—குறமானள்!
மாதை யென்றுமரு வேய்குகா!
வாழு யர்ந்தசிகி மேரிலே—வருதேவே!

952. அரவுதனி னிர்த்தமிடு தாளினர்
அலைதனைய டைத்தசெய ராமனுய்—வருமாயோன்
குரவுகள்கு னித்துவிளை யாடுவோர்
குலவரையெ டுத்துகுடை யேசெய்வோர்—மருகோனே!
பரவுமடி யர்க்கருள்செய் நாயகா!
பணியணிகு றக்கொடியை மேவுவாய்!—எனையாளாய்!
இரவுவரு வட்டமதி தாவுசீர்
எழிலுலவு நற்கிசியின் மேரிலே—வருதேவே!

953. கஞ்ச வரும்பின் முலையினள்
கங்கு லிலங்கு குழலினள்—கொடிதாமே
நஞ்ச மிலங்கு விழியினள்
நங்கை குறஞ்சொல் குறமினள்—புணர்தோளா!
தஞ்ச மதென்ற வடியனேன்
சம்பிர மமிஞ்ச அருளுவாய்!—அமரேசா!
மஞ்சு தவழ்ந்த வளமைசேர்
மைந்து யர்குன்றை மலையிலே—வருதேவே!

954. கங்கை சூடிய வரனர்
கங்குன் மேவிய மிடறு—ரிடமேசேர்
மங்கை மாதிரி யுமையாள்
மஞ்சு சேருயர் குழலாள்—அருள்பாலா!
சங்கை நேர்குழை மடமான்
தங்க மேனியள் குறமான்—அமர்தோளா!
பங்க யாசன மகள்சேர்
பண்ப தாகிய சிகிமேர்—வருதேவே!

955. அரவினுடல் நெளிவுபட அவனிதனில் நடனமிடு
—தோகைவாகனா!—சீமுனைகவா!
பரவுமடி யவர்களுட பழையவினை தவிரவர
—மேசெய்நாயகா!—பாவலா! குகா!

மரவுரிகொள் சடைமுடியின் மகிமையுள விறல்மருக!
—நீபமாலையே—சூடுமார்பனே!
சிரசின்மணி மகுடமுயர் சிகிமலையில் வளரவரு
—தேவதேவனே!—பாடவேசெய்வாய்!

956. சித்தி படைத்தவனே! அற்பு விளைத்தவனே!
செப்பு தமிழ்க்கருள்வாய்!—அமரேசா!
சத்தி யெடுத்துமுனே மெத்த வெதிர்த்திடுசூர்!
சட்ட கமற்றிடவே—விடுசூரா!
பத்தி மிகுத்தவனுன் வித்தை யெனக்கருள்வாய்!
பத்ம மலர்க்கழலாய்!—எனையாளாய்!
நத்தி முகிற்கணமே மொய்த்த மலர்ப்பொழில்சூழ்
நற்சி கியிற்கிரிமேல்—வருதேவே!

957. சிகர கிரியைநிகர் முலையி னுளொரு
சிறிய துடியைநிக ரிடையி னுள்வெகு—நலமேசேர்
மகர நிகருமிரு விழியி னுயர்
வடிவ 'மிலகுகுற மடவி யேபுணர்—இருதோளா!
தகர நிகருகுழ லுமைமி னுள்தரு
தனய! வரமுதவி புரி!கு கா!மயில்—முருகோனே!
அகர மெனவெதிலு முதல தாகிய
அழகு மிகுசிகியின் மலையி லேவரும்—அமரேசா!

958. சீதைக் கிசைத்த நாதர்
சீருற்ற நத்த ராசை—மருகோனே!
வாதைப் படுத்து சூர
மாவைச் செயித்த வேலை—அணிவோனே!
கோதைக் குழற்பெ ணுன
கோலக் குறத்தி மேவு—மிருதோளா!
பேதைக் கருட்செய்! மேன்மை
பீடுற்ற நற்சி காவென்—மலையோனே!

959. பச்சைமயிற் புரவியாய்!
பத்மமலர்ச் சரணனே!—எனையாளாய்!
கச்சைதரித் திடுமினள்
கற்புமிகுத் திடுபொனுள்—வடிவேசேர்

---

955. விறல் : திருமால் (909).
956. சட்டகம் = உடம்பு; மிகுத்தவன் நான்.

கொச்சைநல்க் குறமினள்
கொத்துமலர்க் குழலியாள்—புணர்தோளா!
விச்சையெனக் கருளுவாய்!
விற்சிகரச் சிகியின்மா—மலையாளா!

960. சங்கையணி குழையினள் சந்த்ரனிகர் முகமினள்-நலமேசேர்
பங்கயமின் வடிவினள் பண்புமிகு குறமினள்-புணர்தோளா!
கங்கையணி சடையினர் கங்குனிற மிடறினர்—தருபாலா!
கொங்கைமிகு [சோலையே] கொண்டசிகி [மேரிலே]—வரு
[தேவே!

961. நடனமிட் டிடுமயில் வாகன!
நலம்விளை த்திடுதமிழ் தா!குகா!—அமரேசா!
அடமிகுத் திடுமசு ரோனையே
அலரவெற் றிகொளயி லாயுதா!—எனையாளாய்!
கடமதக் கிரிமுக நாயனர்
கருணைமுக் கியதுணை யானசோ—தர!வேளே!
வடவரைக் கிரிநிக ரானதோர்
மகிமையுற் றிடுசிகி யானசீர்—மலையாளா!

962. கடப்பையணி புயனே! கருத்தில்வரு நினைவே-அருளாயோ!
விடத்தையணி மிடறர் விருப்பமொடு புணர்மா-னிடமேசேர்
குடத்தைநிகர் முலையாள் குறைத்தவிடை யுமையாள்—தரு
[பாலா!
தடத்தைமிகு வனமார் சகத்திலுயர் சிகியா—மலையாளா!

963. கயிலைக்கிரி மீதில் வாழ்பவர்
கருணைப்பர மேசர் ஈசரர்—உமைமாளுள்
மயிலைச்சரி யான சாயலின்
வடிவுற்றிடு தேவி நாயகி—தருபாலா!
குயிலைப்பொரு கானம் நேர்மொழி
குறநற்கொடி மேவு சீரிரு—புயநாதா!
அயிலைத்தரி பாணி யா!குக!
அழகுச்சிகி மேரி லேவளர்—முருகோனே!

960. கொங்கை - தேனை. [ ] இவற்றை முறையே, 'பழனமே' 'மலையிலே' எனப் படிக்கலாம்.

964. சிவமய மான ரூபர் அடியவர் தேடு பாதர்
தவழ்மதி வேணி நாதர்—பரமானோர்
நவமய நாத ரான அணுமுத லான சோதி
நதியணி தேவ நாத—ரிடமேசேர்
அவரிழை போல மேவு கொடியிடை மாது தேவி
அழகுகெள மாரி யாசை—மிகுபாலா!
தவமுனி வோர்கள் தேவர் எவர்களும் நாளும் நாளும்
தயவொடு சூழு தோகை—மலையாளா!

965. கொஞ்சுகிளி மொழியினள்
கொண்டல்படி குழலினள்—நலமேசேர்
நஞ்சுபுணர் விழியினள்
நங்கைகுற மகளையே—புணர்தோளா!
மஞ்சுலவு மயிலிலே
வந்துவரம் அருள்செய்வாய்!—அமரேசா!
மிஞ்சுமுடி யுலவுசீர்
வெங்கதிர்கொள் சிகியின்மா—மலையாளா!

966. வேதனைச் சிறையில் வைத்தவனே!
வேகமுற் றசிறை நற்சிகியாய்!—எனையாளாய்!
போதமுக் யமிகு சித்தர்களே
போகமுற் றநல பத்தர்களே—பணிதாளா!
பாதபத் தியுள எற்கினிநீ
[பார்வை துணித்த ரெடிதிநீ]—அமரேசா!
தாதகிச் சடையர் புத்திரனே!
சாமி!நற் சிகியி லுற்றவனே!—குகநாதா!

967. காவினில் வந்த வேடர்
காவல்கொள் மங்கை யாளை—அணைதோளா!
பூவினில் வந்த தேவி
போகமி குந்த நாதர்—மருகோனே!
பாவில்மி குந்த சீர்கொள்
பாவல! சங்க மீது—வருவோனே!
தாவிய இந்து சோலை
சார்சிகி குன்றை மேரில்—வளர்நாதா!

---

964. நவமயம்: ஒன்பது வகை. சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேச்சுரன், உருத்திரன், விட்டுணு, பிரமன்.

966. [ ] விளங்கவில்லை, 'பார்வை வைத்தருளு நற்கதி நீ' எனப் படிக்கலாம். தாதகி: ஆத்தி.

968. கலையை எனக்கு நீசெய்!
கமழ்செய் கடப்ப மாலை—புனைமார்பா!
அலையை யடைத்த சேனை
யதிபர் மகிழ்ச்சி யான—மருகோனே!
தலையை யறுத்து வேதன்
தனைவெ ளும்நத்த ராசை—மகவேளே!
மலையை மிகுத்த கோடு
வளர்சி கியிற்கு லாவும்—அமரேசா!

969. கஞ்சம லர்க்குள் வாழுங்
கங்குல் நிறத்த கேச—மடமான்சேர்
கொஞ்ச இடைப்பொன் மாது
கொண்ட மயிற்கு நேர்வர்—மருகோனே!
நஞ்ச மிடற்றி னுரை
நண்பு படைத்த தேவி—தருபாலா!
தஞ்ச மெனக்கு நீசெய்!
தங்கு சிகிப்பொன் மேரில்—வருதேவே!

970. நினைத்தபடி வரத்தையருள்! நிறைக்கமல—இருதாளா!
முனைக்கதிரி னயிற்கொடெதிர் முழித்தசுரன்—உடன்மீதே
வினைப்பகைகள் கெடுக்கவிடு விரைக்கணியை-அணிமார்பா!
தினைப்புனமி னணைத்தபுய! திகழ்ச்சிகியின்—மலையாளா!

971. கடம்ப மலர்புனைவாய்!
கனங்கொள் சிகிமலையா!—எனையாளாய்!
நடம்ப யிலுமயிலா!
நலங்கொள் வரமருள்வாய்!—அமரேசா!
படங்கொ ளரவணைமேல்
பயின்று துயில்புரிவோர்—மருகோனே!
வடம்பு னையுமுலையாள்
வனம்ப யிலுமடமான்—அமர்தோளா!

972. சூர மாவை வென்றவனே!
தோகை மீதில் வந்தவனே!—எனையாளாய்!
மார னுவி கொண்டவனுர்
வாச மான கொன்றையின்மா—மலரார்பால்

---

970. விரைக் கணி : மணமிகும் மாலை.

ஆர வாழு மங்கையினுள்
ஆசை யான மைந்த! இநாள்—அருளாயோ?
பார மான குன்றையனே!
பார்வை யாறு ரெண்டுளவா!—அமரேசா!

973. சிந்தை யாகுல நாசமாய்ச்
சிந்தி யோடிட நீசெய்வாய்!—[.........]
தந்தை யார்குரு நாதனே!
சங்க பாணியின் மாயனார்—மருகோனே!
பந்தை நேர்தன வேடமான்
பண்ப தாயணை மார்பனே!—எனையாளாய்!
வந்தை யா! அருள் நீசெய்வாய்!
மஞ்சு சேர்சிகி மேரிலே—வருதேவே!

974. கொஞ்சிய மொழியினள் அம்பினை விழியினள்
கொண்டல்கொள் குழலினள்—நலமேசேர்
பஞ்சிகல் பதமினள் தண்டலை யிவர்மினள்
பண்புகொள் குறமினள்—புணர்தோளா!
அஞ்சிய அசுரனோர் மண்டிட அயிலினல்
அண்டர்கள் மகிழவே—செயும்வேளே!
ரஞ்சித தமிழையே தந்தருள் புரிகுவாய்!
நன் றுகொள் சிகியின்மா—மலையாளா!

975. மயிலை நடத்திய வீரனே!
மதுகொள் கடப்பமென் மாலையே—புனைமார்பா!
அயிலை யெடுத்தெதிர் சூரனேர்
அகல மதிற்பட ஏவுவாய்!—செயவீரா!
குயிலை நிகர்த்திடு கூரலாள்
குறவர் குலக்கொடி மாதினள்—புணர்தோளா!
கயிலை மலைக்கெதி ராகவே
கருது சிகிக்கிரி மீதிலே—வருவோனே!

976. வாசத்து நீப மாலை
மார்பத்தின் மீது சூடு—குகநாதா!
தேசத்தர் தேடு பாத!
சீருற்ற தோகை நீடு—மயிலாளா!

---

973. [ ] விடப்பட்டுள்ளது. 'இதுபோதே' எனச் சேர்க்கலாம்.

975. கூரல்: குரல்; முதல் நீண்டது.

காசற்ற வேடு வோர்கள்
காதற்பெண் மீது வாசை—மிகுதேவே!
ஈசர்க்கு லாச பால!
ஏருற்ற தோகை மேலில்—வருதேவே!

977. காளி கைக்கெதி ராடுவோர்
காரணப்பர மேசனு—ரிடமேசேர்
வீழி நற்கனி வாயினள்
மேன்மை யுற்றிடு தேவியாள்—தருபாலா!
ஆழி யிற்றுயின் மாயனுர்
ஆசை யிற்கிசை வானதோர்—மருகோனே!
கோழி நற்கொடி யாளனே!
• கோல மைச்சிகி மேரிலே—வருதேவே!

978. பாற்கட லிற்றுயில் நாதனுர்
பார்ப்பதி நற்றுணை நாதனுர்—நலமேசேர்
தீர்க்கமி குத்திடு ரூபியார்
தீப்பரு திக்கர மாலின்மா—மருகோனே!
வாக்குவெ னக்கருள் நீசெய்வாய்!
வார்த்தகி ணத்தன வேடமான்—அணிதோளா!
பூக்கள்நி றைத்திடு சோலைசூழ்
பூப்பொலி நற்சிகி மேரிலே—வருதேவே!

979. முத்தென வொளிர்நகையாள்
முட்கொடி வனசமதா—முகமானுள்
நத்தென வொளிர்மிடருள்
நற்குற மகடனையே—புணர்மார்பா!
பத்தெனு முடியவனே
பட்டிட வயில்தொடுமால்—மருகோனே!
கொத்தின விரிவனமே
குப்பென வளர்சிகிமா—மலையாளா!

980. சத்தியையெதிர் சூருடல்
தைத்திடவிடு நாயக!—அமரேசா!
நித்தியசுப சேகர!
நிர்த்தனமிடு மாவினில்—உயர்தேவே!

---

980. நிர்த் தனமிடும் மா: மயில்.

கத்திகைபுனை மாபுய!
கச்சணிகுற நாயகி—புணர்தோளா!
விர்த்திகொள்சிகி யாகிய
வெற்பினில்வள ரீசுர!—எனையாளாய்!

981. மறைவாயினர் அலர்மீதிலே வளர்வேதனர்—பணிபாதா!
பிறைபோலவே யெயிறுனரே பெலநாடியே—அயிலாலே!
குறைவாகவே தொடுநாயகா! குறமாதினர்—புணர்தோளா!
கறைமேகமே தவழ்கோடுசேர் கனதோகைமா-மலையாளா!

982. கொண்டைமயி லேறு சூர!
கொண்டல்படி தோகை மேரில்—வருதேவே!
சண்டைபுரி சூரன் மார்பு!
துண்டுபட வேலை யேவு—குகநாதா!
கெண்டைவிழி காது தாவு
கின்றகுற மாது மேவு—புயவேளே!
வண்டையணி நீப மார்ப!
வந்துவரம் நீசெய் தேவ!—கணநாதா!

983. அண்டமெ லாமு மாளும் அம்பகல் சூர னவி—படவேதான்
மண்டிட வேலை யேவு வம்புயர் நீப மாலை—புனைமார்பா!
விண்டவர் தேடு பாத! வெஞ்சம ராடு சூர!—அமரேசா!
கொண்டல்கள் தாவு சோலை குன்றையின் மீது வாழு—முரு
[கோனே!

984. செச்சைபுனை அகனு மார்ப!
சித்தமிகு சிகியின் மேரில்—வருதேவே!
கச்சைபுனை தனமின் மாது
கற்புமிகு வனமி னளை—அணைதோளா!
பச்சைமயில் முதுகி லேறி
பட்சமுட னடிய னேன்முன்—வருவாயே!
விச்சைதனை அருள்செய் நீல
விஷ்ணுமகிழ் மருக! நீப—மலராளா!

985. குன்றைமலை யாதிபா!
கொண்டைமயில் வாகனா!—எனையாளாய்!
கொன்றையணி வேணிபால்
கொண்டவுமை மாதினள்—தருபாலா!

மன்றல்கமழ் சோலையே
    வந்தகுற மானையே—புணர்தோளா!
குன்றுதொறு மாடுவாய்!
    கொங்கலரி னீபமா—மலர்மார்பா!

986. அடத்தை யேபுரி மாவையே
    அறுக்க வேல்விடு நாதனே!—அமரேசா!
குடத்தை நேர்தன மாதினுள்
    குறத்தி மேல்மய லாகவே—புணர்தோளா!
நடத்து தோகையின் வாகனுர்
    நலத்தை நீயருள் வாயையா!—குகநாதா!
திடத்த சோலைகள் சூழுமோர்
    சிகிப்பொன் மேரினில் நாளுமே—வளர்தேவே!

987. கலைமதி சூடும் வேணி
    கயிலையின் மீது வாழ்வார்—இடமேசேர்
சிலைநுத லான மாது
    தினமகிழ் வான பால!—எனையாளாய்!
குலைபுரி மாவை மார்பு
    குறைபட வேலை யேவு—செயவீரா!
அலைகொளும் நேமி சூழும்
    அணிசிகி மேரில் வாழும்—அமரேசா!

988. [நடன மிடுநளின மலர்
    நிகரான சீ—ரிருபாதா!
கடக ரியின்முக நாயனுர்
    கருது துணையெனும் வேலவா!—அமரேசா!
அடவி வயல் நேமனுர்
    அதிப திருகா யினுள்முன்—வருவாயே!
வடவ ரையின் நேரதாக
    வளர் சிகியின் மேரில் மேவு—குமரேசா.]

---

987. குலைபுரிமா - கொத்தாகக் காய்க்கும் மாமரம் (சூரன்)

988. நடன மிடுமயில் வாகனு!
    நளின மலர்நிக ரானசீர்—இருபாதா!
கடக் ரியின்முக நாயனுர்
    கருது துணையெனும் வேலவா!—அமரேசா!
அடவி வயலணி நேமநா
    டதிப திமுருக னே! இநாள்—வருவாயே!
வட வ ரையைநிக ராகவே
    வளர்சி கிமலையில் மேவுவாய்!—குமரேசா!

989. தந்தி முகவற் கிளையதோர்
தம்பி குமரக் கடவுளே!—நலமேசேர்
அந்தி மதியைப் புனைகுவோர்
அங்கை மழுவைத் தரிபிரான்—அவர்பாலா!
நந்தி லகுபொற் கைவிறலார்
நங்கை மலரிற் றிருமினள்—மருகோனே!
கொந்தி லகுநற் புனமதே
கொண்ட சிகிநற் கிரியின்மேல்—வருதேவே!

990. சங்கைத் தரித்த பாணியார்
தந்திக் குதித்த மாயனர்—மருகோனே!
கொங்கைக் குறத்தி நாயகா!
குன்றைக் கிரிக்குள் நாளுமே—வருதேவே!
செங்கைக் கிசைத்த வேலவா!
திங்கட் கிசைத்த ஆனன!—அருளாயோ!
கங்கைச் சடைப்பொன் மேரினர்
கண்டிச் சையுற்ற மாதினள்—தருபாலா!

991. இந்தணி சடையார் என்பணி புயன—ரிடமேசேர்
கொந்தலர் குழலாள் கொங்கையி னுமையாள்—தருபாலா!
வந்தருள் புரிவாய்! மண்டிய மலர்நீ—பமதாளா!
செந்திரு மகள்சேர் தென்சிகி மலையா!—அருளாயோ!

992. நஞ்சை யுண்டிடு வாயினர்
நங்கை சங்கரி மாதினள்—தருபாலா!
கஞ்ச வம்பலர் மீதில்வாழ்
கங்குல் கொண்டிடு கேசமா—துறைமார்மால்
வஞ்ச ரென்றிடு தானவோர்
மங்க அம்பெயும் மாயனர்—மருகோனே!
தஞ்ச மென்றவர் நாதனே!
சந்த மிஞ்சிய தோகைமா—மலையாளா!

993. வனசமா மலரி லிலகிய
வடிவுசேர் விமலை மருவிய—புயமாயோன்
அனமதே றியம றைபுகலும்
அயனையே தருப வர்மகிழு—மருகோனே!
கனதியா கியகு றமகளை
கருதியே புணரு முருகைய!—எனையாளாய்!
எனதுபால் வரம ருள்செய்குக!
எழிலுலா வியசி கியின்மலை—வருதேவே!

994. சக்கர மேவிய பாணியார்
சக்கிரு தாமரை போலவே—திகழ்மாயோன்
பக்கம தேவளர் மாதினுள்
பட்சம தாயணை மாயனுர்—மருகோனே!
அக்கர வேயணி வேணியார்
அற்பொடு மேவுகௌ மாரியாள்—அருள்பாலா!
தெக்கண நாடினில் நாளும்வாழ்
சித்திர மாகிய தோகைமா—மலையாளா!

995. வேலைத் தரித்த கரதலா!
மேன்மைக் குறத்தி மகிழவே—புணர்தோளா!
சேலைத் தரித்த விழினள்
தேவத் திருப்பெண் மடவியே—புணர்தோளா!
பாலைப் பழித்த வளையினர்
பாறைக் குடைக்கை யரியினர்—மருகோனே!
மாலைக் கடப்பம் அணிபுயா!
வாகுற் றசித்ர மிகுசிகா—மலையாளா!

996. கறைபயில் மிடறினர் கதிமிகு மிடபமேல்—வருவோர்பால்
உறையெழில் உலவுமா னுமைதரு புதல்வனே!-எனையாளாய்!
குறைபட அசுரனே கொடுமுனை யயிலையே—வியசூரா!
மறைசொல்வர் குருபரா! வளர்சிகி மலையின்மேல்-வருதேவே!

997. தசமுக ராவணனுர்
தலைவிழ வேசெய்குவோர்—மருகோனே!
கசமெனு மானனனுர்
கனமிகு மாதுணைவா!—எனையாளாய்!
திசைமுக னுர்குருவே!
திகழ்மயில் வாகனனே!—அருளாயோ?
பசையுயர் சோலைகள்சூழ்
படிபுகழ் தோகையின்மா—மலையாளா!

998. ஆழித்துயில் மாயவ னுருயர்
ஆவற்றிரு மேவிய மால்மகிழ்—மருகோனே!
கோழிக்கொடி யாய்! அருள் வாய்! குக!
கோலச்சிகி மாமயி லேறிய—செயவீரா!

---

994. சக்கு இரு தாமரை - கண்கள் இரண்டு தாமரை.

விழிப்பய மாமிதழ் நாயகி
மேன்மைக்குற நாயகி மேவிய—இருதோளா!
பாழிக்கன காமிகு கோடுயர்
பாரச்சிகி மேரினில் வாழ்வுறு—குகநாதா!

999. மறைபயில் நாதனுர் அனமதி லேறுவோர்
மலருறை நாதனுர்—குருநாதா!
குறையிடை மாதினுள் நலமிகு ரூபியாள்
குறைமக ளாசையாய்—அணிதோளா!
நறைமலர் நீபனே! வரமருள் வாயையா!
நளினம தானசீர்—இருதாளா!
பிறைதவழ் சோலைசூழ் சிகிமலை நாதனே!
பிரியம தாகவே—வருவாயே!

1000. கனதன மிலங்கு மார்பினள்
கலைமதி சிறந்த வானனள்—மடமானுள்
கமழ்மல ரணிந்த சீர்குழல்
கறைபடி யிரண்டு பார்வையள்—குறமானுள்
மனதொடு கலந்து சேர்புய!
மகிமைகள் மிகுந்த நாயக!—நலமேசேர்
மணிபுனை திரண்ட கோடுயர்
வளருயர் சிகண்டி மாமலை—வருதேவே!
அனமென நடந்த பாதமின்
அலைகடல் துயின்ற மாலுட—துணையாமே
அழகினில் மிகுந்த மாதுமை
யவளரு ளுமைந்தனுகிய—குக!வேளே!
சனகியை மணந்த நாயகர்
தரைதனை யளந்த தாளினர்—மருகோனே!
தமிழ்தனை மிகுந்து நீயருள்!
சகமகிழ் சிகண்டி வாகன—முருகோனே!

1001. அமரர் பணிபுரி கமல மிலகிய—பதநாதா!
அழகு படவொரு நடனமிடுசிறை—மயிலாளா!
குமரி வடிவினில் விமலை மடமயில்—நிகராமே
குறமின் மனதினி லிசைய வமளியில்—அணிதோளா!

---

998. பாழி - பெருமை பொருந்திய. 'கனக மிகு' என்பது 'கனகா மிகு' எனச் சந்தம் நோக்கி நின்றது.

குமர!சரவண பவ!பொ னறுமுக!—முருகோனே!
குரும ணியினொளி மிகும குடமணி—குகநாதா!
சமர வசுரர்கள் அழிவு படவிடு—அயிலாளா!
சகல மிடிகளும் அகல வருள்சிகி—மலையாளா!

1002. வரையைப் பொருமுலையாள் சிலையைப் பொருநுதலாள்
மலரைத் தரிகுழலாள்—நலமேசேர்
மறவர்க் குலமடமான் குயிலைப் பொருமொழியாள்
வளர்நற் குறமகள்சேர்—இருதோளா!
விரையுற் றிடுமலர்நீ பமதைத் தரிப்புயனே!
மிடியைப் பொடிபடவே—அருளாயோ?
விசையிற் பனகமதே நெளியப் பொடிநடையே
விரைவிற் புரிமயிலே—றியசூரா!
துரைவித் தகமுருகா! அசுரர்க் குலகலகா!
சுகவற் புதமலராள்—வடிவேசேர்
துடியைப் பொருமிடையாள் கமலைக் கனமுடையாள்
சுபமிக் குளவிறலார்—மருகோனே!
தரையிற் பெருவளமே மிகுநற் சிகிமலைமேல்
தழைநற் குமரையனே!—நுனையேசேர்
சமரக் கதிரயிலா! கயிலைக் கிரியரசே!
தருபுத் திர!வரமே—அருளாயோ?

1003. ரதகச துரகமும் நிறைபட வனுவொடு
ரணகள மதில்வரு—அசுரோன்மேல்
நகுகதி ருலவிய நுனைமிகு அயில்தனை
நலமுடன் விடுகுக!—குமரேசா!
சதுமுக வயனுட குலம்வரு பிரபல
தசமுக மிலகிய—அசுரோனே
தவிடுபொ டிகள்பட அழிவுசெய் வளைசிலை
தனையணி விறல்மகிழ்—மருகோனே!
பதமல ரிணையினை நிதநித மனதொடு
பணிபவர் மிடியக—லிடவேதான்
பதிதனை யருள்சர வணபவ! குருபர!
பழமறை யவர்துதி—புரிதேவே!
சததள மலருறை மடமயில் வளர்சிகி
தருமலை வருகுக!—குமரேசா!
தமியன்மு னிருவிழி குளிரிட மயின்மிசை
தயவொடு மழகுற—வருவாயே!

1004. கதிமிகு மயின்மேல் வருகுரு பரனே!
கதிதனை யருள்வாய்!—அமரேசா!
கடமத சலமே ஒழுகிய மலைநேர்
கரிமுக வயனுர்—துணையாளா!
பதிவள ரடியார் இமையவ ரிறையார்
பணிபுரி சரணு!—குகநாதா!
பருதியி னொளிசேர் முடியணி பவனே!
பழமறை யவரே—துதியாளா!
நதியணி சடையார் பிறையணி முடியார்
நலமிகு கயிலா—சமதேவாழ்
நகுகதிர் மிகுமா மணிமுடி யரவே
நனியணி யவர்பா—லக! வேளே!
விதிசிறை படவே செயுமறை முதலே!
விறல்மன மகிழ்சீர்—மருகோனே!
மிடியக லிடவே யருள்சிகி மலைமேல்
மிக்வளர் குமரா!—கதிர்வேலா!

1005. பொதுவில் நடனமிடு கமல விருசரணர்
புகழ்வர் வினையகல—அருளே தான்
புரியு மொருபரமர் கயிலை மலையரசர்
புதிய மதியையணி—பரமானுேர்
மதுகொள் மலருலவு தகர மொழுகுகுழன்
மடவி கிளியைநிகர்—மொழியாளே
மதுரை யரசுமன மகிழ வருபுதல்வி
மதலை! அமரர்பணி—யிருதாளா!
சதும றைகள் பரவு திசையின் வதனர்துதி
சரவ ணபவ! குக!—எனையாளாய்!
சகல மிடியகல உனது கிருபையருள்!
தருவி னிழலரசன்—மருகோனே!
பதும மலரைநிகர் வதன! அழகொழுகு
பவள விதழ்மயிலி—குறமானுள்
பருவ மணியையணை குமர! அறுமுகவ!
படியில் வளர்சிகியின்—மலைநாதா!

1006. கடம்பையணி புயவா!
கனிந்தநய மொழியாய்!—நலமேசேர்
கரந்தையணி சடையார்
கலந்தவுமை யவளே—தருபாலா!

வடந்திகழு முலையாள்
வனங்குலவு மடமான்—வடிவாமே
மலர்ந்தமலர் முகமான்
மனங்கொடணை புயவா!—எனையாளாய்!
திடங்குலவு மசுரோன்
சிரந்துணிவு படவே—அயிலாலே
செயம்புரியும் வரதா!
சிகண்டிமலை யரசே!—குக!வேளே!
நடம்பயிலு மலையா!
நலந்தருவை யினமே!—அமரேசா!
நடுங்கவென்முன் வருமோர்
நமன்றமரை யொழிவாய்!—குருநாதா!

1007. காவுற்றிடு வேடுவர் பாவைக்குற நாயகி
கானக்கிளி போல்மொழி—பயில்வாயாள்
காதற்கிணை யாகிய நீபப்பிணை சூடிய
காளைக்கும ரா!குக!—அமரேசா!
பூவுற்றிடு நான்முக வோனைச்சிறை மீதில்வை
போருற்றிடு வேலவ!—எதிர்சூர்மா
போருக்கள மீதினில் நாசப்பட வேயுயிர்
போகச்சம ராடிய—திறல்வீரா!
நாவுற்றிடு பாவினை பாடக்ருபை யேபுரி!
வாகுற்றிடு தோகையின்—மயிலாளா!
ஞானத்தவர் யோகியர் வானுற்றிடு தேவர்கள்
நாடித்தின மேபணி—புரிதாளா!
மாவுற்றிடு வான்பதி தாவிப்புற மேயகல்
வாசப்பொழி லேமிகு—நலமேசேர்
மாழைக்கதிர் கோடுகள் மேவிக்கன மேமிகு
வாணற்சிகி மாமலை—வருதேவே!

1008. வாச மிகுந்த நீப
மாலை யணிந்த சீர்கொள்—நலமேசேர்
மார்ப! சிகண்டி யான
வாக னமுந்தி யேறி—வருவாயே!
ஆசை சிறந்த வேட
ரார்ம னைவந்த பாவை—அழகேசேர்
ஆர ணிகின்ற தேவி
யாள்பு ணர்மைந்து லாவு—புயவேளே!

தேசர் வணங்கு பாத
சீர்கொள் நடஞ்செய் தோகை—மயிலாளா!
தேவர் மகிழ்ந்து நாளும்
தேடு சிகண்டி யான—மலையாளா!
ஈசர் மணந்த தேவி
யேத ருமைந்த னாக—வருதேவே!
ஏர்க ணிறைந்த நேம
ஏர்வ ளமுந்து நாட!—அருளாயோ?

1009. திருத்த மாகிய சோலை நாள்தொறும்
வளைத்த நேமந னுடி னுருயர்
செகத்தில் வாழ்பவர் தேவ நாடினர்—பணிவோரே
திடத்தி லேயெதி ராக வேரண
களத்தி லேவரு சூர னுருயிர்
செயிக்க வேவெகு கூர்மை வேல்விடு—செயமானோர்
மருக்கு லாவிய நீப மாலிகை
தரித்த மாபுய நாத னார்கன
மகிழ்ச்சி யாமயின் மீதி லேறிய—நலமானோர்
மதிப்பொ னார்சடை நாத னாருள்
சுதச்சி காமலை மீதி லேநிதம்
வளர்ச்சி யாகிய நாத னாரெனை—மருவாநாள்
பருத்த மாமுலை மீதி லேமதன்
மிகுத்த பூமலர் யாவு மேனியில்
படச்செய் வானதி னாலு மேவெகு—துயராலே
வருத்த மாயுண வாசை யேயிலை
அதுக்கு ளேகிழ வோரி பாதகி
மடச்சி யேசுற தாலு மேயது—சினமாமே
[மலர்க்கு ளேவள ரோதி மேமுன
திடத்தி லேசெனுவேன்]ம ருதினி
மகிழ்ச்சி யாமண நீப மாலிகை—அருளாயோ?

1010. நடனமிடு மயிலா!
நலமருள்செய் குமரா!—ப்ரபையேசேர்
நதியையணி சடையார்
நகைமதியின் முடியார்—நலமேசேர்

---

1009. இது தலைவி யிரங்கல் என்னும் அகத்துறைப் பாட்டு. தலைவனை முதலிற் படர்க்கையிலும், பிறகு, முன்னிலையிலும் அமைத்துக் கூறுகிறாள்.

[ ] பொருள் விளங்கவில்லை.

தடவரையை நிகராய்
இலகுபய முலையாள்—உமைமானுள்
தனய! அருள் பரமா!
சகலவினை களுமோ—டிடவேதான்
அடல்புரியு மசுரோன்
படைகள்பொடி படவே—அதிசூராம்
அயிலைவிடு குமரா!
அமரர்பணி சரண!—குகநாதா!
உடலில்வரு வினையே
தவிரவருள் புரிவாய்!—சிகைமீதே
ஒளிரிரவி தவழ்சீ
ருயர்சிகிரியின் மலைமேல்—வருதேவே!

1011. நடிக்குஞ் சிதபத மாமயில் வாகன!
நயக்கும் படிதமிழ் பாடவு மேவரம்—உதவாயோ?
கடிக்குங் குமவிதழ் நீபமென் மாலிகை
கதிக்கும் படிபுய மீதினி லேயணி—முருகோனே!
கெடிச்சிங் கமென்முக ஞகிய சூருடல்
இழிக்கும் படியயி லேவிய நாயக!—முருகோனே!
துடிக்குஞ் சிறுவிடை வேடமென் மானணை
துணைப்பொன் புய! சிகி மேரினி லேவளர்—அமரேசா!

1012. துடிபோல மருங்குள நாயகி
சுகலீலை புரிந்திடு வேடமின்—அணைதோளா!
வடிவேலணி செங்கையி னயக!
மதமேபொழி தும்பியி னனர்—துணையாளா!
கடிமேவு கடம்பணி சேர்புய!
கனசோலை நிறைந்திடு தோகையின்—மலையாளா!
படியேழ்துதி கொண்டகு கா! அருள்
பதுமாசன மங்கையி னயகர்—மருகோனே!

1013. கோவையிதழ் வாயினள்
கோலமிகு பார்வையாள்—வனவேடர்
பாவைநல மானசீர்
பாரமுலை மீதிலே—புணர்தோளா!
தேவையுள யாவுமே
சீரினெடு நீசெய்வாய்!—குகநாதா!
பூவைமிகு சோலைசூழ்
பூவுலவு தோகைமா—மலையாளா!

1014. சகல வினையகல அருளை யுதவுகுக!
சரவ ணபவ!குரு—பரவேளே!
சுகமென் மொழிபயிலு மறவர் கொடிமருவு
துதிகொ ளிருசரண!—அமரேசா!
பகரு மறையர்நல முலவு மமரர்களும்
பணியு மிருசரண—மயிலாளா!
மிகவு முயர்பொழில்கள் வளையு முயர்சிகியின்
விளைபொன் மலையில்வரு—வடிவேலா!

1015. நவமணி கொழிக்கு மலைசூழ்
நளிர்கட லினுக்குள் அரவாம்— அணைமீதே
நயமொடு துயிற்செய் விழியார்
நளினம லருற்ற கொடியாள்—தனையேதான்
குவிமுலை யணைத்து மயலாய்
குணமொடு புணர்ச்சி புரிவோர்—மருகோனே!
குவளையை நிகர்த்த விழியாள்
குறவர்கள் குலத்தில் வருசீர்—நயமேசேர்
அவிரிழை துதிக்கு நிழலாய்
அழகிடு மிடைப்பெ ணுடனே[.......]
அணைமிசை [அற்பி னுடனே]
அணைபவ! [வித்தை]—குகநாதா!
நவபுவ னத்தில் வாழும் நயமிகு பத்தர் சூழும்
நறுமல ருற்ற சோலை நணுசிகி விற்கு லாவு—மலையாளா!

1016. மறைவாயனர் உயர்தேவனர்
மணமேவுபூ—மலர்மீதே
வளர்நாதனர் குருநாதனே!
மயின்மீதிலே—வருவாயே!
பிறையானதோர் நுதலாள்மினர்
பிடியானசீ—ரிடையாளே
பிணைசூடுகார் குழல்மாதினள்
பிடியானைபோல்—நடையாளே
கறைமேனிவே டுவர்பாவையாள்
கனிவாகவே—புணர்தோளா!

---

1015. [ ] இக்குறியிட்டவற்றை முறையே, 'மாமாகி' 'விருப்பி னுடனே' 'இதத்தை யருள்வாய்!' எனப் படிக்கலாம். ஈற்றடியும் சந்தம் மாறிவிட்டது.

கலையாருமா மதிவேணியார்
    கனபாலகா!—அருளாயோ?
முறையாகவே அடியார்களே
    முனமாகவே—பணிதாளா!
முடிசேர்சிகா மலைவாழ்குகா!
    முருகா!குகா!—எனையாளாய்!

1017. மதியைத் தரித்த சடையார் கயிலைக் கிரிக்குள் வளர்வோர்
    வடிவுற் றிருக்கு முயர்வால்—விடையாரே
விதியைச் சிறைக்கு ளிடுவோய்! அடியற் கிரக்க மிடுவாய்!
    விரைநறற் கடப்ப மலர்மா—லிகைமார்பா!
கதியைத் திறத்த மயிலே றியவித் தகக்கு ருபரா!
    கமழுற் புதக்கு றமினள்—புணர்தோளா!
ததியைத் தரித்த கையினர் மருகக் குகச் சிகரமே
    கனமுற் றபொற்சி கியின்மா—மலையாளா!

1018. கான வேடுவர் குலமான்
    காத லால்மரு வியசீ—ரிருதோளா!
கார ணா!சிறை மயிலா!
    காவி னீபமென் மலர்சூ—டியமார்பா!
தான வோர்குல மதிலே
    சாட வேல்விடு பலமா—கியதேவே!
தாக மாயென்முன் வருவாய்!
    சாமி நாயக! மறைதே—டியபாதா!
வான மேல்வள ரிமையோர்
    வாச மாமல ருறைவோன்—பணிதாளா!
வாழு நேமநன் னகரா!
    மாசி லாதிரு மயிலா—மலையாளா!
நான மேவிய சரணா!
    நாளு மாயவன் மகிழ்மா—மருகோனே!
நாக மேயணி சடையார்
    நாத னருட புதல்வா!—எனையாளாய்!

1019. அரவினுட வலியார் உடல்க ளழிபடவே
    அதிரநட மிடுசீர்—மயின்மீதே
அழகொழுகு மிருதாள் பரிபுரமெ னடையே
    அசையவென்முன் வருவாய்!—அமரேசா!

---

1017. வால் விடை - வெள்ளையெருது. மருக, குக: விளி. முதலடி பொருள் முற்றுமல் நிற்கிறது.

உரமதுடன் எதிரே நடனமொடு வருசூர்
உடல்கள்அறு படவே—எதிராவே
ஒளியயிலை யெறிவாய்! குமரகுரு பரனே!
ஒளிமையுட னருளே—தருவாயே!
பரவும்அடி யவர்பால் வினைகளொழி படவே
பரிவினொடு செகுவாய்!—முருகோனே!
பணியையணி சடையார் கயிலைமலை அரனார்
பரமர்மழு வணிபா—ணியினார்பால்
விரவுதிரி புரையாள் கவுரிதுடி யிடையாள்
விமலிகும ரியினள்—தருபாலா!
விரையுலவு மலர்சேர் பொழில்க ளுலவியசீர்
மிகுசிகியின் மலைமேல்—வருதேவே!

1020. கடம்பையணி புயனே! கரந்தையணி சடையார்—தருபாலா!
நடம்பயிலு மயிலா! நலங்குலவு மமரோர்—பணிதாளா!
திடங்குலவு மசுரோன் திரிந்துவிட வயிலே—வியவீரா!
தடங்கொள்சிகி மலையாய்! தகுந்தவர மருள்வாய்!—
முருகோனே!

1021. கந்த மேவிய நீப மாலிகை கண்ட மீதணி நாதனே!
சந்த மேவிய வேட நாயகி தங்க மேலணை தேவனே!
நந்த மேவுகை மாய னுருட நன்று சேர்மரு கா!குகா!
அந்த மேவுமை பால கா!அருள் அன்பு சேர்சிகி-யாளனே!

1022. செகமகி ழன்பர்கள் பணிசரணா!
திருநட னம்புரி சிறைமயிலா!—பெலமாவே
அகமிகு கின்றவ லசுரனையே
அணியயில் கொண்டம ரிடுகுமரா!—எனையாளாய்!
குக!மண [மிஞ்சுக டம்பணிவாய்]
குரைகட வின்றுயி லரிமருகா!—அமரேசா!
தகதக வென்றுபொன் முடியுயர்சீர்
தகுசிகி யின்கிரி வளர்பவனே!—வடிவேளே!

1023. சந்தத்தமிழ் பாடவு நீயருள்
சங்கத்திரு நாவல னே!இனி—எனையாளாய்!
அந்தப்பொரு ளாகிய நாயக!
அன்பர்க்கரு ளாவையு மேயினி—உதவாயோ?

---

1019. செகுவாய் = அழிப்பாய்.

1022. சந்தம் [ ] மாறுகிறது. 'மிஞ்சுறு குரவணிவாய்!' என்றிருக்கலாம்.

நந்தக்கர மாயவ னார்மகிழ்
நன்றுற்றிடு மாமரு கா!கன—மயிலாளா!
கந்தக்கம ணீபமென் மாலிகை
கண்டத்தணி தேவ!சி காமலை—முருகோனே!

1024. கருமேக மேனி ததியேயுண் வாயர்
கமழார்து ழாய்கொள்—புயமானோர்
கடுராவின் மீது துயிலேசெய் நாதர்
கயினேமி மாயன்—நலமேசேர்
பொருதான வோர்கள் குலநாச மாக
பொடியாக வேசெய்—செயமானோர்
புரையான போது வொருவானை கூவு
பொழுதோடி யேநல்—அருள்வோர்மால்
மருகா!பொ னீப மலர்மாலை சூடு
மணிமார்ப! நாளும்—அருளாயோ?
மயிலேறி யேயென் முனமேயி நாளில்
வருவாய்!வி ணோர்கள்—பணிபாதா!
தருவாழ்வு சோலை மிகுதோகை மேரு
தனில்வாழு நாத!—வடிவேலா!
சகமீது நாயெ னிடம்வேண தேசெய்!
தகுமாறு வீடு—தருவோனே!

1025. பச்சைக் கிளிமொழியாள் கற்றைக் கன்குழலாள்
பத்மப் பதமலராள்—வடிவேசேர்
பட்டுற் றிடுமிதழாள் முத்துப் பொருநகையாள்
பச்சைக் கமுகதைநேர்—மிடறுளே
கச்சைக் கனதனமான் சத்திக் கிணைவிழியாள்
கட்டுற் றிடுமலர்மா—லிகையாளே
கற்புக் கொருகடலாள் நட்புப் பெறுகுறமான்
கட்டித் தினமணைவாய்!—புயவேளே!
நச்சைத் தரிமிடறூர் அப்புத் தரிசடையார்
நத்தைத் தரிகரனு—ரிடமேசேர்
நத்தர்க் கொருதுணையாள் புத்ரக் குருபரனே!
நத்தித் தினமடியேன்—முனம்வாராய்!

---

1023. கமழ்+நீபம்=கமணீபம்.

1024. துயின் : கையின்.

செச்சைப் புணைபுயனே ! வித்தைக் கொருகடலே!
சித்ரத் தமிழ்தனையே—அருளாயோ?
செக்கர்க் கதிர்நிகரா யுற்றக் கொடுமுடிசேர்
சித்துச் சிகிமலைமேல்—வருதேவே !

1026. அரவுட முடிநெளி வாகவே
அதிரிட நடனம தாடுசீர்—மயிலாளா!
அழகிடு மிதழின்வி லாசமே
அணிமல ரணிபுய மார்பனே !—எனையாளாய்!
சரவண பவகுக நாதனே!
தருமடி யவர்பணி பாதனே !—ரசமேசேர்
தமிழ்சொல வெகுவரு ணீசெய்வாய்!
சரவண நதிவரு பாலகா !—முருகோனே !
கரமலர் கொடுவன வேடுவோர்
கனமட வியையணே மோகனே !—வடிவேலா!
கடினம துடனெதிர் போர்செய்வோன்
கமர்பட வயிலதை யேவுவாய் !—கனவீரா!
பரவுள தருமிகு சோலைசூழ்
பளிரிடு கொடுமுடி சேருமோர்—சிகியாமே
பருமலை தனில்வளர் நாதனே!
படிபுகழ் குருபர தேவனே!—செகநாதா!

1027 அஞ்ச வெதிர்வரு சூரனை
டண்டி ரணகள மீதிலே—நலமேசேர்
அண்டர் முனிவர்கள் வாழவே
அந்த மிகுவயி லேவுவாய்—செயவீரா!
தஞ்ச மிலையெனை யாளுவாய்!
தண்ண மிகுமலர் நீபமா—லிகைமார்பா!
தந்தி நிகருய ரானனர்
தந்து ணைவ!குக நாதனே !—எனையாளாய்!
கொஞ்ச விடையவள் வேடமான்
கொஞ்சி மருவிய தோளனே!—அமரேசா !
குன்றை மலைவரு தேவனே !
குந்த மதையணி பாணியாய் !—அருள்வாயோ ?
கஞ்ச மலர்மகள் பாகனர்
கண்டு மகிழ்மரு கா!குகா !—குமரேசா!
கங்குல் நிறமிகு கேசமான்
கங்கை யுமைதரு பாலனே !—வடிவேளே!

1026. கமர்பட - பிளவுற.

1028. வல்லிநிக ரிடையினள் சொன்னநிற வடிவினள்
மன்னுவனம் வளர்மினள்—நலமேசேர்
சொல்லிகுற மடமினள் தன்னைமரு வியபுயா!
துன்னுமல ரணிகுகா!—குமரேசா!
வில்லிலகு மிருகையார் [கொண்டனிற] வுடலினர்
விண்ணர்பணி சரணமால்—மருகோனே!
துல்யமயின் முதுகிலே மின்னவரு குருபரா!
சொன்னமலை நிகர்சிகா—மலையாளா!

1029. வனவேடுவோர் தருமாதினள்
மகிழ்வாகவே—புணர்தோளா!
சினமாகவே யெதிர்சூரன்மேல்
திடவேலையே—வியவீரா!
அனமேறுவோர் பணிபாதனே!
அருணீசெய்வாய்!—குகநாதா!
தனமேசெய்வாய்! சிகிவாகனு!
தழைதோகைமா—மலையாளா!

1030. பந்தை நிகருமிரு முலையினள்
பஞ்ச வனவரியின் மொழியினள்—நலமேசேர்
இந்தை நிகருமொரு வதனமான்
இன்ப மிகுகுறமின் அணைகுகா!—அருளாயோ?
விந்தை மருவுபுயன் மருகனே!
வெஞ்சமர்கள்புரியும் [மாவையே]—வெலுவோனே!
நந்தை [நிகர்மிடறுமை] புதல்வனே!
நன்று வுலவுசிகி மலையிலே—வருதேவே!

1031. கொன்றைதரித்தவர் மன்றுணடித்தவர்
குஞ்சர நற்றத—ளுடையாரே
கொங்கலருற்றவன் மண்டைதரித்தவர்
கொஞ்சமதிச்சடை—அரனார்பால்
மன்றல்மிகுத்தவலங்கல்தரித்திடு
மங்குனிகர்த்திடு—குழன்மானுள்
வஞ்சியிடைக்கொடி அம்பிகைவித்தகி
மங்கைமகிழ்ச்சிகொள்—புதல்வோனே!
அன்றுவெதிர்த்திடு வண்டசுரக்குலம்
அம்புவியிற்பட—வெதிர்போர்மேல்

1028. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'அல்லி னிற' என்றிருக்கலாம்.

1030. [ ] இவை, 'அசுரையே' 'மிடறுமையின்' என இருப்பின் சந்தம் பொருந்தும்.

அம்புதொடுத்தவர் பைந்துள வுற்றவர்
அன்புமி குத்திடு—மருகோனே!
குன்றைம லைக்குக! நன்றுமி குத்திடு
கொண்டைம யிற்றினம்—வருவாயே!
கும்பமு னிக்கருள் அன்றுப யிற்றிய
கொந்துக டப்பணி—யிருதோளா!

1032. நத்துக ரத்து மாயன் அற்பும கட்கு நாளும்
நட்புவி ளைத்த நாதன்—அசுரோர்மேல்
அத்திரம் விட்ட வீரன் பச்சைநி றத்த தேகன்
அற்புமி குத்த மால்தன்—மருகோனே!
வித்தக வித்தை நீசெய் மொய்த்தக டப்ப மாலை
மிக்கம கிழ்ச்சி யாக—அணிதோளா!
பத்திர முற்ற சோலை மெத்தவ ளைத்த கோடு
பற்றுசி கிப்பொன் மேரில்—வருதேவே!

1033. வேலைத் தரித்த பாணியா!
மேன்மைச் சிகிப்பொன் வாகனா!—[……]
பாலைப் பழித்த சோமனே
பாரச் சடைக்கு ஞளுமே—அணிவோர்பால்
சேலைப் பயிற்று பார்வையாள்
தேவிக் கிசைத்த பாலகா!—[……]
லீலைக் குறப்பெ ணுயகா!
நீடுச் சிகிப்பொன் மேரனே!—[……]

1034. காலை யுதித்த ரவியே போல நிறத்த வுடலார்
காலு மதத்த கயமா—முகமானோர்—துணையாளா!
மாலை யுதித்த கலையே சூடு சடைப்பொன் முடியார்
வாம மிகுத்த வரனு—ரிடமேதான்—வளர்மானுள்
சேலை யுதித்த விழியாள் மாலை தரித்த குழலாள்
தேவி யுமைப்பெ ணருள்பா—லக!வேளே!
—முருகோனே!
பாலை யுதித்த மொழியாள் வேடர் குலத்து மகளாம்
பாவை புயத்தி லணைவோய்!—சிகியாமே—மலையாளா!

1035. கடம்பணி புயனே! குறம்பயில் குறமான்
கனிந்திடு கனிபோ—லிதழாளே!
வடம்புரை முலையாள் கரந்தமி னிடையாள்
மகிழ்ந்துகு றமினுள்—புணர்தோளா!

1033. [ ] எடு சிதைந்த பகுதி. முறையே, 'குமரேசா!' 'முருகோனே!' 'அருள்வாயே' எனச் சேர்க்கலாம்.

நடம்புரி மயிலா! வரஞ்செய்வை குகனே!
    நலந்திக முயில்வேல்—முருகோனே!
கடம்பொழி கயமா முகன்றுணை யரசே!
    கனங்கொள்சி கியின்மா—மலையாளா!

1036. கச்சைத் தரித்த முலையாள்
    கற்புப் படைத்த மறமான்—அணைதோளா!
கொச்சைக் குறத்தி கணவா!
    கொற்றத் தையுற்ற கதிர்வேல்—அணிவோனே!
பச்சைச் சிகிப்பொன் மயிலா!
    பத்மக் களச்ச ரணனே!—எனையாளாய்!
செச்சைப் புயத்தி னரசே!
    சித்ரச் சிகிக்கி ரியிலே—வளர்தேவே!

1037. கஞ்சமல ரயனுர் கண்டுபணி சரணு!—எனையாளாய்!
வஞ்சசுர னுடல்மேல் மண்டவயில் விடுவாய்!—அமரேசா!
நஞ்சணியு மிடறுர் நங்கையுமை தருபா—லகவேளே!
தஞ்சமருள் புரிவாய்! தண்டலைகொள் சிகிமா—மலையாளா!

1038. வேலைத் தரித்த கரதலா!
    மேன்மைக் குறத்தி புணர்பவா!—இருதோளா!
சேலைத் தரித்த விழியினுள்
    சீருற் றிருக்கு முமையினுள்—தருபாலா!
மாலைக் கிசைத்த புயவனே!
    மாகத் தவர்க்கு நலமதே—தருவோனே!
பாலைப் பழித்த வசனனே!
    பாரச் சிகிப்பொன் மலையிலே—வருதேவே!

1039. காவில் வாழும் வேடுவோர்
    காத லான மாதினுள்—புணர்தோளா!
பாவி லேயிந் நாளுன்மேல்
    பாட நீசெய் வாய்!குகா—முருகோனே!
தேவி யீச ராசையால்
    தேடு மாது பாலகா!—எனையாளாய்!
தாவி யோடு கேகயா!
    தாக மான தோகையா—மலையாளா!

1040. செகநாயகா! பலமானபோர்
    செயுமாவையே வெலும்வீரனே!—நலமேசேர்
நகமேமுனுள் கொடையேபிடி
    நளிபூமினுள் புணர்தோளனுர்—மருகோனே!

1040. நகம்: கோவர்த்தன மலை.

மகமேசெய்வோர் முனிவோர்களே
வளமாகவே பணிவேலனே !—எனையாளாய் !
மிகவாகவே வரமேசெய்வாய் !
விரைசேர்சிகா மலைமீதிலே—வருதேவே !

1041. வாச மாகிய நீப மாலிகை மார்பி லேயணி நாதனே !
தேசர் யாவரும் நாளு மேபணி தேவ தேவ விராசனே !
பாச நோயக லாக நீயருள் ! பாணி வேல்கொடு சூரனே
நாச மாகவு மேசெய் வாய்குக ! நாத ! தோகையின் மேரனே !

1042. சரவண மீது தனில்விளை யாடு—மகவேளே !
[சகம்வள ரடியார் தயவொடு நிதமே]—பணிபர்தா !
அரவணி வேணி வளையணி பாணி—மகமேர்மேல்
அழகொடு தானும் வளர்பவர் தேவ—ரருள்பாலா !
கரதல மீது அயிலணி தேவ !—எதிர்சூர்மேல்
கனமுட னேவும் குருபர ! நாத !—முருகோனே !
வரமருள் நீசெய் ! சிகிமலை நாத !—அமரேசா !
மலரணி மார்ப ! மயில்வரு தீப !—அருளாளா !

1043. மயிலி லேறு குமரா !
மணமெ னீப மலர்மா—லிகைமார்பா !
குயிலை நேரு மொழியாள்
குறவர் மாது தனையே—புணர்தோளா !
அயிலை நேர வருசூர்
அவுணன் மீது விடுவாய் !—அமரேசா !
கயிலை நாதர் சிறுவா !
கமழ்சி காநன் மலைமேல்—வருதேவே !

1044. வாசத்துள மாலைப்புய மாமைக்குயர் தேகத்தவர்
—மருவேசேர்—மகிழ்வாவே
நேசத்துட னுகத்தினி லேநற்பொனை மேவிப்புணர்
—பவராசை—மருகோனே !
காசுற்றிடு சூரைப்பொரு காளைக்கும ரேசக்குக !
—குருநாதா !—எனையாளாய் !
ஈசற்கொரு பாகக்கொடி யேயற்பொடு தான்மெய்த்திடு
—மகவே ! தோ—கையிலாளா !

1045. வஞ்ச மிகுத்த சூரன் நெஞ்சு பிளக்க நீட
மண்ட அயிற்கொ டேவு—செயவீரா !
கஞ்ச மலர்ப்பெ ணுளை யென்று மணைத்த மார்பர்
கம்புள் தரித்த பாணி—மருகோனே !

1042. [ ] சந்தம் வேறுபடுகிறது.

தஞ்சம் எனக்கு வேறு இன்றி லவித்தை நீசெய்!
தந்தி முகத்தர் மால்கொள்—துணையாளா!
மஞ்சல ருற்ற நீடு தண்ட லையிற்கு லாவு
மஞ்சு தரித்த கோவை—மலையாளா!

1046. காவில் வாழ்பவள் கார்கொள் கேசமின்—அணைதோளா!
பூவில் வாழ்வுறு பூவை நேர்மொழி—மடமானுள்
தேவி சேர்புய! சீர்செய் மாயவன்—மருகோனே!
வாவி சூழ்சிகி வாகுசேர் மலை—வளர்தேவே!

1047. சங்கை யணியிரு கரவனுர்
தந்தி முனம்வரு விறலினுர்—மருகோனே!
பங்க யமென்மலர் மகளைநேர்
பண்பு மிகுகன வடிவினுள்—குறமானும்
மங்கை யணையிரு புயவனே!
வம்பு புரியசு ரன்விழவே—அடுவீரா!
கங்கை வளமுல வுவயல்சூழ்
கந்த மிகுசிகி மலையின்மேல்—வருதேவே!

1048. நடஞ்செய்மயில் வாகா! நலங்குலவு தேவர்—பணிதாளா!
[படம்புரையு மார்வே] பரிந்துவணி தோளா—ரிடமேசேர்
வடம்புரையு மார்பாள் மகிழ்ந்துதவு பாலா!—எனையாளாய்!
தடங்குலவு காசேர் சகம்புகழ்சி காமா—மலையாளா!

1049. அண்டமெ லாமும்வாழ் கின்றிடு சூரனுர்
அந்தம தாகவே—திறலாமே
தண்டம தாகவே நின்றுட னுகவே
சண்டைசெய் கூர்மையா—கியவேலா!
அண்டர்கள் தேவரே அன்பர்கள் யாவரே
அன்பது வாகவே—தொழுதாளா!
கொண்டல்கள் தாவுசீர் தண்டலை சூழுமே
குன்றையின் மேரிலே—வருதேவே!

1050. சினமி குத்திடு மசுரனே
தெறிப டச்செயு மயிலனே!—எனையாளாய்!
தனமி குத்திடு முமையினுள்
தனைம கிழ்ச்சிசெய் கயிலையார்—அருள்பாலா!

---

1048. [ ] விளங்க வில்லை. 'படம்புரிய ராவே' என்றிருக்கலாம்.

வளமி குத்திடு குறமினள்
மலர்த ரித்திடு புயமினள்—அணையாளா!
கனமி குத்திடு சிகரமார்
கமழ்சீ கிக்கிரி முருகனே!—அயிலாளா!

1051. கதிமி குத்திடு சூர னுருடல்
கருதி நெட்டிலை வேலை யேவிய—செயவீரா!
நதிமி குத்திடு வேணி யார்வெகு
நலமி குத்திடு தேவ னுருட—விடமேசேர்
மதிமி குத்திடு சீர்கொள் மாமுக!
மகிமை யுற்றிடு தேவி யாளருள்—குகநாதா!
பதிமி குத்திடு நேம நாடுயர்
பணைசி கிக்கிரி மீதி லேவரு—குருநாதா!

1052. வாகையணி மார்பா! வாசமிகு நீபா!—குகநாதா!
தோகைமலை வாசா! தூயமதி நேராம்—முகவேளே!
டாகையுள மாவே நாசமிட வேலே—வியவீரா!
ஓகைபுனை தேவே! ஓதுதமிழ் நீயே—தருவாயே!

1053. கஞ்ச மலரில் வாழு நாதனர்
கண்டு பணிசெய் நீப மாலையாய்!—அருளாயோ?
நஞ்ச மிலகும் [மிடறினர்]
நந்து வுமையை மேவு மீசனு—ரருள்பாலா!
தஞ்ச மிலையி நாளில் நீசெய்வாய்!
சங்க மிலகு தேவ! நாவலா!—எனையாளாய்!
அஞ்ச வசுரை யேவெல் வேலனே!
அந்த முலவு தோகை மேரிலே—வருதேவே!

1054. நடனமிட் டிடுமயில்மீ துறவெனக் குமுன்வருவாய்!
நளினமுற் றிடுமிருதாள்—முருகோனே!
அடம்விளைத் துடனெதிரே ரணகளத் தினில்வருவோன்
அசுரனைச் சமரிடுகூர்—அயிலாளா!
கடமதத் திடுகரிமா முகவனுக் கிளைதுணையாய்!
கமழ்கடப் பணிபுயவா!—எனையாளாய்!
தடமலர்ப் பொழில்மிகவே தவழுநற் சிகிமலைமேல்
தகவளர்ச் சிகொளமரோர்—பணிதாளா!

---

1053. [ ] இதனை, 'நீல க்ரீவனர்' எனப்படிக்கலாம்.

1055. எனக்கு நீவர மருள்வாய்! மயிற்பொன் வாகன முருகா!
இனித்த சோலைய! எளியே—னிடம்நீதான்
வனத்தில் வாழ்வுறு குறவோர் குடிக்கு ளேவரு மடமான்
மகிழ்ச்சி யாகிட அணைமேல்—அமர்தோளா!
சினத்தி லேவரு மசுரோன் இறக்க வேல்தனை விடுவாய்!
சிறக்கு நீபமென் மலர்சூ—டியதோளா!
மனத்து நோய்தவி ரயனே! சிகிப்பொன் மேரினில் வருவாய்!
மகிழ்ச்சி யாயடி யவரே—பணிதாளா!

1056. கஞ்சத் திருப்பெ ணகலாத
கங்குற் கெதிர்த்த திருமேனி—வளர்மாயோன்
கந்தத் திருத்துள வின்மார்பர்
கஞ்சத் தயித்ய னுயிர்வீழ—விடுவோரே
அஞ்சக் களத்தி லெதிராக
அண்டிச் சமர்ச்செய் பெலராவ—ணனையேதான்
அம்பைத் தொடுத்து வுயிர்போக
அன்றப் படிச்செய் செயராமன்—மருகோனே!
நஞ்சத் தையுற்ற விழிமாது
நங்கைக் குறத்தி புணர்தோள!—எனையாளாய்!
ரஞ்சிக் கவித்தை தனையேசெய்!
நன்றுற் றிருக்கு மலர்நீப—மணிமார்பா!
நெஞ்சத் திலற்பி னுடனேபொன்
நிம்பப் புயத்த னருள்பாவை—தருபாலா!
நின்பொற் பதத்தை யருளாய்! பொன்
நின்றுற்ற நற்சி கியின்மேரில்—வருதேவே!

1057. இச்சைப்பட வேடு வோர்தரு கற்புக்கொரு வாளி யாகிய
இக்குக்கெதி ரான மாமொழி—நலமேசேர்
கொச்சைக்குற மாது மேவிய வித்தைக்கும ரேச! நாயக!
கொற்றக்கதிர் வேலை யேயணி—கரவேளே!
பச்சைக்கன மான தோகையின் நிர்த்தச்சிகி வாக னு!குக!
பத்மக்கழல் நாத! நாயக!—அம்ரேசா!
செச்சைப்புய வேல வா! தரு மொய்த்துற்றிடு சோலை சூழ்தரு
சித்ரச்சிகி மேரி லேவரு—குருவேளே!

1058. வித்தையில்மி குத்த பாவலா!
வெற்றிகொள யிற்கை யாளனே!—எனையாளாய்!
தத்தையைநி கர்த்த வாயினுள்
சற்குணமி குத்த பாவையாள்—குறமானுள்

1056. நிம்பப் புயத்தன் - பாண்டியன். பாவை: தடாதகை.

முத்தைநிகர் பற்கு லர்வவே
மொய்த்தமலர் மெத்தை மீதிலே—புணர்தோளா!
சித்தையுள கர்த்த நாதனே!
சித்திரநி றைத்த தோகைமேல்—வருதேவே!

1059. பதும மலர்த்திரு மாதை யேநிகர்
பருவ மிகுத்திடு மார்பி னுள்குற—மகள்தோளா!
கதுமென விக்கண நேர தாய்வரு
கனமிகு நற்பெல மாவை யேவெலு—மிருதோளா!
விதுதரி நற்சடை வேணி நாயகர்
விழைவுள வித்தகி யாசை யாகிய—புதல்வோனே!
புதுமைமி குத்திடு தோகை வாகன!
புகழ்சிசி மெய்க்கிரி மீதி லேவரு—குகதேவே!

1060. கடம்ப மலரே கனிந்து புனைவாய்!—புயவேளே!
நடஞ்செய் மயில்மேல் நலங்கு லவவே—வருவோனே!
அடஞ்செ யசுரோன் உளங்கு லையவே—செயும்வீரா!
திடங்கொள் முடிசேர் சிகண்டி மலையா—திபவேளே!

1061. வந்த டுத்தவனை யாதரி!
வம்ப டுத்தமலர் நீபமென்—மணிமார்பா!
பந்த டுத்தமுலை நாயகி
பங்க யத்துமுக வேடமின்—அணைதோளா!
இந்த டுத்தசடை வேணியர்
இன்ப முற்றவுமை பாலக!—முருகோனே!
நந்த டுத்தவயல் சூழ்சிகி
நன்று டுத்தமலை மேல்வரு—குகநாதா!

1062. மறையோர்புக ழாளனே!
மதிபோல்வரு மானனு!—எனையாளாய்!
பிறையேநிகர் கோடுமா
பெரிதாகிய யானையார்—துணையாளா!
கறையாகிய மிடறூர்
கமழ்தாதகி புனைவோர்—தருபாலா!
சிறைமாமயில் முருகா!
சிகிமேரினில் வருவாய்!—அமரேசா!

---

1062, பின்னிரண்டடிகள் வேறு சந்தம்.

1063. இக்குச்சிலை யானைமு னேயெரி
விக்கும்பிறை சூடிய வேணியர்—ப்ரபையேதான்
தக்குக்கதிர் மேனியி னுயகர்
கற்பொற்சிலை வீரர்மெய்ஞ் ஞானர்சொல்—புதல்
வோனே!

அக்குப்புனை மார்பர்கள் வேடர்மின்
அற்புற்றணை மாபுய வா! இனம்—எனையாளாய்!
திக்குத்திசை யோர்பணி கோடுயர்
சித்ரச்சிகி மேரினி லேவரு—குகநாதா!

1064. காலை யுதித்த பானு
காவு முடற்பொன் மேரு—வருவோரே
சேலை நிகர்த்த பார்வை
தேனின் மொழிச்சி தேவி—தருபாலா!
பாலை நிகர்த்த சோமன்
பார முகத்த! நீயென்—முனம்வாராய்!
வேலை யெடுத்த வீர!
மேன்மை மிகுத்த தோகை—மலையாளா!

1065. சந்த மிகுத்த பாவையே
தந்து எனக்கு நாளுமே—அருளாயோ?
கந்த மிகுத்த நீபமே
கண்ட மதிற்கு லாவவே—புனைதோளா!
தொந்த [மென் சேவலாடுசீர்]
துங்க மயிற்கு வீரனே!—குகநாதா!
அந்த மிகுத்த கோடுசீர்
அங்க மயிற்பொன் மேரிலே—வருதேவே!

1066. அண்டியெதி ராடு சூரை
அஞ்சவம ராடு கூரின்—வடிவேலா!
வண்டிலகு நீப மாலை
மங்களம தாக மார்பில்—அணிவோனே!
விண்டலமு லாவு தேவர்
விஞ்சையர்கள் தேடு பாத!—எனையாளாய்!
தண்டமிழை நீசெய் நாத!
தண்டலைகள் சூழு தோகை—மலையாளா!

---

1065. [ ] சந்தம் வேறு; 'மெனிர்த்த மாடுசீர்' எனப் படிக்கலாம்.

1067. கொத்துமலர்க் காவி லேவரு
கொட்டநடித் தாடு தோகையின்—மயிலாளா!
குத்துமுலைத் தேவி யாகிய
கொச்சைமணக் காரி வேடமின்—அணைதோளா!
பத்துமுடித் தான வோனைவெல்
பத்மமலர்த் தேவி சேர்புயன்—மருகோனே!
அத்துவிதச் சோதி யாகிய
அற்புதநற் றேகை மாமலை—முருகோனே!

1068. கன்னலை நேரு மொழியாள்
கண்ணிணை தாவு குழையாள்—வடிவேசேர்
நன்னய மான மறவோர்
நண்ணிய வாசை மகள்சேர்—புணர்தோளா!
இன்னமென் மீது தயவே
யெள்ளள வேனு மருளா—ததுவேனோ?
சொன்னம தான முடிசேர்
துன்னுசி காமென் மலைமேல்—வருதேவே!

1069. கச்சை யணியு முலையாள்
கற்பு மிகவு முளமான்—நலமேசேர்
கொச்சை மணமெ னுடலாள்
கொப்பு இலகு குழையாள்—குறமானள்
இச்சை மிகவு மணைவாய்!
இப்ப வடியன் முனமே—வருவாயே!
செச்சை யணிசெய் புயனே!
சித்ர மருவு சிகிமா—மலையாளா!

1070. கடம்ப வனத்தி லுறைபவர்
கரந்தை தரித்த முடியினா—ரிடமேசேர்
மடந்தை யுமைப்பெ ணலமிகு
மணங்கொள் குழற்பெ ணருளிய—புதல்வோனே!
அடஞ்செ யரக்கன் முடிவிழ
அலங்கொ டயிற்கொ டெறிபவ!—முருகோனே!
குடங்கை நிகர்த்த விழியினள்
குறஞ்சொல் குறத்தி மகிப!சி—கியின்மேரா!

1071. சிந்தை யாகுலம் யாவுமே
சிந்த வேக்ருபை நீசெய்வாய்!—அமரேசா!
தந்தை தாயகம் யாவுநீ!
சங்க நாவல னைகவே—அருளாயோ?

இந்தை யேயணி வேணியார்
    என்று மாசைகொள் பாலகா!—குகநாதா!
பந்தை நேர்முலை வேடமான்
    பண்ப னே!சிகி மேரில்வாழ்—பவ!நாதா!

1072. கஞ்சமலர் நான்முக னார்நிதம்
    கண்டுபணி யேபுரி பூநிகர்—இருதாளா!
தஞ்சமெனை யாதரி யாய்!குக!
    சங்கமதி லோர்புல வா!அரு—ளுதவாயோ?
வஞ்சசுர மாவிழ வேயயில்
    மண்டவெயு மாபெல வா!மயில்—முருகோனே!
நஞ்சவிழி வேடுவி சேர்புய!
    நன்குமிகு தோகையின் மாமலை—வருதேவே!

1073. கூர்மிகு வேலினு லேயெதிர் சூருடல்
    கூறிட ஏவுவாய்! மாபெல வா!குகா!—வடிவேளே!
வார்மிகு மேன்மையா! மோகன மாதினுள்
    மாயைசெய் வேடமான் ஆசைகொள் தோழனே!—
கார்மிகு மேனியார் கார்முக வாழிமால் [அமரேசா!
    [......]ராகவ னார்மகிழ்—மருகோனே!
தார்மிகு நீபமா மாலிகை சேர்புயா!
    தாமிகு தோகைமா மேரினி லேவரு—முருகோனே!

1074. எனது மனவிய கூலமும் யாவையும்
    யினியெ னிடமது போகவு மேயருள்—புரிவாயே!
கனக மயில்மிது கேறிய நாயக!
    கருணை மதுபொழி பூமல ரேநிகர்—முகவேளே!
வனச மலருறை நாயகி நாயகர்
    வலிய வசுரரை யேகொலு மாலுட—மருகோனே!
பனக முடிவளர் பூவினி லேவளர்
    பரிய முடியுயர் தோகையென் மாமலை—முருகோனே!

1075. கயிலைமலை வாசனார்
    கடுஅரவு சூடுவோர்—இடமேசேர்
அயிலைநிகர் பார்வையாள்
    அருள்குமரி பாலகா!—எனையாளாய்!

---

1073. [ ] விடப்பட்டுள்ளன. 'காதல்கொள் சீதைசேர்' எனச் சேர்க்கலாம்.

1074. 'வியாகூலம்' சந்தம் நோக்கி, 'வியகூலம்' ஆயிற்று.

ஒயிலையுள வேடமான்
ஒளிருமுயர் மார்பிலே—அணைதோளா!
மயிலைமிசை யேறியே
வருவைசிகி மேரிலே—வளர்தேவே!

1076. கோகன கத்திரு வேங்கை ருற்றிடு
கூர்விழி பெற்றிடு—மடமானுள்
மேகமெ னச்சொலு தேககி றத்திடு
வேடுவர் நற்கொடி—புணர்தோளா!
ஆகமி ரட்டிய தாகவ ளுத்திடு
ஆரயி லைக்கொடு—எதிர்மாமேல்
வேகமி குத்திட வேதொடு வித்தக!
மேன்மைகொள் நற்சிகி—மலையாளா!

1077. திக்குத்திசை யோர்பணி நாயக!
சித்ரச்சிகி மாமலை வாழ்வுறு—குமரேசா!
இக்குச்சிலை யோனிடம் வாதுசெய்
இச்சைக்கவு மாரிமி னுள்புணர்—பவர்பாலா!
கைக்குட்கதிர் வேலதை யேகொடு
கற்குப்பிள வாய்விட வேசெயு—முருகோனே!
இக்குக்கன பாவல னே!அருள்
எட்டுக்குண நாயக னே!க்ருபை—புரிவாயே!

1078. மதியறுகு கொன்றை நீடு விடவெயிறு கொண்ட ராவை
மவுலியில ணிந்த தேவ—ரிடமேசேர்
அதிவடிவி லங்கு தேவி யிமயமலை யன்சொல் பாவை
அமிர்தமெனு மின்சொல் மாது—தருபாலா!
கதிருலவு கின்ற வேலை யெநிருமவு ணன்றன் மீது
கதமிகவு டன்று ஏவு—செயவீரா!
விதிமுதல னந்த கோடி அமரர்பணி கொண்ட தோகை
விமலமலை யென்றும் வாழ—வருதேவே!

1079. வாதை படுத்து சூர ராவ ணனைக்கொல் வீர
மாய வனிச்சை யான—மருகோனே!
தாதை தனக்கு மேன்மை யான குருக்க ளான
சாமி! எனக்கு வாழ்வு—தருவாயோ?
பேதை குறத்தி மீதில் ஆசை விளைத்த தேவ!
பீடு யர்நற்சி காமென்—மயிலாளா!
கோதை யகற்று நாத! நீப மலர்ப்பொன் மார்ப!
கோல மிகுத்த தோகை—மலையாளா!

1080. கடம்பைத் தரித்த மார்பா!
கனிந்திட் சணத்தில் இனியே—அருளாயோ?
குடம்பொற் பிருக்கு மார்பாள்
குறஞ்சொற் குறப்பெ ணுடனே—புணர்தோளா!
அடஞ்செய்ப் பெலத்த மாவோ
டடும்பொற் கதித்த வடிவேல்— அணிவோனே!
விடம்பைத் தரித்த ராமேல்
விளங்கிப் பெருத்த சிகிமா—மலையாளா!

1081. குன்றை மலைக்கரசே! கும்ப முனிக்குருவே!—எனையாளாய்!
கொன்றை தரித்தவனுர் [குஞ்சரி நற்றிதழா—முடையாரே]
மன்றி னடித்தவரே மங்கள முற்றிடுபா—லக!வேளே!
வன்றிற லுற்றிடுசூர் மங்க வயிற்கொடெய்வாய்!-அமரேசா!

1082. ரதத்தி லேறிவரு மசுரனே களத்தில் மேனியிரு பிளவதாய்
நலத்த கூர்மைவடி யயிலினுல்—அடுவோனே!
கதத்தின் மீறிவரு கரியதாய் நிறத்த ராவணனை யமரிலே
கடக்க [ணைவிடு] விறலினுர்—மருகோனே! [ரையே
மதத்தி னுலெதிர்செய் சமனையே எதிர்த்தெ ணுயிரவ ரவ
மடிக்க வேகமுவி லிடுகுகா!—எனையாளாய்!
உதித்த சூரியனை நிகரதாய் நிரைத்த கோடுலவு ககனமே
உயர்த்த தோகைமலை யதனிலே—வருதேவே!

1083. கந்த மருவி வாழுங் கஞ்ச மலரில் வேதர்—பணிதாளா!
நந்த மிலகு பாணி நங்கை கமலையாளர்—மருகோனே!
சந்த நிரைசெய் பாடல் தந்து கிருபை நீசெய்!—அமரேசா!
வந்த டியவர் சூழும் மங்குல் [தவழ்சிகி] மேரில்—வருதேவே!

1084. கறையணி மிடறினுர் நுதலணி விழியினுர்
கயிலையின் மலையினுர்—ரதியாள்சேர்
இறைதனை யெரிசெய்வோர் திரிபுர பகையினுர்
இமயமின் மருவுவோர்—தருபாலா!
முறைமுறை யமரரே பணிபுரி சரணனே!
முருகுயர் மலரையே—புனைதோளா!
குறைபட அசுரரை பொருகள மதனிலே
கொலுபவ! சிகியின்மா—மலையாளா!

---

1081. [ ] விளங்கவில்லை. இதனை, 'குஞ்சர நற்றதளா—முடையாரே' எனப் படிக்கலாம்.

1082. [ ] விளங்கவில்லை. 'வாளிவிடு' என இருக்கலாம்.

1083. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'கொள்சிகி' எனப் படிக்கலாம்.

1085. வித்தை யெனக்கருள்வாய்!
வித்தக க!மற்குறமான்—அணைதோளா!
**தத்தை தரித்தகையா!**
சத்தி தரித்தகையா!—எனையாளாய்!
முத்தை நிகர்த்தெயிறு!
முற்பட திர்த்தசுரோர்—குலகாலா!
சித்தை விளைத்தவனே!
சித்திர மெய்ச்சிகிமேல்—வருதேவே!

1086. கட்டிய மலர்சூடிய [கட்டழ கழகாளிட]—வருவாயே! [னே!
வெட்டியி லெதிராடிய மெட்டுள வசுரோன்விழ—அடுவோ
மட்டிசை பதுமாசனர் மத்தக வயிராவதர்—பணிபாதா!
மொட்டிசை தனவேடமின் மொய்ப்பினி லணைவாய்!சிகி—
மலைநாதா!

1087. மருவுயர் நீப மான மதுமலர் மாலை சூடு—புயவேளே!
திருமகள் மேவு நாதர் செயமிகு மாய ஞர்தம்—மருகோனே!
பொருதிய சூரன் மார்பு புரைபட வேலை யேவி-அடுவோனே!
கருதிய பாவை நீசெய் கமழ்சிகி மேரில் வாழும்—அமரேசா!

1088. மேனிகரு முகிலது போலவும்
வேடுவர்கள் குலமதி லேவரு—மடமானுள்
வானிலுயர் இமையவ ரேதொழு
வாசவனன் மடமக ளாளையும்—அணைதோளா!
கானிலகு மயில்மிசை யேறிய
காவலவ! எனைநித மாதரி—அமரேசா!
தேனிலகு மிதழுள நீபம
தேநிதமும் அணிபவ! **தோகையின்—மலையாளா!**

1089. மணமி குந்திடு நீபமா லிகைபு னைந்திடு மார்பனே!
மலர்பொ லிந்திடு பூமிஞள்—தனையேசேர்
குணமி குந்திடு வேடமான் மணமு கந்துளந் நாளுமே
குடமி ணைந்திடு மார்பிலே—புணர்தோளா!
தணமி குந்திடு பூவிலே வளமை தங்கிய நாதனர்
சகநி றைந்தடி யார்களே—பணிதாளா!
நிணமி குந்திடு வேலனே! அவுணர் தங்குல காலனே!
நிதிமி குந்திடு [சிகியின் மா]—மலையாளா!

---

1085. தத்தை தரித்தகையா!: தத்தை - கிளி (833-பார்க்க.)
1086. [ ] விளங்கவில்லை. 'கட்டழகுடையாளிடம்' என்றிருக்கலாம்.
1089. [ ] சந்தம் பொருந்தவில்லை..'மா சிகி' என அமைக்கலாம்.

1090. கொச்சைக் குறத்தி கணவா!
குப்புற் றெதிர்த்து வருசூர்—விழவேதான்
செச்சைக் கதித்த வயிலே
சித்தித் துடற்றி விடுவாய்!—அமராளா!
கச்சைத் தனத்து மயிலாள்
கட்டித் தொடுத்த குழலாள்—உமைபாலா!
நச்சைத் தரித்த வரவே
நத்திச் சுமத்த சிகிமா—மலையாளா!

1091. நடனமிட் டிடுமயின்மேல்
நலமிகுத் திடவருவாய்!—அமரேசா!
வடவரைக் கிரிதனிலே
வளரும்வித் தகனிடமே—வருமானுள்
குடமுலைத் தனமயிலாள்
குமரியச் சுதர்துணையாள்—அருள்பாலா!
தடமிகுத் திடுபொழில்சூழ்
சகமகிழ்ச் சிகொள்சிகிமா—மலையாளா!

1092. தத்தையை நிகர்மொழியாள்
சத்தியை நிகர்விழியாள்—வனமானுள்
முத்தைநி கருமெயிருள்
மொய்த்திடு குழல்குறமான்—அணைதோளா!
வித்தையை யருள்புரிவாய்!
வித்தக மயில்தனிலே—வருதேவே!
நித்திய சுபகரனே!
லெட்சண மிகுசிகிமா—மலையாளா!

1093. கனகம லைச்சி வேசர்
கமழ்மல ருற்ற வேணி—யிடமேசேர்
தனகிரி யுற்ற மாது
தமிழ்வழு திப்பெ ணுள்சொல்—மகவேளே!
சினவிளை வுற்ற மாவை
செயமிகு சத்தி யேவி—அடுவோனே!
வனம்விளை வித்த கோடு
வளர்சிகி நற்பொன் மேரில்—வருவோனே!

1094. மதியையணி சடையார் வளர்கயிலை மலையா—ரிடமேசேர்
துதியிலகு கழலாள் துரைமகள்சொல் புதல்வா!—எனையா
ளாய்!
அதிக்வர மருள்வாய்! அமரர்பணி குமரா!—மயிலாளா!
கதியருள்செய் சிகியாம் கனகமலை தனிலே—வருதேவே!

1095. கஞ்ச மலர்த்திருவாய்
        கங்குல் நிறத்திடுசீர்—குழன்மானாள்
பஞ்ச வனக்கிளியாள்
        பைங்கொடி நற்குறமான்—அணைதோளா !
செஞ்ச ரணக்கழலாய் !
        திங்கண் மிகுத்திடுசீர்—முகவேளே !
தஞ்ச மெனக்கருள்வாய் !
        தங்க மலைச்சிகிமா—மலையாளா !

1096. இந்தணி வேணியார் இங்கித நாதனார்—நலமேசேர்
சந்தமு லாவுமோர் சங்கணி பாணியா—ரிடமேசேர்
கொந்தலர் சூடுமான் கொம்பனை யாள்மினாள்—தருபாலா !
வந்தருள் நீசெய்வாய்! மஞ்சுகொள் தோகைமா—மலையாளா !

1097. தூய மதி [......]முகமானாள்
        தோகை மயில் [......]குறமானாள்—புணர்தோளா !
நேய முடனென்முன் வருவாயே !
        நீகி ருபைதனை யருள்வாயே !—குமரேசா !
மாய அசுருட னெதிராவே
        மாள அயில்தொடு செயவீரா !—குகநாதா !
மாயன் மகிழ்புரி மருகோனே !
        வாழ்வி லுயர்சிகி மலையானே !—[......]

1098. கங்கையணி சடையார் கண்டமது கறையார்-உமையேதான்
செங்கையணி யரனார் திங்கள்புனை முடியார்—அருள்பாலா !
பங்கயமின் மடமான் பண்புபெறு மரியார்—மருகோனே !
நங்கைகுற மகளாள் நண்புசிகி மலைமேல்—வருதேவே !

1099. கோவைநிகர் கனிவாயாள்
        கூர்மைவிழி உமைமானாள்—தனையேசேர்
சேவையுள அரனாரே
        தேவர்பணி யிறையாரே—தருபாலா !
மாவைவெலும் அயிலாளா !
        மாமயிலில் வருதேவே !—எனையாளாய் !
பாவைகுற மகள்பாகா !
        பாரமிகு சிகியாமே—மலையாளா !

---

1097. [...] விடப்பட்டவை. இவை முறையே, 'நிகர்' 'நிகர்' 'முருகேசா !' என அமைத்துப் படிக்கத்தகும்.

1100. கனக மலையை நிகராங்
கலவை யணியு முலையாள்—நலமேசேர்
அனமெ னடையி னிருதாள்
அழகு மிகுகு றமினள்—புணர்தோளா!
தினக ரனைநி கரவே
திகழு வடிவி னரசே!—எனையாளாய்!
வனச மலரின் வருமான்
மருவு சிகியின் மலைமேல்—வருதேவே!

1101. பொல்லாத கலிநோய் தனைநீதவிர்
புள்ளான மயில்வா கனமேறிய—செயவீரா!
கல்லாத கொடியோர் தனைநீயொரு
கன்னுவென் மொழியே புகலாதெழில்—நிதிதாராய்!
மல்லாடி யெதிர்சூ ருடல்கீறிய
வல்லாயு தமதா கியவேலவ!—எனையாளாய்!
சல்லாப நலுலா ச!குணகர!
தண்ணார்பொ ழில்கள்சூழ் சிகிமாமலை—வருதேவே!

1102. மதியணி சடையார் வளர்கயி லையினர்—மறைவாயோன்
விதிபுக ழரனர் விடையுயர் கொடியார்—அருள்பாலா!
எதிரெதிர் வருசூர் இருபிள விடவே—அடுவேலா!
கதிர்தவழ் முடிசேர் கனமிகு சிகிமா—மலையாளா!

1103. திருமருவிய புயனர் திகழ்துளவணி புயனர்—அவுணரை
பொருசமரிடை யெதிரே புரிசிலையணி கரனர்—மருகோனே!
வருசரவண பவனே! வரமருள்புரி குகனே!—எனையாளாய்!
கருமுகில்தவழ் முடிசேர் கனமுறுசிகி மலையா!—முரு
கோனே!

1104. தந்திமு கற்கிளையாய்!
தஞ்சமெ னக்கருள்வாய்!—அமரேசா!
சிந்துத னிற்றுயில்வோர்
செங்கம லைப்புணர்வோர்—மருகோனே!
வந்திக னுற்றிடுவோன்
வஞ்சசு ரைப்பொருவே—லவ!வேளே!
செந்திரு வுற்றிடுசீர்
திங்கள்த வழ்ச்சிகியா—மலையாளா!

1105. செந்திம லைக்கரசே !செந்தமி ழைத்தருவாய் !—அமரேசா !
நந்திகல் கைத்தலமால் நந்துள பப்புயனர்—மருகோனே !
வந்திக லுற்றிடுசூர் வஞ்சசு ரைக்கொலுவாய் !—குகநாதா !
தந்திமு கற்கிளையாய் ! தங்கம லைச்சிகிமா—மலையாளா !

1106. வாசக் கடப்பமாலை
மார்பிற் றரித்த தேவ !—சிறையாலே
வாவிப் பறக்கு நீல
மாமைச் சிகிப்பொன் வாக—னவுலாசா !
பாசக் கடற்குள் வீழு
பாவத் தைதைத்து வோட—அடுவாயே !
பாவைக் குறத்தி மீது
பாரத் தனத்தின் மேவு—மிருதோளா !
நாசப் படச்செய் போரில்
நாடித் தயித்ய ரோட—எதிராவே
ராமச் சரத்தை யேவு
ராமற்கு விச்சை யான—மருகோனே !
தேசத்தர் பத்தர் வாணர்
தேடித் துதித்த பாத—மலராளா !
தேன்மொய்த்த புட்ப கான
சீருற்ற நற்சி காவென்—மலையாளா !

1107. தான மிகுத்த யானை
தாமு கவற்கு நேரு—மிளையோனே !
தாது நிறத்த நீப
தார்கள் தரித்த மார்ப !—எனையாளாய் !
கான மிகுத்த வேடர்
காதல் மிகுத்த பாவை—தனையேதான்
காம மிகுக்க மேவு
காரண விச்சை யான—வடிவேலா !
ஞான மிகுத்த யோகர்
நாரணர் பத்தர் தேவர்—பணிதாளா !
நாடி யெதிர்த்த சூரன்
நாச மிகுக்க வேலை—எயும்வீரா !
வான மிகுத்த சோதி
மாம தியுற்ற கோடு—நிறையேசேர்
வாழ்வு படைத்த தோகை
மாம லையிற்கு லாவு—குகநாதா !

1108. இடியை,யொத்தன குரலமு முக்கிய
இரத மெத்தவு—நிரையாயே
இவுளி மைக்கரி படைநெ ருக்கிட
எதிர்ப டச்சம—ரிடவேதான்
படியெ டுத்திடு மரவு நற்றலை
பரமு றைத்திட—வருசூர்மா
பதற நெட்டிலை யயிலை விட்டுயிர்
படவு டற்றிய—செயவீரா!
கடிமி குத்திடு வுயர்க டப்பணி
கருணை வைத்தருள்—குகநாதா!
கதைபி டித்திடு மிருக ரத்தினர்
கரிய வச்சுதன்—மருகோனே!
துடியி டைக்குற மகள்ம கிழ்ச்சிகொள்
சுபமி குத்திடு—குகநாதா!
துதிமி குத்திடு சிகிம லைக்குக!
துரையெ னக்கருள்—குருநாதா!

1109. கஞ்சமலர் மீது வளர்மான்
கங்குனிற மான சுருளோ—தியமானுள்
கஞ்சனுயிர் போக வெதிரே
கண்டுவெகு வாக அடலே—புரிவோனே
பஞ்சவர்ச காய னலமார்
பண்டுரத மூரு திறலா—ளியன்மாயோன்
பைந்துளப மார்ப னுயர்சீர்
பண்புசெறி யாசை மருகா!—எனையாளாய்!
நஞ்சமது சேரு மிடறுர்
நந்திதனி லேறு சடையார்—உமையாமே
நங்கைதனை மேவு மிறையார்
நன்றுபுரி பால! அருளே—தருவாயே!
செஞ்சரண பூவி லடியேன்
சென்றுநிதம் வாழ வருள்வாய்!—அமரேசா!
தென்கயிலை யாக வருமோர்
தென்சிகியின் மேரில் நிதமே—வருதேவே!

1110. மருவுலவு நீப மாலை
வளருபுய மீது நாளு—மணிதேவே!
வனசமிக ரான பாத
மலரையடி யேன தாக—அருளாயோ?

---

1109. 'சுருளோதிய மானுள், பைந்துளபமார்பன் (ஆகிய இருவருக்கும்) ஆசை மருகா!' எனக்கூட்டுக.

உருவுலவு ரூப மாது
உபயதன மார்பின் மாது—மறவோரே
உதவவரு தேவி மாது
உரிமையுட ஞசை யாக—அணைதோளா!
திருவுலவு மார்ப ரான
திகழ்துளப மாலை யாளர்—கலுழோரே
திரையுலவு மாழி மீது
துயில்செய்செய மாய ஞர்தம்—மருகோனே!
தருவுலவு சோலை சூழு
சகம்வளர்வர் தேவ தேவர்—பணிமேரே
சமதைபெறு தோகை மேரு
தழையவரு வாயி நாளில்—எனையாளாய்!

1111. மயிலாகிய பரிமீதினில் வருவாய்! அருள் தருவாய்!
அயிலாலெதிர் வருசூருடன் அடலேபுரி திடவாய்!
குயிலாமொழி மடமானுயர் குறநாயகி யுறவாய்!
செயிலாரமின் வயல்சூழ்கன சிகிமாமலை மகிபா!

1112. வனச மலரிலனு தினமும் வளருமினை
மருவு புயவரியின்—மருகோனே!
கனக மலையையொரு சிலைகொள் கையினர்புணர்
கவுரி மகிழவரு—புதல்வோனே!
பனக முடியில்வரு புவியி னடியவர்கள்
பணிகொ ளிருசரண—முருகோனே!
உனது தயவையினி யெனதி னிடம்வை! குக!
உயரு சிகிமலையின்—வளர்தேவே!

1113. கதிர்மாமதி சூடிய அரவேயணி வேணியர்
கருணைநிதி யாகிய—பரமானோர்
விதிமாலிமை யோர்பணி யிருதோளினர் மாதிரு
விளையாடின ராசைகொள்—புதல்வோனே!
ததியானுறி யேறிய மலர்போலுயர் தாளினர்
சகமேபுகழ் மானுட—மருகோனே!
பதிமேலுயர் நேமநன் னகர்நாடினர் சோலைகள்
பருமாமணி சேர்சிகி—மலையாளா!

---

1111. திடவாய்!— திடமுடையவனே! உறவாய்!— உறவுடையவனே! செயில் : செய்யில். ஆரமின் - முத்துக்கள் மின்னுகின்ற.

1114. செந்திருசேர் பைந்துளவார் செங்கணின்மால்-மருகோனே!
பந்தியதாய் முந்தியதோர் பைம்பொழில்வாழ்—குறமானுள்
அந்தியின்வாழ் சந்திரனேர் அந்தமதாம்—முகலோலா!
தந்தியினு தன்றுணைவா! சங்கர!தோ—கையின்மேரா!

1115. கிஞ்சுக மெனும்வாயாள் ரஞ்சித மொழியாளே
கிம்புரி யிருகோடார்—தனமானுள்
பஞ்சினு மெதுவடியாள் தும்பியை நிகர்விழியாள்
பங்கச மெனும்வதனுள்—குறமானும்
வஞ்சியை யணைகணவா! மஞ்ஞையில் வருபவனே!
வந்தருள் தனையருள்வாய்!—அமரேசா!
மஞ்சுகள் தவழ்முடிசூழ் குன்றையில் வளர்பவனே!
மங்கள மிகுகுமரா!—எனையாளாய்!

1116. பங்கச மலர்வதனு! சங்கம துயர்புலவா!
பண்கொடு நடைபயில்கே—கயவீரா!
திங்களை யணிசடையார் கொன்றையை யணிமுடியார்
செங்கதிர் நிறமுடையா—ரிடமேசேர்
சங்கரி திரிபுரையாள் அந்தரி கவுரிமுனுள்
தந்தருள் குருபரனே!—எனையாளாய்!
வங்கண மிகுகுறமான் அன்புடன் மருவியவா!
மங்குல்கள் தவழ்சிகிமா—மலையாளா!

1117. களத்தில் வந்திடு சூர னுருயிர்
பறக்க வண்டர்கள் வாழ்க வேநனை
கதித்த குந்தம தேவி யேசெய—மிடுசூரா!
தளத்து ளன்றடு தான வோருடன்
அடுத்து வம்புக ளேவி யேயடு
தழைத்த பைந்துள மார்ப னுருட—மருகோனே!
கிளர்த்த பைந்துணர் சோலை சூழுபர்
மலைக்கு ளிங்கித மான வேடுவர்
கிளைக்கி சைந்தமி னுளை யேபுணர்—இருதோளா!
வளர்த்த பைங்கிளி நேர்சொ லாளுமை
தனக்கு அன்புகொள் பால கா!அருள்
மனத்த! குன்றையின் மீது வாழ்வுறு—குமரேசா!

---

1115. முதலடி சந்தம் வேறு.

1118. தூய மதியணி சடையார்
தோகை யுமைபுணர் புயனர்—அருள்பாலா!
மாய னுடனணை புயமான்
மாலை யணிகுழன் மயிலாள்—மருகோனே!
காய மிருபிள விடவே
கானு நுனையயில் முருகா!—எனையாளாய்!
சேய சிறைமயி லவனே!
தேவ சிகிமலை தனிலே—வருவேளே!

1119. வஞ்சனை மிகுத்த தான
வன்பெல மிகுத்த பாத—கனலாளோன்
கஞ்சனை யழித்த வீரன்
கங்குலி னிறத்த மாயன்—மருகோனே!
அஞ்சன விழிப்பெ ணான
அன்புகொள் குறத்தி மேவும்—இருதோளா!
மஞ்சணி சிகிப்பொன் மேரில்
வந்தவ! எனக்கு மேன்மை—அருளாயோ?

1120. மதியார்சடை வேணியி னுயகர் பொடியாடிய மேனியி னுயகர்
மகமேரைவில் லாய்வளை நாயக—ரிடமேசேர்
சுதியாகிய மாமொழி நாயகி யிமையாசல னர்தரு நாயகி
துரைநாயகி மாதுமை யாள்தர—வருபாலா! [கிறிய
அதிகூர்மைகொள் வேலதி னலெதிர் வருசூரனை மார்பது
அரசே!எனை யாளுமை யா!மயின்—முருகோனே!
விதிமால்முதல் யாவரு மேபணி மலர்போலுயர் சீர்சர ணு!
வெகு
விரைசேர்பொழில் சூழ்சிகி மாமலை—வளர்தேவே!

1121. கருமுகி லெனவரு
கடலினு யர்முகவர்—நலமேசேர்
கமழ்பிறை யினையிரு
பிளவுசெய் தெனவொளி—ரெயிறுரே
குருகுல மரபினர்
கதைதனை யெழுதிய—மதியாரே
குருசெய மணிநிற
முடையவர் கணபதி—துணையாளா!

---

1121. பாரதக் கதை யெழுதிய செயல் கூறப்பட்டுள்ளது. (1128-பார்க்க.)

அருமறை முனிவர்கள்
இமையவ ரடியவர்—நிறையாவே
அனுதினம் வழியொடு
பணிகம லகிகரு—மிருதாளா!
தருவுறை பொழில்வளை
கொடுமுடி யிலகிய—வளமேசேர்
சுகமதி லுயர்சிகி
மலைதனில் வருகுரு—பரவேளே!

1122. பிறையெயிர் படைத்த சூரன்
பிளவிட அயிற்கொ டேவு—செயவீரா!
மறைபயில் பவர்க்கு நாளும்
மகிழொடு பயிற்று வேத!—எனையாளாய்!
குறையிடை நலத்த பார்வை
குமிழ்முலை பணைத்த தோகை—மயில்போல்வாள்
நறைகெழு குறப்பெண் மேவு
நகுமுடி முடித்த தோகை—மலையாளா!

1123. கந்தமிகு நீப மாலிகை
கண்டமதில் நாளு மேயணி—குகநாதா!
சந்தமிகு பாட லேயருள்
தந்திமுக னைசை யாகிய—துணையாளா!
சொந்தமிகு வேட நாயகி
துங்கமுலை மீதி லேயணை—பவ!வேளே!
அந்தமிகு சோலை சூழுயர்
அண்டர்பணி தோகை மாமலை—வருதேவே!

1124. வஞ்ச மிகுத்திடு சூருடல் ரெண்டு படக்கதிர் வேல்கொடு
மண்டி யடற்புரி மாபெல—வலவோனே!
மிஞ்ச வருத்தம தேசெயும் நெஞ்ச மதிற்றுயர் தீர்விட
வெங்க வியைப்புர மோடிட—அருளாயோ?
தஞ்ச மெனக்கினி வேறிலை யெந்த விதத்தினு மாதரி
சங்க முயர்த்திட வேவரு—புலவோனே!
பஞ்ச வனச்சிகி வாகன! தண்டலை யுற்றிடு கோடுள
பண்பு மிகுத்திடு தோகையின்—மலையாளா!

1125. வீர மேபுரி சூரன் மாமுடி
மீதி லேநட—மிடுதாளாள்
மேன்மை யாகிய கோடு லாய்மக
மேரி னுதரோ—டிகல்மானுள்
சூர ராவண னோடு தானெதிர்
தூய தாமரை—விழியார்சீர்
தோகை யாகிய பூமி னுள்புணர்
தோளர் சோதரி—புதல்வோனே!
மார னுருடல் நீற தாய்விழ
வாது தானிடு—விழியாரே
வாச மேவிய வார்விண் மாமதி
வாள ராவணி—சடையார்வாழ்
சேர வேவள மான மாமலை
சீர்கள் போல்நல—மிகுகோடார்
தேவ ராசர்கள் பூவின் ராசர்கள்
தேடு தோகையின்—மலையாளா!

1126. வனச மண்டப மதிலி லங்கிய
மயில்ம கிழ்ந்தணை—யிருதோளார்
தினக ரன்றவ நிறைய வந்திடு
சிறுவி யும்புண—ரிருதோளார்
மனது கந்திடு மருக! இன்றருள்
மகிமை தங்கிய—குருநாதா!
தினக ரன்றொடு முடியி லங்கிய
சிகியெ னுங்கிரி—மலையாளா!

1127. கஞ்சன் விடுத்த யானை
கண்டு செயித்த நீல—வடிவோரே
வஞ்சக முற்ற மாயன்
வண்டு வரைக்கி ராசன்—மருகோனே!
அஞ்ச வெதிர்த்த சூரை
அன்று செயித்த கூர்மை—வடிவேலா!
விஞ்சு வளர்ச்சி யான
விண்டல முற்ற தோகை—மலையாளா!

---

1125. சூரன் - மகிடன். மானுளாகிய, தோளரின் சோதரிக்குப் புதல்வோனே!

1128. மதமு மொழுகிய இருக வுளினர்மை
வரையை நிகருயர்—உடலாரே
வழுவை யெனுமுக முறமெ னிருசெவி
வயிறு பெரியது—நலமானோர்
கதியை நிகரொளி யிலகு உருவினர்
கருணை யொடுகுரு—குலமானோர்
கதையை வடகிரி யதனி லெழுதிய
கணப தியினுட—துணையாளா!
எதிர ரணகளம் நிறைய வருபெல
மிலகு மசுரனை—அயிலாலே
இகல்செய் தெறிபவ! அடிய னுடகலி
யினைய கலிடவும்—அருளாயே!
வதன மகிழ்வுடன் மயிலின் மிசையென்முன்
வருவை தெரிசனை—தரவேதான்
மதும லர்கள்மிகு அடவி யிலகிய
†மகிட முயர்சிகி—மலையாளா!

1129. இளமைதனி லருளாமலே
யினியருள லெதுநாள்கொலோ?—குகநாதா!
களமதனில் வருசூரன்மார்
கவரவயில் தொடுவீரனே!—மயிலாளா!
இளகுதன மயில்வேடமான்
இருவிழியும் நிறைவானதோர்—உருவாளா!
வளமைமிகு சிகியானவோர்
மலையினனு தினம்வாழ்வையே—புரிசீலா!

1130. கந்தமிகு நீப மாலை
கண்டமதில் மேன்மை யாக—அணிவோனே!
சந்தமிகு பாட லான
தண்டமிழை மேனு மேலும்—அருளாயோ?
சொந்தமிகு வேட மாது
துங்கமுலை மீது நாளும்—அணைதோளா!
அந்தமிகு சோலை சூழும்
அண்டர்பணி தோகை மேரில்—வருதேவே!

---

1128. வழுவை - யானை. பாரதக் கதையெழுதிய செயல் கூறப்பட்டுளது. (1121-பார்க்க.) † 'மகிழி லுயர்' என இருக்கலாம்.

1129. முதலடியின் கருத்தை 1142-ஆம் பாட்டில் பார்க்க.

1131. சங்கம்வரு நாவலனே ! செங்கையணி வேலவனே !
தண்டமிழின் மேன்மையதாய்—அருளாயோ !
செங்கமலை நாயகனுர் பைந்துளப மாலையினுர்
திண்டிறல்கொள் தாடகையா—வியையேதான்
அங்கமதி லோட வேசெய் அஞ்சனமென் மேனி யார்தம்
அன்புமிகு கோல மான—மருகோனே !
துங்கமிகு சோலை சூழும் குன்றைமலை மீது வாழும்
தொங்கலணி மார்ப ! நாளும்—அருளாயோ ?

1132. தசரத ராச நீதர் மனதுள வாசை போல
தவமதி லேமு ணுக—வருவோரே
குசலவர் தாதை யாக வருதிரு மேனி மாயன்
குரைகடல் மீதி லேது—யிலுமாயோன்
புசபெல ராவ ணேனை யழிபட வேசெய் ராமர்
புகழ்பெறு நாத ஞர்தம்—மருகோனே !
அசலுள தேவ தேவர் அடியவர் ஞான மோனர்
அவர்பணி தோகை மேரில்—வருதேவே !

1133. பொறியை மகிழ்ச்சி யாக
புணரு கறுத்த மேனி—மருகோனே !
அறிவின் மிகுத்த நாகம்
அதனை முடித்த வேணி—மகிழ்பாலா !
சிறிய விடைப்பெ ணுன
சிறுவி குறத்தி மேவும்—இருதோளா !
நறிய கடப்ப மார்ப !
நகுமு டிபெற்ற தோகை—மலையாளா !

1134. வென்றி படைத்த சூரன்மார்
விண்டு படச்செய் கூர்மையாம்—அயிலாளா !
நன்றி யெனக்கு நீசெய்வாய் !
நங்கை குறத்தி நாதனே !—மயிலாளா !
பன்றி யெனச்செய் ரூபமால்
பண்பு படைத்த மாமனு—அழைவாயா !
குன்றி உயர்த்த கோடுசேர்
குன்றை மலைக்குள் மேன்மையாய்—வருசேயா !

---

1131. பின்னிரண்டடிகளின் சந்தம் வேறு.

1135. கஞ்சனை வென்றவர் கம்புசி றந்தகை—யரியாரே
கஞ்சமி னன்புகொள் கங்குலு டம்பினர்—மருகோனே!
தஞ்சென வந்தவர் தங்களை நன்றிசெய்—தருள்வோனே!
மஞ்சுசு வழ்ந்திடு வம்புகொள் குன்றையின்—மலையாளா!

1136. கானக் குறப்பெ ணான காமக் குறத்தி மேவும்-இருதோளா!
வானச் சசிப்பொன் வேணி மாழைப் பொருப்ப ராசை—
[மகவேளே!
ஈனத் தயித்ய ரோட வேசத்தி விட்ட வீர—மயிலாளா! [வே!
ஞானத்தர் பத்தர் தேடு நாதச் சிகிப்பொன் மேரில்-வருதே

1137. காலை யுதித்த தூய சூரி யனுக்கு நேர்செய்
கால்முடி யுற்ற [மாணை]—மலைமேல்வாழ்
பாலை நிறத்த சோதி மாமதி பெற்ற வேணி
பாக மதிற்கு லாவு—கிரிமானுள்
சேலை நிகர்த்த பார்வை காதள வுற்ற தேவி
சேய னெனக்கு லாவு—குகநாதா!
மாலை தரித்த மார்ப! நாயனை யிப்ப வாழ்வை!
• வாச மிகுத்த தோகை—மலையாளா!

1138. அடலுற்றிடு சூருட லதிரக்கதிர் வேல்விடு—செயவீரா!
மடலுற்றிடு தாதகி மலரைத்தரி வேணியர்—அருள்பாலா!
உடலுற்றிடு சீவனை உரிமைப்பட வேயருள்—உதவாயோ?
கடலுற்றிடு பூமியர் கருதற்புத தோகையின்—மலையாளா!

1139 சண்டை யிட்டிடு சூர னுருடல்
தண்டி டக்கதிர் வேலை யேவிய—புயவீரா!
கெண்டை யைச்சரி யான பார்வையள்
கிம்பு ரிக்களி றூன மாமுலை—மடமானுள்
தொண்டை யைக்கனி யான சேயிதழ்
தொங்க லைப்புனை வேட நாயகி—புணர்தோளா!
இண்டை நற்சடை யார்சொல் பாலக!
என்று மற்புத மான தோகையின்—மலையாளா!

1140. மண்டி வருதள ராவணன்
வஞ்ச னுயிரக லோடிட—வெதிராவே
அண்டி யடல்புரி ராகவன்
அன்பு மிகுமரு கா! எனை—யினியாளாய்!

---

1137. [ ] 'மேரு' என இருக்கலாம். வாழ்வை = வாழவை.

எண்டி சையினடி யோர்பணி
யிந்த்ரன் முதலிமை யோர்பணி—யிருதாளா!
வண்டி சைகொள்பொழில் சூழுயர்
மஞ்சு தவழ்சிகி மாமலை—வளர்தேவே!

1141. சானகி தனக்கு மாலை
தானணி புயத்த நீல—முகில்போல்வார்
வானவர் தமக்கு நீடு
மாசிறை தவிர்த்த மாயன்—மருகோனே!
கானவர் வளர்த்த தேவி
காரிழை குறத்தி மேவு—புயவேளே!
ஞானமு னிவர்க்கு மேன்மை
நாத! சிகி நற்பொன் மேரில்—வருதேவே!

1142. இந்த வயதினுத வாமலே
யெந்த வயதிலருள் யாவுமே—தரப்போறுய்?
கந்த முலவுமலர் நீபமே
கண்ட மதனிலணி நாதனே!—மயிற்றேவா!
செந்த மிழையெனிட மேசெய்வாய்!
செந்தி மலையில்வரு தேவனே!—பெலச்சூர்மா
நந்த வயிலைவிடு சூரனே!
நன்றி யுலவுசிகி மேரின்வாழ்—செகக்காரணு!

1143. தினைப்புன மாதி னுளை
சிறப்பொடு மாலைசூடு—மணிமார்பா!
அனைத்தினு மேன்மை யான
அடற்புரி சூர னுவி—கொளுவீரா!
உனைப்பணி நாயன் மீது
உயர்ச்சிய தாக நீசெய்—வரமேதான்!
கனைக்கடல் சூழு சோலை
கமழ்ச்சிகி மேரில் வாழ்வு—புரிதேவே!

1144. இந்த நாளைவிட இனிநீர்
எந்த நாளில் வெகு வரமே—தருவீரோ?
வந்த சூரனுடல் தனிலே
மண்டி யோடவயில் தனையே—விடுவீரா!

---

1142. முதலடியின்கருத்தை 1129-ல் பார்க்க.

1144. பார்க்க: 1129, 1142.

எந்த ஞைசநிறை யிடவே
yின்பம் யாவுமுத விடவே—வருவீரே!
சந்த ஞடவிகள் வெகுசூழ்
சந்த்ர ஞர்தவழ்செய் சிகிமா—மலையாளா!

1145. கச்சுப் புனைந்தகுற வேடமி ஞெளொடு
கட்டிக் கலந்துவணை மீதினி லேமரு—வியதோளா!
நச்சுப் புனைந்தமிட ருரிட மேவளர்
நத்துக் கிசைந்தமிட ருளுமை யாளருள்-புதல்வோனே!
தச்சுப் புனைந்துவக லோடிட வேவிடு
சத்திக் கிசைந்தமல ராகிய பாணிய!—எனையாளாய்!
மொச்சுச் சிறந்தபொழில் சூழ்சிகி மேர்வளர்
முத்துக் குகந்தநகை[யாயருள்]—உதவாயோ?

1146. சங்கணி கரனர் ரஞ்சித மொழியார்
தந்திமுன் வருவோர்—மருகோனே!
கங்கம திடவே வென்றிடு வயிலா!
கஞ்சமென் வதன!—எனையாளாய்!
மங்கள முடனே பண்புகொள் குறமான்
மன்றல்செய் குகனே!—அமரேசா!
சங்கரன் மகனே! குன்றையின் மலையா!
சம்பரம மிகுசீர்—மயிலாளா!

1147. கோட்டில்வளர் ஆரணி வேணியர்
கூத்தர்மக தேவர்பொன் மேரினில்—வளர்வோரே
நீட்டியயில் ராவணன் மார்பினில்
நீர்க்கொடியின் நாயகர் ஆசைகொள்—புதல்வோனே!
காட்டில்வளர் வேடுவர் மானிடம்
காத்தவளை மாலிகை யேயணி—குகநாதா!
மேட்டிமைகொள் தோகையின் மாமலை
மேட்டில்வளர் நாயக னே! அருள்—உதவாயோ?

1148. காலை யுதித்த மதிபோல வேயொளிர்
காலு முடிப்பொன் கிரிமீதில் வாழ்வுறு—பரமானோர்
பாலை நிகர்த்த நிறமான தோரொரு
பாதி மதிக்கற் றையதான வேணிய—ரிடமேசேர்

---

1144. எந்தன் : என்றன் என்பதன் மரூஉ.

1145. [ ] ஒரு சீர் இல்லை. "யாய்! இனி தாயருள்" எனப் படிக்கலாம்.

1147. ராவணன் மார்பினில் அயில்நீட்டி : பெயர்.

சேலை நிகர்த்த விழியான மாதுமை
தேவி தனக்கு மகிழ்வான பாலக!—எனையாளாய்!
மாலை தரித்த புய!நாய கா!குக!
வாழ்வு படைத்த சிகிமேரில் வாழ்வுறு—குருநாதா!

1149. கருணை நீசெய்வாய்! கமல நாதனுர்—பணிதாளா!
அருண மேனியார் அமல மானவே—ரருள்பாலா!
தருணி வேடமான் தழுவு நாயகா!—குகநாதா!
திருவு லாவியே திகழ்சி காவின்மா—மலையாளா!

1150. மறையேபயில் நான்முக னுர்பணி
மலராகிய சீர்சர ணு!என்முன்—வருவாயே!
குறையாகிய சீறிடை யாளுயர்
குறநாயகி மீதினி லேவெகு—மயலாளா!
பிறைசூடிய கூரெயிர் மாவுடல்
பிளவாகிட வேலதை யேவிய—செயவீரா!
இறையாய்!மயி லேறிய சேவக!
எனையாளுமை யா!சிகி மாமலை—வருதேவே!

1151. பருத்திடு சூர னுவி
பதைத்திட வேலை யேவி—யடுவோனே!
பொருப்பென வேகு லாவு
புடைத்தகு வாரை மீறு—தனமானுள்
விருப்பொடு வேட மானை
விரைத்திரு மாலை சூடும்—அமரேசா!
கருத்தமை தாவு கோடு
கதித்திடு தோகை மேரில்—வருதேவே!

1152. பூவினி லேவளர் நாயகன் தேவர்க ளேபணி நாயகன்
போதம தாய்நித மேபணி—யிருதாளா!
காவினி லேவரு வேடுவர் சீர்குல மீதினி லேவரு
காரிழை யாள்தனை மாலொடு—புணர்வோனே!
தேவியு மாபதி சூடிய பூரண மாமதி யாகிய
சீர்வத னு! க்ருபை யாவையும்—உதவாயோ?
கோவிய ரோடுற வாடிய மாயவ னுர்மரு கா!குக!
கோடுறை தோகையின் மாமலை—வருதேவே!

---

1150. சீறிடை: சிற்றிடை.

1153. கருப்புச்சிலை மாநுதல்
கடைக்குட்குழை தாவிய—வடிவாளே!
விருப்புற்றிடு வேடுவர்
மினைப்பொற்பொடு மேவிய—புயநாதா!
தருப்பொற்புவி வானவர்
தனக்குப்பதி யானவர்—பணிதாளா!
பொருப்புக்குயர் வாகிய
புகழ்ப்பெற்றிடு தோகையின்—மலையாளா!

1154. நடன மிடுமயில் போல்வாள்
நகைல ளிதமுக மானுள்—நலமேசேர்
குடமி ணையுமுலை யாளே
குறம கனையணை மீதே—அணைதோளா!
படவ ரவின்முடி மீதே
பணிந டனமிடு மாலோன்—மருகோனே!
வடவ ரையைநிக ராமே
வளர்சி கியின்மலை மீதில்—வருதேவே!

1155. அகலிகைபெ ணுக வாக்கிய
அலரைநிக ரான தாட்கமழ்—துளவோரே
முகிலினிற மான சீர்ப்புய!
முளரிமனை மாது தோட்கிசை—பவரானோர்
அகிலமுண வாக வாக்கிய
அழகொழுகு நாதர் சீர்த்திகொள்—மருகோனே!
சிகியின்மலை மீதில் வாழ்க்கைகொள்
சிறைமயிலி லேறு பார்த்திப!—எனையாளாய்!

1156. முனைபெற்றிடு வேலினை
முடுகிச்சம ராடிய—அசுரோன்மேல்
நனையப்புணி னீர்மிகு
நளியக்கள மீதினில்—விடுவோனே!
சினையுற்றிடு காவினில்
சிறுவிக்குற மானுடன்—மயலாவாய்!
எனையெப்பவு மாதரி!
எழில்பெற்றிடு தோகையின்—மலையாளா!

1157. கஞ்சன்முடி தரித்தவர்
கங்கைபிறை தரித்தவர்—பரமானோர்
செஞ்சபையி னடித்தவர்
செம்பவள நிறத்தினர்—அருள்பாலா!

பஞ்சவர்தம் மயித்துனர்
    பைந்துளவின் உரத்தினர்—அருள்பாலா!
வஞ்சசுரை யடற்புரி
    மங்குல்தவழ் சிகிக்கிரி—மலையாளா!

1158. சிந்து தனிற்றுயில்வோர்
    செங்க திருக்கெதிர்நே—மியினரே
நந்து தரித்தவரே
    நங்கை திருக்கிசைவோர்—மருகோனே!
பந்து முலைக்கொடியாள்
    பண்புயர் நற்குறமான்—அணைதோளா!
வந்து வருட்புரிவாய்!
    மங்குல் தவழ்ச்சிகிமா—மலையாளா!

1159. தந்தி தனக்கிளையாய்! சந்த்ர முகக்குமரா!—எனையாளாய்!
செந்தி மலைக்கரசே! செங்க மலக்கொடியாள்-மருகோனே!
நந்தி யுயர்த்திடுவோர் நஞ்சுணும் வித்தகனர்—புதல்
[வோனே!
மந்தி குதித்திடுகா மண்டு சிகிக்கிரியாய்!—அமரேசா!

1160. வஞ்சமிடு சூரன் மார்பில் நொந்துபட வாவி யோட
    மண்டவதி கூர்மை வேலை—விடுவீரா!
கஞ்சனுயிர் போக வேசெய் நந்தையணி பாணி சீர்கொள்
    கங்குனிற மேனி மாயன்—மருகோனே!
நஞ்சவிழி நீடு ரூபி கொங்கலர்கொள் கோதை மாது
    நன்றுபுரி வேட மானை—யணைதோளா!
தஞ்சமிலை நாளு [மாதரி] துங்கமயி லான வாக!
    தங்கமலை நேர்சி காமேர்—வருதேவே!

1161. சங்கையணி கரனர் தந்திமுனம் வருவோர்—மருகோனே!
பங்கயமென் வதன! பண்புமிகு மயிலே—றியவீரா!
செங்கையணி யயிலா! செந்தியினும் வளர்வாய்!-அமரேசா!
கங்கைதரு புதல்வா! கந்த!சிகி மலைமேல்—வருதேவே!

1162. உடலைவ ளைத்தமதி சூடுவோர்
    உமையைம கிழ்ச்சியுடன் மேவுவோர்—நலமேசேர்
விடவர வுற்றபுய மானவோர்
    விரையித ழிப்பொன்முடி யாளனர்—அருள்பாலா!

---

1160. [ ] 'காத' எனப் படித்தால் சந்தம் பொருந்தும்.

ம்டவரல் நற்குறமி னாளையே
மருவுபு யத்தினர சே!இநாள்—எனையாள்வாய்!
கடகிரி வத்ரர்துணை யாளனே!
கருதுசி கிப்பொன்மலை மீதிலே—வருதேவே!

1163. சிறிய மதியை நிகரெயிறார் பெரிய குடம தெனும்வயிறார்
திகழு மணியை நிகர்விழியார்—ஒருபாலே
நறிய மலர்கள் புனைகுழலாள் வலபை மடவி புணர்பவனார்
நதிகொள் சடைய ரருள்பிள்ளையார்—துணையாளா!
பொறியின் வழியில் வரும்விரகால் அடிய னவதி யிட [விதியோ?
புகழ்கொ ளுனது பதமலரே—அருளாயோ?
மறியில் நடன மயிலிலுமே விழிகள் குளிர வருதுரையே!
மகிமை யுயர்பொ னுலவுசிகா—மலையானே!

1164. சந்த மிகுந்த பாடல்
தங்க ளிடஞ்சொல் வேன்முன்—வருவாயே!
கந்த மிகுந்த மாலை
கண்ட மிலங்க நாளும்—அணிதோளா!
சொந்த மிகுந்த வேடர்
துங்க மிலங்கு பாவை—புணர்தோளா!
அந்த மிகுந்த கோடு
அண்ட முயர்ந்த தோகை—மலையாளா!

1165. சோலைக் கிளிபோல மொழியாளே
தூயச் சசிபோல வதனாளே
ஓலைக் குழைவேட மடமானாள்
ஓகைப் படநாளு மணைதோளா!
காலைக் கதிரான நிறவோனே!
காதற் படநாயென் முனம்வாராய்!
மாலைப் புயதோகை மயிலாளா!
மாலுற் றிடுதோகை மலையாளா!

1166. கனக னுடனடல் புரியு நலமிகு
கமழு துளவரி—மருகோனே!
வனச மலர்நிகர் உபய சரணருள்
மயிலில் வருபவ!—அமரேசா!

---

1163. முதலடி முரண்தொடை. ஈற்றடி யினியபொருளது. மறி-ஆட்டுக்கடா.

அனமெ னடைபயில் குறமி னணைபவ!
அறுவர் முலையுணு—மணிவாயா!
பனக முடிவளர் புவியில் மகிமைகொள்
பணவர் துதிசிகி—மலையாளா!

1167. கடமத யானை முகனர்
கதிரென மேனி யுடையார்—துணையாளா!
நடமிடு தோகை மயிலா!
நளினம தான சரண!—எனையாளாய்!
தடவரை யான வசுரோன்
தனதுயிர் போக வயிலே—வியவீரா!
மடமயில் வேட மகள்சேர்
மகிமைகொள் **தோகை மலையா**!—அருளாயோ?

1168. சித்ரமிகு வதன! சித்திதனை யருள்வாய்!—அமரேசா!
நித்யசுப கரனே! நிர்த்தமிடு மயிலா!—அருளாயோ?
சத்திதனை யெதிர்சூர் சட்டகம தனிலே—விடுவோனே!
விர்த்திபெறு **சிகியாம் வெற்பில்**வரு துரையே!-குகவேளே!

1169. சலங்கை யசைய நடஞ்செய் மயிலில்
சகங்கள் புகழ—வருவாயே!
கலங்க வசுரர் குலங்க ளழிய
கனங்கொ ளயிலை—விடுவீரா!
நலங்கொள் குறமின் மகிழ்ந்த கணவ!
நமன்கொ ளுமுனம்—அருள்வாயே!
செலங்கொள் புவியி லுயர்ந்த முடிகள்
சிறந்த **சிசியின்**—மலையாளா!

1170. வந்த சூருடல் ரெண்ட தாய்விட
மண்ட மேல்விடும்—அமரேசா!
கந்த மேவிய பைந்து ழாயணி
கண்ட மாலுட—மருகோனே!
கொந்த தாணக டம்ப மாலிகை
கொண்ட மாபுய—முருகோனே!
அந்த மாகிய குன்றை மாமலை
அன்ப தாய்வளர்—குகவேளே!

---

1166. பணவர் - பண்ணவர்.

1169. செலம் - சலம்.

1171. கிரியைச்சரி யாகிய மாமுலை
கிளர்நற்சசி யாகிய வானனள்—வடிவேசேர்
வரியுற்றிடு கூர்விழி நாயகி
மகிணற்குற மாதுமி னுள்புணர்—இருதோளா!
பரிநற்சிகி யாகிய தோகைய!
பரிவுற்றென்மு னல்வரு வாய்!உயர்—அமரேசா!
விரிமைக்கடல் சூழ்தர வேவரு
வெகுசித்திர மாகிய தோகையின்—மலையாளா!

1172. பாதி மதியணி சடையார்
பாக மிலகிய மடமான்—நலமேசேர்
வாதின் மயிடனெ டெதிரே
மாள வடல்புரி யுமையாள்—அருள்பாலா!
காதி லளவிய விழியாள்
கானில் வருகுற மடமான்—அணிதோளா!
சோதி யிலகிய முடிசேர்
தோகை மலைவரு துரையே!—அருளாயோ?

1173. கொஞ்சு கிளிமொழியாள்
கொண்டல் படிகுழலாள்—மலர்மீதே
வஞ்சி தனைநிகராய்
வந்த வடிவுடையாள்—குறமானுள்
கஞ்ச முகநிகராய்
கந்த முலைதனிலே—புணர்தோளா!
மஞ்சு தவழ்பொழில்சூழ்
வண்பு கழ்கொள்சிகிமா—மலையாளா!

1174. கனத்தபடை சூரன் எதிர்த்துவரு போது
கதித்தவயி லேவி—அடுவோனே!
சினத்தரவு நீள வுடற்குவெகு பாரம்
சுமக்கநட மாடு—மயிலாளா!
வனத்தவர்க ளாசை மகட்குமண மாலை
மகிழ்ச்சியொடு சூடு—கணவோனே!
மனத்தமரு நோயை யகற்றிவிடு வாய்!பொன்
மலைக்குயர் சிகாநன்—மலையாளா!

1175. பிறையணி சடையார் அரவணி முடியார்
பிணையணி கரனு—ரிடமேசேர்
குறைபடு மிடையா ளிமையச லமினள்
குமரிதன் மதலாய்!—எனையாளாய்!

சிறையுயர் மயின்மேல் அடியன்முன் வருவாய்!
திருவுயர் புயனர்—மருகோனே!
மறைதொழு பவனே! சிகிமலை தனிலே
வளர்குரு பரனே!—அமரேசா!

1176. துடிபோலு மிடையாள்
துணையான முலையாள்—நலமானே
வடிவான விழியாள்
வனமேவு குறமான்—அணைதோளா!
அடியேன்முன் வருவாய்!
அருள்யாவு மருள்வாய்!—அமரேசா!
படியோர்கள் பணிசீர்
பணைதோகை மலைமேல்—வருதேவே!

1177. சிறைவிரித் தாடு மயின்மேல்
தினகரற் போல வருவாய்—என்முனே தான்!
குறையிடைத் தேவி யெனுமோர்
குறமயிற் பாவை தனையே—புணர்தோளா!
நறைமலர்ச் சூடு புயவா!
நலமெனக் கியாவு மினியே—தருவாயே!
[மறையினுக் குயருதாளா]
வடிவுடைத் தோகை மலைமேல்—வருதேவே!

1178. குயிலை நிகர்த்திடுசீர் மொழிகள் பயிற்றியமான்
குடமுலை பெற்றமினள்—வனமீதே
எயினர் வளர்த்திடுமான் வடிவி தனக்கிசைவாய்!
இசையுள பொற்பதனே!—எனையாளாய்!
மயிலை நடத்தியவா! உனையல தெற்கினியார்?
மகிழ்வுடன் இத்தனைநாள்—அருளாதேன்?
அயிலணி நற்கரனே! அவுணர் குலக்கலகா!
அழகுயர் நற்சிகியா—மலையாளா!

1179. சந்தநா வலனே! சங்கபா ணியனர்—மருகோனே!
கந்தநீ பமதே கண்டமே லணிவாய்!—அருளாயோ?
அந்தவா னவரே அன்பரா னவரே—பணிபாதா!
மந்தரா சலநேர் மஞ்சுசேர் சிகியா—மலையாளா!

---

1177. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'மறையினுக் கான பொருளே' எனப் படிக்கலாம்.

1180. தித்தி யெனநட மாடிய
சித்ர மயில்தனி லேறிமுன்—வருவாயே!
சத்தி தனையெதிர் மாவுடல்
தக்க அடலுட னேவிய—செயவீரா!
கத்தி கையையணி சீர்புய!
கட்ட முருமிகு வேடமின்—அணைதோளா!
விர்த்தி பெறுசிகி மாமலை
வித்தக! நினருள் யாவையும்—உதவாயோ?

1181. கடிமலர் நீப மாலை
களமதில் மேன்மை யாக—அணிவோனே!
துடியிடை வேட மாது
துணைமுலை மீது மேவு—புயவேளே!
அடிபணி வோர்கள் பாலில்
அருள்தர வேணும் நீதி—முருகோனே!
படிபுகழ் தேவ தேவ!
பருமுடி சூழ்சி காமென்—மலையாளா!

1182. மதியணி சடையார் வளருமை தனையே—புணர்வோரே!
கதிர்நிற முடையார் கமழித ழியினர்—தருபாலா!
அதிவர மருள்வாய்! அடியன்முன் வருவாய்!—அமரேசா!
துதிமிகு சரணு! சுகமிகு சிகிமா—மலையாளா!

1183. கச்சணி முலையாள் கட்டிய மலர்சூ—டியமானுள்
நச்சணி விழியாள் நட்புயர் குறமான்—அணைதோளா!
அச்சுதன் மருகா! அற்புடன் மயின்மேல்—வருவாயே!
மெச்சிய முடிசேர் விர்த்திகொள் சிகிமா—மலையாளா!

1184. கரிதாகிய குழலாள் கமழ்மாலைகொள் புயமான்—நலமேசேர்
அரிதாகிய மகவாள் அழகாள்குற மயிலாள்—புணர்தோளா!
தரியாரென வருசூர் தனையேவயில் கொடுகூ—றிடுவேளே!
பரியாகிய மயிலா! பணைசூழ்சிகி மலைமேல்—வருதேவே!

1185. கொங்கலர்செய் நீப மாலை
கொண்டபுய வா!இ நாளில்—அருளாயோ?
செங்கமலை மாது மேவு
செங்கணெடு மாலி னுசை—மருகோனே!
தொங்கன்மயின் வாக னு!நின்
தொண்டனெனின் னோயை யோட—அருளாயோ?
தங்கமலை நேர தான
தண்சுடர்கள் தாவு தோகை—மலையாளா!

1186. மதியையணி சடையார் மணியையணி கரனுரிடமேசேர்
முதியமறை யிடையாள் முழுமதியின் வதனுள்—உமைபாலா!
நதியையுணு மரியார் தமதுடைய மருகா!—எனையாளாய்!
கதியையுள மயிலா! தமழ்சிகியின் மலையா!—அருளாயோ?

1187. மயிலை நடத்திய வீரா!
மகிமை படைத்திடு தேவே!—எனையாளாய்!
குயிலின் மொழிக்குற மானுள்
குவிமு லையிற்புணர் மாலா!—குகதேவே!
அயிலை யெடுத்தொரு சூர்மா
அலற விடுத்திடு நாதா!—உமைபாலா!
கயிலை நிகர்த்திடு மேலாம்
கனமி குநற்சிகி மேர்மேல்—வளர்தேவே!

1188. வாரணி தனத்தாள் மாலைகொள் புயத்தாள்-வனவேடோர்
சீரணி குலத்தாள் தேன்மொழி தனக்கே—மயலாவாய்!
காரணி நிறத்தார் கார்முக விறற்கே—மருகோனே!
தாரணி புயத்தாய்! தாமிகு சிகிச்சீர்—மலையாளா!

1189. நெஞ்சில் [வருதுயர மோடிட]
நின்கருணை யாவு மேசெய்வை!—குமரேசா!
கஞ்சமலர் மீது வாசனை
கன்றவொரு நாளி லேசிறை—யிடுதேவே!
நஞ்சவிழி வேட நாயகி
நன்றுபுரி யாசை யாலணை—புயவேளே!
செஞ்சரண சேவை யேயருள்!
தென்சிகியின் மேரி லேவரு—குகதேவே!

1190. வஞ்சமிகு சூரனுடன் மண்டியம ரேபுரியும்—அடல்வீரா!
கஞ்சமலர் மாதுநிகர் கந்தரியை மேவுபுய!—எனையாளாய்!
கொஞ்சமதி சூடுசடை கொண்டவர னுசையுள—புதல்
[வோனே!
தஞ்சமினி வேறுஇலை தங்கமலை நேர்செய்சிகி—மலையாளா!

1191. உந்தனைய லாது வேறு
உண்டிலையெ னுசை போல—அருளாயோ?
கந்தமிகு நீப மாலை
கண்டமதின் மேன்மை யாக—அருளாயோ?

---

1189. [ ] 'வருதீமை யோடிட' என இருப்பின் சந்தம் பொருந்தும்.

வந்தவடி யார்கள் பாவம்
மங்கவவர் வாழ்வ தாக—அருளாயோ?
சந்தமிகு தோகை யாள!
தண்பொழில்கள் சூழ்சி காமென்—மலையாளா!

1192. மங்குல்தவழ் சோலைமிகு
மன்றதுள தோகைமலை—வருதேவே!
திங்களணி வேணியரன்
செங்கமல வேதர்பணி—யிருதாளார்
சங்கமணி பாணியரி
தந்திமுன மேவருவர்—மருகோனே!
துங்கமயின் மீதுவரு
தொங்கல்புனை வேல! அருள்—உதவாயோ?

1193. அலைகடன் மீது துயில்வோர்
அருமறை தேடு விறலார்—நலமேசேர்
கொலைபுரி நீல அவுணோர்
குலமழி வாக விடுவோர்—மருகோனே!
சிலைநிக ரான நுதலாள்
திகழ்முக வேடர் மகளாள்—புணர்தேவே!
நிலையுயர் கோடு நிரைசேர்
நிகரில தோகை மலைமேல்—வருநாதா!

1194. மங்கு லாவிய சோலைசூழ்
மஞ்சு சேர்சிகி மேரிலே—வருதேவே!
கங்குன் மேனியின் மாவையே
கண்டு போர்புரி கூர்மைசேர்—வடிவேலா!
கொங்கு நீபமென் மாலையாய்!
கொண்டல் மேனியின் மாயனுர்—மருகோனே!
இங்கு நாயெனை யாளுவாய்!
என்று மேன்மைகொள் தோகைமேல்—வருதேவே!

1195. டாகைபுனை யசுரோன் நாசமிக வயிலே—வியவீரா!
தோகைமயில் தனிலே தூயமுடன் வருவாய்!—அமரேசா!
வாகைபுனை புயவா! மாயன்மகிழ் மருகா!—எனையாளாய்!
ஓகைபுனை ஒயிலா! ஓர்சிகியின் மலைமேல்—வருதேவே!

1196. பச்சையுடல் மேனியார் பத்மமகள் நாதனுர்—மருகோனே!
இச்சையது போலவே எற்குவரம் நீசெய்வாய்!—அமரேசா!
கச்சையணி மார்பினுள் கற்புடைய வேடமான்—
[அணைதோளா!
செச்சையணி வேலவா! சித்ரமிகு தோகைமா—மலையாளா!

1197. மஞ்ச மதனிலொரு வேடு வோர்குல
மங்கை தனையும்வெகு ஆவ லாயணை—புயவேளே!
கஞ்ச மலரில்வரு தேவி மேவிய
கங்குல் நிறமுடைய மாய னர்மகிழ்—மருகோனே!
தஞ்ச மிலையினிமுன் னுக மாமயில்
தண்டை யிலகவரு வாய்!கு கா!க்ருபை—தரவேதான்
அஞ்ச லெனவினிமை நீசெய் வாய்!குக!
அண்டர் பணிசிகியின் மேரி லேவரு—குருநாதா!

1198. கடமத யானை முகனர்
கதிர்பிறை யான வெயிறர்—துணையாளா!
அடல்புரி சூர னுடனே
அயில்கொடு போர்செய் பவனே!—எனையாளாய்!
குடநிறை மேனி தனிலே
குறைபடு நோயை யகலோ—டிடவாராய்!
வடவரை நேரு முடிசேர்
வளர்சிகி மேரு தனிலே—வருதேவே!

1199. கொங்கு மிகுந்த நீப மாலிகை
கொண்டு இலங்கு மார்ப னே! நலம்—உதவாயோ?
பொங்கி நிறைந்த நேக சேனைகள்
பொன்ற எதிர்ந்த சூர னவியை—அடுவேலா!
கங்குல் நிறங்கொள் மேனி மானுயர்
கஞ்ச மடந்தை யாசை யாகிய—மருகோனே!
மங்குல் தவழ்ந்த தோகை மாமலை
வந்த சிகண்டியேறி யேவரு—குருநாதா!

1200. பச்சைமயில் வாகன! பத்மமல ரானதாள்—அருளாயோ?
கொச்சையுள வேடமான் குத்துமுலை மீதிலே-புணர்தோளா!
செச்சையணி வாகனே! சித்ரமிகு தோகைமா—மலையாளா!.
இச்சையுட னுகவே இப்ப வரம் நீசெய்வாய்!—குகநாதா!

1201. கடம்பவன முறைவோர்
கரந்தைபுனை சடையார்—பொதுமீதே
நடம்புரியு முதலோர்
நலங்குலவு மரனர்—தருபாலா!
வடம்புனையு முலையாள்
வனம்பயிலு மறமான்—புணர்தோளா!
குடம்புரையு முடிசேர்
குளிர்ந்தசிகி மலைமேல்—வருதேவே!

1202. கந்தமிகு நீப மாலிகை
கண்டமதில் நாளு மேயணி—குகநாதா!
சந்தமிகு பாட லேயருள்!
தங்கமலை யான தோகையின்—மலையாளா!
சொந்தமிகு வேட நாயகி
துங்கமுலை மீதி லேயணை—குருநாதா!
அந்தமிகு தோகை வாகன!
அன்பினுடன் மேன்மை யேயருள்!—வடிவேலா!

1203. சிந்தை யில்வரு நோய்தவிர்
செந்தி யிலுறை நாயக!—எனையாளாய்!
பந்தை நிகரு மாமுலை
பண்பு யர்குற நாயகி—புணர்தோளா!
எந்தை! அருளை நீசெய்வை!
என்று மருமை சேர்சிகி—மலையாளா!
நந்தை யணியு மாலுட
நன்று மருக! தோகையின்—மயிலாளா!

1204. துடியை நிகரு மிடையாள்
சுகம தனையு நிகராம்—மொழியாளே!
வடிவ மிலகு குறமான்
மகிழ மருவு புயவா!—எனையாளாய்!
மடிய வசுர னுடனே
வலுகொ ளடல்கள் புரிவாய்!—அமரேசா!
அடியர் பணியு மரசே!
அழகு திகழ்செய் சிகியா—மலையாளா!

1205. மயிலைநிகர் சாய லாளை
மணமுலவு மாலை யாளை—வனமேவாழ்
குயிலைநிகர் ஓசை யாளை
குறவர்தரு மாதி னாளை—அணைதோளா!
அயிலையெதிர் சூர னோடும்
அடலினுட னேவு வாகை—புனைதோளா!
ஒயிலையுள தேவர் தேவ!
உயர்சிகியின் மேலில் வாழும்—அமரேசா!

1206. கொண்டல் தங்கு கோதையாள்
கொங்கு தங்கு மாலையே—புனைமானுள்
மண்ட லங்க ளாடவே
வஞ்ச ரஞ்சி யோடவே—நடையார்சீர்

கொண்டை கொண்ட தோகையின்
கொங்கை மங்கை வேடமான்—அணைதோளா!
அண்டர் அன்பர் சூழவே
அன்பு கொண்ட தோகைமா—மலையாளா!

1207. வையகம் வாழு மடியார்
மைமுகில் மேனி யரியார்—மணமேசேர்
செய்யச ரோரு கயனுர்
செய்யருள் தேவ னெனவே—தொழுதாளா!
அய்யபொன் வேடர் மகளாள்
அய்யிடை மாது தனையே—புணர்தோளா!
மொய்யுயர் கானம் வளர்சீர்
மொய்யுள தோகை மலையாய்!—அருளாயோ?

1208. மணிமகுட மணிந்த மேன்மை
மகிமைகொள் புரந்த ரன்விண் வானோர்
அணியணி யிலங்க நாளும்
அருமையொடு வந்துபணி பாதா!
துணிவொடெதிர் சண்டை யேசெய்
துடியசுரை வென்றவயி லாளா!
தணியெனது துன்பம் யாவும்!
சகமதி லிலங்குசிகி மேரா!

1209. கந்த மிகுந்த நீப மாலிகை
கண்ட மிலங்க நாளு மேயணி—இருதோளா!
சொந்த மிகுந்த வேட நாயகி
துங்க இலங்கு மார்பி லேயணி—குகவேளே!
அந்த மிகுந்த தோகை வாகன!
அன்பு மிகுந்த நாயன் வாழிட—வருவாயோ?
சந்தமி குந்த பாட லேயருள்
தங்கு வனங்கள் சூழ்சி காமலை—வருதேவே!

1210. வஞ்சமிடு சூரன் மார்பில்
மண்டவயி லேவு சூர!—எனையாளாய்!
கஞ்சனைமுன் னுளி லேவெல்
கங்குலவு தோகை மேரில்—வருதேவே!

தஞ்சமிலை நீசெய் மேன்மை
சங்கரிசொல் பால! தேவ!—குகநாதா!
மஞ்சுலவு தோகை மீது
வந்துவரம் நீசெய்! வேட—மகள்வாகா!

1211. கொங்கு மிகுத்த நீப! குன்றி லிருக்கு நாத!—எதிர்சூர்மா
தங்கு குலக்க லாக! தந்தி தனக்கு நேரு—இளையோனே!
சங்கு தரித்த பாணி தந்திமு னுற்ற நாதர்—மருகோனே!
மங்குல் தவழ்ச்சி யேசெய் மங்கள முற்ற தோகை—மலை
[யாளா!

1212. கானக நாயகியாள் காதல்கொள் வேடமினள்-புணர்தோளா!
ஞானர்கள் யாவருமே நாளுநின் சீர்பதமே—பணிவோரே!
சானகி நாயகனர் தாமகிழ் வாகியதோர்—மருகோனே!
வானளா வானசிகா மாமலை மீதினிலே—வருதேவே!

1213. கரும்பின் மொழியாள் கனங்கொள் குழையாள்—உமை
[மாளுள்
விரும்பு மரனர் விடங்கொள் மிடரூர்—தருபாலா!
அரும்பு முலையாள் அணங்கு குறமான்—அமர்தோளா!
பெரும்பு னமதே பிறங்கு சிகியா—மலையாளா!

1214. வஞ்சனை புரிசூருடன் மண்டிய அடலேபுரி—செயவேலா!
கஞ்சனை யுயிர்போகிட கண்டிடு கருமாயவன்-மருகோனே!
நஞ்சுள வரவேசுமை நன்றுயர் புவியோர்புகழ்—சிகியாளா!
நெஞ்சுள துயரேதவிர் நின்க்ருபை யினியேபுரி!—சிகிமேரா!

1215. வனச மருமல ரதனி லுறைபவள்
மருவு மிருபுய—விறலானோர்
முனமுன் வருமசு ரர்களை யழிசெயும்
முளரி நயனர்பொன்—மருகோனே!
அனமெ னடைபயில் குயிலை நிகர்மொழி
அருமை யுளகுற—மகள்தோழா!
கனக மலைதனை நிகர்செய் கொடுமுடி
கதிர்கொள் சிகிமலை—முருகோனே!

1216. தத்தையெனு மொழியாள் சத்தியெனும் விழியாள்—குற
[மாளுள்
குத்துமுலை தனிலே கொத்துமல ரணிமேல்-புணர்தோளா!
அத்துவித முடிவே! அற்பினெடு வென்முனே—வருவாயே!
சித்திதரு தெய்வமே! சித்ரமிகு சிகிமா—மலையாளா!

---

1211. 'கலக!' என்பது சந்தம் நோக்கிக் 'கலாக!' என நின்றது.
1215. அனமென் நடை,

1217. வஞ்சமிகு சூரனுடன்
மண்டிவரு சேனையழி—படவேதான்
நஞ்சமிக ரானவயில்
நன்றுபடை யோடுவிடு—செயவீரா!
நெஞ்சமது நோயகல
நின்கிருபை யேசெய்குவை!—அமரேசா!
கஞ்சமனை நேர்குறமின்
கண்டுபுணர் வா!சிகிமின்—மலையாளா!

1218. அடியிணைப ராவு ஞான
அடியவர்ச காய தேவ—குருநாதா!
முடிமகமு டைய பேர்கள்
முனநிறைய தாக நாளும்—வருவாரே
கடிமலரின் மேன்மை யான
கனமுலவு நீப மாலை—புனைதோளா!
படிபுகழு மாக தோகை
பருமலையில் வாழு நாத!—எனையாளாய்!

1219. கயிலை மலையில்வள ரீசனர்
கருணை யிலகுபர மேசனர்—புணர்மானள்
குயிலை நிகருமொழி மாதினள்
குமரி திரிபுரைமி னவலாய்—அருள்பாலா!
அயிலை யெதிரவரு சூரன்மேல்
அலற விடுகுமர நாதனே!—செயவீரா!
மயிலை நடைபயில வேசெயும்
வரத! சிகிமலையி லேவளர்—குகநாதா!

1220. கதிர்கா மத்திலுறை வேலவா!
கனகா மத்திகுற மாதினள்—புணர்தோளா!
மதிசேர் கற்றை மிகு வேணியார்
மணிமே ருற்றவர னுரைமே—வியமானள்
துதிசே ரற்புதமி னேரினள்
துரைமா னுக்குவரு பாலகா!—எனையாளாய்!
நதிசூழ் சித்ரமிகு தோகையாய்
நலமே வுற்றமலை நாயகா!—குகதேவே!

1221. நடைபயில் தோகை யான
நயமிகு வேட மாதை—அணைதோளா!
தொடைபுனை நீப மார்ப!
துதிபெறு பாத! நாளும்—எனையாளாய்!

---

1217. புணர்வா! - புணர்பவனே!

படையயி லால்மு னுடு
பணிபுய மாவை யேவெல்—செயவீரா!
மடைநதி யாறு போல
வளம்வயல் சூழ்சி **காபோன்—மலையாளா!**

1222. கங்கையுற்ற செஞ்சடை கந்தரக் கருஞ்சுடர்
—பரமானுேர்—தருபாலா!
புங்கயத்தி லின்புடன் பண்புறச் சிறந்துடன்
—வளர்மானேர்—குறமானுள்
செங்கையிற் புணர்ந்தவ! செந்தியிற் சிறந்தவ!
—எனையாளாய்!—அமரேசா!
கொங்கையுற்ற மண்டபம் கொண்டநற் **சிகண்டியின்**
—**மலை**மேலே—வருதேவே!

1223. கரியநிற மாயனுர்
கடலில்வரு மாதினுள்—புணர்தோளார்
தரியலரை நேர்செய்வோர்
தரையையுணு நாதனுர்—மருகோனே!
அரியவரம் நீசெய்வாய்!
அமரர்பணி பாதனே!—உமைபாலா!
திரிபுவனர் நாதனே!
**சிகிமலை**யில் வாழ்பவா!—எனையாளாய்!

1224. அறுபடை வீடில் வாச! அடியவர் நாடு பாத!-எனையாளாய்!
அறுவர்கள் தூய பாலை அருமைய தாக வேயுண்-கனிவாயா!
அறுபடை மாவை யேவெல் அணிமயில் வாக னு!நன்—
[னயலோலா!
அறுமுக நாத! தேவ! அழகுள **தோகை மேரில்**-வருதேவே!

1225. சந்த்ரனணி சடையார்
தந்தியுரி யுடையா—ரிடமேசேர்
கொந்தலர்கொள் குழலாள்
கொஞ்சுகிளி மொழியாள்—தருபாலா!
அந்தமிகு குறமான்
அன்பினெடு புணர்சீர்—இருதோளா!
கந்தமிகு பொழில்சூழ்
கங்குலவு **சிகியா—மலை**யாளா!

1222. கொங்கு = மணம். கொங்கை = மணத்தை.

1226. வஞ்ச ஞகிய சூரன்மார்
மண்ட வோர்கதிர் வேலையே—வியவீரா!
கஞ்ச மாமலர் மீதில்வாழ்
கொங்கு லாவிய கேசமான்—அணைதோளா!
அஞ்சை யாயுத பாணியார்
அன்ப தாகிய மாயனார்—மருகோனே!
தஞ்சம் வேறிலை ஆளையா!
தங்க மாமலை நேர்சிகா—மலையாளா!

1227. குடங்க ணிகர்த்த முலையாள்
குறைந்த இடைத்து டியைநேர்—இடையாளே
கடம்ப வனத்தி லுறைவோர்
கலந்த வுமைப்பெண் மகிழ்வா—கியபாலா!
நடஞ்செய் மயிற்ப ரியினாய்!
நலஞ்செ யெனக்க மரரே—பணிதாளா!
தடங்கள் மிகுத்த வளமே
தழைந்த சிகிப்பொன் மலைமேல்—வருதேவே!

1228. துடியைநிக ரிடையாள்
துணையின்முலை வடிவாள்—குறமானாள்
வடிவின்மயல் மிகுவாய்!
மயிலைநடை பயில்வாய்!—அமரேசா!
அடியர்பணி சரணா!
அயிலையணி கரனே!—எனையாளாய்!
படியினுயர் முடிசேர்
பரம!முனை சிகிமா—மலையாளா!

1229. மதியணி சடையார் வளர்கயி லையினர்—குமரேசா!
துதியுள சரணுள் துடியிடை யுமையாள்—அருள்பாலா!
கதிமிகு மயிலா! கமழ்துள புனைவோர்—மருகோனே!
அதிகநன் மைகளே அருள்சிகி மலைமேல்—வருதேவே!

1230. தந்திமுன் மேவு மாயன்
சங்கணி பாணி நாதன்—மருகோனே!
அந்தியின் மேனி மாமுன்
அண்டிய போர்செய் சூரின்—அயிலாளா!

---

1229. 'துளவு' என்பது, 'துள' என நின்றது.

செந்தியில் வாச! தேவ!
தென்சிகி மேரில் வாச!—எனையாளாய்!
கொந்திசை நீப மாலை
கொண்டிடு மார்ப! மேன்மை—அருளாயோ?

1231. தரியல னை சூரை சகமதில் நாச மாக—அயிலாலே
மரிபட வேசெய் தேவ! மயில்தனி லேறி யாடு—குருநாதா!
அரிவிளை யாடு நீப அலர்தனை மார்பின் மேவ-அணிதேவே!
வரிமிகு சோலை சூழும் வளர்சிகி மேரில் வாழ்வு—புரிதேவே!

1232. எதிர வந்திடு சூர னவியை
இடர வன்கொடு வேலை யேவிய—செயவீரா!
அதிர வுங்கட மேசெய் மாமயில்
அழகி லங்கிட வேமு னகிட—வருவாயே!
ததியை யுண்டிடு வாயர் மாதுளை
தனைய ணிந்திடு மாய னருட—மருகோனே!
கதிவி ரைந்தருள்! நாத னே! உயர்
கமழ்சி கண்டியின் மேரி லேவரு—குகநாதா!

1233. தொந்த மாகவு மேநட மேபுரி
தொங்கல் மாமயின் மீதினி லேவரு—குகதேவே!
சந்த மாமுலை வேடமி னளொடு
தண்கொள் பூவணை மீதினி லேதழு—வியதோளா!
நந்த மேவிய பாணியி னருயர்
நங்கை பூமகள் நாயக னர்மகிழ்—மருகோனே!
கந்த நீபமென் மாலிகை யாய்!அருள்!
கஞ்ச மாதுறை தோகையின் மாமலை—வருதேவே!

1234. வஞ்சவிடு சூரன் மீதில்
மண்டவயி லேவி யேவெல்—பெலசூரா!
கஞ்சமட மானை நேர்செய்
கந்தரியை மேவு தேவ!—எனையாளாய்!
கொஞ்சமதி சூடும் வேணி
கொன்றையணி நாத ராசை—மகவேளே
கொஞ்சுகிளி மேவு பாணி
கொண்டடல்படி தோகை மேரில்—வளர்தேவே!

1235. மயிலி லேறிய குமரா!
மகிமை யாகிய சமுகா!—எனையாளாய்!
அயிலை மீறிய அசுரோன்
அலற வேவிடு பெலவா!—அமரேசா!

குயிலை நேர்மொழி பயில்வாள்
குறமி ஞளொடு புணர்வாய்!—செகநாதா!
ஒயில னே!அறு முகவா!
உயர்சி காமலை தனிலே—வருதேவே!

1236. சந்திரனை யணிவேணி
தங்கமலை தனில்வாச—ரிடமேசேர்
பந்திணையின் முலைமாது
பங்கயமி னிகரான—வுமைபாலா!
செந்திமலை தனில்வாச!
தென்சிகியின் மலைவாச!—எனையாளாய்!
திந்தியென நடமாடு
தென்சிறைகொள் மயிலாள!—அருளாயோ?

1237. சூது மிகுத்த மாமுலையாள்
தோகை குறத்தி சேர்புயவா!—எனையாளாய்!
[வாது புரிந்திடு சூரேமாள்
வயிற்கொடேவிய—செயவீரா!]
போது மிகுத்த நீபமதே
போர்செய் புயத்தில் நாள்தொறுமே—அணிதேவே!
கோது அகற்று மாமயிலா!
கோல மிகுத்த தோகையின்மா—மலையாளா!

1238. குடத்தை நேரு முலையாள்
குறத்தி மாதை யணைமீ—தணைதோளா!
படத்தை நீடு மரவே
பரித்த பூவி லுயர்வோர்—பணிதாளா!
திடத்தை மேவு புயமா
தெறித்து வோட வயிலே—வியசூரா!
நடத்தை நீடு மயிலா!
நலத்த தோகை மலையா!—எனையாளாய்!

1239. மடந்தை குறமகளாள் மணந்த விருபுயவா!—எனையாளாய்!
நடங்கள் பயில்மயிலா! நறும்பொன் மலரெனும்நீ—பணி
[மார்பா!
அடஞ்செ யசுரனையே அடர்ந்த வயிலணிபா—ணியினதா!
விடங்கொ ளரவணையார் விரும்பு மருக!சிகா—மலைநாதா!

---

1237. [ ] விளங்க வில்லை. "வாது தொடுத்திடு சூர்மாள வேலை யெடுத்து வீசியுவா!—செயவீரா!" எனப் படிக்கலாம்.

1240. கச்சிற்பொலி பூமுலை நாயகி
கட்டிக்கமழ் மாலிகை யேபுனை—குழன்மானுள்
அச்சிற்செயும் வாள்விழி யாளுயர்
அற்புற்றிடு வேடமி னெளொடு—புணர்தோளா!
நச்சிற்பொலி சீர்மிட ரூர்பொது
நர்த்தக்கழ லாரருள் பாலக!—எனையாளாய்!
உச்சிக்கொடு மாமுடி யேமிகு
உச்சச்சிகி மாமலை வாழ்வுறு—குகநாதா!

1241. தடவரைகள் கிடுகிடென சகமுழுது மசைவுபட—வெகு
[வாயே
நடனமிடு பரிமயில! நறையுலவு மலர்புனையு—மிருதோளா!
திடமுலவு மசுரன்முடி சிதறிவிட வயிலைவிடு—செயவீரா!
கடகரியி னுடதுணைவ! கருணைபுரி சிகிமலைய!—அமரேசா!

1242. சித்திர மான வடிவாள்
சிற்றிடை மாது குறமான்—மயலாளா!
தத்திய தோகை மயிலா!
சக்கர பாணி மகிழ்வாம்—மருகோனே!
சத்தியை நேரில் வருமோர்
தப்பித மாவை வெலுவாய்!—அமரேசா!
கத்திகை சூடு புயவா!
கர்த்த!சி காமென் மலைமேல்—வருதேவே!

1243. செந்திமலை வாசா!கு றிஞ்சிநக ராளா!சொல்
செந்தமிழை நீயேய—ருள்கிலாயோ?
கந்தமிகு மாநீப மென்றமல ராமாலை
கண்டமதி லேசூடு—பெருமாளே!
அந்தமிகு சேல்போல ரெண்டுவிழி மான்மாது
அன்புமிகு மாதேவ!—எனையாளாய்!
கொந்தலர்கொள் சீர்சோலை மண்டிவளர் கார்தாவு
குன்றைமலை மேல்வாழு—குகநாதா!

1244. வண்டு சூழ்குழன் வேடமான்
மஞ்ச மீதினி லாவலாய்—அணிதோளா!
தண்டு ழாயணி மார்பினர்
சங்க மேயணி பாணியார்—மருகோனே!

செண்டு சேர்முலை மாதினுள்
திங்க ளானனி சூலியாள்—தருபாலா!
மண்டு சோலைகள் சூழ்கிகா
மங்குல் தாவிய கோடிலே—வருதேவே!

1245. நடனமிட் டிடுமயிலா! நகுமதிக் கிசைவதன !—குகநாதா!
அடல்விளைத் திடுமசுரோன் அலறிடக் கொடுவயிலே—
[வியசூரா!
மடல்மிகுத் திடுமணமார் மலர்தரித் திடுகுழல்வே—டமினுதா!
கடல்வளைத் திடுபுவியோர் கருதுநற் சிகிமலைமேல்—
[வருதேவே!

1246. வடிவு மிகுத்த குறமானுள்
மனது மகிழ்ச்சி யுடனேதான்—அணைதோளா!
கொடிசெய் விறற்கொ ளசுரோனே
குருதி மிகுக்க வயிலேதான்—விடுவீரா!
அடியர் தமக்கு விசைநாதா!
அமரர் தமக்கு அரசே!நீ—அருளாயோ?
கடிகொள் பொழிற்கு மலையோனே!
கனமி குநற்ற சிகியாமே—மலையாளா!

1247. வஞ்ச மிகுத்த சூர ருடல்
மண்ட வயிற்கொ டேவி யேயடல்—புரிவோனே!
தஞ்ச மெனக்கு வேறு தானிலை
சங்க மிகுத்த நாவ லா!அரு—ளுதவாயோ?
நஞ்ச மிகுத்த நாக மேயணி
நன்று மிகுத்த வேணி யாருட—புதல்வோனே!
மஞ்சு தவழ்ச்சி யான தோகையின்
மன்கொள் மலைக்கு நாதனே!அரு—ளுதவாயோ?

1248. வாலமதி சூடும் வேணி வாசமிகு மாலை மார்ப—ரிடமேசேர்
நீலநிற மான தேவி நீலிகவு மாரி மாது—தருபாலா!
ஆலமென நீடு கோபி ஆனவசு ரோனை யேவெல்-பவவேளே!
கோலமிகு சோலை சூழு கோடுலவு தோகை யான-மலையாளா!

1249. தத்தியபரி மயிலா!
சத்தியையெதிர் வருசூ—ருடன்மேலே
தைத்திடவிடு பெலவா!
சக்கரவரி மகிழ்வா—மருகோனே!

பத்திரமிகு வனம்வாழ்
 பத்மமினிகர் குறமான்—அணைதோளா!
அத்தியின்முகர் துணைவா!
 அற்புதசிகி மலையா!—எனையாளாய்!

1250. வஞ்சிநிக ரிடையினள்
 மங்குனிகர் குழலினள்—வடிவேசேர்
பஞ்சின்மிகு வடியினள்
 பங்கயமி னிகரினள்—குறமானள்
கொஞ்சுகிளி புணர்குகா!
 கும்பமுனி பணிபவா!—எனையாளாய்!
மஞ்சுலவு பொழில்கள் சூழ்
 மங்குல்தவழ் சிகியின்மா—மலையாளா!

1251. தந்திமகிழ் துணைவா!
 தண்குலவு பொழில்வே—டுவர்மானே
பந்திலகு முலையாள்
 பண்புமிகு குறமான்—அணைதோளா!
நந்திருகை விறலார்
 நன்றுபுரி மருகா!—எனையாளாய்!
கொந்திலகு பொழில்சூழ்
 குன்றைமலை தனிலே—வருதேவே!

1252. சக்கர மணிமாயன்
 சக்கர முணும்வாயன்—மருகோனே!
செக்கர்மே யுளநாதன்
 சித்தியின் மிகுநாதன்—துணையாளா!
அக்கினி யரனர்தம்
 அற்புகொ ளுமைமானள்—புதல்வோனே!
[தக்கருள் புரிசமுகா
 தத்திய மயிலெனுமா—மலையாளா!]

1253. வாச மிகுத்தநீப மாலை தரித்த மார்ப!—எனையாளாய்!
நாச மிடச்செய் சூரை நாடி அயிற்கொ டேவு—செயவீரா!
ஈசர் தமக்கு மால்செய் ஏர்கொ ளுமைப்பெ ணுசை—மக
[வேளே!
காசகல் சித்ர மேவு கார்தவழ் நற்சி காவின்—மலையாளா!

---

1252. [ ] உருவம் விளங்கவில்லை.

'தக்கருள் புரிசாமி! தத்திய மயிலான—மலையாளா!
என் இருக்கலாம். சக்கரம் = ஆழி, பூமி.

1254. வாதிடு சூருடல் கீறிட வேயயில்
வாகுட னேவிடு—செயவீரா!
சூதினை யேமிக ராகிய பூமுலை
தோகைமி னாகிய—குறமாதுள்
மீதினி லேமய லாகிய நாயக!
வேதனை யேசிறை—யிடுதேவே!
மேதினி யேபுகழ் கோடுக ளேநிரை
மேவிய தோகையின்—மலையாளா!

1255. வடிவு மிகுத்த தேவி
வனம திலுற்ற மாது—புணர்தோளா!
கடிகொள் மலர்ச்சி யான
கதிர்கொள் கடப்ப மாலை—புனைமார்பா!
அடிய வருக்கு மேன்மை
யருள்சி றிபெற்ற தேவ!—எனையாளாய்!
துடிய சுரைக்கொல் வேல!
துதிபெ றுநற்சி கரமேன்—மலையாளா!

1256. முல்லை முகையைநிகர் முறுவலாள்
முள்ளி னயிலைநிகர் விழியினாள்—குறமாதுள்
அல்லை நிகருமுட லசுரமா
அல்லல் தவிரரண களமதே—அடுவோனே!
குல்லை யணியுமுயர் விறலினர்
[குன்னை மடமினென வேசெய்மாலுட]-மருகோனே!
[எல்லை யளவில்பொழில் சூழுமாமுடி
யிலமை தவழுமுயர் தோகைமாமலை]—வருதேவே!

1257. மாது குறத்தி நாத! வாச மிகுத்த நீப—மலர்மார்பா!
சேது மிகுத்த மேனி தேவர் தமக்கு மேன்மை—மகவேளே!
வாது மிகுத்த சூரன் மாள வயிற்கொ டேவு—செயவீரா!
கோது வகற்று தோகை கோடி விருக்கு நாத!-எனையாளாய்!

---

1256. [ ] விளங்கவில்லை.
முறையே,

"குன்னை குடையெனசெ யரியமால்"
"எல்லை யளவில் பொழில் கலவமா
மஞ்ஞை யுலவுமுயர் சிகியின்மா—மலையோனே!"

என்று படிக்கலாம்.

1258. கஞ்சமலர் மீதில் வாழு
கந்தமிகு கேச மாது—புணர்மாயோன்
மஞ்சுநிற மேனி யார்தம்
மங்களம தான சீர்கொள்—மருகோனே!
மிஞ்சவரு சூர ஞவி
வென்றகுக நாத! நீதி—யருளாயோ?
அஞ்சலெனே யாளு நாத!
அந்தமிகு தோகை யான—மலையோனே!

1259. மாலை மதியையணி வேணி யார்கவு
மாரி உமைமருவு நாத ஞர்தரு—புதல்வோனே!
சேலை நிகரும் விழி மாதி ஞளுயர்
தேனை நிகருமொழி வாயி ஞள்குற—மகள்தோளா!
வேலை யெதிரவரு சூர ஞருடல்
மீதில் விடுமதிக சூர னே!மயில்—முருகோனே!
சோலை யுயரவளர் கோடு லர்விய
தோகை மலையில்வரு நாத னே!கலம்—உதவாயோ?

1260. மாய மிகுத்த சூரன்
மாள வயிற்கொ டேவு—செயசூரா!
நேயமி குத்த வேடர்
நேரி மையற்ப தாக—அணைதோளா!
தூய மதிப்பொன் வேணி
தோகை யுமைப்பெ ஞள்தன்—மகவேளே!
சேய சிகிப்பொன் மேரில்
தேவ! எனக்கு நாளும்—அருளாயோ?

1261. கும்பமுனி துதிக்கும் வேலவ!
கொண்டலென நிறத்த மேனியர்—மருகோனே!
விம்பமெனு மிதழ்ப்பெ ஞகிய
விந்தைநிகர் குறத்தி மேவிய—இருதோளா!
தம்பம்வளர் களிற்றி ஞனர்
தந்துணைவ! எனக்கு மாவரம்—உதவாயோ?
வம்பவிழு மரக்கொள் சோலைகள்
மண்டிவளர் சிகிப்பொன் மேரினில்—வருதேவே!

1262. சூர ஞவி யோடவே தானை யோடு தானுமே
தூய வேலை யேவியே—அடுவோனே!
பார நாக மானதோர் ஆதி சேடன் மீதில்வாழ்
பாரு ளோர்கள் யாருமே—பணிதாளா!

வீர மான தோகையாய்! நாயன் மேலெ நாளுமே
மேன்மை யான வாழ்வதே—அருளாயோ?
சேர வான வோர்களை சூழ்சி காநன் மேரில்வார்
தேவ தேவ தேவனே!—எனையாளாய்!

2263. வனவேடமின் மகள்மேவிய—இருதோளா!
சினமாவுயிர் செகுகூரிய—அயிலாளா!
மனமீதினில் வருநோய்தவிர்—குகநாதா!
இனமாமணி யெழில்சேர்சிகி—மலையாளா!

2264. நித்த முமைதனை மருவிய
நிர்த்த மிடுமிரு சரணனார்—அருள்பாலா!
பத்த ரிமையவர் பணிசெயும்
பத்ம மலர்தனை நிகரதா—கியதாளா!
நத்த மிலகிய குழலியை
நட்பு மிகுகுற மகளையே—புணர்தோளா!
சத்த முகில்தவழ் பொழில்நிறை
சக்ர முடிநிரை சிகியின்மா—மலையாளா

2265. தண்டமிகு மசுரோன் மண்டைதக ரிடவே
சண்டைசெய்து வயிலே—வியசூரா!
கொண்டலென இருளே கொண்டுவள ரழகே!
கொண்டல்குழ லுமையா—ளிடமேசேர்
கண்டமது கறையார் மன்றில் நடமிடுவோர்
கஞ்சன்முடி யணிவோர்—தருபாலா!
வண்டர்படி மலர்நீ பம்புனையு முருகா!
மங்குல்தவழ் சிகிமா—மலையாளா!

2266. திங்களணி சடையார் கொன்றையணி முடியார்
செம்பவள மெனவே—நிறமானோர்
பங்கில்வளர் கொடியாள் கொங்கிலகு குழலாள்
பண்புமிகு மொழியாள்—தருபாலா!
பைங்கிளியின் மொழியாள் அன்புமிகு குறமான்
பந்துமுலை தனிலே—புணர்தோளா!
செங்கமல மலர்மான் என்றுமுறை நலமார்
தென்சிகியின் மலைமேல்—வருதேவே!

2267. கடம்பவன முறைவோர் சிறந்தசடை முடியார்
கரந்தைபுனை யரனார்—தருபாலா!
நடம்பயிலு மயிலா! மிகுந்தவர மருள்வாய்!
நலங்குலவு கதிர்வே—லணிதேவே!

அட்டம்புரியீடு மசுரோன் இறந்துவிட அயிலால்
அடுங்குமர குருவே!—எனையாளாய்!
வடம்புனையு முலையாள் குறம்பயிலு குறமான்
மகிழ்ந்தகுக சிகியா—மலையாளா!

1268. வண்டின மேறு பூகொள்
மங்குலை நேரு கேச—மிகுமானள்
மண்டிய காத லாள்பொன்
மங்கையை நேரும் வேட—மகள்வாகா!
தண்டிரு சேர்து ழாய்கொள்
சங்கணி பாணி யார்தம்—மருகோனே!
விண்டினி யோர்க ளேசொல்
வெண்சசி தாவு தோகை—மலையாளா!

1269. நீலமயில் மீதிலே யேறியெழி லாகவே
நீயென்முன மாவலாய்—வருவாயே!
வாலமதி சூடுவோர் மேருவிலி பாகம்வாழ்
வாலவய சானதோ—ருமைபாலா!
மேலவர்கள் வாழவே சூரன்முடி வீழவே
வேலதனை யேவியே—அடுவோனே!
தாலமதில் மேன்மையாய் வானுலவு கோடுசேர்
தாமுலவு தோகையா—மலைபாளா!

1270. கார்தவழ் சோலைமீது காரிகை மீதி லாசை—மிகுவோனே!
தார்புனை நீபமாலை தானணி மார்ப! தோகை—மயிலாளா!
வார்புனை மர்து தேவி வாசம தான கேச—உமைபாலா!
பார்புகழ் தோகை மேர! பாவல! தேவ தேவ!-முருகோனே!

1271. கயிலாச வரையீசர் நதிசூடு சடையாளர்
கமழ்தாத கியின்மாலை—அயனார்பால்
ஒயிலாக வளர்மாது கிளிபோலு மொழியாளென்
உமைமாது தருபால!—எனையாளாய்!
அயிலால்மு னெதிராக வருசூர னுடல்கீறி
அடலேசெய் செயவீர!—குகநாதா!
குயிலான மொழிவேடர் குலமானின் மயலாள!
குளிர்சோலை மிகுதோகை—மலையாளா!

1272. எதிர வந்திடு சூர னவியை ரணக ளந்தனில் வீர மாகவும்
இடற வன்கொடு வேலை யேவிய—செயவீரா! [நாயகி
மதியி லங்கிய சீர்கொ ளானனள் குயிலை மிஞ்சிய சீர்சொல்
வளர்கு றிஞ்சியின் வேட நாயகி—புணர்தோளா!

நதிய ணிந்திடு வேணி யார்புணர் வழுதி யன்புகொள் சேய்மி
நறைமி குங்குழல் நீலி யாள்தரு—புதல்வோனே! [ஞகிய
விதியி னன்குரு நாத னே! அருள் மயிலெ னும்பரி நாத னே!
மகிமை கொண்டிடு தோகை மேரினில்-வருதேவே! [குக!

1273. வாச மிகுந்த இதழ்சேர் நீப மெனுஞ்சொல் மலரார்
மாலை யணிந்த புயவா!—எனையாளாய்!
நேச மிகுந்த குறமா னோடு சிறந்த வணைமேல்
நீடு மனங்கொள் மயலால்—அணைதோளா!
பாச மிகுந்த வடியார் மேன்மை யிலங்க வருள்வாய்!
பாகு நிறைந்த மொழியாய்!—அமரேசா!
தேச மிகுந்த வளமார் நேம வளங்கொள் நகரா!
சீர்கொள் சிகண்டி மலைமேல்—வருதேவே!

1274. கச்சுத் தரித்த முலையினள் பச்சைக் கிளிக்கு நிகரினள்
கற்பிற் பெருத்த குறமினள்—புணர்தோளா!
நச்சுத் தரித்த மிடறினர் பக்கத் திருக்கு மிறைவியாள்
ரத்னச் சிலப்பில் [வருவர்மா—துணையாளா!]
தச்சுப் புறத்தி லுருவவே வக்ரத் தெயிற்றி னசுரன்மேல்
சத்திக் கதிர்ப்பொ னயிலையே—விடுவீரா! [வாழ்
மொச்சுப் பெருத்த பொழில்கள்சூழ் சித்ரச் சிகிக்கி ரியினில்
முத்திற் சிறக்கு நகையனே!—வருவாயே!

1275. குஞ்சித நடன பாதர்ப தஞ்சலி பணியு நாதர்நல்
கொன்றையை யணியும் வேணிய—ரிடமேசேர்
வஞ்சியி னிடையின் மாதுமை நந்தரி துணைவி யானவள்
மைந்தருள் புரிவை தோகையின்—மயிலாளா!
கொஞ்சிய மொழியின் வேடுவர் தங்குல மகளை யாசைகள்
கொண்டுட னமரு தேவம—ரிடுவேலா!
மிஞ்சிய பொழில்கள் சூழ்வரு அண்டர்க ளடிய ரேபணி
அன்பர்கள் பரவு தோகையின்—மலையாளா!

1276. கஞ்சத் திருப்பெண் வளர்திரு மாயோன்
கந்தத் துளப்பை யணிமணி மார்மால்—மருகோனே!
அஞ்சக் களத்தில் வருசெய சூர்மா
அண்டத் துறக்கொ டியவயி லேதான்—எயும்வீரா!

---

1272. வழுதியன்புகொள்சேய்: தடாதகைப் பிராட்டியார்.

1274. [ ] 'வருவள்மா—துமைபாலா!' என்றிருப்பின் பொருள் பொருந்தும்.

1175. நந்துஅரி - சங்கேந்திய திருமால். மைந்த! அருள்புரிவை. தேவ! அமரிடுவேலா!

மஞ்சத் தினிற்கு றமினுயர் சீர்சேர்
வம்புற் றிருக்கு மூலைதனி லேதான்—புணர்தோளா!
நெஞ்சத் திருக்கை யகலிட வேதான்
நின்சித்தம் வைப்பை! சிகிமலை மீதே—வருதேவே!

1277. சங்கத் தமிழ்நா வலவா! எங்கட் கருள்நீ செய்குவாய்!
சந்தத் தமிழ்பா டுவர்போல்—எனையாளாய்!
துங்கச் சிகிவா கனமேல் அன்புற் றென்முனீ வருவாய்!
துண்டப் பிறைவே ணியினுர்—அருள்பாலா!
[பங்கப் பழனத் துழவோர் மிஞ்சிப் பயிரிட் டிடுசீர்
பண்புற் றிடுவற் புதநே—மனனுடா!]
தங்கக் கிரிபோ லவுமே குன்றைக் கிரிமீ தினில்வாழ்
தந்தித் துணைவா! குமரா!—அருள்வாயோ!

1278. கரும்பைநிகர் மொழியாள் திரண்டமுகி லெனவே
கலந்தகுழன் மடவாள்—நலமேசேர்
குரும்பைநிகர் முலையாள் சிறந்தமதி முகமான்
குடங்கையெனும் விழியாள்—குறமானுள்
விரும்புகுரு பரனே! சிறந்தவர மருள்வாய்!
விளங்குகதிர் வடிவேல்—அணிவீரா!
பெரும்புவன மதிலே உயர்ந்தகொடு முடிசேர்
பிறங்குசிகி மலைமேல்—வருதேவே!

1279. அண்டர் பணிசெயு நாத னே!அருள்
அன்பி னுடன்மயின் மீதி லேறிமுன்—வருவாயே!
வண்ட னென்வரு சூரன் மீதினில்
மண்ட வயில்தனை யேவி யேயடல்—புரிவோனே!
கண்ட மதிலிருள் சூடு நாயகர்
கஞ்சன் முடிதரி வேணி நாயகர்—அருள்பாலா!
கொண்டல் படியலர் சோலை சூழுயர்
குன்றை மலைதனில் வாழு நாயக!—அமரேசா!

1280. கடம்ப வனத்தி லுறைவோர்
கரந்தை தரித்த சடையா—ரிடமேசேர்
குடங்கை நிகர்த்த விழியாள்
குரும்பை நிகர்த்த முலையாள்—உமைபாலா!

---

1276. நெஞ்சத் திருக்கை - உள்ளத்தின் மாறுபாட்டை.

1277. சந்தத் தமிழ் பாடுவர்: அருணகிரியார்.

1277. [ ] சந்தம் வேறு.

அடஞ்செய் பெலத்த வசுரோன்
அகங்கள் பிளக்க வயிலே—வியசூரா !
நடஞ்செய் சிகிப்பொன் மயிலா !
நலஞ்செய் சிகிக்கி ரியிலே—வருதேவே !

1281. சிந்தளவு வாசையாள்
செங்கமலை மாதுபோல்—வடிவாளே
பந்துமுலை வேடமான்
பண்பினொடு மேவுவாய் !—எனையாளாய் !
அந்தமிகு தோகையாய் !
அன்பினொடு வேணதே—அருளாயோ ?
கந்தமிகு **தோகையாம்**
**கங்குல்படி** மேரிலே—வருதேவே !

1282. மயிலில்வரு முருகா ! வரமதனை யருள்வாய் !—எனையாளாய் !
குயிலினுயர் மொழியாள் குறமினனை குமரா !—அமரேசா !
அயிலையெதிர் வருமோர் அசுரரையட வுடனே-விடுவோனே!
ஒயிலையுள குமரா ! உயர்சிகியின் மலையா !—குகநாதா !

1283. வந்தெதிர்த்த சூருடல் கூறதாகிட
மஞ்சிருக்கு நீண்மிகு வேலை யேவிய—செயவீரா !
அந்த முற்ற காவினி னுளு மேவளர்
அன்பு முற்று வேடர்மி னுளை மேவிய—புயநாதா !
சந்த முற்ற பாடலை நீசெய் வாய்!குக !
சங்க ரற்கு வாசைகொள் பால னே!இனி—யெனை
அந்த ரத்தர் யாவரும் நாளு மேபணி [யாளாய்!
அங்க மிக்க **தோகையின் மேரி** லேவரும்—அமரேசா !

1284. நடனமிடு [மயிலி லேறி] யடியனிட மாக நாளும்
நலமுதவ நீமு னுகை—வருவாயே !
குடநிகரு [முலையின்] மாது குயிலைநிகர் [மொழியின்] மாது
குறவர்குல மாது மேவு—புயநாதா !
அடமதுசெய் சூர னுவி யிருபிளவ தாக நீளும்
அயிலைவிடு தேவ தேவ !—எனையாளாய் !
தடமுலவு சோலை சூழும் முடிகணிரை யான சீர்கொள்
**தகுசிகியின் மேரில்** வாழும்—அமரேசா !

---

1284. [ ] வேறு சந்தம். இவற்றை முறையே. 'தோகையேறி' 'மார்பின்' 'பாணி' எனப் படிக்கலாம். பாணி - சொல்,

1285. நேசக்குற நாயகி நீள்கட்டிலின் மேவிய—புணர்தோளா!
வாசக்கம லாசன மாதுக்கொரு நாயகர்—மருகோனே!
ஈசற்கொரு பாலக னே! இச்சைய தாயென்முன்-வருவாயே!
நேசத்தவர் தேடிய சீருற்றிடு தோகையின்—மலைநாதா!

1286. பிறையணி சடையார் திரிபுர தகனர்
பிணையணி கரனு—ரிடமேசேர்
குறைபடு மிடையாள் உமைகிரி புரையாள்
குமரியின் மகவே!—எனையாளாய்!
நறையுள மலர்நீ பமணியு முருகா!
நடமிடு மயிலாய்!—அமரேசா!
மறைபுகழ் சரணு! சிகிமலை வளர்வாய்!
வரமருள் புரிவாய்!—குகநாதா!

1287. கஞ்சன்முடி மாலையொடு கொன்றையெனு மாலையொடு
கங்கையர வேபுனைசெய்—சடையாளர்
நெஞ்சமதி லேநினையு மன்புமிகு தேவியுமை
நிம்பமணி வோர்புதல்வி—மகவோனே!
கொஞ்சவிடை யார்களுடன் விஞ்சுவிர கால்மயல்கள்
கொண்டுதிரி யாதுபதம்—அருளாயோ?
தஞ்சமினி வேறுமிலை உன்றனிரு பாதமது
தந்தருள்செய் தோகைமலை—வருதேவே!

1288. பிறையைநிக ரெயிறுன் கரியநிற வுடலான்
பெரியகட லொலியான்—அசுரோன்மேல்
கறைகெழுமு அயிலே வியகுமர குருவே!
கதியையடி யவர்பால்—அருள்வாயே!
குறையுமிடை யுடையாள் குழையையடர் விழியாள்
குறமினுடன் விளையா—டியலோலா!
அறைதமிழை யருள்வாய்! அறுபடையின் மணியா!
அழகுபுரி சிகிமா—மலையாளா!

1289. கொஞ்சுகிளி மொழியாள் தொண்டைவிழி யிதழாள்
கொண்டல்படி குழலாள்—நலமேசேர்
பஞ்சுபடி யடியாள் அன்புமிகு குறமான்
பண்பினொடு புணர்வாய்!—எனையாளாய்!

---

1287. கொஞ்ச இடையார் - பெண்கள்.

1289. தொண்டை விழி இதழ் - கொவ்வைக்கனி (உவமையாக முடியாமை யால்) விழிக்கின்ற இதழ்.

மிஞ்சுரத கெசமா கொண்டுவடல் புரிமா
வென்றவயில் முருகா!—அமரேசா!
மஞ்சுதவழ் பொழில்சேர் குன்றைமலை யரசே!
மஞ்சுமிகு மயிலே—றியநாதா!

1290. தந்திமுகர் துணைவா! சங்கரிதன் மருகா!—எனையாளாய்!
செந்திமலை நகரா! செங்கதிரின் அயிலா!—குமரேசா!
கொந்திலகு மலரே கொண்டவிரு புயவா!—குருநாதா!
அந்திமதி தவழ்வான் அண்டர்பதி சிகியா—மலையாளா!

1291. சந்த மிகுந்த் பாடல் தந்து சிகண்டி மீது—வருவாயே!
அந்த மிகுந்த தேவர் அன்பு மிகுந்த ஞானர்—பணிதாளா!
சொந்த மிகுந்த வேடர் துங்க மிகும்பெண் மீது—மயலாளா!
கொந்தவிழ் கின்ற நீப! குன்றையில் வந்த நாத!—எனை
[யாளாய்!

1292. கஞ்சமலர் மாதுநிக ருங்குறமி னள்மருவு
கந்தமிகு நீபமலர்—அணிமார்பா!
அஞ்சலென ஆளுமைய! அண்டர்முத லானவர்கள்
அன்பர்பணி தேவ!குரு—பர!வேளே!
நஞ்சமணி மாமிடறின் குன்றைவிலி யாருதவு
நந்துமயி லேறிவரு—குகநாதா!
வஞ்சமிடு சூரனுடன் மண்டவயி லேவுகுக!
மங்குல்தவழ் தோகைமலை—வருதேவே!

1293. கஞ்சனை வதைத்த வீரர் பைந்துழை தரித்த மார்பர்
கங்குலி னிறத்த மேனி—மருகோனே!
அஞ்சன மிகுத்த பார்வை ரெண்டுள குறத்தி மீது
அன்புகொள் கடப்ப மாலை—புனைதோளா!
பஞ்சவன் மகிழ்ச்சி யாக வந்துமு னுதித்த தேவி
பண்புடன் வளர்த்த பால!—எனையாளாய்!
நெஞ்சக மெனக்கு நாளும் இன்புட னிருக்க வேசெய்!
நின்சர ணளிப்பை! தோகை—மலையாளா!

1294. அண்டர்பணி சரண! செங்கமல வதன!
அன்புமிகு மடியேன்—எனையாளாய்!
தண்டமொடு வெதிராய் வந்துவடல் புரிமா
தன்குலக லகனே!—குகநாதா!

---

1293. திருத்துழை - திருத்துழாய் என்பதன் மரூஉ.

துண்டமதி முடியார் மன்றுணட மிடுவோர்
சொந்தவுமை யவள்பா—லக! வேளே!
கொண்டல்படி உயர்வாம் தண்டலைகள் வளைசீர்
குன்றைமலை தனிலே—வருதேவே!

1295. தருப்பொலி கானமீது வளர்ச்சிகொள் வேடு வோர்கள்
தமக்கரி தான வாசை—மகள்தோழா!
மருப்பொலி நீப மாலை தரித்திடு சீர்கொள் மார்ப!
மயிற்பரி மீதி லேறி—வருவாயே!
திருப்பொலி மார்பர் தேவர் முகிற்கிணை யான தேகர்
திருத்துழை சூடு வோர்தம்—மருகோனே!
குருப்பொலி கோடு லாவு சிகிக்கிரி மீதில் வாழும்
குகக்கும ரேச! நாளும்—வருவாயே!

1296. வாது படித்த சூரன்
மாள அயிற்கொ டேவு—செயசூரா!
சூது மிகுத்த சீர்கொள்
தூய முலைப்பெண் வேட—மகள்வாகா!
தாது மிகுத்த நீப
தார்புனை வித்த கா!நல்—அருள்வாயோ?
மாது திருப்பெ ணுளும்
வாழ்சி கிநற்பொன் மேரில்—வருதேவே!

1297. சக்கரமணி மாயன் சர்ப்பணை துயில் நாதன்—மருகோனே!
அக்கறுகணி வேணி அத்விதமுத லானோர்—தருபாலா!
வக்கிரவெயிர் மாவின் மற்புயமதி லேபொன்—அயிலேதான்
மிக்கவும்விடு வீர! வித்தக! சிகி யான—மலையாளா!

1298. வஞ்சனை மிகுத்த சூரன் அஞ்சிட வுயர்த்த மேனி
மண்டிட வயிற்கொ டேவு—செயவீரா!
ரஞ்சித மிகுத்த மாது தண்டலை யுதித்த வேடர்
நங்கையொர் குறத்தி மேவு—புயநாதா!
நஞ்சினை மிடற்றி லேகொள் மன்றினில் நடித்த பாதர்
நந்தணி கரத்தர் பால!—எனையாளாய்!
மஞ்சுத வழுற்ற சோலை கொண்டிடு சிகிப்பொன் மேரில்
வந்திடு குகப்பொ னை—மயிலாளா!

---

1298. குக: விளி.

1299. வனசப் பூவளர் மாதை மேவிய
முகிலைப் போர்னிற மேனி மாயவன்
வளையைத் தானணி நாத ஞருட—மருகோனே!
புனமுற் றேவளர் வேடு வோரருள்
மகளுக் காய்வெகு வாசை யாகிய
புனிதச் சேவக! நாத னே!என்முன்—வருவாயே!
மனதிற் றேணின தேத தோவினி
அதனைத் தானருள் நீசெய் வாய்! குக!
மயிலைத் தானட மாட வேயதில்—வருவீரா!
கனகத் தால்முடி நீடு சீருள
**சிகியிற் போர்மலை** மீதி லேவரு
கருணைத் தேவ! உலாச மாகமுன்—வருவாயே!

1300. அந்தி மதியணி சடையார்
அன்பி னுடனருள் புதல்வா!—எனையாளாய்!
தந்தி முகமிகு வடிவோர்
தம்பி யெனவரு குமரா!—குகநாதா!
கந்தில் வருபவர் மருகா!
கண்டு பணியடி யவர்பால்—அருளாயோ?
பந்தி நிறையுள முடிசேர்
பண்பு செறிசிகி மலைமேல்—வருதேவே!

1301. கடகரி வதனனுர் பிறையுள எயிறினர்
கறையடி துணைவனே!—எனையாளாய்!
அடமிகு வசுரனுர் உடலிரு பிளவதாய்!
அலறிட அயிலதே—விடுசூரா!
குடமுலை யிணையினள் மறவர்கள் குலமினள்
குறமகள் புணர்புயா!—குகநாதா!
நடமிகு மயிலிலே வருவையென் முனமதே!
நலமிகு சிகியின்மா—மலையாளா!

1302. மயிலை நடத்திய சேவகனே!
அடியனெனக்கருள் நீசெய்குவாய்!
வனச மயிற்கொரு நாயகனுர்—மருகோனே!
குயிலை நிகர்த்திடு மாமொழியாள்
மயிலை நிகர்த்திடு சாயலினள்
குறவர் குலக்கொடி நாயகியாள்—புணர்தோளா!

---

1300. கந்து - தூண். கந்தில் வருபவர் நரசிங்கர்.

கயிலை மலைப்பர மேசுரனர்
    ரிஷப மதிற்றின மேவருவோர்
    கறையின் மிடற்றினர் பாலகனே !—எனையாளாய் !
செயிலை வளைக்குல மேவியதோர்
    வயல்கள் மிகுத்திடு நேமமுளோய் !
    சிகியின் மலைக்கர சானவனே !—அமரேசா !

1303. படவரவி னுடமுடிகள் படபடென நெளியவொரு
    பருவரைகள் கிடுகிடென—நலமாவே
நடனமிடு பரிமயில! அடியனிடம் வரமருள்வை!
    நறைகுலவு மலரையணி—யிருதாளா !
திடமுலவு மசுரன்முடி யதிரவயி லதனைவிடு
    செயசெயென வருகுமர !—குருநாதா !
வடவரையை நிகருளதொர் முடியுலவு கனமுலவு
    வடிவுமிகு சிகியின்மலை—வருதேவே !

1304. விருந்தையணி புயனர் வலம்புரியை யணிவோர்
    விளங்குதிற லரியார்—மருகோனே !
அரும்பைநிக ரெயிருள் குரும்பைநிகர் முலையாள்
    அலங்கிருத மிகுவே—டமின்வாகா !
பெரும்புவன மதில்வாழ் நலந்திகழு மடியார்
    பிறங்குசநி தியனே !—அருளாயோ ?
பருஞ்சிகியின் முருகா ! சிகண்டிமலை யரசே !
    மணங்கமழு மலர்நீ—பமென்மார்பா !

1305. கஞ்ச மலரில்வரு மாதினுள்
    கண்டைநிகருமொழி மாதினுள்
    —புணர்மாயோன்—மருகோனே !
நெஞ்சம் வருதுயர மோடவே
    நின்கிரு பையையருள் வாய்குகா !
    —மயின்மீதே—வருவோனே !
கொஞ்ச மதிநுதலின் வேடமான்
    கொண்ட மயலில்வெகு வாசையாய் !
    —எனையாளாய் !—அமரேசா !
வஞ்ச மிகுவசுரரை யேகொல்வாய் !
    மங்குல் தவழ்சிகியின் மேரிலே
    —வருதேவே !—குகநாதா !

---

1304. விருந்தை: பிருந்தை = துளசி. சநிதி = சந்நிதி (திருமுன்).

1306. எதிரேவரு மசுரோனிட மிடரேபுரி அயிலா!
மதிசூடிய வரனார்மனம் மகிழ்வாகிய புதல்வா!
ததியேயுணு கனிவாயினர் தமதாசைகொள் மருகா!
விதிவானவர் முதலோர்பணி மிகு**தோகையின் மலையா**!

1307. கந்த மிகுந்த நீப மாலிகை
கண்ட மிலங்க நாளு மேயணி—குகநாதா!
சந்த மிகுந்த பாட லேயருள்
தண்டை குலுங்க நீமு னாகவும்—அருளாயோ?
அந்த மிகுந்த **தோகை மாமலை**
அந்த மிகுந்த நாத னே!அருள்—உதவாயோ?
சொந்த மிகுந்த வேட நாயகி
துங்க மிலங்கும் ஆசை நாயக!—எனையாளாய்!

1308. ஆறுபடை வீட்டிலர சாளவரு சீர்த்திபெறு
ஆவலொடு கேட்டதனை—யருள்வாயே!—முருகோனே!
மீறுபடை யோட்டிகல்செய் சூரனிரு கூற்றுபட
வேலையெதி ரோட்டிவெகு-செயமானேய்!-உயர்தேவே!
ஏறுமுது கேற்றுவரு மீசர்புணர் தோட்டினுமை
யேயுதவு கார்த்திகைய!—செகநாதா!—குகதேவே!
சீறுவிட மூற்றியபல் ராவையொரு மூக்கிலெடு
சீர்சிகிய **நீட்டுமுடி**—வளர்மேரா!—வளர்தோகாய்!

1309. கானில்வ ளர்ச்சி யான வேடர்ம கிழ்ச்சி யான
காரிகை யைக்கு லாவி—அணைதோளா!
வானிலு தித்த தேவர் மேன்மைபெ றச்செய் தேவ!
வாகுப டைத்த தோகை—மயிலாளா!
பானிக ருற்ற தோர்சொல் மாதுமை பெற்ற சீர்கொள்
பாலக! வித்தை யாவும்—உதவாயோ?
கூனிய விற்கை யான மால்மரு கக்கு கா!பொன்
கோகன கப்பொன் வாழ்சி—**கியின்மேரா**!

1310. வஞ்சக முற்ற சூருடல் ரெண்டுப டப்பொன் வேல்கொடு
மண்டவி சைக்கொ டேவிய—செயசூரா!
தஞ்சமெ னக்கு வேறிலை வந்தும கிழ்ச்சி யாயருள்!
தங்கம லைக்கு நேர்சிகி—மலையாளா!
கொஞ்சம திச்ச டாதரர் பங்கின்வ ளர்ச்சி யாகிய
கும்பமு லைப்பெண் மாதுமை—தருபாலா!
நஞ்சர விற்க ணேதுயில் தண்டுள வுற்ற மார்பினர்
நன்றுப டைத்த மாலுட—மருகோனே!

---

1308. 'அராவை' யென்பது 'ராவை' யென நின்றது.

1311. கூவிய சிறைமயிலா! கூரிய கதிரயிலா—ளியெனுதா!
மேவிய குறமகளாள் மேன்மையின் மிகுகுமரா!—எனே
[யாளாய்!
[தேவியு மாபதியார் சீர்மிகு மீசுரனுர்—அருள்பாலா!
ஓவிய மாமதுபோல்] ஓர்சிகி மலேதனிலே—வருதேவே!

1312. நந்தணி கரனுர் பைந்துள வணிவோர்
நன்றுள வரியார்—மருகோனே!
அந்தம துளமான் தண்டலே தனில்வாழ்
அன்புள குறமான்—அணேதோளா!
சந்தமென் மொழியாள் குன்றைவி லியினுர்
அங்கம துறைவாள்—புதல்வோனே!
கொந்தவிழ் மதுவார் மிஞ்சிய பொழில்சேர்
குன்றையின் மலேவாழ்—குகநாதா!

1313. கடம்ப வனத்தி லுறைவோர்
கரந்தை தரித்த சடையா—ரிடமேசேர்
குடங்கை நிகர்த்த விழியாள்
குறைந்த விடைப்பெண் உமையாள்—அருள்பாலா!
மடந்தை குறத்தி கணவா!
வரங்க ளெனக்கு அருள்வாய்!—செகநாதா!
திடங்கொள் முடிப்பொன் மலேநேர்
சிகண்டி மலேக்குள் வருவாய்!—குகநாதா!

1314. தடத்தின் மண்டிய தாமரை வாழ்வுறு
தனிப்பெ ணென்றுயர் மாமகள் மேவிய-புயமாயோன்
படத்தின் மிஞ்சர வேநெளி வாகிட
பணுக்குள் மிஞ்சிய சீர்நட மாடுவர்—மருகோனே!
திடத்தில் வந்தெதிர் சூருடல் கீறிய
செயித்த நன்றுள வேலவ னே! இனம்-எனேயாளாய்!
நடத்தின் மிஞ்சிய மாமயில் வாகன!
நலத்த குன்றையின் மாமலே வாழ்வுறு—குகநாதா!

1315. கடமத மொழுகிய யானே யானனர்
கடிமலர் தனேயணி சீர்வி நாயகர்—துணேயாளா!
தடவரை தனில்மிகு தோகை மாமலே
தனில்நிதம் வளர்வெகு வான வோர்பணி—யிருதாளா!

1311. [ ] சந்த முறை வேறு. கதிரயிலாளி : விளி.
1314. பணுக்குள் - பண்ணில்.

குடமுலை யிலகிய வேடு வோர்குல
குறமகள் மருவிய மாலை சூடிய—புயநாதா!
அடமுடன் ரணகள மீதி லேவரும்
அசுரனை வெலவிடு வேல வா! இனி—எனையாளாய்!

1316. மயிலேறிய குமரா! மணிநீபமென் மலரா!
குயிலாகிய மொழியாள் குறநாயகி கணவா!
அயிலாலெதி ரசுரோன் அறவேவிடு குகனே!
ஒயிலா! சிகி மலைமே லுயர்வாய்! சர வணனே!

1317. மனநோய்தவி ரிடவே மயிலேறி முன் வருவாய்!
அனமானடை பயில்வாள் அழகாகிய குறமான்
தனதாசைகொள் குமரா! சகமேபுக ழரசே!
வனமார்சிகி யெனுமோர் மலைமேல்வரு குகனே!

1318. கறையணி மிடறுர் நதியணி சடையார்
கமழ்தி ழியினு—ரிடமேசேர்
பிறையெனு நுதலாள் அயிலெனும் விழியாள்
பிரணவ முதலாள்—அருள்பாலா!
நறையணி மலர்நீ பமமணி புயவா!
நலமிகு குறமான்—அணைதோளா!
மறைபுகழ் சரணு! சிகிமலை தனிலே
வளர்பவ! சிறைமா—மயிலாளா!

1319. சிவசி தம்பர நாத ராகிய
சபையி னின்றுய ராட லேபுரி
சிவப ரஞ்சுட ரான நாயக—ரிடமாளுள்
குவளை தங்கிய பார்வை நாயகி
அழகி லங்கிய தோகை யானவள்
குமரி யம்பிகை பால ஞகவும்—வருதேவே!
பவள மென்றுசொல் வாயி னுளொரு
சிறைய னம்பயில் பாத மானவள்
பதும மங்கைய ளான வேடமர்—மகள்தோளா!
அவனி அன்பர்கள் நாளு மேபணி
குலவு தண்டலை சூழ வேவளர்
அழகு மிஞ்சிய தோகை மாமலை—வருதேவே!

1320. வஞ்சிநே ரிடையாள் அம்புநேர் விழியாள்
வம்புசூ டியபூ—முலையாளே
பஞ்சிநே ரடியாள் கொண்டலார் குழலாள்
பண்புசேர் குறமான்—அணைதோளா!

அஞ்சிநேர் வருசூ ரன்றன்மே லடுபோர்
அண்டர் வாழிடவே—புரிவேலா!
மஞ்சுதா வியதோர் குன்றைமா மலைமேல்
வந்தநா யகமே!—எனையாளாய்!

1321. வாடிய விடையாள் நாயகி யொருமான்
வாழ்குற மகளாள்—குறமானுள்
தேடிய கணவா! தோகையின் மயிலா!
தேவர்கள் பணிசீ—ரிருதாளா!
ஆடிய வுடலார் தானவர் குலமேல்
ஆரயில் விடுவாய்!—எனையாளாய்!
மாடிக ளுயர்சீர் நேமந னகரா!
வானடர் சிகிமா—மலையாளா!

1322. விரைகொள் மலரணி தகர மெழுகிய
விளரி யரிமுரல்—குழன்மானுள்
தரையி லுயர்குல சிறுகு டியின்வளர்
தகும றவர்குல—குறமானுள்
வரைசெய் முலையுடை முகடு படிவுற
மகிழி ளெடுபுணர்—இருதோளா!
திரைகொள் கடல்வளை புவியர் பணிபுரி
சிகியின் மலைதனில்—வருதேவே!

1323. வித்துரு மத்தைநி கர்த்திடு வற்புத—இதழாளே
விற்குநி கர்ப்புரு வத்தினள் நற்குற—மகளாளோர்
குத்துமு லைக்குட மத்தைய ழுத்திமுன்—எதிராவே [தோளா!
கொத்தும லர்ச்சொரி மெத்தையி லற்பொடு—புணர்
நத்துத ரித்த கரத்தர்மு கிற்கிணை—உடலானோர்
நச்சர விற்றுயில் பச்சைய ரிக்கிசை—மருகோனே!
அத்துவி தத்தின்மு தற்பொரு ளிப்பருள்—புரிவாயோ?
அட்டதி சைப்புவி யுற்றசிகிக்கிரி—வருதேவே!

1324. சிகரமிகும் வரைபிளவு செயவதிக நுதியுலவு
திறவயிலை யெதிரவிடு—செயசூரா!
மகரமெறி கடலின்மிசை அரவினுட முதுகதனில்
மகிழ்நெடு துயிலுமரி—மருகோனே!
பகரறிய மறைவலவர் அமரர்முத லியர்கள்நிதம்
அருமையொடு பணிபுரியு—மிருதோளா!
நகரமதி லுறைபெருமை யுலவுசிகி மலையின்வியல்
நலமதுள சிகி[.......—மலையாளா]

1323. அத்து விதத்தின் முதற் பொருளே! இப்ப அருள்புரிவாயோ?

1324. [ ] இதனை 'சிகி பரியின்—மிசையாளா!' எனப் படிக்கலாம்.

1325. கோட்டிலுயர் கிளிபோல் யோக்யமிகு மொழியாள்
கோட்டுமுலை மடமான்—வனவேடோர்
வீட்டில்வளர் மயிலாள் வேர்க்கமரு வியவா!
மேட்டிமைகொள் நவவீ—ரர்கள்தோழா!
தோட்டில்வரு மனமே போற்பயிலு நடையாள்
சூட்சவிடை யுமையாள்—தருபாலா!
பாட்டிலுயர் தமிழோர் கூட்டம்வரு புலவா!
பார்த்திப!சி கியின்மா—மலையாளா!

1326. வஞ்சமொடு சூரனுடன் மண்டியெதி ராகவயில்
மண்டவிடு மாபெலவ!—எனையாளாய்!
அஞ்சலென வேயென்முனம் விஞ்சைமயி லேறியெதிர்
வந்துவெகு வானவரம்—உதவாயோ?
மஞ்சமதில் வேடமினொ டன்புகொடு லீலைசெய்து
மங்களம தாகமரு—வியதோளா?
கஞ்சனைமு னேசிறைசெய் அண்டர்பணி மாகுமர!
கங்குல்படி தோகைமலை—முருகோனே!

1327. கஞ்ச மலர்க்குள் வாழும் மங்கை தனக்கு நாதன்
கண்டு தொழற்கு நாளும்—அரிதானோர்
நஞ்ச ரவுற்ற வேணி கொன்றை தரித்த மார்பர்
நந்தி புறத்தி லேறு—பவர்பாலா!
மிஞ்சி யெதிர்த்த சூரன் ரெண்டு படப்பொன் வேலில்
வென்று தரித்த வாகை—யுளதேவே!
நெஞ்ச மகிழ்ச்சி யாக அன்ப னுயர்ச்சி யாக
நின்ற யவைச்செய் தோகை—மலையாளா!

1328. வந்த சூருடல் ரெண்டு கூர்பட
மண்ட வேல்விடு—செயவீரா!
கந்த! தேவரின் மங்கை யாள்தனை
கண்டு ஆவல்கொள்—வடிவேளே!
பந்த மோடிடு மன்பர் பால்வெகு
பண்ப தாகிட——அருளாயோ?
சந்த நாவல! குன்றை யாதிப!
தங்க மாமயில்—முருகோனே!

---

1327. புறம் = முதுகு.

1329. மதுமொ ழுகிய சுழியி லகிய
மணிய சைதர—வருமாபோல்
வதன ருடைய துணைவ! அருள்செய்
மயில்மு துகினில்—வருதேவே!
கதமு டன்வரு மசுரன் [உடல்கிழி]
கதிர யிலணி—வருதேவே!
[வதட் கனியருள் சிகிமலைவளர்
யாமருள் நிறை—கடலாளா!]

1330. மதுவொழு குற்றிடு சோலையிற் போய்க்குற
மகள்வர வுக்கெதி ராய்வழிக் காத்திடு—மயலாளா!
முதுபுகழ் கற்பக மாவனச் சீர்ப்பெறு
முகில்வரு பொற்பதி யான்மகட் காய்க்கதி—ரயிலாலே
சதுர்வித மற்படை யாலெதிர்த் தேற்றிடு
சமரிடு மற்புய மாவினைப் போர்ப்புரி—திறலாளா!
பதுமம லர்க்கொடி சேர்சிகிக் கோட்டுயர்
பருவரை யற்புத னே!எனைக் காத்தருள்—புரிவாயே!

1331. அதிக அறிவையுள அரவின் உடல்நெளிய
அழகி னுடனடன—மிடுதோகை—மயிலாளா!
எதிர வருமசுரன் உடலை யிருபிளவு
இடமுன் ரணகளம—தனிலேவும்—அயிலாளா!
மதியை யணிபரமர் பொதுவி னடனமிடு
வடிவி னுமைகணவர்—தருபால!—எனையாளாய்!
முதிய மறைபுகழு குமர! சரவண!மை
முகில்கள் தவழ்சிகியின்—மலையாள!—[......]

1332. வேலைப் பொருதிய கண்ணாள்
பூவிற் றினம்வளர் பொன்னாள்
மேலுற் றிடுவொளிர் மின்னார்—இடையாளே
பாலைப் பொருதிய சொல்லாள்
மேரிற் றினம்வள ரில்லாள்
பாவைக் குறமட மின்னாள்—அணைவாகா!

---

1329. [ ] 'மெய்கிழி' எனப் படிக்கலாம். இறுதியடி விளங்கவில்லை.

1331. [ ] விடப்பட்டது. 'குமரேசா' எனப் படிக்கலாம்.

1332. மாலைப் பொருதிய தென்னார் - மயக்கத்தை யோட்டும் அழகு பொருந்திய. தென் - அழகு.

நாலைப் பொருதிய வொன்னர்
ஓடத் திறமுட னந்நாள்
நாடிச் செயமிடு வல்லாய்!—எனையாளாய்!
மாலைப் பொருதிய தென்னர்
தோகைக் கிரிவரு மன்னு!
வாழ்வைத் தினமருள் என்னு—யக!வேளே!

1333. வடிவு படைத்த தேவி குறவர் குலத்து மாது
மகிண னெனச்சொல் தேவ!—எனையாளாய்!.
அடியவர் முக்ய மாக நிதநித மற்ப தாயுன்
அடிதொழ மெத்த வாக—அருணதா!
துடியொ டெதிர்த்த சூர அசுரனை வெட்டி தான
துதியயி லைக்கொ டேவி—அடுவோனே!
கடிமிகு புட்ப மேவி வளர்வள முற்ற தான
கனசிகி நற்பொன் மேரில்—வருநாதா!

1334. படவரவி னுடமுடிகள் குலகிரிகள் மறுகிரிகள்
படபடென நடனமிடு—மயிலாளா!
தடமுலவு மொருகிரியை யிருபிளவு படவையுள
தன தயிலை விடுகுமர!—குருநாதா!
அடமதுட னெதிரவரும் அசுரன்முடி யழிவுபட
ரணகளம தனிலமர்—புரிவோனே!
முடவர்குரு டர்களுடலி னழுகுபிணி யகலவருள்
முகில்தவழு சிகிமலையின்—வருதேவே!

1335. [சோலையில் வாழும் வேடுவர் மானுள்
தோகையை மாலாய்!—அணைதோளா!
மாலையை நேராம் மேனிய ரானோர்]
மாபெல வசுரோர்—குலகாலா!
காலையி னரிபோ லேநிற முடையார்
கார்கரி முகனர்—துணையாளா!
வேலவை கரனே! நீவர மருள்வாய்!
மேன்மைகொள் சிகிமா—மலையாளா!

---

1335. [ ] சந்தம் வேறு.

இப்பகுதியை,

'சோலையில் வளரும் வேடுவர் மகளார்
தோகையை மயலாய்—அணைதோளா!
மாலையை நிகராம் மேனிய ரவுணோர்
மாபெல வசுரோர்—குலகாலா!'

எனப் படிக்கலாம்.

1336. அட்டகிரி கிடுகிடென வட்டவுல கசைவுபட
அச்சமுற வவுணர்குலம்—நலமாவே
சட்டமுட னடனமிடு பச்சைமயி லதனில்வரு
சத்தியணி முருக!நிதம்—எனையாளாய்!
இட்டமிகு குறமயிலை அற்பினெடு மருவுபுய!
இச்சையுட னடியனிடம்—வருவாயே!
மட்டவிழு கமலமலர் மைக்குழலி னிதமுலவு
வர்த்தனைகொள் சிகிமலையில்—வருதேவே!

1337. கார்பொ ருந்திய மாமலை மேலொரு
வேடர் தந்திடு மாமக ளாகிய
கானி லங்கிய சீர்குயில் போன்மொழி—யினமானள்
வார்பொ ருந்திய பூமுலை நாயகி
லீலை மிஞ்சிட வோரணை மீதினில்
மால்மி குந்திட வேபுணர் வாயருள்—புயவேளே!
கூர்பொ ருந்திய வேலதி னலெதிர்
சூரை வென்றிடு மாபெல வா!ஒளிர்
கோம ளங்கொள்க லாபவி லாசமென்—மயிலாளா!
வேர்பொ ருந்திய வானடர் காவினில்
மீது தங்கிய வாசவ னர்பணி
மேன்மை கொண்டசி காமலை மேல்வரு—குருநாதா!

1338. குன்றைநிகர் முலையாள்
கொஞ்சுகிளி மொழியாள்—குறமானள்
மன்றன்மிகு வணைமேல்
வம்புமுலை தனிலே—புணர்தோளா!
கொன்றையணி சடையார்
கும்பமுனி யயனர்—குருநாதா!
குன்றைமலை யரசே!
கொண்டைமயில் வரதா!—எனையாளாய்!

1339. வாசனை மிகுத்த நீப
மாலைகள் தரித்த மார்ப!—எனையாளாய்!
காசணி பெலத்த சூரன்
காமுறு முரத்தி லேவும்—அயிலாளா!
பூசனை புரித்த தேவர்
பூமலி வினுற்ற தேவர்—புகழ்தாளா!
தேசம தின்முக்ய மான
சீருயர் சிகிப்பொன் மேரில்—வருதேவே!

1340. மகநா றுசெய் தேவர் புகழ்வாசவ னூர்சொல்
மகளாகிய தேவி—புணர்தோளா!
அகமேபுரி சூரன் உடல்கீறிட வேல்கொ
டடலேசெயு நாத!—எனையாளாய்!
முகமாறுகொள் தேவ! மயிலேறிய வீர
முனிவோர்பணி பாத!—செகநாத!
இகமீதினில் வாழ்வை மிகவேயருள் வாய்!பொன்
எழிலேயுயர் தோகை—மலையாளா!

1341. அண்டர்பணி சரண!
அன்பினுட னருள்வாய்!—முருகோனே!
கொண்டலணி குழலாள்
கொஞ்சுகிளி மொழியாள்—குறமானுள்
வண்டலர்கொள் புயமேல்
வம்புபுனை முலைமேல்—அணைதோளா!
தண்டலைகொள் நலமார்
தண்சிகியின் மலைமேல்—வருதேவே!

1342. முத்தைப் பொருந்துநகை
முத்தத் தனங்கள்மிகு—பசிதாமே
தத்தைக் கிணைந்தமொழி
சத்திக் கிணைந்தவிழி—குறமானுள்
மெத்தைக் கொளன்பின்மத
வித்தைக் கிணங்கமரு—வியதோளா!
சித்தைச் செயுங்குமர
சித்தர்ச் சிகண்டிவரை—முருகோனே!

1343. மாலை தரித்த வேட மாது தனக்கு வாசை—விளைதோளா!
வேலை தனிற்பொ ஞகை மீது துயிற்செய் மாயன்-மருகோனே!
காலை யுதித்த சோதி கால்சுட ருற்ற தூய—அயிலாமோர்
வேலை யெடுத்த தேவ! மேலுயர் வுற்ற தோகை—மலை
[யாளா!

1344. கானமயி லான மாது
காதலுடன் மேவு தோள!—எனையாளாய்!
வானவர்கள் ஞான வோர்கள்
வாழ்வையரு ணீயி நாளில்—எனவேதான்
தேனலர்கொள் பாத மீது
தேவ! என ஆசை யோடு—பணிதாளா!
மானவடி வேல வா!பொன்
மாமைமிகு தோகை மேரில்—வருதேவே!

1345. வஞ்ச மிகுத்த சூரன்
மண்டை தகர்க்க வேலை—விடுசூரா!
கஞ்ச மலர்க்குள் வேதன்
கண்டு துதித்த பாத!—எனையாளாய்!
அஞ்ச லெனக்கு நாளும்
அன்பு கொடுத்து மேன்மை—அருள்வாயோ?
மஞ்சரி யுற்ற மார்ப!
வந்தருள் கற்சி காமென்—மலைநாதா!

1346. மஞ்சுதவழ் சோலை வேடர்
மங்கைமய லான ரூப—மிகுலோலா!
கொஞ்சுகிளி மேவு பாணி!
கொண்டமத யானை யாசை—யுளதோளா!
அஞ்சுமயல் தீர வேசெய்
தன்பி னுடன் மேன்மை வீடு—அருளாயோ?
நெஞ்சுளமை யோட வேசெய்
நின்றுநட மாடு தோகை—மலையாளா!

1347. கண்டக்கறை யாயினர்
கங்கைச்சடை நாயக—ரிடமேசேர்
துண்டப்பிறை மாநுதல்
தொங்கற்குழல் நாயகி—தருபாலா!
வண்டத்தின மாவுடல்
மங்க்ககதிர் வேல்விடு—செயசூரா!
அண்டற்கொரு நாயக!
அன்புற்றிடு தோகையின்—மலைநாதா!

1348. பணிமிகு புயனுர் துளவணி புயனுர்
மலர்மகள் துணையார்—மருகோனே!
அணிமிகு படையோ டெதிர்வரு மசுரோன்
அதிரிட வயிலே—வியவீரா!
கணிமிகு மலர்நீ பமதணி குகனே!
கருதிய வரமே—அருளாயோ?
பணிமிகு மரவோர் முடியுயர் புவிவாழ்
பரியசி கியின்மா—மலையாளா!

---

1346. கொஞ்சு கிளி: அருணகிரிநாதர். 'மதயானை' என்பது 'தெய்வ யானை' என இருப்பின் பொருள் நன்றாகும்.

1349. எதிரவரு சூரனுடல் இருபிளவ தாகவயில்—விடுசூரா! [யே!
அதிரநட மாடுமயில் அதன்முதுகி லேறியென்முன்—வருவா
மதியையணி வேணியரன் மகிழவரு பால!இனி-யருளாயோ?
கதிருலவு கோடுலவு கனதையுள தோகைமலை-முருகோனே!

1350. நஞ்சரவை யணிவோர் நந்தையணி கரனு—ரிடமேசேர்
கஞ்சமலர் வதனள் கொங்குலவு குழலாள்—உமைபாலா!
வஞ்சசுரை யெதிராய் வந்துவயில் கொடுபோர்—புரிசூரா!
தஞ்சமிலை அருளாய்! தங்கமலை நிகர்தோ—கையின்மேரா!

1351. மயிலை நடத்து பரியினுய்!
மகுட மிகுக்கு முடியினுய்!—எனையாளாய்!
குயிலை மிகுத்த மொழியினுள்
குறவர் மகட்கு மயல்செய்வாய்!—அமரேசா!
அயிலை யெடுத்து எதிரதாய்
அமர்செய் திறத்த புயவ!நீ—யருளாயோ?
ஒயிலை மிகுத்த குருபரா!
உயர்செய் முடிக்கொள் சிகியின்மா—மலையாளா!

1352. சங்கணி கரனுர் சந்திர னணிவோ—ரிடமேசேர்
கொங்கணி குழலாள் கும்பமென் முலையாள்—உமைபாலா!
மங்கள மிகுசீர் மங்கைகு றமினுள்—புணர்தோளா!
சங்கரி மருகா! சந்தத மிகுதோ—கையின்மேரா!

1353. எதிர்த்த சூருடல் கிழிக்க வேநுனி
யிசைத்த வேல்விடு—செயவீரா!
மதிச்ச டாதரர் தனக்கு வாவல்கொள்
மணிப்பொன் மாமுடி—யுமைபாலா!
கதிக்க வேநட மிகுத்த மாமயில்
கனத்த தோர்பரி—முருகோனே!
விதிக்கு நாயக! எனக்கு நீயருள்!
விருப்பு தோகையின்—மலையாளா!

1354. கும்பமெனு முலையாள் கொண்டலெனு முடியாள்-குறமானுள்
விம்பவித ழமுதே மிஞ்சமரு வியவா!—செயலோலா!
கம்பமத களிறூர் கஞ்சுகிகொ ளுடலார்—துணையாளா!
சம்பிரம மிகுசீர் தங்குசிகி மலைமேல்—வருதேவே!

1355. மதமொ ழுகியதொர் கரிவ தனருள
மகிழ வருமொரு—துணையாளா!
சதத ளமினணை துளவை யணிபுய
சமர வரியுட—மருகோனே!
கதமு டனெயெதிர் அமர்செ யசுருடல்
கவிழ வயில்கொடு—எயும்வீரா!
நிதமு மடியவர் பணியு முருகைய!
நினது வருள்புரி—சிகிமேரா!

1356. கஞ்சமலர் மாதுநிகர் கங்குனிகரான குழன்—மடமானுள்
வஞ்சிநிக ரானவிடை மங்கைகுற மாதுபுணர்-முருகோனே!
தஞ்சமிலை நீயருள்செய் சஞ்சிதம தானவினை-அறவேதான்!
அஞ்சலற வேயருள்செய்! அந்தமிகு தோகைமலை—முரு
[கோனே!

1357. சங்கணிகரனுர் சங்கரி துணையார்—நலமேசேர் [னே!
தண்டுளவதனை [தனமகி லேயணிமாயோன்]—மருகோ
கொங்கலர் வனம்வாழ் குன்றினில் வளர்வோர்—தருமானுள்
[ளா!
குங்கும மணிசேர் கொங்கையின் மடமான்—புணர்தோ
செங்கய லிணையாய் சிந்தையு நிகராம்—விழியாளே [பால்
தென்புவி யனையாள் தெண்டிரை யமுதாள்-உமையாள்
சங்கரர் மகவே! தந்தருள் புரிவாய்!—குகநாதா!
தந்திது ணைவனே! தண்சிகிமலைமேல்—வருதேவே!

1358. கடமொ ழுகிய யானை யானனர்
கருணை யிலகு சோத ரா!அரு—ளுதவாயோ?
நடன மிடுக லாப மாமயில்
நலமு தவிய மாவி லேறிய—குருநாதா!
அடமு டனெதி ராக வேவரு
அசுரர் குலக லாக னே!இனம்—எனையாளாய்!
வடவ ரைவரு நாத னரருள்
மதலை! அருள்செய்! தோகை மாமலை—முருகோனே!

1359. நிர்த்த மிடுமயிலா! நித்ய சுபகரனே!—எனையாளாய்!
நத்தர் மகிழ்மருகா! நட்பி னெடுமடியே—னிடம்வாராய்!
பத்தர் பணிசரண! பத்ம மலர்மனையார்—குருநாதா!
முத்த மிழையருள்வாய்! முத்தி தருசிகிமா—மலையாளா!

1357. [ ] விளங்க வில்லை. 'இன்புற அணிவோன்' என்று படிக்கலாம்.

1360. அரவி னிற்கரு கடலி னிற்றுயில்
அழகு பெற்றிடு—செயமாயோன்—மருகோனே!
பரவை யிற்கனை யிரவி னிற்செலு
பரம ருக்கொரு—புதல்வோனே!—எனையாளாய்!
உரக னுச்சியின் மணிய ழுத்திய
உயர்மு டிச்சசி—மணவாளோன்—பணிதாளா!
விரைவி னற்புத மிகவெ னக்கருள்!
விரித லைச்சிகி—மலைமீதே—வருதேவே!

1361. இருவரு மறியா எழிலுள வரனர்—புதல்வோனே!
அருமறை முதல்வோன் அருள்பெற வருமோர்—குருநாதா!
தருவர சனுமே சகம்வள ரடியார்—பணிதாளா!
செருபுரி யயிலா! சிகிமலை வருவாய்!—எனையாளாய்!

1362. வாளை மீன்றவழ் வாவி தான்றிகழ்
வாழ்வு வோங்கிடு—வளநாடா!
வேளை மாய்ந்திட வேசெய் வோன்றரு
வேலை யேந்திய—புதல்வோனே!
தாளை யான்பணி வேசெய் வேன்குக!
தாழ்வி லேன்றருள்—புரிவாயே!
வாளை நீண்டிடு பார்வை மான்குற
மாது சேர்ந்தவ!—சிகிமேரா!

1363. கருணைபுரி குகனே! கமலவய னிதமே—பணிதாளா!
அருணநிற வடிவே! அழகுதிகழ் மயிலாய்!—அமரேசா!
பருவமிகு குறமான் பணைமுலையி லணைவாய்!—முருகோனே!
திருமருவு வளமார் சிகிமலையில் வருவாய்!—குகநாதா!

1364. வாடு சீரிடை வேலை நேர்விழி
வாச மார்குழல்—நலமேசேர்
வாழை நேர்துடை நாக நேரல்குல்
மாக மாமதி—முகமானள்
நீடு கானக வேடர் மாகுல
நேர்மை மாதுதன்—மயலாலே
நேச மேசெய வேட மேபுரி
நீத னே! என்முன்—வருவாயோ?

ஆடு நாகமும் தோய மாதையும்
ஆர வேயணி—சடையாளார்
ஆசை யாகிய பால கா! எனை
யாள வேமயின்—மிசைவாராய்!
நாடு நேமநன் னுடு சூழ்சிகி
நாம மேனினில்—வருதேவே!
. நாச மேபட மாவை யேவெறு
நாம வேலுவ!—முருகோனே!

1365. கும்பமுனி தேடு குருநாதா!
கொங்குலவு நீப மலர்மார்பா!—எனையாளாய்!
விம்பமது போலு மிதழாளே
மின்கொடியை நேரு மிடையாளே—குறமானுள்
நிம்பமணி மார்ப னருள்மானுள்
நெஞ்சில்மய லான புதல்வோனே!—அமரேசா!
கம்பவள யானை துணையாளா!
கங்குலவு தோகை மலைமீதே—வருதேவே!

1366. பச்சை மயிற்பரியாய்!
பத்ம மலர்ச்சரணு!—எழிலாளா!
விச்சை யெனக்கருள்வாய்!
வித்த கிறற்குறமான்—அணைதோளா!
கச்சை யணித்தனமான்
கற்புள உத்தமியாள்—உமைபாலா!
செச்சை தரித்தபுயா!
சித்ர மிகுத்தசிகா—மலையாளா!

1367. மடக்கொடி யாகிய
மலர்த்திரு மாதுடன்—அணைதோளார்
மணத்துள மாலிகை
மகிழ்ச்சிய தாயணி—புயமாயோன்
அடற்புரி ராவணன்
அவற்குள சேனைகள்—முதலாவே
அழித்திட வேகணை
யதைத்தொடு ராகவன்—மருகோனே!
திடத்திடு சூருடல்
கிழித்திட வேல்கொடு—சமராலே

1364. தோயமாது: கங்கை. தோயம் - நீர். நாமவேல் - அச்சந்தரும் வேல்.

செயித்திடு நாயக!
தினைப்புன நாயகி—புணர்தோளா!
படத்தின ராமுடி
நெளிப்பட வேமயில்—நடையாளா!
பருத்திடு கோடுகள்
பகட்டிய தோகையின்—மலையாளா!

1368. சோலைதனில் மந்திகுதி போடதி லதிர்ந்துநல
தூயமது வுந்திமிக—உகவேதான்,
வேலையென வந்துவது பாயவிளை கொண்டவயல்
மீறியகு றிஞ்சியெனும்—வளநாடா!
காலையர விந்தமலர் மீதினிலெ ழுந்தமயில்
காதல்கொளு பைந்துளவர்—மருகோனே!
பாலையுமி குந்தமொழி பாவைகுற வஞ்சிபுணர்
பாவல! சிகண்டிமலை—முருகோனே!

1369. வண்டர்ப்படி மதுமாலை
மங்குனிகர் குழன்மீது—வணிமானுள்
கொண்டல்படி மலைமாது
கொஞ்சுகுற மகள்மீது—மயலாளா!
அண்டர்பணி குகநாத!
அன்பினுட னடியேன்முன்—வருவாயே!
தண்டமிழை யருள்வாய்!சொல்
தங்கமலை நிகர்தோகை—மலையாளா!

1370. மஞ்சு படிந்த குழற்பேதை
வம்பு மணந்த தனப்பாவை—நலமேசேர்
கொஞ்சு நிறந்த கிளிக்கேநேர்
கொண்டசொல் மிஞ்சு குறத்தாயாள்—மணவாளா!
அஞ்சு பெலங்கொ டெதிர்த்தோர்மா
அஞ்சிட வென்ற மயிற்றேவே!—எனையாளாய்!
மிஞ்சு வரஞ்செய் கடப்பாளா!
விண்டல முந்து சிகிச்சீரார்—மலையாளா!

1371. மறமிஞ்சு மினைரெண்டு
மணிகொண்ட நெடுவம்ப—கமினளே
அறனுந்து பினல்பங்கி
அமுதிங்கி தமிகுந்த—மொழியாளே!

---

1371. அம்பகம் = கண். பங்கி = தலைமயிர்.

குறவஞ்சி புணர்கின்ற
குக! என்ற னிடம்வந்து—அருளாயோ?
நிறமுந்து சிகரங்கள்
நிரைதங்கம் வளர்குன்றை—மலையாளா!

1372. தருக்கு ளேயரசு புரிந்து வாழுயரு
சசிக்கு நாயன்முத—லனைவோரே
குருக்கு லாவுமணி யழுத்து மாமுடிகள்
குவித்து மேபணியும்—இருதோளா!
செருக்கு மேவுவசு ரனைக்கொல் கூரயில!
சிறைப்பொன் மாமயில!—எனையாளாய்!
பெருக்கு மாபொழில்கள் வளைத்த கோடுலவு
பெருத்த தோகைவரை—முருகோனே!

1373. செறுத்து மீறிவரு பெலத்த சூரனொடு
செயிக்க வேலையெதி—ரெயுவோனே!
சிறுத்த சீரினிடை பணைத்த மாமுலையள்
திளைத்த வேடர்மகள்—புணர்தோளா!
கறுத்த மேனியினர் பசைத்த தோர்துளவர்
கவுத்வ மாமணியர்—மருகோனே!
நறுப்பொ னீபமது தரித்த மாபுயவ!
நலத்த தோகையெனு—மலையோனே!

1374. வேலைப்பொரு விழியாள் கோடைக்குயின் மொழியாள்
வீணைக்கிணை குரலாள்—மலைவாழ்வோர்
பாலைக்கன மெனவே தான்மெச்சிட வருவாள்
பாவைக் குறமகளாள்—புணர்தோளா!
மேலைப்பொரு திடவே பாய்வுற்றிடு வெடிவால்
மீன்மொய்த்திடு புனல்நே—மநனுடா!
ஆலைக்கழை விலினன் மாமைத்துன! எனையே
ஆள்நற்சிகி மலைமேல்—வருதேவே!

1375. வனசத் தடமலர் வாவி சூழ்வரு
மகிமைத் தலமொரு தோகை மாமலை—வளர்தேவே!
கனகக் கிரிவரு நாத னருட
கருணைத் திருவுமை மாது பாலக!—எனையாளாய்!

1374. பாலைக்கு அனம் என = பாலை நிலத்தில் அன்னம்போல.

அனமெய்ச் சிறைமிகு மாவி லேவரு
மவருக் கொருகுரு நாத னே! நுனி—வடிவேலா!
பனகச் சயனர்த மாசை நாயகி [கோனே!
பதுமக் கொடிமகிழ் வான மேன்மைகொள்—மரு

1376. கந்த நீபமலர் மாலை யேயுயர்
கண்ட மீதிலணி நாய கா! குரு—பரநாதா!
சந்த மாமுலையின் மாதி னளணி
சந்த்ர மாவதன வேட நாயகி—புணர்தோளா!
நந்த வேமுன்வரு சூர னர்படை
நந்த வேலைவிடு தேவ தேவர்கள்—பணிதாளா!
பந்த வாசைதவிர் ஞான வோர்பணி
பண்பு சேர்சிகியின் மேரி லேவரு—முருகோனே!

1377. வஞ்சக மிகுத்த சூரன்
மங்கிட வடித்த கூரின்—அயிலாளா!
நெஞ்சக மிருக்கு நோயை
நின்றயவு வைத்து வோட—அருளாயோ?
கஞ்சனை மடித்த மாயன்
கண்டும கிழ்ச்சை யான—மருகோனே!
தஞ்சமு னனுக்ர மேசெய்!
தங்கமென் மலைக்கு நேர்சி—கியினாதா!

1378. வருசூர னுடல்கீற அதிகூர்மை மிகுவேலை
வளமாக வெதிர்போரில்—விடுவீரா!
திருமாது புணர்தோளர் துளமாலை யணிமார்பர்
செயமாயர் மகிழ்வான—மருகோனே!
பெருவாரி திகழ்சூழு வளநேம மெனுநாட!
பிணையான குறமாது—புணர்தோளா!
குருநாத! குமரேச! அருளேசெய்! குகதேவ!
குருமேவு சிகிமேரில்—வருதேவே!

1379. தருவி னீழலில் அரசு தானிடு
தருண மாசசி—புணர்தோளார்
மருவு லாவிய புனித னுருட
மருக னே! அருள்—புரிவாயே!
பொருது சூருடல் கிழிய வேல்விடு
புகழும் வேலவ!—எனையாளாய்!
அருண மேவிய கிருபை யேபுரி
அழகு சேர்சிகி—மலையாளா!

1377. அனுக்ரம்: அனுக்கிரகம் என்பதன் விகாரம்; சந்தம் நோக்கி.

1380. கங்கையைச் சூடு சடையார்
கங்கணப் பாணி யரனார்—பொலிவேசேர்
கண்டிடப் பூவி னயனார்
கங்குலிற் றேக வரியார்—இருவோரே
எங்குமுற் றேட வரிதாய்
நின்றசித் தான முதலார்—பரமானார்
இந்துவைத் தேய விடுவோர்
சங்கரற் காசை மதலாய்!—எனையாளாய்!
மங்கைபொற் பேறு முலையாள்
குன்றினிற் கானில் வளர்வே—டுவர்மானாள்
வந்திடப் பாதை தனிலே
நின்றதற் கான தொழிலே—புரிமாலாய்!
செங்கையிற் சேரு மயிலால்
நைந்திடச் சூரன் முதலாய்—அனைவோரே
சிந்திடத் தேவர் மகிழ்வாய்
வென்றவித் தான சிகியா—மலையாளா!

1381. வறுமை தனையகல வோட வேசெய்வை!
மயிலை நடை பழகு தேவ தேவர்கள்
—பணிதாளா!—எனையாளாய்!
மறுகு மனதைநய மாக வேயருள்!
மகிமை யிலகுசிகி மேரி லேவளர்
—குருநாதா!—அருளாளா!
தறுக ணசுரன்முடி வாக வேயயில்
தனைமுன் எதிரவிடு சூர ராகவன்
—மருகோனே!—முருகோனே!
சிறுகு மிடையினல வேட நாயகி
சிமிழி னிணைகொள்தன மீதி லேமரு
—வியதோளா!—தயவாளா!

1382. அடியன் மீதினி லெவள் வாயினும்
அருள்வை யாததென்?—அருள்வாயே!
கொடிய பாவியை அசுர னவியை
குறைய வேயயில்—விடுவீரா!
முடிபொ னலணி புனித னார்நிதம்
முறைமை யாகமு—னிரையாவே
அடியி லேபணி சமுக! நாயக!
அருள்செய்! தோகையின்—மலையாளா!

1383. கருத்தி லேகினை சீர்களெ லாமருள்
கருத்த னே! இனி வேறுள தோவது—அறியாயோ?
உருத்தி லேமித வேடமி னுளொடும்
உயர்ச்சி யாயணை மீதினி லேமரு—வியதோளா!
முருத்தி னேரெயிர் காதள வோடிய
முனைக்க ணுயகி யார்பிற மாதர்கள்—மயல்தீராய்!
வருத்தி நேர்மைகொள் பாடலெ லாமினி
மகிழ்ச்சி யாயருள் **தோகையின் மாமலை**—முருகோனே!

1384. சஞ்சி தவினை தீர வேயருள்!
பங்க யமலர் வாச னர்பணி—யிருதாளா!
சங்க மதனி னுவலா! கன
பைஞ்சி றைமயில் வாக னு! என்முன்—வருவாயே!
வஞ்சி யைநிக ரான தோரிடை
கெண்டை யைநிக ரான தோர்விழி—நலமேசேர்
வம்ப துபுனை சீர்கொண் மாமுலை
மங்க ளமிகு வேட நாயகி—புனைதோளா!
அஞ்சி டவெதி ரான சூருடல்
ரெண்ட துபட வேபொன் வேல்கொடு—எயும்வீரா!
அண்டர் கள்முனி வோர்கள் யாவரும்
அன்பொ டுபணி பூவை யேநிகர்—இருதாளா!
**கொஞ்சி யகிளி மேவு பாணிய!**
என்ற னையினி வாழ வேயருள்—புரிவாயே!
கொண்டல் கள்படி சோலை சூழ்வரு
குன்றை **யின்மலை** மீதி லேவரு—குகநாதா!

1385. எத்தனை கால நானு
மைப்பணிவாக வேத—மிழினலே
எற்குள ஞான நானு
மெய்த்துதி யாக வேசொல்—வறியீரோ?
மைத்தட மான கேச
நெட்டிலை வேல்கொள் பார்வை—நயமாமே
வச்சிர பாணி ராச
புத்திரி மாது மேவு—மணவாளா!

---

1384. 'கொஞ்சிய கிளிமேவு பாணிய!': கிளி: அருணகிரி. ஒப்பிடுக. (833, 1085, 1277, 1346.)

1385. சொல்வு அறியீரோ - சொல்வதை அறியீரோ.

முத்தமி ழாளி யாக
சித்தம்வை தேவ தேவர்—பணிதாளா!
முப்புர நீற தாய்ந
கைத்திடு வாயரீசர்—மகவேளே!
கைத்தல மேவு வேல்கொ
டுற்றிடு சூரன் மாள—விடுவீரா!
கட்டழ கான தோகை
நற்கிரி வாச னே!பொன்—மயிலாளா!

1386. வஞ்சி யைநிக ரிடையினள்
மஞ்சு யர்குழன் மடமினள்—திருவேசேர்
கொஞ்சி யசிறு கிளியினள்
கும்ப மதென முலையினள்—குறமானள்
ரஞ்சி தமிக மருவுசீர்
நன்கு ளமண மலரின்மா—லிகைமார்பா!
மிஞ்சி யவுயர் சிகியின்மா
மின்ப யில்மலை முருகையா!—எனையாளாய்!

1387. கருணை மிகுத்த நாதர் கமல மலர்க்கு நாதர்—பணிதாளா!
அருண நிறத்த மேனி அழகு படைத்த தேவ—குருநாதா!
தருண முலைப்பெண் மாது தகுதி குறத்தி மேவும்—இரு
[தோளா!
திருமி குபொற்ப தான சிகியின் மலைக்குள் வாச!—எனை
[யாளாய்!

1388. திங்களணி சடையார் செங்கதிரி னுடலா—ரிடமேசேர்
செங்கமல மலர்வாழ் செந்திருவை நிகர்மான்-அருள்பாலா!
சங்கரியின் மருகா! தந்தியுட துணைவா!—எனையாளாய்!
கொங்கலர்கொள் பொழில்சூழ் குன்றைமலை யரசே!—மயி
[லாளா!

1389. வாச மேவு நீபமா
மாலை சூடு மார்பனே!—எனையாளாய்!
தேசம் வாழு தோகையாம்
சீர்கொள் மேரில் நாதனே!—முருகோனே!
தாச னேனை யாளுவாய்!
தானை சேரு சூரனை—டெயுநாதா!
நேச மான வேடமா
னேயு லாச மாகவே—புணர்தோளா!

---

1388. சங்கரி: சங்கு அரி (திருமால்).

1390. கஞ்சமல ரயனுர் கண்டுபணி சரணு—ரிடமேசேர்
நஞ்சவிழி யுமையாள் நன்மைபெறு புதல்வா!-எனையாளாய்!
வஞ்சமிடு வசுரோன் மங்கவயில் விடுவாய்!—செயவீரா!
அஞ்சலென வருவாய்! அந்தமிகு சிகியா—மலையாளா!

1391. அண்டர்சிறை மீள அன்பர்நல மாக—எதிர்மாவே
கொண்டபகை யோர்கள் கும்புபடை மாள—விடுவேலா!
சண்டன்முனம் வீழ தன்கழலி னல்முன்—உதைதேவோன்
கண்டதொரு பால! கங்குல்தவழ் தோகை—மலையாளா!

1392. மலைச்சாரலின் மறவோர்
மடப்பாவையை மயலால்—அணைதோளா!
அலைத்தேவரு மசுரோன்
அதிர்த்தேவிழ வயிலே—வியசூரா!
மலைத்தோடிட வொருமூ
வருக்கேநகை புரிவோர்—அருள்பாலா!
கலைப்பால்மதி வதனு!
கடற்பார்புகழ் சிகியா—மலையாளா!

1393. கான மயிற்ப ரியின்மீதே
காதன் மிகுக்கு றமினேடே—வருவாயே!
வானவ ருக்கு நலமாயே
மாவை முடித்த செயவீரா!—எனையாளாய்!
தேனற வுற்ற புயலாளா!
தேவர் தமக்கு நலமேதான்—அருள்வோனே!
கூனம திச்ச டையர்பாலா!
கோதகல் நற்சி கியின்மேரா!—அருளாயோ?

1394. வலுத்த சூருடனே மகிழ்ச்சி யாயெதிர்போ—ரிடுசூரா!
நலித்த ராவினிலே நடித்த மாயவனர்—மருகோனே! [ளா!
கலத்தின் மாமுலையாள் கருத்தின் வேடமினள்—புணர்தோ
[யாளா!
தலத்தின் மேன்மையதாய் தழைத்த தோகையின்மா—மலை

1395. ஈனும்பைப் பெண்ணுரு வாகவு மேசெய்து
இலங்கப் பண்மிசை யேவெகு வாகிய—அருளாளா!
[சுனும்புக் கென்னவு] மேவரு சூருடல்
சுருங்கப் பண்ணிட வேலெடு தேவர்கள்—புகழ்தாளா!

1395. [ ] விளங்க வில்லை.

குலுங்கச் சொன்னம தாகிய காதினள் [தோளா!
குறஞ்சொற் பண்ணியல் வேடமி ஞெளொடு—புணர்
சொலும்பொற் புண்ணிய கோடுக ளேநிரை
துலங்கற் குன்னத மாகிய தோகையின்—மலையாளா!

1396. கனத்தமா முலையாள்
நிரைத்தகார் குழலாள்—வடிவாமே
தகட்டுவேல் விழியாள்
சுகத்தைநேர் சொலுமா—மொழியாளே
வனத்தின்வே டுவரோர்
குலத்திநா யகியாள்—வரமேதான்
வழிக்குநேர் படவே
யிருக்குநா யகமே!—அருளாயோ?
மனத்தினுள் தொறுமே
நினைப்பர்பா லகலா—முருகோனே!
மகிழ்ச்சியா யடியே
னிடத்திலே வரவே—நினையாயோ?
சினத்தசூ ருடனே
எதிர்த்தபோ ரிடுவாய்!—செயவீரா!
திருப்பெண்வாழ் வுறுசீர்
சிகிப்பொன்மே ரினிலே—வருதேவே!

1397. கொங்கு தங்கு நீப மாலை
யம்பு யங்கு லாவவே
கொண்ட சம்ப்ர மாவு லாச
அங்க சங்க மானதே—வதேவனே!
சங்கு தங்கு பாணி யீசர்
பங்கின் வந்த தேவியாள்
தந்தி முன்ப தான மாயர்
தங்கை தந்த பாலனே!—எஞதனே!
குங்கு மங்கள் தோய வீசு
வம்பி லங்கு சூதுபோல்
கொங்கை மங்கை வேட மானை
அன்று கண்டு மேவுசீர்—மணாளனே!
மங்குல் தங்கு சோலை சூழு
மண்ட ரன்பர் நாளுமே
வந்து வந்த னேக மான
கும்பு கூடு மோர்சிகா—சலாளனே!

1398. வஞ்ச னாகிய சூரன்மேல்
மிஞ்சு கோபம தாகியே—எதிராவே
வந்து தேவர்கள் வாழவே
கொண்ட வேல்விடு நாதனே!—எனையாளாய்!
நெஞ்ச நோயக லோடவே
நின்ற மாமயி லேறியே—வருவாயோ?
நிம்ப மாலிகை சூடுவோர்
தந்த பார்வதி பாலகா!—குகநாதா!
தஞ்சம் வேறிலை யாளுவாய்!
அன்ப னானது காணையா!—தெரியாதோ?
சங்க நாவல னாகவே
வந்த நாயக! **தோகைமா—மலையாளா!**

1399. வாசனை யான நீப மாகிய தான சீர்கொள்—நலமாமே
மாலிகை சூடு மார்ப னே!ஒயி லாக நாளும்—வருவாயே!
நேசம தான தேவி வேடுவர் சேரி மாது—மயலாலே [ளா
நீள்மலை கானம் யாவும் தேடிய பாத! தோகை-மயிலா
பாசவி யாதியாலு மாசைவி யாதி யாலும்—இருநோயால்
பாரினி னுனோக நீயரு ளேசெ யாது—விடலாமோ?
ஈசர்தம் மேரின் மேன்மை யாகிய **தோகை மேரில்**—வரு
[தேவே!
ஏடவிழ் மாலை வேலி னாயுத பாணியான-முருகோனே!

1400. வீறு படைத்த சூரன்
மாள வயிற்கொ டேவி—அடலேதான்
வேக மிகுக்க வேசெய்
தோகை மயிற்கு நாத!—எனையாளாய்!
ஆறு படைப் பொன் வீடி
லாவல் மிகுக்க வாழு—மதுபோலே
யானு மகிழ்ச்சி யாக
நாயன் மனத்தின் வாழ்வு—புரியாயோ?
தேறு படச்செய் பாவில்
மேன்மை யெனக்கு நாளும்—அருளாயோ!
தேவர் தமக்கு ராசன்
மாது தனக்கு மாலை—அணிநாதா!
மீறு தனத்தின் மீது
வாரு பிணித்த ரூப—மிகுமானாள்
வேட மகட்கு மாசை
நாத! **சிகிப்பொன் மேரில்**—வருநாதா!

1401. சண்ட ளுரெதிர் வீழவே
பண்டு தானுதை தாளினர்—கலையேசேர்
சந்த்ர ளுர்முத லானவோர்
சண்டை யேசெய்து வூனமே—செயுவோரே
வண்ட ராகிய மூவரே
கொண்ட மாபல கீறதாய்—விழியாளர்
மைந்த ளுகிய நாதனே!
அன்ப னேயிவ னேயெனு—ததுவேனோ?
துண்ட வான்மதி யானதோர்
நன்று சேர்நுதல் வேடமான்—நலமேசேர்
துங்க மாதன மீதிலே
மிஞ்சு மாமய லாகவே—புணர்தோளா!
கொண்ட லேபடி வானுலாய்
மண்டி யேவளர் சோலைசூழ்—வளமேசேர்
குன்றை மாமலை மீதிலே
வந்த நாயக! நாளுமே—எனையாளாய்!

1402. எத்தனை கோடி கால
முக்கிய மாக நானுன்—இருதாளாம்
இச்சைய தாக நாளும்
நற்கதி சேர நீயும்—அருளாயோ?
பத்தனை யாளி டாமல்
வைப்பது ஞாய மோ?சொல்!—வடிவேலா!
பத்மமென் வீடி ளுதர்
நித்திய நேமமோடு—பணிதாளா!
பித்தனை நாத கீதம்
உற்றிடு தேவ தேவன்—நலமானோன்
பிட்டுணும் வாயி னுனை
அற்பொடு மேவு தேவி—புதல்வோனே!
சுத்தனே! வேட மாது
நத்திய ரூப மான—நயலோலா!
சொற்சிகி மேரில் வாழ்வு
பெற்றவ! தோகை யான—மயிலாளா!

1403. வஞ்சி யான விடையாள்
மங்கு லான குழலாள்—நலமேசேர்
வம்பு சேரு முலையாள்
மிஞ்சு லீலை மடமான்—நயமானள்

நஞ்ச நேரும் விழியாள்
நந்து நேரு மிடருள்—குயிலானுள்
நங்கை வேடர் மகளாள்
கொண்ட காதல் மிகுசீர்—மணவாளா!
அஞ்சி நேரில் வருசூர்
பங்க மாக வயிலே—வியசூரா!
அண்டர் தேவர் முனிவோர்
அன்ப ரான முதலோர்—பணிதாளா!
மஞ்சு சேரு பொழில்சூழ்
குன்றை மேரு தனிலே—வருதேவே!
மங்க லாத மலர்நீ
பங்கொள் மாலை யணியே—புனைதோளா!

1404. கனக மலைநேர் சிகியின் மலையா!—எனையாளாய்!
கருணை புரிவாய்! குமர குருவே!—அமரேசா!
வனம தனிலே வளரு நுளையோர்—குலமானுள்
வடிவு மிகுசீர் உலவு குறமான்—அணைதோளா!
சினம துடனே எதிர வருசூர்—படவேதான்
திறல்கொ ளயிலே தொடுபொன் மயிலா!—குகநாதா!
எனது துயரே தவிர வருவாய்!—அருளாளா!
இமய கிரியான் உதவு மகவே—தருபாலா!

1405. வேறுகதி யிலையே நீதயவு புரிவாய்!—அமரேசா!
வேகமுட னடையே தானுலவு மயின்மேன்-வருதேவே!
மீறுபடை யுடனே தானெதிர வருசூ—ருடனேதான்
வீறுபடை யுடனே போர்புரியும் அயிலா-யுத! வேளே!
நீறுபுனை யுடலார் தாதகியை யணிவோர்—சடையாளார்
நீதர்மழு வணிவோர் ஈசர்தரு மகவே!—எனையாளாய்!
ஆறுபடை மனையாய்! தோகைமலை யரசே!—அருளாயோ?
ஆறுமுக வதன! தேவர்பணி சரண!—முருகோனே!

1406. வாது படைத்த சூரன் போர்செய் களத்தில் நாசம்—
[இடவேதான்
வாள்கொள் அயிற்கொ டேவு—செயவீரா!
மாது குறப்பெ ணாசை தீர மணத்தின் மாலை—அணிநாதா!
வானவர் பத்தர் ஞானர்—பணிபாதா!

சூது மிகுத்த தான மாமுலை யுற்ற தேவி—உமைபாலா!
தோகை மலைக்கு நாத!—அருளாயோ?
தாது படைத்த நீப மாலை தரித்த மார்ப!—எனையாள்வாய்!
சாரச முற்ற பாடல்—தருவாயே!

1407. பந்து போல முலையாள்
பஞ்சி நேரு மடியாள்—ஒருமானுள்
கஞ்ச மான வதனள்
அம்பு போல விழியாள்—நலமாமே
தந்து போல விடையாள்
மங்கை வேட மகளாள்—அவளாலே
தங்க மேனி மெலிவாய்
நொந்து வாட வனமே—கியதாளா!
வந்து தோகை மயின்மே
னின்று வேண வரமே—தருவாயோ?
மங்குல் சூழு சிகியாம்
குன்றில் நாளும் வளர்தே—வர்கணநாதா!
கொந்து நீப மலரா!
அன்பன் மீது தயவே—புரியாதேன்?
குண்ட வாழி திடலாய்
அன்று போக வயிலே—வியதேவே!

1408. சமராடி யெதிராக வருசூர னுடல்கீறு—படவேதான்
தனதாயு தமதேவி விடுசூர! குருநாத!—முருகோனே!
அமரேச னருள்மாதை மயலாக மணமேசெய்—மணவாளா!
அரவானவொருசேடன் நெளிவாக நடமாடும்-மயிலாளா!
குமரேச குமரேச எனவே சொ லடியார்முன்—வருதேவே!
குகநாத! அடியேனை நினையாத ததுவேது—தெரியாதே!
சமமான மரியாதை பெரியோர்கள் தரவேநன்—னயமாமே
சதிர்மீதி லருளேசெய்! சிகியானம லைமீது—வருவேளே!

1409. வஞ்சக ராவணன் அஞ்சிட வேமுனம்—எதிராயே
மண்டிய போரினி லம்பதை யேவிய
—செயமாயோன்—மருகோனே!
நெஞ்சக நோய்பட வென்றரு ளேபுரி—குகநாதா!
நின்று னையேயல தின்றினி யார்? இது
—அறியாயோ?—பழியாமே!

1407. குண்ட ஆழி = ஆழமான கடல்.

நஞ்சதை யேயுணு கண்டரை மேவிய—உமைமாஞள்
நந்தர்ச கோதரி தந்திடு பாலக!
—எனையாளாய்!—அமரேசா!
மஞ்சது சூழ்தரு அண்டம தேயுயர்—பொழிலேசூழ்
வண்புவி நேமவ ளங்கொளு தோகையின்
—மலைமீதே—வளர்தேவே!

1410. மதித ரித்திடு சடையின் வித்தகர்—நலமேசேர்
மணிமி குத்திடு மிதழி யைத்தரி—புயமாஞேர்
விதி மிகுத்திடு தலைத னைத்தரி—பரமாஞேர்
விடையி லுற்றிடு மிறைய வர்க்கொரு—புதல்வோனே!
அதிக நற்படை யொடுமெ திர்த்திடு—அசுரோன்மேல்
அயில்தொ டுத்திடு நயமி குத்திடு—குகநாதா!
பதிபு கழ்ச்சிசெய் சிகிமலைக்குக!—குருநாதா!
பணைம யிற்பரி தனிலு தித்தவ!—எனையாளாய்!

1411. தந்தி யழைக்க வேமுன்
வந்து வடுத்த நாதர்—மணமேசேர்
தண்ட லையிற்கன் மேனி
மங்கை யெனச்செய் பாதர்—நலமாமே
நந்தி சையத்தர் தூய
பைந்து ளவுற்ற மாலை—புனைமாயோன்
நஞ்ச ரவிற்கு ளாடு
விண்டு மகிழ்ச்சி யான—மருகோனே!
பந்தி நிரைத்த போரில்
நின்ற சுரைக்கொல் கூர்மை—அயிலாளா!
பண்ட டியற்கு மேன்மை
தந்த தெனக்கு நீயும்—அருளாயோ?
செந்தி மலைக்கு நாத!
பைந்த மிழுக்கு ஆடும்—இருதாளா!
தென்சி கிவெற்பின் வேல!
கொண்டை மயிற்பொன் மீது—வருவாயோ?

1412. மடக்கொடி யான தேவி
நெருக்கிய கான மீதில்—வளர்வோரே
மறக்குல மாது வான
குறப்பெணை யாசை தீர—அணைதோளா!

---

1411. 'பண்டடியற்கு மேன்மை தந்தது' அடியன்: அருணகிரிநாதர்.

தடப்புய் னான சூரன்
களத்தினில் யானை சேனை—யுடனே தான்
சணத்தினில் ஆவி யோட
அயிற்கொடு ஏவி மாய—விடுசூர் !
இடர்க்கடல் மீது நாயென்
முழுக்கிட நீதி யோ ? இ—தறியாயோ ?
இசைத்தமிழ் பாட வேசெய்
குகக்கும ரேச ! தோகை—மயிலாளா !
தடப்புவி வாழு நேம
வளத்தினில் நீடு நாட !—எனையாளாய் !
தருப்பொலி வான தோகை
மலைக்கர சேர்முனாகை—வருவாயே !

1413. மணிய முத்திய ஒளிவி ழைத்திடு—நலமேசேர்
மகிழ்வை புற்றிடு புனித ரற்பொடு—பணிதாளா !
கணித ரித்திடு மணமி குத்திடு—குழல்கானாள்
கமலை யைச்சரி சொலுகு றப்பெணை—அணைதோளா !
பணியி னெட்டுடல் நெளிப டப்பொடி—நடையூடே
பளப ளப்பட வரும யிற்பரி—மிசைவாராய் !
அணிம லர்ப்பொழில் மிகுமு டிச்சிகி—மலைமீதே
அடிய வர்க்கருள் மகிமை யைச்செய—வருதேவே !

1414. மதியையணி சடையார் நலமுலவு விடையார்—வடிவேசேர்
மகுடமணி முடியார் கயிலைமலை யுடையா—ரிடமேசேர்
முதியகொடு முடியார் இமயமலை மகளாள்—உமைமானாள்
முளரிமல ரடியாள் கவுரிதிரி புரையாள்—அருள்பாலா !
கதியுடனு னெதிரே வருமசுர னுடனே—பெலமாவே
கதிர்கொளயி லதனால் அமர்புரியு முருகா!-எனையாளாய்!
ததியையுனு மரியார் மகிழவரு முருகா !—குகநாதா !
சததளமின் வளர்தோ கையின்மலையி லரசே !—அரு
[ளாயோ ?

1415. காலையில் வருகதிரே
போல்வளர் கதிரொளிபோல்—நிறமாவோர்
காரென வொளிமயில்மே
லேறிய குருபரனே !—எனையாளாய் !

மாலையில் வருமதியே
சூடிய சடைமுடியார்—நலமேசேர்
வாழ்கயி லையிலரசே
தான்மிகு மிறையவனுர்—புதல்வோனே !
ஆலைகள் நிறைவயல்சூழ்
நேமநன் னகருறைவாய் !—குகநாதா !
ஆர்கலி யுலகினிலே
வாழ்வதை யினியருள்வாய்!—முருகோனே !
சோலைகள் நிறைசிகியாம்
மாமலை தனில்வருவாய் !—அமரேசா !
தூயக லையையருள்வாய் !
நாயன்மு னினிவருவாய் !—செகநாதா !

1416. மயிலேறிய முருகா !
அடியேன்முனம் வருவாய் !—அமரேசா !
மணநீபமென் மலரே
புணைசீர்மிகு புயவா !—குகநாதா !
அயிலாலெதி ரிடுசூ
ருடனேயடர் புரிவாய் !—பெலவோனே !
அமரோர்முத லிமையோர்
நிதமாசைக ளுடனே—பணிவாரே
குயிலாகிய மொழியாள்
வனவேடுவர் கொடியாள்—நலமேசேர்
குறநாயகி தனையே
மயலாய்மரு வியவா !—எனையாளாய் !
ஒயிலா!சிகி மலையா !
இனிவேறிலை யருள்வாய் !—கணநாதா !
உமையாளுட புதல்வா !
நிதியாவையு முதவாய் !—முருகோனே !

1417. ஏதுமறி யாத பாவி
மீதுதய வேசெ யாத—தடுவேனோ ?
ஏருலவு நீப மாலை
தானணியு மார்ப னே! முன்—வருவாயோ ?
சூதுமிக வேசெய் தான
வோர்கள்படை யோடுபோரு—புரிவோன்மா
சூரனுட மார்பி லோட
வேயயிலை யேவி யேசெய்—அடலோனே !

வூாதுபுரி பார்வை யாள்பொன்
னேர்வடிவி யான ரூபி—மறவோர்மான்
மாதுதனை நாளு மேவு
தேவ்குரு நாத! தோகை—மயிலாளா!
தாதுலவு வாச மேவு
சோலைமிகு தோகை மேரில்—வருதேவே!
தாரணியின் மீது வாழ்வை
நீயருள்செய் தேவ தேவ!—முருகோனே!

1418. மயிலை நடத்திய தேவே!
வடிவு மிகுத்திடு நாதா!—எனையாளாய்!
குயிலின் மொழிப்பொன்மி னோமோர்
குறவர் மகட்கும ணாளா!—அமரேசர்!
அயிலை யெடுத்தொரு சூர்மா
அலற விடுத்திடு வீரா!—செயவேளே!
ஒயிலை மிகுத்திடு கோலா!
உயர்சி கிரிபிற்கிரி மீதே—வருவோனே!

1419. கொற்ற மிகுத்த சூரனர்
பட்டு விழக்கை வேலினல்—விறலூடே
குத்து படச்செய் நாதனே!—எனையாளாய்!
அற்ற வருக்கு நாதனே!
மெத்த வரத்தை நீசெய்வாய்!—அமரேசா!
அச்சு தனுக்கு மாசையாம்—மருகோனே!
பற்ற தையற்க வேசெய்வாய்!
ரத்ன மிழைத்த பீடமீ—தெனையாளாய்!
பச்சை மயிற்கு மீதிலே—வருவாயே!
வற்ற முனத்தி மீதிலே
சத்தியை விட்ட நாதனே!—குகநாதா!
வர்த்த னையுற்ற தோகைமா—மலையாளா!

1420. தந்திரர் முதலோர் அந்தர இமையோர்—முதலானோர்
[சந்நிதி] முனமே அன்புரு கிடவே—பணிபாதா!
இந்திரன் மகவாய் வந்திடு மட்மான்—மகிழ்வாயே
இன்பம துடனே மங்கள மிகவே—அணைதோளா!

---

1419. வற்ற முனத்தி மீதிலே: வற்றும்படி முன்னளில் அத்தி மீதிலே. அத்தி - கடல். வர்த்தனை - வளம்.

1420. தந்திரர் - கந்திருவர்.
[ ] சந்தம் வேறு. கஞ்சனின் முடியர் - பிரம கபால மேந்தியவர்.

சந்திர தரனுர் கஞ்சனின் முடியார்—புதல்வோனே !
தன்கட னடியாய் வந்தவ னென்னையே—யினியாளாய் !
செந்திரு மருகா ! என்றன்முன் வருவாய் !—குகநாதா !
தென்சிகி மலையாய் ! உன்றனை யலதார்-துணை? பாராய் !

1421. பிறவிக்கடல் மீதினிலே
விழவிட்டது ஞாயமதா—வறியீரோ ?
பிணையைச்சரி யேசொலுமோர்
விழியைப்பெறு மாதர்களால்—மெலிவேனே !
அறவிப்படி நாள்தொறுமே
மிடியிற்பட நீமெதுவாய்—விடலாமோ ?
அடியற்குமு னேவருவாய் !
அமரர்க்குமு னுள்நலமே—புரிதேவா !
குறமெய்க்கொடி மாமயலால்
வனமத்தியி லேதிரிவாய் !—முருகோனே !
குருநற்கமழ் நீபமதே
யணிவித்தக னே ! அருள்வாய் !—குகநாதா !
மறமுற்றிடு சூருடனே
யெதிரச்சம ரேபுரிவாய் !—அயிலாளா !
மணிமொய்த்திடு கோடுகளே
மிகுநற்சிகி மாமலைமேல்—வருநாதா !

1422. கடலில் விழுபவர் மனது தெளிவுற—வுடனேதான்
கரையில் வரவொரு மிதவை தனையருள்—பவர்போலே
அடல்செய் கலிதனில் முழுகி முழுகிடும்—அடியார்பால்
அவர்கள் வெளிவர தயவின் மிதவையை-அருளாயோ ?
திடமொ டெதிர்வரு அசுர னுயிர்பட—எதிராவே
திகழு மயில்விடு குமர ! குருபர !—எனையாளாய் !
வடவ ரையைநிகர் முடிக ளுலவிய—நிறமேசேர்
வடிவு திகழ்சிகி மலையில் வருகுக !—எனையாளாய் !

1423. வஞ்சிநே ரிடையின் மாது கொண்டல்நேர் குழலின் மாது
வம்புசேர் முலையின் மாது இன்பமார் குறமி னுள்தன்
—மயலாளா !
கெஞ்சியே திரவி யாளர் பங்கிலே நடைகொ ளாது
கெந்தநீ பமமென் மார்ப ! மிஞ்சவே கிருபை யாவும்
—உதவாயோ ?

அஞ்சியே வருக டோர மிஞ்சுசூ ருடன்வெல் வாது
அண்டியே மயில்கொ டேவு நின்றுநா டகம தாடு
—மயிலாளா!
நஞ்சுலா வியவ ராவு கொண்டபார் முடியின் மீது
நன்றதாய் வளரு தோகை குன்றமே வியஉ லாச
—முருகோனே!

1424. குறப்பெண் மீது மனதாய்
ஒருத்த ஞக மனம்யா—வையுமேதான்
குவித்து நீடு மலேமே
விருப்ப ளோவென் முனமே—திரிதாளா!
திறத்தின் மீறு மசுரோ
ஞடற்று போரு தனிலே—அயிலாலே!
செயித்து வானர் முதலோர்
பிழைக்க வேசெய் வதுபோ—லவுமேதான்
அறக்கொல் பாவ கலியோ
டிடச்செய் தேபொன் மயிலா!—எனையாளாய்!
அதுக்கு மாறு தடையாய்
மறுப்ப ரோசொல் குமரா!—தெரியாதோ?
துறக்க நாடு நிகராய்
வளர்ச்சி யான நகரா!—செகநாதா!
துலக்க மான சிகியா
மலேக்கு ஞளு மிகவே—வருதேவே!

1425. வேறுகதி யாவுமுள தோ? அதுவு
நீயறிய—விலேயோதான்?
வேகமொடு தோகைமயி லேறியென்மு
ஞகவினி—வருவாயே!
கூறுபடை வேலேயெதிர் சூரனுடல்
போகவெய்த—செயவீரா!
கோலமிகு நீபமலர் மாலேதனே
யேயணியும்—இருதோளா!
மாறுபட வேசெய்கலி யோடவர
நீயருளே—உதவாயோ?
மாநிலம தேயடிய ஞசையத
ஞன்மெலிதல்—நயமோதான்?
மீறுகன யோகமதை நாயனிட
மேயுதவு—குருநாதா!
வேதனயன் மால்பணிகொள் தோகைமலே
மீதுவரு—குகதேவே!

1426. எனக்கு வேறு கதிதா
னிருப்ப தேது மறியா—தவர்போலே
இரக்க மேயெ ளளவாய்
மனத்தி லேயு நினையா—ததுவேனோ ?
உனக்கு நானு மடியா
னெனச்சொல் பாடல் செய்வதே—செவிமீதே
உறுத்த வேது மிலேயோ ?
தமிழ்க்கு மேன்மை யறிவா—ளியுமர்மே
தனக்கு மாரி தனேயே
யிடத்தி லேவை யரனர்—மகிழ்பாலா !
தருக்கள் சூழு வனமான்
குறப்பெண் மேவு புயவா !—எனேயாளாய் !
சினக்கு மாவை யடல்போ
ரிடத்தி னீடு அயிலால்—உடனேதான்
செயித்து வாகை புனேவாய் !
மணக்கு நீப மலர்சூ—டியமார்பா !

1427. இத்தனே நாளு நாயன்
மெத்தவு மாசை யாலு—மெலிவேனோ ?
இப்படி வாட நீயும்
அற்ப இ ரேணு வேனும்—அருளாயோ ?
புத்தக நீரி லேற
வைத்தது யாவ ராலு—மறிவாரே
புற்புத வாழ்வை வாழு
பத்தர்கண் மேன்மை யாக—அருளாயோ ?
கைத்தன மோடு சேர
வற்புத மாதை நேரு—குறமானுள்
கட்டியு லாச மாக
இட்டம தாக மேவு—மணவாளா !
சித்தர்கள் கோடி பேர்கள்
முத்தர்கள் கோடி பேர்கள்—பணிதாளா !
சித்திர மேவு தோகை
நற்கிரி வாச ! நீப—மலர்மார்பா !

---

1426. இப்பாட்டில் மயில்மலே வரவில்லே. 493-ஆம் பாடலிலுமில்லே. தனக்குமாரி : பார்வதி.

1427. அற்ப இரேணு : எளியதுகள். 'ரேணு' (1455). புத்தகம் நீரிலேற வைத்தது : வையையில் ஏடெதிரச் சென்றது.

1428. தொங்கு மலர்மிகு தண்ட லேயில்வளர்—குலவேடோர்
குன்றில் வருகுற மங்கை தனைமரு—வியதோளா !
குங்கு மகளப மொன்று மணிபுய !—எனையாளாய் !
குன்றை மலைதனில் வந்த குருபர !—அமரேசா !
சங்கு தனையணி செங்கை யரியுட—மருகோனே !
சங்க ரருடைய அன்பு மிகமகிழ்—புதல்வோனே !
இங்கு எனதுமுன் கொண்டை மயில்தனில்—வருவாயே !
என்று முனதுட அன்பன் வளருற—அருள்வாயே !

1429. கான மதில்வளர் வேட நாயகி
காத லுடனணை நீப மாலிகை—புனைதோளா !
வான மதியணி வேணி யார்புணர்
வாகு திகழுமை மாது மாதரி—தருபாலா !
நான விதமுள பூவி லேவளர்
நாலு முகவயன் வான வோர்பணி—யிருதாளா !
தான வனையடு கூரின் வேலவ !
தார ணிகள்புகழ் தோகை மாமலை—முருகோனே !

1430. திரைக்கட லிற்றுயில்
மதுக்கொள் துளப்புய—நலமானோன்
திருப்பெண் மடக்கொடி
தனைப்புண ரற்புத—மிகுமாயோன்
நிரைத்த படைக்குமுன்
எதிர்த்தவு ணச்சன—மழிவாயே
நினைத்த படிக்குவெல்
[அச்சுத] னுக்குநன்—மருகோனே !
கரைத்த சருக்கரை
எனச்சொல் தமிழ்த்தனை—அருளாயோ ?
கருத்தி னினைக்குமுன்
எனக்கு மிகுத்திட—அருளாயோ ?
தரைக்கு ளுயர்ச்சிகொள்
சிகிக்கி ரியிற்றினம்—வளர்தேவே !
தனத்தி குறத்தியை
மனத்தி விருத்திய—மயலாளா !

1431. காரெ னப்பொலி மேனியான் தான வர்க்குல மேன்மை
கால னுக்கொரு காலனு—கியமாமேல் [யான்
நேரே னப்படை யோடுபோய் போர்செ யித்திடு வேலவா !
தேவ ருக்கனு கூலனே !—எனையாளாய் !

1430. [ ] சந்தம் வேறு.

நீரெ னத்தெளி வாகவே ஞான நற்கதி நீசெய்வாய்!
நேய முற்றிடு வேடமான்—அணைதோளா!
மேரெ னக்கதிர் சேருமால் பூமி யிற்கன மானதோர்
மேன்மு கட்டுயர் தோகைமா—மலையாளா!

1432. மீனே நிகர்த்தவிழி பாலோ ரசித்த மொழி
வீறு யிணைத்ததட—முலையாளே
வானோர் தனக்கிறைவ னேதா னருட்குமரி
மானே இருக்கவது—அறியாதே
ஏனோ குறத்திமய லாலே யிவட்கொருபெண்
ஈடோ வெனத்திரியும்—இருதாளா!
நானே துதிக்கவினி யேனோ சிகிக்கிரிய!
நாடா திருப்பதென—அருளாயோ?

1433. கல்விப்பொருள் சீருள
செல்வப்பொருள் யாவையும்—உதவாயோ?
கன்னத்தினி லேமத
முண்ணுக்களி ருனனர்—துணையாளா!
வில்வத்தொடை தாதகி
துன்னச்சடை மீதணி—அரனார்மேர்
வில்லிற்றிரி மாபுர
மன்னச் செயு நாயகர்—அருள்பாலா!
கொல்வித்திடு மாகொலை
யுள்ளக்கன மாவுடன்—எதிராயே
குன்னக்கதிர் வேல்விடு
சின்னச்சிறு நாயக!—எனையாளாய்!
செல்விக்குற நாயகி
தன்னைப்புண ராவல்கொள்—முருகோனே!
சென்னெற்பொலி நாடுயர்
குண்ணக்குடி மாமலை—வருதேவே!

1434. குடத்தை நேரு முலையாள்
கணைக்கு நேரு விழியாள்—நலமேசேர்
குருக்கொள் மேனி வடிவாள்—மயலாலே
அடத்தை யேகொள் மனதால்
பகட்டி யேதி ரியுமோர்—பரமாணர்
அருட்டு மாசை தணையே—தவிராயோ?

படுத்தை யேகொ ளரவே
முடிக்குள் நீட அணிவோ—ரிடமேசேர்
பசைத்த மேனி யுமையாள்—அருள்பாலா!
நடத்தை யேசெய் மயிலா!
எனக்கு மேன்மை யருள்வாய்!—அமரேசா!
நலத்த **தோகை மலையா**!—எனையாளாய்!

1435. ஏதுமறி யார்கள் போல
நீயுமெது வான தேது?—எனசாமி!
ஏழைபுவி மீது நாளும்
மாதுயரின் வாட வாட—நலமோதான்?
சூதுசெயு மாதர் நோய
தாலெமன நோக வேசெ—யியல்போதான்?
தோகைமயில் மீதி லேறி
நாயன்முன மாக வாரல்—நினையாயோ?
வாதுபுரி சூர னோடு
கூடவரு சேனை யோடி—முனைமீதே
மாளவயி லேவி வானர்
சேமகர மாக வேசெய்—அடலாளா!
போதுமல ரோனு மாலும்
தேடரிய சோதி யீசர்—தருபாலா!
பூவினல மான **தோகை**
**மேருவரு** நாத! [...] எனையாளாய்!

1436 மோன மான முனிவோர் தேவ ராசன் முதலோர்
மூவர் யாரு நிதமே—பணிதாளா!
ஞான மான பொருளே! தோகை மீது வருவாய்!
நாயன் மீது தயவாய்—அமரேசா!
கானம் வாழு மறவோர் ஆசையான மடமான்
காதல் தீர மணமே—புரிதேவே!
வான ளாவு **சிகியாம்** மேரில் வாழு குமரா!
வரசநீப மலர்மா—லிகையாளா!

1437. கலியுக காலமோ? அடியனை நாளுமே—அணுவாலும்
கருதவு மேயிலா ததுமெது வானதே—தறியாயோ?
மலிசிறை தோகைமேல் வருதுரை நாயகா!—எனையாளும்
மணிபுனை க்ரீடமே யணிகுக நாதனே!—அமரேசா!

---

1435. [...] 'வேலா!' எனச் சேர்க்கலாம்.

குலிசனும் வானுளோர் கனமிகு ஞானியோர்—நலமாக
குருமுடி யோடுமே நிரைநிரை யாகவே—பணிதேவே!
ஒலிகடல் சூழுமோர் சிகிமலை மீதிலே—வருதேவே!
உமைமட மாதினுள் தரவரு பாலகா!—அருளாயோ?

1438. வித்தைபல கோடி யுற்றமணி தோர்முன்—அடியேனன்
மெத்தவவ ராலு மக்கணம தாக—விடலாமோ?
தத்தைமொழி மாது கட்டழகி யான—குறமானுள்
சற்பனையி னல்முன் னட்புகொள வேசெய்-துறுபாயா!
தித்தையென ஆடும் பச்சைமயி லேறி—வருவாயே!
சித்திவித ஞான முத்துமுரு கேச!—எனையாளாய்!
நத்தையணி மாயன் அற்புதம தான—மருகேசா!
நச்சரவின் மாமு டிக்குவளர் தோகை—மலையாளா!

1439. நந்தணி கரத்தினர்
கஞ்சமி னுரத்தினர்—நலமாமே
கங்குலி னிறத்தினர்
பைந்துள தரித்தமால்—மருகோனே!
வந்துமு னெதிர்த்தமா
நைந்திட வடற்செய்கூர்—அயிலாளா!
வஞ்சக மிகுத்தவோர்
பங்கினி லிருக்கொணு—முருகோனே!
பந்ததை நிகர்த்தமா
ரெண்டுள தனத்தினுள்—குறமானுள்
பங்கினி லிருக்கும்வேல்
கொண்டிடு கரத்தனே!—எனையாளாய்!
கந்தமிகு பொற்புயா!
வந்தருள் தனைச்செய்வாய்!—அமரேசா!
கந்த! சிகி யிற்குளே
யென்றும்வளர் வுற்றவா!—குகநாதா!

1440. காலங்கலி யாக்கியதோ? ஏதுந்தெரி யாதவர்போல்
காமந்தனி லேமெலிவேன்—அதைநீ—அறியாயோ?
சீலந்தய வேதுமிலார் பாகந்தனி லேயடியேன்
தேடும்படி யேதிரிவேன்—அதுநீ—ரிடவாராய்!
நீலங்கொடு மேனியினர் வாசங்கமழ் மாலையினர்
நீடுந்திரை யேதுயில்வோர் - மணிமால்—மருகோனே!
கோலஞ்செயு மாமயிலா! நீவந்த ருளேபுரிவாய்!
கோடுந்திடு தோகையின்மா—மலைமேல்—வருதேவே!

---

1438. செய்து உறு உபாயா!

1441. ஆனந்த மான பொருளே! கோலங்கொள் பாத மதையே
யானெந்த நாளு முனையே—பணிவேனே
கானங்கள் தோறு மலைவோர் சீர்தங்கு வேடர் மகளாள்
காமங்கள் தீர நயமாய்—அணைதோளா!
வானந்த வாழு மிமையோர் வாழ்வுந்த மாலி னுடனே
வாள்கொண்ட வேல்கொ டெதிர்போர்—புரிவோனே!
ஞானங்கொள் வோர்கள் குருவே! நீவந்து வேண தருள்
நாடுந்து தோகை மலைமேல்—வருதேவே! [வாய்!

1442. நடம்புரியு மயிலி லேறி மகிழ்ந்தடிய னெதிர நாடி
நலங்கள்தர வருவை! தேவர்—புகழ்தேவே!
கடம்பமெனு மலரின் மாலை மணங்கமழ அணியு மார்ப!
கனங்கொள்மயில் தனிலு மேறி—வருதேவே!
அடஞ்செய்பல வசுர னோடு எதிர்ந்துஅடல் புரியும் வேல!
அகண்டபர பரம நாதர்—அருள்பாலா! [வாழ்வு
தடங்கொளுயர் பொழில்கள் சூழு சிகண்டிவரை யதனில்
தழைந்தகுரு பர! உலாச!—முருகோனே!

1443. சிறையுற்றிடு மயின்மேல்
அடியார்க்கருள் தரவே—வருவாயே!
திகணற்கம லமதே
வளரற்புதன் நிதமே—பணிதாளா!
குறையுற்றிடும் இமையோர்
அரசுற்றிட எதிர்சூ—ருடனேதான்
குருதிக்கடல் படவே
அயில்விட்டெறி குமரா!—செயசூரா!
நிறையுற்றிடு உயர்சோ
லைகள்மெத்தவும் வளைசீர்—[...]
நிலைபெற்றிடு சிகிமா
மலையிற்குரு பரனே!—எனையாளாய்!
மறையுற்றிடு முனிவோர்
பணிவித்தக! அருள்வாய்!—குகநாதா!
வனசத்திரு புணர்மால்
மருகச்சர வணனே!—அமரேசா!

1444. கஞ்சனை வதைத்த மாயன் பைந்துள தரித்த மார்பன்
கந்தர நிறத்த தேகன்—மருகோனே!
வஞ்சக மிகுத்த சூரன் மிஞ்சிய தளத்தி னோடு
மங்கிட அயிற்கொ டேவு—செயவீரா!

---

1443. [...] 'மிகவேதான்' எனச்சேர்க்கலாம்.

தஞ்சம தெனக்கு வேறு கண்டிலன் வரத்தை யேசெய்
தந்தியின் முகத்தர் தேடு—துணையாளா!
மஞ்சுதவ முற்ற சோலை மிஞ்சுசிகி யுற்ற கோடில்
மங்கள மிகுக்க வாழும்—முருகோனே!

1445. மண்டிய படைக் ளோடு அண்டர்கள் வெருவி யோட
வந்துமு னடல்செய் சூர—னுடனே தான்
அண்டிமு னடல்செய் வேல! மண்புவி யதனில் நாளும்
அன்பனை நலம தாக—அருளாயோ?
செண்டிணை முலையள் வேடர் தன்குலம் வருமி னாளை
சிந்தையின் மயல்க ளோடு—புணர்தோளா!
தெண்டிரை வளைகொ ணேம நன்றிகொ ளுயரு நாட!
தென்சிகி மலையி னுளும்—வளர்தேவே!

1446. நடனமிட் டிடுமயிலா! அடியனுக் கருள்புரிவாய்!
நறைமிகுத் திடுமலர்மா—லிகைமார்பா!
அடல்புரித் திடவெகுதா னைகள்பெருக் கிமுன்வருசூர்
அலறவிட் டிடுமயிலா!—செயவீரா!
கடல்வளைப் புவிதனிலே வெகுசவுக் கியமருள்வாய்!
கருணையுற் றிடுகடலே!—எனையாளாய்!
வடவரைக் கிரிதனையே நிகருபொற் புளசிகிமா
மலையினித் தியம்வருவாய்!—அமரேசா!

1447. சந்தமிகு முலையாள் அம்புநிகர் விழியாள்
தண்டலையின் மறவோர்—குலமானுள்
அந்தமது மயலால் முன்புமண மிடுவோய்!
அன்பனிடம் வருவாய்!—குமரேசா!
கந்தமிகு மலர்நீ பம்புனையு முருகா!
கங்கையணி சடையார்—அருள்பாலா!
நந்தமணி யரிமால் அன்புபெறு மருகா!
நன்றுபுரி சிகிமா—மலையாளா!

1448. பத்தன் மீது தயவு வைத்து நாளு மருள்செய்!
பற்ப மாம லரைநி—கருதாளா!
அத்த னாத னிமையர் சித்தர் நாதர் பரவு
அட்ட பாலர் முதலாய்—பணிதாளா!
நத்த னாரு ருளிய புத்தி ரா!பொன் மயிலில்
நத்தி நாய னிடமே—வருவாயே!
சித்தர் வாழு சிகியின் பொற்பு லாவு கிரிய!
சித்ர வாகு மிகுவாய்!—எனையாளாய்!

1449. கொச்சைமிகு குறமான் பற்பமலர் வருமான்
கொத்தலர்கொள் குழலாள்—வடிவேசேர்
கச்சையணி முலையாள் இச்சையுள கணவா!
கர்த்தனருள் புதல்வா!—எனையாளாய்!
இச்சையுட னடியே னுக்குவர மருள்வாய்!
இக்குமொழி யவரால்—அலையாதே
பச்சைமயி லுடனே பத்தனிடம் வருவாய்!
பற்பலர்கள் புகழ்தோ—கையின் மேரா!

1450. கதிர்வடி வேலால் எதிர்வரு சூர்மார்
கமர்பட விடுவாய்—எனையாளாய்!
மதியுள சீர்வே ணியினர ஞர்பால்
வளருமை யாள்பா—லக!வேளே!
விதியுட குருவே யடியன்முன் வருவாய்!
விரைமிகு துளமால்—மருகோனே!
கதியடி யவர்பா லுதவிய முதலே!
கமழ்சிகி மலைவாழ்—குருநாதா!

1451. தனத்தி னுலுமிரு விழிக்க னுலுமெதிர்
தளைக்க வேவருநன்—மடவாரால்
மனத்தி னுசைதனை யுறச்செ யாமல்வெகு
வரத்தை நாயனிடம்—அருளாயோ?
வனத்தி னுளும்வளர் குறத்தி யாசைமிகு
மணத்த மாலையிடு—குகநாதா!
கனத்த கோடுலவு சிகிப்பொன் மேரின்வரு
கருத்த னே!நடன—மயிலாளா!

1452. தத்தித்திரி மாமயி லுற்றுத்தின மேவரு—முருகோனே!
தத்தைக்கிளி யாள்நல மைக்கட்குற மான்மரு—விய
[தோளா!
சத்திக்கெதிர் மாவுட லைக்கெட்டிட நாடியொர்—களமீதே
சட்டித்திதி நாளினில் நைத்துச்செய மேபுரி-செயவீரா!
பத்திப்பட நானுனை நித்தத்துதி யேசெய்—மடியேன்நான்
பத்மக்கழல் மீதினி லொட்டிக்கொள நீயருள்—புரியா
[தேன்?
அத்திக்கொரு மாதுனை பெற்றக்கன மாகிய—குகநாதா!
அற்புற்றிடு நாயக! சித்ரச்சிகி மேர்மலை—வருதேவே!

---

1449. அலையாதே (இருக்க) வரமருள்வாய்.

1450. இடையிடையே சந்தங்கள் மாறுபடுகின்றன.

1453. மதிதரித் திடுசடையார் கயிலைநற் கிரியரனார்
மழுதரித் திடுகரனார்—அருள்பாலா!
துதிமிகுத் திடுசரண! அடியனுக் கருள்புரிவாய்!
துவரிதழ்க் குறமகளாள்—புணர்தோளா!
கதிமிகுத் திடுமயிலா! சதுமுகற் குருபரனே!
கருணையிற் றிடுமுகிலே!—எனையாளாய்!
நிதிமிகுத் திடுவளர்தே மநகருக் கொருவரசே!
நகுசிகிக் கிரிதனில்வாழ்—வுறுதேவே!

1454. நாடிவரு சூரனுடல் கீறுபட வேதான்
நாமவடி வேல்கொடெயும் சூரசம ராளா!-செயவேளே!
பாடிவரு மாமதுணு நீபமல ராளா!
பாவைகுற மான்மருவு லோல!மயில் மீதே—வருவாயே!
வாடிடையர் நீள்விழியர் பூவல்குல ராலே
மால்கொளவு நீவிடுதல் நாயமல மேலாம்—அருளாளா!
கோடிலகு மாமதிகொள் சோலைமிகு வானார்
கோவுலவு தோகைமலை மீதில்வரு வீரா!-எனையாளாய்!

1455. மாட மாளிகை கூட கோபுர
நீடு சோலைகள் சூழவே
வாழ்வு சேர்வள நேம நாடுள
தோகை மாமலை நாதனே!
ஆட ராவெனும் பார வாசிகொள்
சூழ்ப ணுடைவி யானதோர்
ஆதி சேடனு னோக வேநட
மாடு சீர்மயி லாளனே!
மூட ராயொரு நாளு மேயுனை
ரேணு வேனுமெ ணுதபேர்
மோக போகவு லாச ராகிட
நீசெய் மாயம தேதையா!
பாட லால்விதி பூதி யால்நினை
நாயன் மேன்மன தாசையால்
பார்வை யேனரு ளாத தேனது
பாவ மோ?குரு மரேசனே!

---

1454. பாடிவரும் மா மது உணும் நீபமலர். மா -வண்டு.

1456. நடனமிடு மயிலா! அடியனிடம் வருவாய்!
நறைமலர்க ளணிசீர்—இருதோளா!
அடல்புரியு மசுரோ னுடல்பிளவு படவே
அயிலதனை யெதிராய்—விடுதேவே!
மடலவிழு மலர்நீ பமதையணி புயவா!
மகிமைதனை யருள்வாய்!—குகநாதா!
கடகளிறு துணைவா! தமிழதனை யருள்வாய்!
கதியுதவு சிகிமா—மலையாளா!

1457. முத்துநகை யார்சொல் தத்தைநிக ரான
மொய்த்தமண மாலை—அணிதோளா!
வித்துரும மான சித்ரவித மூர்நன்
விற்புருவ மாதர்—மயலாலே
பித்துளவர் போல நித்தமலை யாது
பெட்புமிகு வாழ்வை—அருளாயோ?
தத்துமயி லாள! பொற்சிகிய தான
சக்ரமலை வாச!—எனையாளாய்!

1458. நாணினிடை யாளை சீர்கொள்வடி வாளை
நாமவடி வேலின்—விழியாளை—நலமேசேர்
பூணினுடை லாளை வேடர்மக ளாளை
போகமுடன் மேவு—புயநாதா!—எனையாளாய்!
வாணிகலை மாது நாயனிட மாக
வாழ்கவரு ளேசெய்!—குகநாதா!—அமரேசா!
வேணியிறை பால! தோகைமயில் வாக!
மேரைநிகர் தோகை—மலைமீதே—வருதேவே!

1459. வடவ ரைக்கொரு வரசு விச்சைகொள்—உமைமானுள்
மதுரி தச்சொலி இமயன் நற்றவ—மகவானுள்
அடல்ப யிற்றிய திரிபு ரத்தவ—ருடனேதான்
அழிப டச்செய்த கவுரி பெற்றிடு—புதல்வோனே!
மடம யிற்குற மகளை யற்புடன்—அணைதோளா!
மனதில் நித்தியம் நினையெ னக்கருள்—புரிவாயோ?
நடன முற்றிடு மயிலி லுற்றவ!—என்முனை
நலமி குத்திட வருவை! நற்சிகி—மலையாளா!

---

1457. வித்துருமம் - பவளம்.

1460. கும்பு ஏயவள் - குழுவில் பொருந்தியவள்,

1460. கொந்தார்பொழில் வந்தேவளர்—குறவோர்மா
கும்பேயவள் அன்பானமின்—அணைதோளா!
பைந்தாமம ணிந்தார்புய!—அருளாயோ?
பண்பாகிட நின்றாடிய—மயிலாளா!
கந்தாகுக! குன்றுகிய—சிகியாளா!
கண்டோர்கலி யின்றோடிட—அருளாயோ?
செந்தாமரை யின்பாவையை—அமர்தோளார்
சிங்காரமி குஞ்சீருள—மருகோனே!

1461. காதள வோடிய விழியார் சீருள கோகன கமினர்
கார்முகி லாகிய குழலார்—மயலாமோர்
பாதக மாகிய வலையூ டேதிரி நாயனை நினதாம்
பாதம தேவர அருளாய்!—அமரேசா!
தாதவிழ் நீபமென் மலரே சூடிய சீர்பர! எனையாள்!
தாவிய நாடக மயிலே—றியதேவே!
சீதள மேவிய வனமே சூழ்தரு தோகையின் மலைபா!
தேவர்கள் மூவர்கள் முதலே!—அருடாராய்!

1462. அடியன் மீதுதய வதனை ரேணளவு—நினையாயோ?
அறிவி லாதுவுனை நினைகி லாதவர்கள்—தமையேதான்
படியின் மீதுவெகு நயம தாகவரு—ளுவதேதோ?
பணியு நாயனிட மருளி லாததது—வெதனாலோ?
கடிகொ ணீபமலர் கனம தானதொடை—புனைமார்பா!
கருணை மாரிமொழி யிருகண் மாரியருள்—உதவாயோ!
துடியை நேருமிடை தருணி வேடமினை—அணைதோளா!
துயர்க டரவென்முன் வருவை! தோகைமலை—வரு
[தேவே!

1463. சாடைசெயு மாதர் பார்வைவலை யாலு—மலையாதே
தாவுமயி லேறி யாவலுட னுய—னிடம்வாராய்!
வாடைமணம் வீசு கானமதில் நாளும்—வளர்மானுள்
வாரவழி யூடு போயுலவு நாத!—எனையாளாய்!
ஏடையுள நீப மாலையணி மார்ப!—அடியேன்மே
லேதயவு ரேணு வேனுநினை யாத—ததுவேனோ?
ஓடைபொழில் சூழு நேமவள நாடி—லுரைசீர்சேர்
யோகர்தவ மோனர் வானர்நிறை தோகை-மலையாளா!

1464. எதிர்த்து வந்திடு சூரனை யேயுடன்
எதிர்த்து வென்றிட வேவயி லேவிய—செயவீரா!
எனக்கு முன்வரு மாகலி யோடிட
இகத்தி னன்மைக ளாகவு மேயருள்—உதவாயோ?

மதிக்கி லங்கிய சீர்நுதன் மாதர்கண்
மயற்குள் நொந்திட வாடிட நீதிகொல்?—அறியாயோ?
மழைக்கி ரங்கிய தோர்பயிர் போலவும்
மகிழ்ச்சி யொன்றில தாயடி யேன்வளர்—வதுபாராய்!
நதிக்குள் பங்கிய மாகயல் தாவிய
நலத்தி லங்கிய தோர்பணை நேமம—தெனுநாடா!
நடிக்கு கின்றபொ னுர்மயின் மீதினில்
நயக்க இன்றுவெ ஞசைகள் தீரமுன்—வருவாயே!
கதிக்கு மும்பர்கள் வாழ்கிட வேயருள்
கதிக்கு வன்றுசெய் நாயக னே! செக—வுயிர்நாதா!
கனத்த பொன்கிரி போலவு மேனுயர்
கறுத்த மஞ்சுகள் தாவிய தோகையின்—மலையாளா!

1465. சீதள மதியணி நாதகி தனையணி—சடையாரே
தேவர்கள் வளர்வுற ஆலம தனையுணு—கனிவாயார்
காதள விலகிய கூரயி லெனமிகு—விழியாளே
காரணி திரிபுரை யாரணி யுமையவள்—தருபாலா!
ஆதவ னெனவொளி ராகிய நிறமிகு—குருநாதா! [யாளாய்!
ஆரண முடிவினி லேவரு மொருபொருள்!—எனை
பாதல புவிதனில் ராமுடி தனில்வளர்—நலமேசேர்
பாதக விருள்கெட வேயொளிர் சிகிமலை-முருகோனே!

1466. சத்தியத ஞலெ திர்த்துவரு சூரன்—உடல்மீதே
தைக்கவிடு தேவ! நற்கருணை வாரி—தியினுதா!
அத்திமுக னை வற்கிளைய சோத—ரன்பினனே
அற்புதம தான மெய்க்குறமி னளை—அணைதோளா!
முத்திதனை யேயெ னக்கருள்செய் தோகை—மயிலாளா!
முக்கியசி காம லைக்குளர சாக—வளர்தேவே!
நித்தியகல் யாண வித்தைதனை நீசெய்—அமரேசா!
நிர்த்தகட ராசர் பெற்றகும ரேச!—எனையாளாய்!

1467. வண்டுபடி குழலாள் தண்டலையில் வளர்மான்
மஞ்சமிகு குறமான்—புணர்தோளா!
செண்டுநிகர் முலையார் கொண்டலுயர் குழலார்
சென்றுதரு மயல்தீ—ரிடுவாயே!
கண்டுபணி செயவே கொண்டைமயில் தனிலே
கந்த! மிகு அடியேன்—முனம்வாராய்!
துண்டுமதி யணிவோர் மைந்த! சிகிவரையா!
துங்கமிகு அயிலா!—அருளாயோ?

1468. கருணை மாரிபொழி மேகமே! அடியன் மீதுதய வேசெய்
கமழு நீபமலர் மாலையே—புரிமார்பா! [வாய்!
அருண மானநிற மேனியாய்! நடன மாமயிலி லேறிவா!
அழக தானகுற மாதினுள்—புணர்தோளா!
பருமை யானகய வானனுர் துணைவ னுயபுய வாசனே!
பவள வாய! எனை நாளுமே—அருளாயோ?
திருமி னுள்மருவு மாயனுர் மருக னுனகுரு நாதனே!
திகழு தோகைமலை மீதிலே—வருதேவே!

1469. கஞ்சமல ரயனுர் விண்டுநல மிகுமால்
கண்டுபணி யரனுர்—தருபாலா!
நஞ்சுலவு விழியாள் மஞ்சுலவு குழலாள்
நங்கைகுற மகளாள்—புணர்தோளா!
அஞ்சவரு மசுரோன் நைந்துவிட அயிலே
அன்றுவிடு குமரா!—எனையாளாய்!
மஞ்சுலவு முடிசேர் குன்றைமலை யரசே!
வந்துவர மருள்வாய்!—குகநாதா!

1470. இத்தனை நாளு நாயன் அற்பம தாக வாழ
இப்படி யார்வர் மேன்மை—அருளாதோர்?
பித்தனை மேரு வாச னைச்சபை மீதி லாடு
பெட்புய ரீசர் தேவை—அணைமானுள்
உத்தமி தேவி பால! சித்திர மான தோகை
உற்றிடு மேரி லேறி—வருவாயே!
நத்தரும் வானு ளோரு மெச்சிடு தேவ தேவ!
நற்சிகி யான தோகை—மலையாளா!

1471. நடன மிட்டிடு மயிலி லுற்றிடு—முருகோனே!
நலமி குத்திட வடிய னுக்கருள்—புரிவாயே!
மடன டைப்பிணை யருளு நற்குற—மகளாமோர்
மயிலி யைப்புன மதனி லற்பொடு—புணர்தோளா!
கடம தக்கய முகன்ம கிழ்ச்சிகொள்—துணையாளா!
கலையை மெத்தவும் அடிய னுக்கருள்—தருவாயே!
தடவ ரைச்சிகி மலையி லுற்றவ!—எனையாளாய்!
தரிய லர்க்கொரு அரியெ னக்கொரு—குருநாதா!

1472. கொஞ்சுகிளி மொழியார் அம்பைநிகர் விழியார்
கொண்டல்படி குழலார்—நலமானுர்
நெஞ்சுருக மயலே தந்திடுவ தனையே
நெஞ்சில்நினை வகலோ—டிடவாராய்!

நஞ்சுலவு,மரவோர் மிஞ்சுமுடி தனில்வாழ்
    நங்கைதனை யணைவோர்—மருகோனே!
பஞ்சுலவு மடியாள் மஞ்சுமிகு குறமான்
    பங்க!உயர் சிகிமா—மலையாளா!

1473. வாரா யடியன்முன்! தீராய் கலிதனை—யுடனே தான்!
    மாளா தொருமதி நாயே னிடமருள்—புரிவாயே!
தாரா யொருவரை நீதா நிதியென—இரவாதே!
    காலா யுதமுள சீர்வா ரணமிகு—துவசாளா!
ஆரா தரவது நீதா னறிகிலை!—குருநாதா!
    ஆலோ லமெனுமி னுள்மே லதிமயல்—உளதேவே!
மேரா மிதுவென வானோர் முதலினர்—பணிசீர்சேர்
    மேலா கியசிகி மேர்மேல் வளர்குக!—எனையாளாய்!

1474. அடிய னுக்கு வேறு துணையி ருக்கு தோசொல்
    அதைநி னைக்கொ ணாது
    தயவு மெத்த நீயும்—அருளாயோ?
குடிகள் சொற்ப மான சிறுகு றத்தின் மீறு
    குறவர் பெற்ற பாவை
    தனைம கிழ்ச்சி யாக—அணைதோளா!
கடிமி குத்த நீப மலர்மு டித்த மாலை
    கதிர்மி குத்த தோளி
    லழகி ருக்க நாளும்—அணிதோளா!
மிடிய கற்றி நாய னிடம ருட்பெய் தோகை
    மிகும லைக்குள் நாளு
    மகிமை மிக்கு வாழு—குமரேசா!

1475. கனத்தமா முலையாள்
    முகிற்குநேர் குழலாள்—இணையாமோர்
  கணைக்குநேர் விழியாள்
    மதிக்குநேர் வதனாள்—நலமாமே
வனத்தில்வே டுவர்பா
    லுதித்தபூ மயிலாள்—மயலாலே
  வருத்தமாய் வழிமே
    லிருக்குநா யகனே!—எனையாளாய்!

---

1472. நங்கை: நிலமகள்.

1473. 'ஒருவரை நீ நிதி தா என் இரவாதே காராய்' என்க. காராய் = காவாய் (உலக வழக்குச்சொல்).

தனத்திஞல் மெலிவே
    னெக்குநீ யருளே—உதவாயோ?
  தருக்குளே யரசே
    புரிக்குவான் மகவான்—பணிதாளா!
அனக்குழா நிறைநீர்
    மிகுக்கும்வா விகள்சூழ்—பணையேசேர்
  அணிச்சிகா மலைமேல்
    விருப்பமா னவனே!—அருளாயோ?

1476. செச்சை யணிந்த புயாசலனே!
    சித்து மிகுந்த குணகரனே!—எனையாளாய்!
கொச்சை மிகுந்த உலாசமினள்
    கொத்த லருந்து வுயானமதே—வருமானள்
இச்சை மிகுந்த குகாகுமரா!
    எப்ப மகிழ்ந்தென் முனிவருவாய்—அமரேசா!
பச்சை நிறைந்த சிகா!முருகா!
    பற்ப மடந்தை மிஞளுறைதோ—கையின்வாசா!

1477. சினத்திடு கறுத்திடு
    தயித்தியர் குலத்தினில்—வருசூர்மா
  தெறித்திட மிகுத்திடு
    வயிற்கொடு செயித்திடு—செயவீரா!
வனத்தினில் வளர்ச்சிகொள்
    குறத்திசெய் மயற்கொடு—திரிலோலா!
  மயிற்பரி நடத்திடு
    கருத்த!எ னிடத்தினில்—வருவாயே!
மனத்தினில் நினைத்தெனை
    யருட்கடல் முழக்கிட—நினையாயோ!
  மலர்க்குண்மி னுதித்திடு
    கலைக்கொடி சொல்வித்தையை—யருளாயோ?
எனக்குயர் புவிக்குளொ
    ருவர்த்துணை யிருப்பது—அறியாயோ?
  எனக்கதிர் மணிக்கொடு
    முடிச்சிகி மலைக்கர—சுயர்தேவே!

---

1476. கொத்து அலரும் து உயானம்: 'தூ' என்பது சந்தம் நோக்கித் 'து' எனக் குறுகியது. உயானம்: உய்யானம் (பொழில்). இங்ஙனமின்றி, 'அலரும்' என்னும் பெயரெச்சம் 'அலருந்து' எனச் செய்யுள் விகாரப்பட்டதெனினும் அமையும். செய்யுளில் செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத் திறுதி 'உம்' 'உந்து' ஆகலும் உண்டுஎன்பது இலக்கணவிதி. (நன். 341)

1478. செச்சை தரித்த புயத்தர சிப்படி—அடியேனுன்
செப்ப மிகுத்த இகத்தில் வருத்துதல்—நலமோதான்
கச்சை தரித்த தனத்து வடித்தம—துரவாயாள்
கட்டழ குற்றிடு நற்குற உத்தமி—புணர்தோளா!
பச்சை மயிற்பரி யிற்றின முற்றிடு—குகநாதா!
பற்ப மதிற்கலை யைச்சொல விக்கணம்—அருளாயோ?
நச்சை மிகுத்தெயி றுத்தலை யிற்புவி—புகழ்தேவே!
நற்ற மிழைச்சொல் குகக்கும ரச்சிகி—மலைநாதா!

1479. பந்துநிகர் முலையாள் வஞ்சிநிக ரிடையாள்
பண்புமிகு குறமான்—அணைதோளா!
இந்துவணி முடியார் கங்கையணி சடையார்
இன்பமிகு புதல்வா!—எனையாளாய்!
நந்துதரி கரனர் பைந்துளவை யணிவோர்
நந்துபரி மருகா!—முருகோனே!
வந்துவர மருள்வாய்! அன்பர்பணி சரண!
மங்குறவழ் சிகிமா—மலையாளா!

1480. அந்தர மீது வாழு
மண்டர்கள் வாழ மேன்மை—மிகுசூர்மா
அண்டனை நாச மாக
வென்றிட வேலை யேவு—செயவீரா!
கந்தமு லாவு நீப
மிஞ்சிடு மாலை சூடு—புயநாதா!
கஞ்சவி லாச னன
எண்கண னன நாதன்—பணிபாதா!
பைந்தமிழ் பாட வேசெய்!
அன்பனை வாழ்க வேசெய்!—அமரேசா!
பைங்கொடி வேட மாது
அன்புடன் மேவு தேவ!—குகநாதா!
கொந்தலர் மீறு சோலை
உந்திடு தோகை மேரில்—வருதேவே!
குஞ்சர ராசை யான
இன்பம தான தூய—துணையாளா!

1481. வித்து ருமத்தை நிகர்த்த விதழ்க்கொடி—யிடையாளே
விற்கு நிகர்த்த நுதற்பெண் நலத்திடு—மொழியாளே
முத்து நிகர்த்த நகைத்தி ருவுக்கிணை—மடமானுள்
மொய்த்த முகிற்குழல் நற்குற வற்புத—மகள்பாகா!

தத்து மயிற்பரி வித்தக! வித்தையை—அருளாயோ?
சத்தி யெடுத்தெதி ருற்றிடு துட்டனை—வெலுவீரா!
நத்து தரித்த கரத்தரி மெச்சிய—மருகோனே!
நற்ற மிழைச்சொலு மற்புத மெய்ச்சிகி—மலையாளா!

1482. வந்த சூரனை கைந்து வீழிட—அயிலாலே
மண்ட வேவிடு அண்ட ரோடிட—எதிர்நாதா!
பந்து போலுயர் கின்ற பூமலை—நலமேசேர்
பண்பு சேர்குற வஞ்சி நாயகி—புணர்தோளா!
செந்தி மாமலை வந்த நாயக!—அமரேசா!
செங்கண் மாலயன் அண்டர் தேவர்கள்—பணிதாளா!
சந்த நாவல! குன்றை மாமலை—முருகோனே!
சங்க நாவல! இன்பம் யாவையும்—அருளாயோ?

1483. கருத்தினி னினைத்திட
எனக்குமுன் மகிழ்ச்சியுடன்—வருவாயே!
கனத்திடு கயத்துயர்
முகத்துயர் விருப்பமிகு—துணையாளா!
முருக்கிதழ் விழிக்கணை
கறுத்திடு நிறத்தினள்சொல்—குயிலாளாள்
முகிற்கிணை குழற்கொடி
நலத்திடு குறத்திபுணர்—மயலாளா!
செருச்செய வெதிர்த்திடு
பெலத்தவ னெனக்குலவு—மசுரோன்மா
திறத்தினை யழித்திட
வயிற்படை பிடித்தகர—தலவேளே!
பருப்பதம் வளைத்திடு
சடைப்பரர் மலைக்குகிகர்—மலையாமோர்
பணைத்திடு முகிற்சிகி
மலைக்கரசு பெற்றவ!பொன்—மயிலாளா!

1484. தஞ்சம் வேறிலை வந்து வாதரி தந்தி மாமுகர்—துணையாளா!
அஞ்ச வேவரு மிஞ்சு சூருடன் அண்டி யேயடல்—புரிவீரா!
நஞ்ச வேல்விழி மங்கை வேடமின் நன்ற தாயணை-புயநாதா!
கஞ்ச நாயக னண்ட ரேபணி கங்குல் சூழ்சிகி—மலையாளா!

1485. பூவினி லுற்றிடு நாயகி யைப்புணர்—நலமேசேர்
போர்புரி விற்கர மாயவ னற்புத—மருகோனே!
தாவிய மைச்சிறை மாமயி லிற்றினம்—வருவாயே!
தாதவிழ் துப்புயர் நீபம லர்த்தொடை—புனைமார்பா!

கர்விம ளர்க்கணே போலமி குத்திடு—விழிமானுள்
காவில்வ ளர்ச்சிகொள் வேடம கட்புண—ரிருதோளா !
மாவிழ வுற்றிடு போர்புரி வித்தக !—எனையாளாய் !
வாசமி றைத்திடு தோகைம லைச்சிகி—மலையாளா !

1486. வஞ்சிநே ரிடையாள் தொங்கல்சேர் குழலாள்
வம்புசேர் முலையாள்—குறமானுள்
வஞ்சியாள் தனையே கண்டுமா மயலால்
மங்குல்சூழ் பொழிலூ—டலைபாதா !
மஞ்சினே ருடலார் பைந்துழா யணிவோர்
வண்குலா வியமால்—மருகோனே !
மஞ்சிசேர் முடிசூழ் குன்றைமா மலையா !
வண்டா ளுகியசூ—ரடல்வேலா !

1487. குலநாயகி நயமாகிய சசியாடரு மகளாள்
குணநாயகி வடிவானவள் தெய்வயானையை யணைவாய் !
அலவாயுதர் துணையானவர் முகிலாகிய வுடலார்
அலர்மாவுறை திருமார்வினர் விறலாருட மருகா !
நலமாகிய வரம்யாவையும் அடியேனிடம் அருள்வாய் !
நதிசூடிய பரமேசுவரர் அருள்பாலக ! முருகா !
வலனுகிய அசுரோனுடல் இருகூறிடும் அயிலா !
மணிசூழ்வரு முடியேநிரை சிகிமாமலை முருகா !

1488. வண்டுசூழ் பொழில்வாழ் கின்றவே டுவர்மான்
மங்கையால் மயலா—கியநாதா !
செண்டுமா முலையார் தந்தகா தலினுல்
சிந்தைநோ யதனுல்—மெலிவேனே ?
பண்புசூழ் வினையோ ? இந்தநாள் வினையோ ?
பண்பனே ! அருளா—ததுவேனே ?
மண்டுசோ லைகளே கொண்டதோ கையின்மேர்
வந்தநா யகனே !—அருளாயோ ?

1489. தருவாசனர் உயர்தேவனர்
சசிநாதனர்—நலமேசேர்
தருமாதினுள் மயலாகவே
தயவாகவே—புணர்தோளா !
திருமாதினுள் தனமேவிவாழ்
திகழாழிசேர்—கையினர்சீர்
செயமாயனர் மருகா !
குகா ! செயநீபமா—லிகைமார்பா !

வருசூரனர் படையாவுமே
மடிவாகவே—அயிலாலே
மனமீறியே எயும்நாதனே !
மயிலேறியே—என்முன்வாராய் !
கருமேகமே பயில்சோலைசூழ்
தமிழ்தோகைமா—மலையாளா !
கணநாதனே ! எனையாளுவாய் !
கலையாவுமே—அருளாயோ ?

1490. தருப்பொலிந் திடுதே வருக்குநன் குளவோன்
தான்றின மகிழ்வாய் வேண்டிய குமரா !
மருப்பொலிந் திடுசீர் கடப்பவந் தொடையே
வான்புய மதிலே தான்புனை குகனே !
கருப்பொலிந் திடுவோர் பிறப்பெனுங் கடல்மேல்
காந்திடா தினியே வாஞ்சையா யருள்வாய் !
திருப்பொலிந் திடுகோ டிருத்துகுன் றையனே !
தேர்ந்திடு தமிழே கூர்ந்தருள் புரிவாய் !

1491. கருணை மாரி பொழிவாய் ! அடியர் தேடு சரண !
கருத்த னே ! குகனே ! அருட்செய் ! நாயகனே !
அருண மேனி யவனே ! தயவு நீசெய் குவையே !
அடற்செய் சூருடலே கிழித்த மாபெலவா !
தருண மாது குறமான் மயல்கள் மீறு படவே
தழைத்த கானகமீ திருத்தி யேபுணர்வாய் !
வருண மான மயிலா ! மணமு லாவு புயவா !
வளர்ச்சி யார்சிகியா மலைக்கு ளேவருவாய் !

1492. தருவு லவிய வரசு புரியும் சசிம ருவிய
—வாசவனு—ரேபணிவேள் !—எனையாளாய் !
மருவு லவிய யிதழ்கு லவிய வடிவி லகிய
—நீபமதே—தானணிசீர்—புயநாதா !
திருவு லவிய துளவ ணிபுய திகிரி யையணி
—பாணியினர்—மாயவனர்—மருகோனே !
குருவு லவிய முடியி லகிய குரைக டல்வளை
—தோகையின்மா—மேரினிலே—வருதேவே !

1493. வனத்திலுறை வேட நாயகி
மகிழ்ச்சிபெற நாளு மேவிய-குகநாதா !—எனையாளாய் !
சினத்தில்வரு சூர னர்படை
தெறிக்கவயி லேவி யேயமர்-புரிநாதா !—முருகோனே !

அனத்தின்மிகு சீர தாகடை [நேசா!
அருட்செயுமை மாதி ஞாருள்—புதல்வோனே!—அம
நினக்கடிமை யான நாயன்முன் [லாளா!
நினைத்தருள்செய் தோகை மாமலை—வருதேவே!—மயி

1494. நடன மிட்டிடு மயிலி லுற்றவ! [பாகா!
நாயன் மீது தயவே நீசெய்வாய்! விண் ணுலகோர்-பணி
வடவ ரைக்கெதிர் முடிப டைத்திடு [தேவே!
வாச மேவு பொழிலே சூழு தோகை மலைமேல்—வரு
கடம தக்கய முகன்ம கிழ்ச்சிகொள்
காத லான துணைவா! நீப மாலை தனையே-புனைமார்பா!
மடம யிற்குற மகள்ம யற்கிசை [நேசா!
ஆறு வீடு படையாய்! வாழ்வை யாவு முதவாய்!—அம

1495. சூர ஞவி யோடவே தேவர் மேன்மை யாகவே
தொடுத்த வேலையே யெடுத்த பாணியா!—எனையாளாய்!
வீர ரான தானவோர் நாச மாக வேசெய்வோன் [கோனே!
விசுப்பின் மேனியான் தழைத்த மாயன்மா—மரு
சார மான பாடலே பாட வேசெய் வாய்! குகா!
சகத்தில் நேமநா டகத்தில் வாழ்சிகா—மலையோனே!
பார ராவின் வேணியார் மேரின் வாழு நாயனுர்
படைத்த பாலகா! கொடைக்கு நாதனே!-அமரேசா!

1496. வடிவாள்விழி யிணையால்மன மருள்வாகிட
மருட்டு மாதர்க ளிருட்டு மாவலில்—அலையாதே
அடியேனிட மயின்மீதினி லழகாகிட
அருட்செய் வாய்! குக!திருத்த மாகிய—முருகோனே!
படியோர்பணி குருநாயக! பரமாதிப!
பருத்த மாமயின் மலைக்குள் வாழ்வுறு—செகநாதா!
மிடியோடிட வருளேசெய்வை! விரைநீபபொன்
மிகுத்த மாலிகை தரித்த மாபுய!—எனையாளாய்!

1497 ரஞ்சித மாகிய கொஞ்சிய தோர்மொழி [கோனே!
நயக்குற மாது மேவு புயத்தர சே! உ லாச—முரு
அஞ்சிய சூருடல் ரெண்டிட வேயொரு [யாளாய்!
அடற்புரி வேலை யேவு திடத்திடு சூர! லோல!—எனை
நெஞ்சினி லேவரு துன்பம தோடிட [நினையாயோ?
நினக்கடி யேனை வாழ மனத்தினில் ரேணு வேணும்—
பஞ்சினு நேர்மைகொள் செஞ்சர ணு!வளம் [அருளாயோ?
படைத்திடு தோகை மேரில் நடைச்சிகி யாள! நாளும்—

1498. மறைதேடிய சரணு ! எதிராய்வரு மசுரோன்
மடிந்து போகவே தடிந்த வேலவா !—எனையாளாய் !
குறைராவணன் முடியே அறவேசெய்த பெலவான்
குருந்தி லேறுவோன் விரும்பு மேன்மையா—மரு
[கோனே !
சிறைவீசிய விழியால் உலகாடிட நடையே [ளாயோ ?
திருந்து தோகைமேல் இருந்து மேன்மையே—அரு
நிறையாகிய தமிழே அடியேனிட முதவாய் !
நிலங்கள் சூழ்சிகா விலங்கின் வாசனே !—குகநாதா !

1499. வஞ்ச மிகுத்த சூரன் அஞ்ச வடற்செய் வேல ! [கோனே !
வருவாய் மயிலி லேறி அருளே தருவை ! தேவ—முரு
கஞ்ச மலர்க்குள் வாழும் விஞ்சை படைத்த வேதன் [தாளா!
கருமா முகிலின் மேனி திருமா லருமை யோடு—பணி
நஞ்ச மிருக்கு நீல கண்டர் தமக்கு ஆசை [யாளாய்!
நலமா முமைசொல் பால ! வலனே உயரு நாத!—எனை
தஞ்ச மெனக்கு வேறில் அண்டர் தமக்கு நாத [தேவே !
கனமா கியவொர் தோகை யெனுமா மலையின் மீது-வரு

1500. அதிக சூதுமிகு குடியில் வாழ்தலிது
அனியாய மாகுது இனியேனு நீக்ருபை—யருளாயோ ?
கதியை நீயருள்செய் நடன மாமயில!
கலையாவு நீயருள்! தொலையாத நோயது—தவிராயோ ?
மதியை நாளுமணி சடையர் கோகனக
மலர்மாது நேருள வுமைமாது பாலக !—எனையாளாய் !
நதிக ணீடுகன வயல்கொள் நேமமெனும்
நகராளு நாயக ! சிகிமேரில் வாழ்பவ !—குகநாதா !

1501. வடிவு மேவு மயின்மேல் ஒயில தாக வருவாய் !
[மலர்க்கு நேரு சரணு ! பெலத்த சூரன் விழவே]
கடின மான வடலே புரியும் வேல்கொள் கரனே !
[கனத்த கானி லுலவோர் வனத்த பாத மருள்வாய்]
அடியன் மீது தயவே புரிவை ! தேவ ரரசே !
அதிக வாச மிகுநீ பமமென் மாலை யணிவாய் !
படியின் மீது வளநே மவள நாடு மிகுவோய் !
பணைகொள் சோலை வளைதோ கையின் மேரில் வருவாய்!

---

1501. [ ] சந்தம் வேறுபடுகின்றன.

1502. கஞ்சநான் முகனுர் அண்டவா னவரே
கருணை யாகவே பணிசெய் பாதனே!
நஞ்சவாள் விழியாள் கொண்டல்சூழ் குழலாள்
[நலவேடமான் புணர்தோளனே!]
அஞ்சவே வருசூ ரன்றன்மே லுடனே
[அயிலேவுமா பெலவீரனே!]
நெஞ்சநோய் தவிராய்! குன்றைமா மலையா!
நினது பார்வையே அருள்வை தேவனே!

1503. கடம்பையணி புயனே! வரந்தருவை குகனே!
கால காலனே! கோல சீலனே!
நடஞ்செய்கன மயிலா! நிறைந்தசர வணனே!
ஞான போதனே! வான நாதனே!
திடங்கொளசு ரனையே கலங்கவெதி ரிடுவாய்!
தேவ தேவனே! மூவ ராதியே!
மடந்தைகுற மகள்சேர் சிகண்டிமலை யரசே!
நாம வேலனே! மூல காரணா!

1504. அனியாய லோபர் வாச லருகாமை யாக நாடி
அவர்மீது பாடல் பாவம்—அறியாயோ?
சனிபோல நீடு நோயை விலகோட ரேணு வேனும்
தயவேசெ யாத தேது?—குகநாதா!
பனிராவி லோடு சோமன் அணிவேணி பால ரான
பசையான தோகை யேறு—குருநாதா!
தனியான நாயன் மீது தயவேசெய் வேட மாது
தனைமேவு தோகை மேரில்—வருதேவே!

1505. கலையாவு மறியாத முழுமூட ரிடமோடி
காப்பைநீ யெனவே யேற்கலா துடனீ—அருளாயோ?
கொலையேசெ யசுரோர்கள் குலநாச மிகமோடி
கோட்டு சேனைகளே நாட்டின் மாளிடவே-எதிர்வேலா!
மலைவாழு குறமாது தனையாசை கொளநாளும்
மார்க்க மாகிடவே யேற்க வேபுணர்வாய்!—குகநாதா!
இலைநீடு வளர்சோலை வளைகோடு நிரைசூழு [தேவே!
கோட்டு தோகையின்மா நாட்டு மாமலைமேல்—வரு

1502. [ ] சந்தம் வேறு.

1506. அடியானிவ னெனவே மனமீதெள ளவுமே
அருட்செய ்வுறு மேமொனவே
நினைக்கிலை யே சொல் வாய்குகனே !—[...]
படிமீதெளி யவர்போல் ஐயையோமெலி குவனோ?
பருத்திடு தோகை மீதினிலே
எனக்குமு னைக நீயுமினே—வருவாயே !
வடிவாள்விழி மடமான் குறமானணை கணவா !
வருத்திய ஊழி யோடிடவே
க்ருபைக்கடல் நீசெய் வாய்அரசே !—[...]
மிடியோடிட வருள்வாய் ! வளர்தேமன னகரா !
[விருப்ப மாகிட வேபொன்மே
ரிணைச்சி காமலை மேரிலே]—வருவாயே !

1507. வளையணி கரனார் துளவணி புயனார்
வந்தரா வணனார் அன்றுமா ளிடவே
—செயுமாயோன்—மருகோனே !
தளிர்மிகு வனமூ டுலவிய மறவோர்
தந்தமா தினையே அன்றுசேர் புயவா !
—எனையாளாய் !—முருகோனே !
அளிமுரல் மணநீ பமலரை யணிவோய் !
அன்பன்வாழ் கிடவே வந்துநீ யருள்வாய் !
—குகநாதா !—அமரேசா !
பளிர்கிர ணமதே மிகுமுடி யுயர்சீர்
பண்புசேர் நலமார் குன்றைமா மலைமேல்
—வருதேவே !—செகநாதா !

1503. சினத்த சூருடனே யெதிர்த்து போரிடுவாய் !
—செகநாதனே !—குகநீதனே !
வனத்தில் வாழ்குறமான் தனக்கு மால்கொளுவோய் !
—கதியேசெய்வாய் !—துதியேகொள்வாய் !
மனத்தில் நீடியதோர் நினைப்பு போலவுமே
—வரநீசெய்வாய் !—கருணாகரா !
அனக்கு முமிகுவா விமொய்த்த கேகயமா
—மலைவாசனே !—கலையாளனே !

---

1506. [...] முறையே 'முருகோனே !' 'குமரேசா !' எனச் சேர்க்கலாம்.
[ ] வேறு சந்தம்.

1509. அந்தர வானுளோ ரன்புடன் நாளுமே—பணிநாளா!
கந்தமு லாவுவோர் கஞ்சனைமாநலார்—குருநாதா!
வந்துமு னுகவே வண்டமி ழேசெய்வாய்!—அமரேசா!
கொந்தலர் சோலைசூழ் குன்றையின் மேரிலே—வருதேவே!

1510. சமரிடு சூருடல் அழிபட வேயயில்
தனைவிடு மாபெல—செயவீரா!
குமரகு கா!குரு பரமசி வா!கன
குருமயில் வாகன!—எனையாளாய்!
அமரர்கள் தேவர்கள் முனிவர்கள் யாவரு
மடிதொழ வேயருள்—புரிதேவே!
குமர்முலை வேடமி னணைபுய வா!அருள்
குளிர்புனம் வாழ்சிகி—மலையாளா!

1511. நினைத்தபடி யருள்வாய்! உனக்குநிக ருளரோ?
—நிகரி லாததோர்—சிகியின் மேரனே!
கனைத்தகடல் தனிலே துயிற்செய்பவர் மருகா!
—கருணை யாளனே!—உருவின் வேலனே!
அனைத்துலகின் முதலே! மயிற்பரியில் வருவாய்!
—அருண மேனியாய்!—சுருதி யாதியே!
முனைக்கொளயி லதனால் எதிர்த்தசுரை யடுவாய்!
—முனைவர் காலனே!—நினைவர் லோலனே!

1512. காவிநிரை கண்ணாள் கானில்வளர் மின்னாள்-புணர்தோளா!
தேவியுமை மின்னாள் சீர்கள்மிகு மின்னார்—புதல்வோனே!
பாவியசு ரன்றான் பாடழிய வென்றோய்!—அருளாயோ?
தாவிமதி குன்றா தாமுலவு குன்றா—குடியாளா!

1513. கஞ்சமல ரயனார் கந்தரிமு டியினார்—அருள்பாலா!
வஞ்சமிகு மசுரோன் மங்கவயில் விடுவாய்!—அமரேசா!
நஞ்சமிகு விழிமான் நங்கைகுற மகளாள்—புணர்தோளா!
அஞ்சலென வருவாய்! அந்தமிகு சிகிமா—மலையாளா!

---

1509. கந்தம் உலாவு ஓர் கஞ்சனை - மணம் கமழும் ஒப்பற்ற தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனுக்கு. கஞ்சம்-தாமரை. கஞ்சன்-பிரமன். கஞ்சனை-கஞ்சனுக்கு (உருபுமயக்கம்). மாநல்ஆர் - மிகவும் நன்மை பொருந்திய.

1510. குமர் - கன்னித்தன்மை.

1512. குன்றாகுடி - குன்றக்குடி.

1514. சந்தமிகு பாடல்பாட தன்கிருபை நீசெய்தேவ !
—தத்தும யிற்பரியாய் !—வித்தையெ னக்கருள்வாய் !
அந்தமிகு காவின் வாழும் நன்றுபுரி வேட மாதை
—அற்புட னிச்சையதாய்—மெத்தைத னிற்புணர்வாய்!
நந்தணியு மாய னீடும் பைந்துளவின் மாலை சூடு
—நச்சர விற்றுயில்வோ—ருக்கிளை யக்கொடியாள்
மைந்த!அருள் நீசெய் தேவர் கண்டுபணி பாத ! சூழு
—மற்புய வித்தக ! தோ—கைச்சிலை யிற்குமரா !

1515. தருவி னீழலி லரசு தான்மிகு
—சசிநாதனுர்—பணிநாதனே !
செருசெய் சூருடல் கிழிய வேவிடு
—திறவேலனே—எனையாளுவாய் !
கருமை யாமுகில் தவழு தோகைநன்
—கனமேரிலே—வருநாதனே !
திருவின் மாலுட மருக ! நாயக !
—திறமேசெய்வாய் !—அமரேசனே !

1516. படிகநிற வுடலாள் சரஸ்வதியை யணைவோர்
பதுமமல ரயனுர்—பணிதாளா !
அடியனிட மயில்மேல் அறியமிக வுடனே
அழகுபெற வருவாய் !—அமரேசா !
குடியில்வளர் குறமான் மயல்தவிர வுடனே
குளிரியல்பு னமதே—புணர்தோளா !
கடிபொழில்கள் மிகுதோ கையின்மலையி னரசே !
கதிதருவை குமரா !—எனையாளாய் !

1517. எதிரிடு சூர னுவி விலகிட வேலை யேவும்
—இகலாளனே !—செகநாதனே !
கதிமிகு தோகை யேறி வருகுவை! தேவ தேவ !
—கலையாளனே !—தலையாறனே !
மதிமுக மாது வேட மகள்தனை மேவு நாத !
—மயிலாளனே !—அயிலாளனே !
நதியணி வேணி பால ! குருபர நாத ! ஆள்வை !
—நலதோகையா—மலையாளனே !

1518. குறிஞ்சிநகர் [வாழும்] பெலங்கொள்கன மறவோர்
குளிர்ந்தபுன மதிலே மடந்தைதனை மயலாய்—அமர்
[தோளா!
செறிந்துவரு படையோ டெதிர்ந்துவடல் புரிவோன்
திறங்கொள்கரு [மாலே] முறிந்துவிழ வடலே—புரி
மறிந்துவரு வலைசூழ் தரங்கமதி லொயிலாய் [வேலா!
வனங்கொளணை [மேலே] துயின்றகரு நிறமால்—மரு
அறிந்துதின முனையே பணிந்தவடி யனையாள் [கோனே!
அலங்கிருத [மேசேர்] சிகண்டிமலை யரசே!-எனையா
[ளாய்!

1519. துங்கமத கரியார் செங்கதிரி னுடலார்
—துணையாளனே!—கணநாதனே!
சிங்கவடி வினர்சீர் பைந்துளவை யணிவோர்
—திருமாயனர்—மருகேசனே!
கங்கமிகு எதிராய் வந்தவசு ரனையே
—களமேல்வெல்வாய்!—தளநாதனே!
தங்கமலை நிகராய் வந்தசிகி மலையா!
—தருமேன்மையே—அருளேசெய்வாய்!

1520. மதசல மொழுகிய கருநிற முலவிய
வளர்பிறை நிறுவிய முனையெயிர் [மாமுகர்]—துணை
[யாளா!
கதமுட னெதிர்வரு அசுரர்க ளழிபட
களமதி லயில்கொடு செயமிடு [நாயக]!—எனையாளாய்!
சதவய சுளமணி தர்களுட னடியனை [கோனே!
சரியிட விலை! அருள் தரநினை கிலை! மயின்—முரு
பதகம லமதனை நிதநித நினைவுசெய்
பணிபவ னெனநினை கிலைசிகி மலைவரு—குகநாதா!

1521. அடியன் மீதினில் தயவு நீசெய்வை!
அருண மாகிய—ஒளியாளா!
முடியின் வானவர் புடைகொள் தாருள
முதல்வ னேபணி—இருதாளா!
கடிசெய் நீபமென் மலரை யேபுனை
கருணை நாயக!—எனையாளாய்!
படியில் வாழ்வுறு சிகியின் மேல்வளர்
பசிய தோகைய!—முருகோனே!

---

1518. [ ] சந்தம் வேறுபடுகின்றன. 1520. [ ] சந்தம் வேறு.

1522. எந்தன் மீது தயவு வந்து வாழ்வு வுதவ
எந்த நாள ளவதும்—அறியேனே
பந்த வாழ்வி லடிய னெந்து வாடு வலைது
பண்ப தோசொல் கருணை—உதவாயோ?
சந்த நாவ லவனை நன்ற தாக முடிவு
தந்த தேவ! குமர!—குருநாதா!
சேர்ந்த வேட மகளை என்று மேவு புயவ!
துங்க தோகை மலையில்—வருதேவே!

1523. வெற்றி வேலை யணிகரனே!
வித்தை யாவு மருள்செய்குவாய்!
சுற்று நீரி னுலகினிலே
சுத்தர் தேடு குருபரனே!
பற்று வோட வருள்புரிவாய்!
பத்தன் மேன்மை பெறவருள்வாய்!
முற்றும் வானர் பணிசரணு!
மொய்ச்சி காம லையினரசே!

1524. கடம்ப மாலை யணிபுயனே!
கலங்கு நோயை யகலிடவே—அருள்வாயே!
நடஞ்செய் மாம யிலினரசே!
நலஞ்செய் வாய்கு மரகுருவே!—எனையாளாய்!
திடங்கொள் சூர னுடல்படவே
செயங்கொள் வேலை யெயுமரசே!—குகநாதா!
தடங்கொள் தோகை மலையரசே!
தகுந்த மேன்மை தனையருள்வாய்!—அமரேசா!

1525. மனதி ரங்கலை யடிய னின்றினி
வளர்க வந்தருள்—புரிவாயே!
வனமி லங்கிய குறவர் தங்குடி
மகளை யன்பொடு—புணர்தோளா!
பனக மெல்லணை மிசைது யின்றிடு
பசிய விண்டுதன்—மருகோனே!
கனக நன்றுள கிரியை யுஞ்சரி
கருது குன்றையின்—மலையாளா!

1526. காதலான குறமகளாள்
கான மீது மருவியவா!—எனையாளாய்!
பாத மீது பணியடியார்
பாகம் வாழ்வு தரநினையாய்!—அமரேசா!

சித் மானர் மதியணிவோர்
சேய! தேவர் பணிசரணு!—குமரேசா!
போத மேவு குருபரனே!
பூவு லாவு சிகிமலையா!—அருளாயோ!

1527. நாடக மாமயில் மீதினி லேவரு
நாயக னே!அருள்—உதவாயோ?
ஆடக மாபொது வாடிய ஈசுரர்
ஆசைகொள் பாலக!—எனையாள்வாய்!
ஏடக மேவிறை! நாரண னேபணி
ஏர்மிகு கேசுப—மலையாளா!
கோடக மேலுறை நாத!கு கா!அருள்
கூர்மைகொள் வேலணி—முருகோனே!

1528. கோலாக லக்கும ரேச னே!அனு
கூலா!ம யிற்பரி மீதி லேறிய—செயலாளா!
நாலாக லைக்கவி வாண னே!நினை
நாடார்த னக்கொரு கால னே!இனம்—எனையாளாய்!
லீலாவி தக்குற மாதி னுள்புணர்
நீடூழி பெற்றிடு தேவ! தாய்கரு—ணையினதா!
மேலாமி ருக்குக ளேசொல் நாயக!
வேதா! சிகிக்கிரி யாள னே!அரு—ளுதவாயோ?

1529. திருமாதை நிகர்மாது திறவேடர் குறமானை-அணைதோளா!
உருமீறி வருசூரன் உடனீடு படையோட—எதிராளா!
கருமேக முகின்மேனி கதிராளி மருகேச!—எனையாளாய்!
தருமீறு சிகிமேரு தனில்வாச! அடியார்கள்—பணிதேவே!

1530. வாரார் தனக்கொடி வேட நாயகி
மாலாய் வனத்திடை தேடு நாயக!—முருகோனே!
கூரா ரயிற்கொடு நேரு மாவுடல்
கூறு கிடத்தொடு தேவ னே!அம—ரர்கள்நர்தா!
தாரார் புயக்குரு நாத னே!அருள்
தாராய் மயிற்பரி யாள னே! இன்ம்—எனையாளாய்!
மேரா கியச்சிகி மேரி லேவரு
வேதா மகிழ்ச்சிய தாக வேபணி—யிருதாளா!

1527. ஏடகம் - ஆடு. கோடகம் - குதிரை.

1528. தாய் கருணையின் நாதா!

1531. காலை யுதித்த கதிர்போலே சேது மிகுத்த துகிர்போலே
காலொளி யுற்ற மதிபோலே—வடிவாளா! [மேல்
வேலை யெடுத்து வெதிராவே தான்வரு கொற்ற வசுரோன்
வேக மிகுக்க விடுவோனே!—எனையாளாய்!
ஓலை தரித்த குழலாளே வேடுவி மைக்கண் மயலாலே
ஓகை மிகுக்க வனமூடே—நடபாதா! [கோனே!
ஆலை படைத்த வயனேமா! தோகை மலைப்பொன் முரு
ஆறு முகச்சி றுபிளாய்! நீ—யென்முன்வாராய்!

1532. இருண்ட மேனியான் திரண்ட பார்வையான்
இலங்கு கூர்பலான்—பெலமாவே
வெருண்டு வோடவே எதிர்ந்து போர்செய்தே
மிகுந்த வேலையே—வியசூரா!
பருந்து மீதிலே சிறந்த மாயனர்
பரிந்த மேன்மைசேர்—மருகோனே!
வருந்து மேனீ மிகுந்த வாழையா!
வளர்ந்த தோகைமா—மலையாளா!

1533. நஞ்சணி கண்டனர் நண்புமை பங்கனர்—அருள்பாலா!
தஞ்சம் வரஞ்செய்வாய்! தந்தியி னன்புசேர்—துணையாளா!
வஞ்சசு ரன்றன்மேல் மங்கிட வன்றுபோர்—செயுநாதா!
மஞ்சணி குன்றையாய்! வந்தருள் தந்துதான்-எனையாளாய்!

1534. தார்புனை புயனே! நீயென்முன் வருவாய்!
தாமிகு வசுரோ—னுடனேதான்
போர்புரி யயிலா! தோகையின் மயிலா!
பூவுள வயனர்—பணிதாளா!
கார்புனை யுடலார் பூமகள் புணர்வோர்
காரண விறலார்—மருகோனே!
சீர்புனை சிகியா மாமலை முருகா!
தேவர்கள் முதலோர்—பணிதேவே!

1535. வீர மேமிகு சூர னுருடன் மீதி லேயயி லேவுவாய்!
தார தேபுனை மார்ப னே! அருள் தாமு லாவிய வேலவா!
ஆர தேபுனை வேணி யாரருள் ஆவ லாகிய பாலகா!
மேர தேசிகர் தோகை மாமலை மீதி லேவரு நாதனே!

---

1531. வயல் சேமா!

1532. எனை - என்னை. மிகுந்த வாழ் ஐயா! - பெரிய வாழ்விலே வை ஐயனே!

1536. கஞ்சநான் முகனுர் கண்டுநாள் தொறுமே—பணிதாளா!
வஞ்சமா கியசூர் மங்கவேல் விடுவாய்!—செயவீரா!
தஞ்சம்வே றிலேயே தந்துநாள் தொறுமே—எனையாளாய்!
மஞ்சுதா வியவோர் மண்டுகா மிகுதோ—கையின்மேரா!

1537. மயிலை நடத்திய வீர னே!என்முன்
வடிவு பெறத்தமிழ் நாவ லா!இனி—வருவாயே!
கயிலை மலைச்சிவ சாமி யாருட
கருணை மிகுத்திடு தேவி யாருட—புதல்வோனே!
அயிலை யெடுத்தெதி ரான சூருடன்
அடுபகை யுற்றவ! மேன்மை யாகிய—செகநாதா!
ஒயிலை மிகுத்தவ! தோகை மாமலை
யதனி லுதித்தவ! தேவ தேவர்கள்—பணிதாளா!

1538. வேட நாயகி ரூப நாயகி மீதி லாசைகொள்—அமரேசா!
பாட வேயருள் நீசெய் வாய்குக! பாவ லா!நிதம்—எனை
[யாளாய்!
ஆடன் மாமயின் மீதி லேறிய ஆர ணாதிப!—முருகோனே!
வாட லாமலர் நீப மேயணி மார்ப! தோகையின்-மலையாளா!

1539. சாகர மீதினி லேதுயின் மாலுட
சாஸ்வத மாகிய—மருகோனே!
மோகம தாகிய வேடமி னாள்புணர்
மோடிய தாகிய—முருகோனே!
தாகம தேதது வோவது வேயருள்!
தாரணி மாபுய!—அமரேசா!
சேகர மாய்வளர் கோடுள தோகையின்
சீர்மலை வாழ்வுறு—குகநாதா!

1540. தாதவிழ் நீப மாலை தானணி மார்ப! வாழ்வு—தருவாயே!
காதலியான வேடர் காரிகை மீதி லாசை—புரிவோனே!
நீதய வேசெய்! வேத! நீலம தான தோகை—மயிலாளா!
ஆதர வேசெய்! தோகை யாகிய மேரின்வாச!-எனையாளாய்!

1541. மதியணி சடையார் வளர்க யிலையினு—ரிடமேசேர்
துதிமிகு வுமையாள் துரைமகள் தருபா—லக!வேளே!
நுதியயில் தனையே நுரைமிகு கடன்மேல்—விடுவீரா!
கதிமிகு மயிலா! கருணைசெய் சிகிமா—மலையாளா!

1542. கச்சணி முலையாள் கட்டிய மலர்சூ—டியமானாள் [தோளா!
கொச்சைகொள் குறமான் குத்துமுலையின்மேல்—அணை
வச்சிரன் முதலோர் வர்த்தனை பெறவே—பணிதாளா!
அச்சுதன் மருகா! அற்பொடு சிகிமா—மலையாளா!

1543. கருணைநீ செய்வாய்! கமல நாதனார்—பணிதாளா!
அருண மேனியாய்! அமரர் நாயகா!—எனையாளாய்!
வருண மேனியாம் வளரும் வேடமான்—அணைதோளா!
திருமின் மேவுசீர் திகழ்சி காமென்மா—மலையாளா!

1544. வாசனை படைத்த நீப
மாலிகை தரித்த மார்ப!—எனையாளாய்!
நேசம திருக்க வேடர்
நீலநிற முற்ற மாது—புணர்தோளா!
ஈசரிட முற்ற தேவி
யேயருள்செய் புத்ர! நாளும்—வளர்தேவே!
காசகலு முக்ய மான
காவுயர் சிகிப்பொன் மேரில்—வருதேவே!

1545. வஞ்சிநிக ரிடையாள் வம்பையணி முலையாள்—நலமேசேர்
குஞ்சரியை மயலே கொண்டுமண மலரே—புனைதோளா!
அஞ்சவரு மசுரோன் அந்தமுற அயிலே—வியவீரா!
கஞ்சன்முத லிமையோர் கண்டுபணி சிகிமா—மலையாளா!

1546. காத லாகிய வேட நாயகி கான மீதணை லோலனே!
சேத மேசெயு மாவை மார்பிடை தேற வேதொடு வீரனே!
பாத மேபணி நாயன் வாழ்கிட பார்வை யேபுரி நாதனே!
கோதி லாதுயர் தோகை மேருள கோல மாமயி லாளனே!

1547. சீத ரற்கொரு ஆசை யாகிய
தேவி யற்புயர் வாக வேவளர்—மருகோனே!
வாது பெற்றிடு சூர னாருயிர்
மாள வெற்றிகொள் வேலை யேவிய—குகநாதா!
பாத முற்றவ னானை யா!அருள்
பாலி! நற்சிறை யான தோகையின்—மலையாளா!
காதல் முக்கிய மான வேடுவர்
காரி கைப்புணர் மார்ப னே!இனம்—அருள்வாயே!

1548. தங்கமலை நேர்சொல் தங்குசிகி மேரில்—வருதேவே!
பங்கமிகு மாவை பண்டுகள மீதில்—அடுவோனே!
சங்கமுள தேவ! தந்திமுக னார்து—ணையின்வேளே!
தொங்கல்மிகு நீல துங்கமயின் மீது—வருநாதா!

1549. வார்புனை முலையினள் வாசனை மலர்மினள்—வடிவேசேர்
தார்புனை குறமினள் தான்மரு வியகுகா!—எனையாளாய்!
பேர்புனை யசுரனே பேரிட வயிலையே—வியதேவே!
சீர்புனை பொழில்கள்சூழ் தேவர்கள் பணிசிகா—மலையாளா!

1550. போர்புரி சூர னோடு பூமுனை வேலை யேவி—யடுவீரா!
வார்புரி மீறு ரூப வாழ்முலை வேட மாது—புணர்தோளா!
தார்புனை நீப மார்ப! தானவர் கால னாக—வருதேவே!
சீர்புனை தோகை மேர! தேவர்கள் தேவ தேவ!-எனையாளாய்!

1551. காத லாகிய வேட நாயகி காணி லேபுண—ரிருதோளா!
சீத மாமலர் மீதி லேவளர் தேவி நாயகர்—மருகோனே!
மாத ரார்மயல் தீர வேயருள்! வாழ்வை நீயுத-விசெய்வாயே!
கோதி லாதபொன் மேரி னேர்படு கோடு சேர்சிகி—மலை
[யாளா!

1552. மயிலேறிய விரதா! வளமாகிய வசுரோ—னுடன்மீதே
அயிலேவிய முருகா! அருளேயினி யுதவாய்!—அமரேசா!
குயிலாகிய மொழியாள் குறமானணி முலைபூ—டமர்தோள்ா!
ஒயிலா!சிகி மலையா! உடனேயருள் புரிவாய்!—குகநாதா!

1553. கருணை படைத்திடு நாத னே!நல
கமல மலர்த்திரு மாய னுருட—மருகோனே!
அருண நிறத்திடு மேனி யா!வரம்
அருள்வை சிகிப்பரி யாள னே!கனம்—அருள்வாயே!
வருண முயர்த்திடு வேட நாயகி
மகிழ மணத்திடு மாலை யேபுனை—மணவாளா!
தருண மெனக்கருள் நீசெய் வாய்!குக!
சகமகிழ் நற்சிகி மேரி லேவளர்—குமரேசா!

1554. தந்திமுகர் துணைவா! சங்கம்வரு புலவா!—எனையாளாய்!
அந்திநிற வடிவே! அன்பினுட னடியே—னிடம்வாராய்!
கந்தினரி மருகா! கங்குனிரை குழன்மான்-அணைதோளா!
செந்திமலை யரசே! தென்சிகியின் மலையாய்!—குகநாதா!

1555. மருவு லாவிய வளரு நீபமென்—மலராளா!
அருள்செய் வாய்!குக! அமரர்நாயக!—எனையாளாய்!
பொருது சூருடல் பிளவு தானிடு—அயிலாளா!
திருவு லாவிய சிகியின் மேரினில்—வருதேவே!

1556. சோதிமதி யணிவோர் தூயசடை யரனு—ரிடமேசேர்
மாதிமய மலையோன் மானருள்செய் புதல்வா!-முருகேசா!
பாதிமதி நுதலாள் பாவைகுற மகளாள்—புணர்தோளா!
மேதினியி னலமார் மேன்மைமிகு **சிகிமா—மலையாளா!**

1557. கான மேவிய வேடமான் காத லாயணை தோளனே!
தேனு லாவிய நீபமே சீர தாயணி தோளனே!
பானி லாமதி சூடுவோர் பால கா!க்ருபை நீசெய்வாய்!
ஞான நாயக! வானுளோர் நாடு **தோகையின் மேருளோய்!**

1558. வானக மீது வாழும் வானவர் ஞானர் நாளும்—பணிபாதா!
கானகம் வாழும் வேடர் காரிகை யாளை மேவு—புயநாதா!
தானவ ரோடு நீடு தாமிகு வேலை யேவு—குகநாதா!
தேனலர் சோலை சூழு சீர்திகழ் **தோகை மேரில்**-வருதேவே!

1559. கலைமதி சூடு சடையார்
கருணைகொள் நாத ரரனுர்—அருள்பாலா!
சிலைநுதல் மாது மலர்வாழ்
திருமகண் மேவு புயனுர்—மருகோனே!
மலையென மீறு முலையாள்
வடிவுகொள் வேட மகளாள்—புணர்தோளா!
அலைவுள நேம நகரா!
அழகுகொள் **தோகை மலை**மேல்—வருதேவே!

1560. திருவைநிகர் வடிவாள் திகழுகொடி யிடையாள்—நலமேசேர்
அரிவைகுற மடமான் அழகிநெடு புணர்பூ—தரவேளே!
தரியலரை யடுவேல் தனையணிகை முருகா!—எனையாளாய்!
மருவுலவு **சிகிமா மலை**யிலனு தினம்வாழ்—குகநாதா!

1561. எதிராக வருசூர னெதிரோடே வயிலேவு—செயவீரா!
மதிசூடி நடமாடி மணமேவு சடையாளர்—அருள்பாலா!
நதிசூழு வளர்நேம நகராளா! வளர் **தோகை—மலையாளா!**
கதியான மயிலாள! கமழ்நீப மலர்மாலை—புனைமார்பா!

1562. வாச வர்க்குநல மாகமுன்
மாவு டற்குஅயி லேவிய-குகநாதா!
நேச முற்றகுற நாயகி
நேரி ழைக்குமண மாலிகை—புனைமார்பா!
ஈசு ரர்க்குமய லாகிய
ஈஸ்வ ரிக்குநல மாகிய—புதல்வோனே!
தேசர் மெய்க்கவரு ளேபுரி!
சீர்ப டைத்தசிகி **மாமலை**—வருதேவே!

1563. நாரணி வுராகி சூலி நாயகி தீரி நீலி—யிடமேசேர்
சீரணி யுலாசர் நாதர் தேவர்கள் தேவ ரீசர்—அருள்பாலா!
காரணியு மேனி யான காரணர் மாய ஞசை—மருகோனே!
வாரணியும் வேட ராசை மாதணே மார்ப! தோகை-மலையாளா!

1564. மயிலை நடத்திய வீரனே! மகிமை யெனக்கருள் நாதனே!
குயிலை நிகர்த்திடு தேவியாள் குறம கனைப்புணர் தேவனே!
அயிலை யெடுத்தெதிர் மாவின்மேல் அலற விடுத்திடு வீரனே!
ஒயிலை மிகுத்திடு ஓகையா! உயர்சிகி நற்கிரி வாசனே!

1565. கோகனக மாதுபுணர் கோலமிகு மாயனுட—மருகோனே!
மாகமிசை வாழ்பவர்கள் மாமலரி ஞதர்பணி—முருகோனே!
தேகமது நோய்தவிரு சீருலவு தோகைமயின்-முருகோனே!
நாகமிசை தானுயரும் நாடரிய தோகைமலை—வருவோனே!

1566. கும்பமா முலையாள் கொண்டல்சேர் குழலாள்—குறமானுள்
விம்பமா மிதழாள் விந்தைநேர் வடிவாள்—புணர்தோளா!
கம்பமே வளர்மா கங்குல்மே னியினர்—துணையாளா!
நம்பினே னருள்வாய்! நன்றுசேர் சிகிமா—மலையாளா!

1567. கருணை வித்தகா! கமல நற்பதா!—எனையாளாய்!
திருவை யுற்றமால் திகழ்கு றப்பெணுள்—புணர்தோளா!
மருமி குத்ததோர் வளர்க டப்பமா—லிகைமார்பா!
தருமி குத்தசீர் தழைசி கிப்பொன்மா—மலையாளா!

1568. கஞ்ச நான்முக னண்டர் நாயகன்
கண்டு நாள்தொறு—நலமாவே
தஞ்சம் வேறிலை யென்று மேதொழு
சங்க நாவல!—எனையாளாய்!
வஞ்ச மேமிகு கஞ்ச னேடெதிர்
மண்டு மாலுட—மருகோனே!
நஞ்ச வேலணி கந்த னே!அருள்!
நன்று சேர்சிகி—மலையாளா!

1569. கஞ்சனை வென்றவனுர்
கங்குனி றங்கொளுமால்—மருகோனே!
நஞ்சணி கண்டரனுர்
நன்றுகொள் கின்றமினுள்—அருள்பாலா!
பஞ்சணி யும்பதமான்
பண்குற வஞ்சிமினுள்—புணர்தோளா!
மஞ்சணி குன்றையிலே
வந்தவ! வந்தருள்வாய்!—குகநாதா!

1570. பந்துநிகர் முலையாள் பண்புசெறி குறமான்-அணைதோளா!
வந்துவர மருள்வாய்! மங்குல்தவழ் சிகிமா—மலையாளா!
கொந்துசெறி மலர்வாழ் கொண்டல்படி பொறியாள்—மரு
[கோனே!
இந்துநிகர் வதனா! என்றனிடம் வருவாய்!—அருளாயோ?

1571. நடிக்குமயில் வாகனா! நலத்தையினி நீசெய்வாய்!-அமரேசா!
மிடிக்குளிறு காதுதான் மிகுத்தநிதி நீசெய்வாய்!—குக்நாதா!
குடிக்குளுயர் வேடுவோர் குலத்தரசி மீதிலே—மயலாளா!
படிக்குளுயர் தோகையாம் பருத்தமலை மீதுவாழ்-குமரேசா!

1572. வாச மிகுத்த நீப மாலை தரித்த மார்ப!—எனையாளாய்!
பாச மிகுத்த நோய்கள் பாவம் விலக்கி நாளும்-அருளாயோ?
நாச மிகுத்த சூரை நாடி அயிற்கொ டேவு—செயவீரா!
தேச மிகுத்த நேம! சீர்கள் படைத்த தோகை—மலையாளா!

1573. கானில் வளர்ச்சி யான
காரி கையைக்கல் யாண—மிடுவேளே!
தேனில் மிகுத்த வாயள்
தேவி யுமைப்பெ ணுசை—மகவோனே!
யானினி வித்தை யாளி
யாக அருட்செய்! தேவர்—பணிலோலா!
வானி லுயர்ச்சி யான
வாழ்வு படைத்த தோகை—மலையாளா!

1574. கருணை மிகுத்த தேவ!
கடவுள்! எனக்கு மேன்மை—யருளாயோ?
அருண நிறப்பொன் மாது
அழகு படைத்த தேவி—தருபாலா!
பெருமை படைத்த மாவின்
பெரிய படைக்குள் வேலை—விடுவீரா!
தருமிகு சித்ர மேவு
தகுசிகி மெய்ப்பொன் மேரில்—வருதேவே!

1575. அணிபுனை மார்பினள் அயிலணி பார்வையாள்—குறமானாள்
மணிமுலை மீதிலே மயலொடு மேவுசீர்—மிகுதோளா!
துணிவுட னேருமா துணிபட வேலையே—வியதோளா!
பணிமுடி மீதுவாழ் பதமருள் தோகைமா—மலையாளா!

1576. காரு லாவிய கேசமான்
கானில் வாழ்வுறு வேடமான்—அணைதோளா!
வாரு லாவிய மார்பினள்
மாது மாபதி பாலகா!—எனையாளாய்!
தாரு லாவிய மாபுயா!
தாமு லாவிய மாவில்வேல்—விடுவோனே!
சீரு லாவிய சோலைசூழ்
தேவ ரேபணி தோகைமா—மலையாளா!

1577. கருணைபொழி விழியாய்! கமலமது நிகரா—கியபாதா!
அருணநிற வடிவே! அறுவர்தரு புதல்வா!—எனையாளாய்!
உரிமையுடன் வருவாய் உனதடியெ னிடமே-முருகோனே!
திருமருவு பொழில்சூழ் சிகிமலையி னரசே!—அமரேசா!

1578. கார்நிற மேனியார் காரண நாதனார்—மருகோனே!
வார்புனை வேடமான் மாலொடு நாளுமே—புணர்தோளா!
தார்புனை மார்பனே! தாமிகு தோகைமா—மயிலாளா!
சீர்புனை கோடுசேர் தேன்மிகு தோகைமா—மலையாளா!

1579. எதிராக வருசூர னிடமாக வடலேசெய்—அமரேசா!
கதிர்வேலை யணிபாணி! கமழ்நீப மதுமாலை—புனைதோளா!
மதிசூடி விளையாடி வருநாதர் தருபால!—எனையாளாய்!
நதிசூழும் வளநேம நகராள! சிகிமேரில்—வளர்தேவே!

1580. காதலுடன் மறவோர் காரிகையை யணைவாய்!-குமரேசா!
மாதயவு புரிவாய்! வாசமிகு மணிமார்—பயனேயா!
கோதகல வருவாய்! கூர்மைமிகும் அயிலாய்!-எனையாளாய்!
சீதமிகு பொழில்சூழ் தேவர்பணி சிகிமா—மலையாளா!

1581. கருணை யிலகிய துரையே! அடியனி டமருள் புரிவாய்!
கமல மலர்நிகர் சரண!—குகநாதா!
அருண நிறமுள வடிவே! மயிலை நடைபுரி குமரா!
அழகு திகழ்குரு பரனே!—எனையாளாய்!
திருவை மருவிய விறலார் துளசி யணிபுய வரியார்
திறல்கொள் விடவர வணையார்—மருகோனே!
தருவு நிறைமுடி மிகுசீ ருலவுசிகிமலை யரசே!
தருணி குறமகள் கணவா!—எனையாளாய்!

1582. தந்திமுன் வருவோர் தண்டுள வணிவோர்—மருகோனே!
அந்திநன் மதியே அன்புட னணிவோர்—அருள்பாலா!
கந்திகல் வலியார் கங்குலின் நிறமா—துணையாளா!
வந்தினி யருள்வாய்! வண்சிகி மலையா!—எனையாளாய்!

1583. வஞ்சிநே ரிடையாள் மங்குல்சேர் குழலாள்—நலமேசேர்
கொஞ்சுசீர் மொழியாள் கொண்டவே டுவியார்—புணர்
அஞ்சியே வருசூ ரன்றன்மே லயிலே-வியதேவே! [தோளா!
மஞ்சுசூழ் நலமார் வண்சிகா மலைமேல்—வருதேவே!

1584. நடன மாடிய மயிலா! நலம தேயினி யருள்வாய்!
அடம தேபுரி யசுரோன் அலற வேவிடு மயிலா!
படவ ராவணி சடையார் பரம னரருள் புதல்வா!
தடமு லாவிய பொழில்சூழ் தகுசி காமலை முதல்வா!

1585. திருமாதினை யணைவோர் திறலேபுரி விறலார்—மருகோனே!
மருவேமிகு மலராய் வருநீபமென் மலர்மா—லிகைமார்பா!
குருவே! அருள் புரிவாய்! குறநாயகி கணவா!—எனை
[யாளாய்!
தருசூழ்சிகி மலையா! தகுமாவர மருள்வாய்!—அமரேசா!

1586. வார்புனை பூமுலையினள்
வாள்விழி யாள்குறமினள்—புணர்தோளா!
தார்புனை மாபுயகுகா!
தாழ்வதை யேயகலவே—அருளாயோ!
கார்புனை சீர்குழலினள்
காரிகை மாதுமையினள்—அருள்பாலா!
சீர்புனை கோடுலவுமோர்
தேவர்க ளேபணிசிகா—மலையாளா!

1587. கந்தமிகு மலராம்
கஞ்சமது தனிலே—வருமானள்
சந்தமுலை புணர்வோர்
தண்டுழையை யணிவோர்—மருகோனே!
அந்தமிகு மயிலா!
அன்பினுட னடியேன்—முனம்வாராய்!
குந்தமணி கரனே!
குன்றைமலை யரசே!—எனையாளாய்!

1588. சங்கணி கரனர் தந்திமுன் வருவார்—மருகோனே!
தங்கம லையைநேர் தண்பொழில் வளர்தோ—கையின்மேரா!
கொங்கள வுமதே கொங்கைகொள் குறமான்—அணை
பங்கய வதனு! பண்புட னடியேன்-முனம்வாராய்! [தோளா!

1588. கொங்கு அளவுமதே - மணங் கொண்டதேயாகிய.

1589. மங்கைகுற மகளாள் வம்புமுலை தனிலே—புணர்தோளா!
கங்கையணி சடையார் கங்குனிற மிடறூர்—தருபாலா!
செங்கையணி யயிலா! தென்சிகியின் மலைமேல்-வருதேவே!
துங்கமிகு மயிலா! சொர்தமிகு மடியே—னிடம்வாராய்!

1590. கருதுதவ முனிவோர் கவினினெடு நிதமே—பணிதாளா!
ஒருதுணையு மிலையே உனதுகெதி யடியே—னிடம்வாராய்!
வருதுயரை யடுவாய்! மகிமையுள துரையே!—குகநாதா!
திருமருவு முடிசேர் சிகிமலையில் வளர்வோய்!—அமரேசா!

1591. நடனமிட் டிடுமயிலா!
நலமிகுத் திடுவடிவேல்—அணிதேவே!
மடமயிற் குறமகளாள்
மருவுவித் தக!எனையாள்—குருநாதா!
கடகரிக் கொருதுணைவா!
கமழ்கடப் பணிபுயவா!—எனையாளாய்!
அடவியுற் றிடுசிகியாம்
அழகுபெற் றிடுமலைமேல்—வருதேவே!

1592. வஞ்ச கமிடு சூரனை வென்றி டவெதி ராடிமுன்
வந்து டனயி லாலெறி—செயசூரா!
கஞ்ச மென்மலர் மேல்வளர் கின்ற பொன்மட மானனை
கங்கு லினுட லாருட—மருகோனே!
நஞ்ச துமிகு மாமிடர் கங்கை யையணி வேணியர்
நன்று ளநட நாயகர்—அருள்பாலா!
மஞ்ச டர்கொடு மாமுடி கொண்டி டுசிகி மாமலை
வந்தி டுகுக! நாயக!—எனையாளாய்!

1593. கதமிகு சூர னோடு
கதிர்வடி வேலை யேவு—செயவீரா!
பதமது தேடு நாயன்
பரிவொடு வாழ மேன்மை—அருளாயோ?
இதமிகு வேட மாது
எழில்கொடு மேவு மாயம்—இடுவோனே!
விதவித சோலை சூழு
விரைமிகு தோகை மேரில்—வருவீரா!

1594. வஞ்சமிகு சூர னோடு
மண்டியட லேசெய் வீர!—நலமேசேர்
தஞ்சமினி நாளும் வாழ்வு
தந்துகன மேசெய்! தோகை—மயிலாளா!
கஞ்சமலர் மாது மேவு
கங்குனிற மாய னுசை—மருகோனே!
கொஞ்சமதி தாவு கோடு
கொண்டசிகி மேரில் வாழு—முருகோனே!

1595. ஆறுமுக நாதனே! நீயலது பூமிமேல்
யாருதுணை தேவனே!—எனையாளாய்!
வேறுபடு நோய்களே தான்விலக நீசெய்வாய்!
மேலவர்கள் நாளுமே—பணிதாளா!
கூறுபடு வேலினு லேயெதிர்செய் சூரனர்
கோதுபட ஏவியே—கொலுநாதா!
தேறுபட வேசெய்வாய்! தோகைமலை நாதனே!
தேடடியர் பாகமே—வருவீரா!

1596. கயிலைமலை நிகரார்ய் வளருசிகி மலையா!
கருணைபுரி குவையே—குகநாதா!
அயிலையெதி ரசுரோ னுடல்கள்கிழி படவே
அடல்புரியு முருகா!—குமரேசா!
குயிலைநிகர் மொழியாள் அழகுதிகழ் நலமார்
குறமகளை யணைவர்ய்!—அமரேசா!
ஒயிலையுள துரையே! அருள்புரிவை குமரா!
ஒளிர்சிறையின் மயில்வா—கனவேளே!

1597. மதியையணி சடையார் வனசமல ரடியார்—ரிடமேசேர்
கதியையரு ளுமையாள் கனமுலவு புதல்வா!—எனையாளாய்!
நிதியையென திடமே நிமிஷமதி லருள்வாய்!—குகநாதா!
பதிபுகழு மரசே! பருமமிகு சிகிமா—மலையாளா!

1598. திரும ருவுமால் செயமு ளரிமான்
—அணைதோளார்—மருகோனே!
மருவு லவுசீர் மலரி னிபமே
—புனைமார்பா!—எனையாளாய்!

---

1598. மலரினிபமே; 'நீபமே' என்பது 'நிபமே' எனக் குறுகியது.

தருவு லவுமா தருசி கிரியின்மா—
—மலைமேலே—வருதேவே!
பொருமயிலையே பொருது யர்கையா!
—குகநாதா!—[....]

1599. வஞ்ச மேபுரி சூர ருைடன்
மண்டு போர்விளை யாடி யேவிய—செயவீரா!
கஞ்ச நான்முக வேத னுெரொடு
கங்குன் மேனியின் மாய ஞர்பணி—இருதாளா!
தஞ்சம் நாயனை யாளை யா!குக!
தந்தி யானனர் சோத ரா!இனம்—எனையாளாய்!
மஞ்சு சூழ்தரு சோலை யேமிகு
மங்குல் தாவிய தோகை மாமலை—முருகோனே!

1600. வடிவி யாகிய குறமி னுளொடு
மருவி யேவளர்—குகநாதா!
அடியர் பால்வரு மிடியை நீதவிர்!
அருண மேனிய!—எனையாளாய்!
படிகள் யாவையு மதிரவே நடை
பயிலு லாவிய—மயிலாளா!
கடிகொள் சோலைகள் மிகுசி காமலை
கருணை நாயக!—அமரேசா!

1601. வனசமலர் தனிலே வளருதிரு மகளாள்—புணர்தோளார்
பனகமிகு துயிலார் பசியநிற விறலார்—மருகோனே!
அனமதனில் வருவோர் அழுகிநெடு பணிசீர்—இருதாளா!
கனகமலை நிகர்சேர் கதிர்சிகியின் மலைமேல்—வருதேவே!

1602. நடன மிட்டிடு மயிலா!
நலமெ னக்கருள் குமரா!—குகநாதா!
மடம யிற்குற மகளாள்
மருவு வித்தக! எனையாள்—அமரேசா!
வடவ ரைக்கிரி நிகராய்
வளரு நற்சிகி மலைமேல்—வருதேவே!
தடமு டிக்குரு பரனே!
தகும யிற்குக! வரமே—அருளாயோ?

---

1598. [ ] 'முருகோனே!' எனச் சேர்த்துப் படிக்கலாம்.

1603. மண்டுசூ ருடனே வந்தபோர் படவே—செயும்வீரா!
வண்டுசூழ் குழலாள் மங்கைவே டமினுள்—புணர்தோளா!
கண்டுநேர் மொழியாள் கங்கைசேர் சடையாள்—தருபாலா!
குண்டுஆழ் புவிசூழ் குன்றைமா மலையா!—எனையாளாய்!

1604. வஞ்சமிடு சூர னுவி
மங்கவொரு வேலை யேவு—செயவீரா!
கஞ்சமலர் மீது வாழும்
கண்டுமொழி மாது மேவு—செயமாயோன்
அஞ்சனமெய் மாலை மேவும்
அந்தநல்து ழாயின் மார்பர்—மருகோனே!
தஞ்சமருள் தேவ தேவ!
தண்குலவு தோகை மேரில்—வருதேவே!

1605. சங்கணி கரனுர் தந்திமுன் வருவோர்—மருகோனே!
வங்கண மிகுசீர் வஞ்சிகு றமினுள்—புணர்தோளா!
பங்கய வதன! பண்புடன் வருவாய்!—அமரேசா!
கொங்கலர் வனமார் குன்றையின் மலைமேல்—வளர்தேவே!

1606. ததியணி கரனுர் தமதுநன் மருகா!—எனையாளாய்!
மதியணி சடையார் மகிழுயர் புதல்வா!—குகநாதா!
கதிதனை யருள்வாய்! கனகமென் மயிலா!—குமரேசா!
துதிமிகு சிகியார் சுகமலை யரசே!—வருவாயே!

1607. மகிமை தங்கிய வனச மங்கையின்—மருகோனே!
அகில மெங்கணு மரசு கொண்டிடு—பெலமாமேல்
பகிர வென்றவ! பழமை யின்சிகி—மலையாளா!
சுகமி குந்திடு துரைம டந்தையை—அணைதோளா!

1608. கதிதனை யருள்வாய்! கமலமென் மலர்போல்—இருதாளா!
மதியணி சடையார் மகிழுயர் புதல்வா!—எனையாளாய்!
துதிமிகு சரண! சுகமொழி வனமான்—அணைதோளா!
விதிபுகழ் குமரா! மிகுசிகி மலைமேல்—வருதேவே!

1609. வாசனை மிகுத்த நீப
மாலைகள் தரித்த மார்ப!—எனையாளாய்!
காசகல் குறத்தி யான
காரிகை தனக்கு மாலை—யிடுவோனே!

---

1603. குண்டு ஆழ் - ஆழமான கடல். ஆழி 'ஆழ்' என நின்றது.
1607. பெலமா: சூரபதுமன். பகிர வென்றவ!—பிளவுற வென்றவனே!

தேசர்கள் புகழ்ச்சி யேசெய்
சீருள சிகிப்பொன் மேரில்—வருதேவே!
தாசனெ னிடத்தி லாவல்
தான்மிக மயிற்கு மீது—வருவாயே!

1610. கந்த மேவுமலர் நீபனே!
கஞ்ச நாதனுப தேச! நா—யகவேளே!
அந்த மானமயி லாளனே!
அன்பி னும்வளர் வாகவே—அருளாயோ?
சந்த மானதமிழ் தாவையா!
சங்க பாணிமரு கேசனே!—குகநாதா!
சொந்த மானவெனை யாளையா!
துங்க மேவுசிகி மேரில்வாழ்—குருநாதா!

1611. வஞ்ச னாகிய சூரனார்
மண்டு போரொரொடு மாயவே—செயும்வீரா!
கஞ்ச னார்பணி தாளனே!
கங்கை வேணியர் பாலகா!—எனையாளாய்!
தஞ்சம் வேறிலை நீயையா!
தங்க மேனிய! நாளுமே—எனையாளாய்!
நெஞ்சின் நோய்தவிர் தோகையாய்
நின்ற மேரினில் வாழ்குகா!—குமரேசா!

1612. திருவு லாவிய மாதினாள்
திகழு வேடமின் வாகனே!—எனையாளாய்!
கருது பாவின மேசெய்வாய்!
கமல நேரிரு தாளனே—அருளாயோ?
பொருது சூருடல் போகவே
புனித வேல்விடு தேவனே!—குகநாதா!
மருவு லாவிய சோலைசூழ்
மகிமை சேர்சிகி மேரில்வாழ்—முருகோனே!

1613. மகிமை தங்கிய சிகிமி னன்கிரி
வளர்சி கண்டிய!—எனையாளாய்!
அகில மெங்கணு மரசு கொண்டிடு
அசுரை வென்றிடு—அயிலாளா!

முகிலெ னும்படி நிறைசெய் பங்கியின்
முளரி மங்கையை—நிகர்மானுள்
மகிழ்கு றம்பயில் குறம டந்தையை
மருவு மம்புய—முருகோனே!

1614. வஞ்ச னன சூரன்மேல்
மண்ட வேலை யேவுவாய்!—செயசூரா!
கஞ்ச மானை மேவுவோர்
கங்குன் மேனி மாயனர்—மருகோனே!
நஞ்ச ராவு சூடுவோர்
நங்கை தேவி நீலியாள்—தருபாலா!
தஞ்ச மேன்மை யாகவே
தந்து வாழ்சி காநன்மா—மலையாளா!

1615. காதன்மிகு குறமான் காமமொடு புணர்சீ—ரிருதோளா!
மாதயவு புரிவாய்! வாசமல ரணிவாய்!—அருள்தாராய்!
சீதமதி யணிவோர் தேவர்பணி சரணர்—அருள்பாலா!
வேதர்பணி சரண! மேன்மைமிகு சிகிமா—மலையாளா!

1616. வண்ணக் குறமகளாள்
மன்னத் தழுவணைமேல்—அணைதோளா!
தண்ணக் கமலமினுள்
தன்னைப் புணரரியார்—மருகோனே!
அண்ணற் குருபரனே!
அன்னப் பரியயனர்—பணிதாளா!
குண்ணக் குடிமுருகா!
கொண்ணைச் சடையரனர்—அருள்பாலா!

1617. வடிவேலின லெதிர்சூரனர்
மடிவாகவே—அடுவீரா!
குடிவேடமா னிடமாசையாய்!
குகநாதனே!—எனையாளாய்!
அடியார்கள்பால் வருவாய்! குகா!
அழகானதோர்—மயிலாளா!
விடிவாகவே அருளேசெய்வாய்!
விரைசேர்சிகா—மலையாளா!

1618. மட்டுலவு குழலாள் வட்டமிகு முலையாள்—குறமானுள்
இட்டமொடு புணர்வாய்! இச்சையுட னடியே-னிடம்வாராய்!
துட்டனென வருசூர் சுற்றமற அயிலே—வியவீரா!
கட்டழக! எனையாள்! கர்த்த! சிகி மலைமேல்—வருதேவே!

---

1613. பங்கி: இங்குக் கூந்தலைக் குறிக்கிறது.

1619. கங்கையணி சடையார் கங்குல்நிற மிடறுர்—அருள்பாலா!
மங்கையுமை யவளாள் வம்பையணி தனமான்—அருள்
[பாலா!
செங்கையணி அயிலால் சிந்தவெதி ரிடுசூர்—அடுவோனே!
தங்கமலை நிகர்சீர் தங்குசிகி மலைமேல்—வருதேவே!

1620. கடம்ப மாலை யணிவாய்!
கலங்கு கோயை யடுவாய்!—அமரேசா!
நடஞ்செய் தோகை மயிலா!
நலங்கொள் வேடர் மகளாள்—புணர்தோளா!
படங்கொள் ராவை யணிவோர்
பயங்கொள் வேணி யரனுர்—அருள்பாலா!
தடங்கொள் சோலை மிகுசீர்
தகுந்த தோகை மலைமேல்—வருதேவே!

1621. காத லாகிய வேடமான் காத லாயணை நாதனே!
சூது நேர்முலை மாதினுள் தூய மாதுமை பாலகா!
வாது தான்மிகு சூரனுர் மார்பி லேயயி லேவுவாய்!
தாது சேர்பொழில் சூழுமோர் சாரல் சேர்சிகி! நாதனே!

1622. பரிபுர வொலியெழ நடமிடு மயிலுட
பணைமுது கினில்வரு—குவைநீயே!
அரிமுத லிமையவர் நிதநித நிதநிதம்
அடிதொழு குருபர!—முருகோனே!
வரியளி குமுறிய அடவிக ளொருகொடி
மயல்தவி ரிடமரு—வியதோளா!
தரியலர் குலகல க! குமர! அருள்புரி!
தடமிகு சிகிமலை—வருதேவே!

1623. நடனவி லாசனுர் ரிஷபம தேறுவோர்
நறைகமழ் வேணியார்—அருள்பாலா!
கடகரி போலவே யிலகிய நாதனுர்
கணபதி [யாகியதோளா]
அடமிகு சூரனுர் முடிபட வேமுனுள்
அயில்விடு வீரனே!—எனையாளாய்!
தடவரை சூழவே வளர்கயி லாசமே
தகுசிகி மேரிலே—வருதேவே!

---

1623. [ ] இதனை 'சோதரா!—குமரேசா!' என அமைத்துக் கொள்க.

1624. காதன்மிகு குறமான் காரிகையை யணைவாய்!
மாதயவு புரிவாய்! மாசகலு மயிலா!
கோதகலு மயிலா! கூறரிய வடிவே!
சீதமிகு சிகியாம் சீருலவு கிரியா!

1625. அரவினு டல்நெளிய நடனம துபுரியும்
அழகுதி கழுமயில்—பரியாளா!
குரவரி மையவர்கள் முனிவர சுரர்பணி
குமரச ரவண! கு—ருபரேசா!
பரவைம ணையில்வரு அரனுடை யபுதல்வ!
பதயுக ளமலைகள்—அருணதா!
உரமிகு மயிலணி கரதல! குருபர!
உயர்சிகி மலையினி—லுறுதேவே!

1626. கஞ்சமலர் வதன! கங்கைதனை யணிவோர்
நஞ்சமணி மிடறுர் நங்கையுமை தருவோய்!
செஞ்சரண முருகா! செந்தமிழை யருள்வாய்!
மஞ்சுமிகு சிறைசேர் வண்சிகியின் மலையா!

1627. [வடவரையை நிகரும் முடியிலகிய வழகின்
மணிதிகழு சிகியின்மலை—முருகோனே!
திடமுலவிய வசுரனுடல்பிள படவலிய
திருவயிலைவிடு—செயவீரா!
மடமையுடைய யெனையும் அறிவதுநிறை செய்குவை
மயின்முதுகினி லுலவு—குமரேசா!
குடவளையை யணியரி மகிழவரு மருகமின்
குறமகளை மருவிய—வடிவாளா!]

---

1627. இப்பாட்டின் உருவம் சரியாயில்லை.

இப்படிப் படிக்கலாம்:—

“ வடவரையை நிகருமொண் முடிவிலகியவழகின்
மணிதிகழு சிகியின் மலை—முருகோனே!
திடமுலவி யடுமசுரன் உடல்பிளவு படவலிய
திருவயிலை விரைவில்விடு—செயவீரா!
மடமையுடை யெளியனையும் அறிவதற நிறைசெய்குவை!
மயிலின்முது கினிலுலவு—குமரேசா!
குடவளையை அணியுமரி மகிழவரு மருமக! மின்
குறமகளை மருவியணை—வடிவாளா!

1628. காந்த லாகிய கான நாயகி—புணர்தோளா!
தீத தேபுரி தீர சூருடன்—அடுவோனே!
தாது லாவிய தாரை யேபுனை—யிருதோளா!
நீத னே! உயர் நீடு தோகையின்—மலையாளா!

1629. கஞ்ச மாகிய பாதனே! கங்கை சூடிய நாதனர்
மஞ்சு சேர்கயி லாசனர் மைந்த னே!அரு ணையையா!
தஞ்சம் வேறிலை நாதனே! சண்டை யேபுரி சூரனர்
அஞ்ச வேல்விடு வீரனே! அண்ட மேர்சிகி மேருளாய்!

1630. கானகம் வாழு மாது
காதல்கொள் வேடமாது—புணர்தோளா!
சானகி யாளை மேவு
தார்புனை மார்பின் மாயன்—மருகோனே!
பானல மான தூய
பாகுள கூற ளான—உமைபாலா!
வானக மேவு கோடு
வாழ்சிகி மேரின் வாழு—முருகோனே!

1631. பச்சைமயின் மீதிலே
பட்சமிக நாடியே—வருவாயே!
கச்சைபுனை வேடமான்
கட்டியணை தோளனே!—அருளாயோ?
இச்சையுள வானுளோர்
எப்பொழுது மாகவே—பணிதாளா!
செச்சையணி சீர்புயா!
சித்ரமிகு தோகைமா—மலையாளா!

1632. மையல்மிகு குறமான் மகளேமே வியவா!
தையலுமை யவளே தருபொன்மா மயிலா!
கையிலணி அயிலா! கருணையா ருளனே!
ஐய!அருள் புரிவாய்! அணிசிகா மலையா!

1633. மணமிஞ்சிய நீப மலர்கொண்டிடு மாலை—புனைமார்பா!
குணமிஞ்சிய வேடர் குறவஞ்சியை மேவு—புயவேளே!
கணமிஞ்சிய சூரன் கதறன் றுவெல் போரு—புரிவீரா!
தணமிஞ்சிய சோலை தருகுன்றைநன் மேரில்—வருதேவே!

---

1633. கதற அன்று வல்போர் புரிவீரா! தணம்: தண்ணம் - குளிர்ச்சி.

1634. சத்துரு நாசனே! சற்குண வாளனே!
—எனையாளாய்!—நலமாமே
பத்துள சேகரோன் பட்டிட வாழியே
—தொடுமாயோன்—மருகோனே!
மெய்த்திடு வானுளோர் மெய்த்தவ ஞானிமார்
—பணிதாளா!—[...]
சித்திர மானதோர் சித்திகொள் தோகைமா
—மலையாளா!—[...]

1635. வாசனை மிகுத்த நீப
மாலிகை தரித்த மார்ப!—எனையாளாய்!
ஈசுரர் மகிழ்ச்சி யான
ஈஸ்வரி படைத்த பால!—முருகோனே!
மாசுள திறத்த னுன
மாவுடல் பிளக்க வேலை—விடுவீரா!
காசினி புகழ்ச்சி யான
கார்தவழ் சிகிப்பொன் மேரில்—வருதேவே!

1636. கடம்பணி புயவா! கலங்கிட வுடனே—எதிராவே
அடஞ்செயு மசுரோன் அடங்கிட வயிலே—வியசூரா!
நடம்புரி மயிலா! நலந்திகழ் குமரா!—அமரேசா!
குடம்புரை முடிசேர் குவிந்திடு சிகிமா—மலையாளா!

1637. தருணவே டமினள் தழுவினாள் தொறுமே—புணர்தோளா!
அருணமே னியனே! அழகுசேர் சிகிமா—மயிலாளா!
கருமைசே ருடலார் கருணைசேர் விறலார்—மருகோனே!
அருமையாய் வருவாய்! அருள்செய்தோ கையின்மா—மலை
[யாளா!

1638. மதியணி சடையார் வரமரு ளரனர்—அருள்பாலா!
கதியுள மயிலா! கருணைகொள் கடலே!—எனையாளாய்!
துதிமிகு சரணு! துரைமுரு கையனே!—அருளாயோ?
பதிபுகழ் சிகியாம் பழமலை தனிலே—வருதேவே!

1639. பொருதுசூ ருடனே புகழ்செய்போர் புரிவாய்!
கருதுநோய் தவிர்வாய்! கதிகொள்தோ கையனே!
திருவைமே வியமால் திறல்கொள்மா மருகா!
தருகொள்தோ கையின்மா தழைபொன்மா மலையா!

1634. சேகரோன் - சேகரமுடையோன். சேகரம் = முடி. [ ] விடப்பட்டுள்ள முறையே, 'முருகோனே!' 'அருள்வாயே!' எனப் படிக்கலாம்.

1640. நடிக்குமயில் வாகன!
நலத்தையருள் நீசெய்வாய்!—அமரேசா!
படிக்குளுயர் தோகையாம்
பருத்தமலை நாதனே!—அருளாயோ?
கடிக்குநல ராவையே
களத்தணியு நாதனர்—தருபாலா!
துடிக்குமுலை வேடமான்
துணைக்குமர! நீயிநாள்—அருளாயோ?

1641. வட்டமதி யணிவோர் மட்டுலவு சடையா—ரிடமேசேர்
கட்டழகி குறமான் கட்டியணை புயவா!—எனையாளாய்!
துட்டமிகு வசுரோன் துக்கமிக வயிலே—வியதோளா!
திட்டமுள பொழில்சூழ் சித்ரமிகு சிகியா—மலையாளா!

1642. கானில்வாழ் குறமான் காதலா யணைசேர்—புயவேளே!
வானில்வாழ் வுறுவோர் வாழுநாள் தொறுமே-பணிபாதா!
ஞானியோ ரடியார் நாளுநாள் தொறுமே—பணிபாதா!
தேனின்மா மொழியா! சீர்சிகா மலைமேல்—வருதேவே!

1643. கருணை நாதனே! கடவு ணீயையா!—அருளாயோ?
அருண மேனியாய்! அழக தாகவே—வருவாயே!
வருண மானதோர் மயிலி லேறியே—அருளாயோ?
திருமி னீடுசீர் சிகியின் மேரிலே—வளர்தேவே!

1644. நடமாடு மயிலா! நலநீசெய் குமரா!
அடமாவை யெதிராய் அயிலேவி வெலுவாய்!
குடமான முலையாள் குறமாது கணவா!
தடமான சிகியாம் தகுமேரி னரசே!

1645. நடனமிட் டிடுமயிலா! நலமெனக் கருள்துரையே!
மடமயிற் குறமகளாள் மருவுவித் தக!எனையாள்!
அடமிகுத் திடுபெலமார் அசுரரைக் கொலுமயிலா!
தடமிகுத் திடுசிகியாம் தலைமலைக் குருபரனே!

1646. காரு லாவிய ஓதியாள்
காவில் வாழ்குற மாதினுள்—புணர்தோளா!
வாரு லாவிய மார்பினள்
மாது மாபதி பாலகா!—எனையாளாய்!

தாரு லாவிய மார்பனே!
தாமு லாவிய சூரனர்—பகையாளா!
சீரு லாவிய தோகையா!
தேவ! **தோகையின் மேரிலே**—வருநாதா!

1647. கங்கை வேணியர் பாலனே!
கந்த னே!க்ருபை யாளனே!—எனையாளாய்!
மங்கை யாள்குற வேடமான்
வந்து சேர்புய நாதனே!—அமரேசா!
செங்கை வேல்கொடு மீறுசூர்
சிந்த வேயடு வீரனே!—முருகோனே!
துங்க மாமயில் வாகன!
தொந்த மாகிய **தோகைமா**—**மலையாளா!**

1648. காவில் வாழ்குற வேடமான் காத லாயணை தோளனே!
பூவில் வாழ்வுறு வேதனர் பூசை யேபுரி பாதனே!
தேவி யாளுமை பாலகா! சீரு லாவிய நீபனே!
கூவி வாழ்மயில் வாகன! **கூர்சிகாமலை** நாதனே!

1649. வாதுபுரி சூர னவி மாளவயி லேவு வீர!—எனையாளாய்!
சூதுமிகு வாரு லாவு தூயமுலை வேட வோர்கள்-குலமாமோர்
மாதுபுணர் மார்ப! தேவர் வாழ்வையருள் நீப மாலை—
[புனைதோளா!
தார்துலவு சோலை சூழு சாரல்மிகு **தோகை மேரில்**-வருதேவே!

1650. வம்பணி முலையாள் மங்கைகு றமினள்—புணர்தோளா!
வம்புசெ யசுரோன் மங்கிட வயிலே—வியதேவே!
சம்புத னிடம்வாழ் சங்கரி புதல்வா!—எனையாளாய்!
நம்பின னருள்வாய்! நன்றுகொள் **சிகிமா**—**மலையாளா!**

1651. மதியணி சடையார் மணியர வணிவோ—ரிடமேசேர்
பதிபுக முமையாள் பணிகொள்கௌ ரியினர்-அருள்பாலா!
துதியணி சரண! துரைமுரு கையனே!—எனையாளாய்!
கதிதனை யருள்வாய்! கமழ்சிகி **மலைமேல்**—வருதேவே!

1652. கஞ்சமலர் மாதுபுணர் கங்குனிற மாயனுட—மருகோனே!
வஞ்சமிடு சூரனுட வம்சமழி வாகவயில்—விடுவோனே!
தஞ்சமினி வேறுமிலை தந்துவரம் ஆளுமுரு—கையிவேளே!
கொஞ்சமதி தாவிவளர் **குன்றைமலை** மீதுவரு—குகநாதா!

1653. மதியையணி சடையார் மருவுமுமை யவளே—தருபாலா!
கதியையினி யருள்வாய்! கனமுலவு சிகிமா—மலையாளா!
அதிகவர மருள்வாய்! அமரர்பணி சரணு!—எனையாளாய்!
விதிபரவு குமரா! மிகுசிகியின் மலைமேல்—வருதேவே!

1654. காரணி யுடலார் காதல்கொள் மருகா!—குகநாதா!
தாரணி புயனே! தாகம துடனே—எனையாளாய்!
போரணி யவுணோர் போகிட அயிலே—வியதேவே!
சீரணி மயிலா! சீர்மிகு சிகிமா—மலையாளா!

1655. கச்சணி முலையாள் கட்டுள குறமான்—அணைதோளா!
நச்சர வணிவோர் நட்புய ருமையாள்—தருபாலா!
செச்சைகொள் புயனே! சித்திர மயின்மேல்—வருதேவே!
இச்சணம் வருவாய்! இச்சைகொள் சிகிமா—மலையாளா!

1656. மதுவு லாவிய மலரை யேயணி—யிருதோளா!
பதும மானனை பசிய·மேனியர்—மருகோனே!
விதுகொள் வேணியர் விமல னாரருள்—புதல்வோனே!
புதுமை யாகிய புகழ்சி காமலை—முருகோனே!

1657. சத்தியணி கரனே! சக்ரவரி மருகா!—எனையாளாய்!
நத்திலகு மிடறுள் நட்புமிகு குறமான்—அணைதோளா!
அத்திமுகர் துணைவா! அற்புதமென் மலர்போ-லிருதாளா!
முத்திதனை யருள்வாய்! முக்யமிகு சிகிமா—மலையாளா!

1658. நேச மாகிய [குறமினாள்]
நீடு காவினி லாவலாய்—அணைதோளா!
மாசு சேர்படை வீரனும்
மாவை யேவெலு வீரனே!—எனையாளாய்!
தேச மேபுகழ் நேமநா
டேயு லாவிய தோகைமா—மலையாளா!
ஈசர் பாலக! வாழ்வுதா!
ஏரு லாவிய தோகையா—மயிலாளா!

1659. வனசமல ரான மணமுலவு பாத!—எனையாளாய்!
கனகசபை யாளர் கருணைபொழி யீசர்—அருள்பாலா!
மனதுடைய நோயை மடியவரம் நீசெய்—குவை!நாதா!
இனமணிகொள் கோடு இலகுசிகி மேரில்—வருதேவே!

---

1653. இருமுறை மயில் மலை வந்துள்ளது.

1658. [ ] சந்தம் வேறு.

1660. மதுமாமல ரணிநீபமென் மணமாலிகை—புனைதோளா!
நதிசூடிய கனவேணியர் நடிமாடிய—அரனுரே
துதிபாலக! எனையாள்குக! துரைவேலவ!—குமரேசா!
மதிதாவிய சிகிமாமலை வளர்நாயக!—முருகோனே!

1661. கந்தமலர் நீப! கங்குல்தவழ் தோகை—மலையாளா!
வந்துவர நீசெய்! மஞ்சமிசை வேடர்—மகளுடே
பந்துமுலை மீது பண்பினுடன் மேவு—புயவேளே!
தந்திதுணை யாள! தங்கமலை வாசர்—அருள்பாலா!

1662. மகிமை தங்கிய வளர்சி கண்டியின்—மலையாளா!
சுகமி லங்கிய துரைம டந்தையை—அணைதோளா!
அகில மெங்கணும் அரசு கொண்டிடும்—அசுரோன்மேல்
பகிர வென்றவ! பதும மங்கையின்—மருகோனே!

1663. வனச மங்கையை மருவு மம்புயன்—மருகோனே!
அனமி லங்கிட வருளு மெண்கணர்—பணிதாளா!
புனம டந்தையின் புணரு மிங்கித—முருகோனே!
கனமி குந்திடு கதித ருஞ்சிகி—மலையாளா!

1664. வண்டுல வியமலர் கொண்டிடு குழலிபொன்
வம்பணி முலைமிகு—குறமானுள்!
கொண்டிடு மயலது மிஞ்சிட மருவிய
குங்கும மணிபுய!—முருகோனே!
வண்டனெ னவுலவு வம்புய ரசுருடல்
மண்டிய வமர்பொரு—தியவேளே!
அண்டர்கள் தொழுவளர் குன்றையின் மலைதனில்
அன்புடன் வருகுக—பர!வேளே!

1665. காத லாகிய வேடமான் கானி லேயணை தோளனே!
மாதர் சேர்புய நாதனுர் மாய னுர்மரு கேசனே!
சீத மேவிய நீபனே! தேவ தேவர்கள் நாதனே!
கோதி லாதவொர் தோகையாம் கோடில்வாழ்கும ரேசனே!

1666. தூய பதமருள்வாய்! தோகை மயில்முருகா!
மாய னுடமருகா! வாழ்வு தனையருள்வாய்!
காய மதனிடமே கால னகலிடவே
சேய வரமுதவாய்! சீர்சி கியின்மலையா!

1667. கார்நிற மேனியார் கானவர் மாதினுள்—புணர்தோளா!
வார்புனை மார்பினுள் மாதுமை பாலகா!—எனையாளாய்!
சீர்புனை நாதனே! தேவர்கள் நாதனே!—செகநாதா!
தார்புனை மார்ப!நீ தா!சிகி மேலில்வாழ்—குகநாதா!

1668. வடிவேலெனும் விழியாள் மலர்சூடிய குழலாள்—வனவே
[டோர்
குடிவாழ்வுறு மயிலாள் குறநாயகி கணவா!—எனையாளாய்!
படியோர்பணி சிகியாம் பருமாமலை வருவாய்!—குகநாதா!
அடியேனிடம் வருவாய்! அழகாகிய மயில்மேல்—முரு
[கோனே!

1669. கந்த மேவுமலர் நீபமே
கண்ட மீதிலணி நாதனே!—எனையாளாய்!
சந்த மேவுதமிழ் நீசெய்வாய்!
தங்க மேருநிகர் தோகைமா—மலையாளா!
அந்த மேவுமயில் வாகனு!
அன்பன் வாழ்கவர மேசெய்வாய்!—குகநாதா!
நந்த மேவுகர மாயனுர்
நன்று சேர்மருக! மேன்மைதான்—அருளாயோ?

1670. தந்தியுட துணைவா! தங்குசிகி மலையா!—எனையாளாய்!
தொந்திதிமி யெனவே துங்கநடை பயின்மா—மயிலாளா!
வந்தினிய வரமே மங்களம துடனே—அருளாயோ?
நந்திலகு கரமால் நன்றுபெறு மருகா!—குகநாதா!

1671. வனச மங்கையை மருவு மம்புயன்—மருகோனே!
கனக கும்பமென் கலச கொங்கையின்—மயில்போல்வாள்
புனம டந்தையள் புணரு மிங்கித—முருகோனே!
மனம கிழ்ந்தருள் வளர்சி கண்டியின்—மலையாளா!

1672. கான கத்திலுறை மாதினுள்
காம மிக்கவணை நாதனே!—எனையாளாய்!
வான கத்திலுறை வானவோர்
வாச வற்குவரு மோசமே—தவிர்வோனே!
ஞான முற்றவடி யார்களே
நாளு மற்பினொடு தேடுசீர்—இருதாளா!
நான முற்றமலர் நீபனே!
நாடு மெய்ச்சிகியின் மேரிலே—வருதேவே!

1673. கருணா நிதியே! கமலா சனனார்—பணிதாளா!
மருவா சனைசேர் மலர்நீ பமதே—புனைமார்பா!
குருசார் வனம்வாழ் குறநா யகியார்—புணர்தோளா!
தருசூழ் சிகியாய் தழைகோ டினில்வாழ்—வுறுதேவே!

1674. வனசமலர் மீது வளருமயின் மாது—புணர்தோளா!
கனகனுடல் சீறு கரியவுடன் மாயன்—மருகோனே!
அனநடையின் மாது அழகுதிகழ் வேடர்—மகள்வாகா!
சினவரவின் மீது சிரசின்வரு தோகை—மலையாளா!

1675. வாச நீபமென் மாலை யேபுனை—யிருதோளா!
தாச ஞனருள் தா!கு கா!மணி—மயிலாளா!
மாசு சேர்பெல மாவை யேவெலும்—அயிலாளா!
தேச ரேபணி சீர்சி காமலை—முருகோனே!

1676. வனமேல்வளர் மறவோர்தரு மடமான்மரு—வியதோளா!
சினமேமிகு மசுரோனுடல் தெறிவாகிட—வெலுவோனே!
மனநோய்கெட வருளேசெயும் மயில்மீதினில்—வருவீரா!
கனமேமிகு சிகியாமலை கருணாநிதி!—முருகோனே!

1677. வடிவாகிய விழியாள் மடமாமயி னிகராள்—குறமானாள்
தடமாமுலை தனிலே தகவேமரு வியவா!—எனையாளாய்!
படராவணி யரனார் பணைசீர்முலை யுமையாள்—தருபாலா!
இடமேமிகு பொழில்சேர் எழில்தோகையின் மலையா!—[...]

1678. மடிய வேவரு மசுர ஞருடல் வகிர வேல்விடு—செயசூரா!
குடியின் மீறிய புனமி னாளுயர் குறமி னாள்புண-ரிருதோளா!
அடியர் யாவரு நிதமு மேபணி அலரை நேருயர்-இருதாளா!
கடிகொள் தோகையின் மலையில் வாழ்பவ! கருணை நாயக!
—முருகோனே!

1679. காவில் வாழ்குற மாதினாள்
காத லாயணை நாதனே!—எனையாளாய்!
பூவில் வாழ்வுறு வேதனார்
பூவு லாவிய வானுளோர்—பணிதாளா!
தேவி யாளுமை நாதனார்
சீர்கொள் வேணியர் பாலகா!—எனையாளாய்!
நாவி சேர்சிகி மேரின்வாழ்
நாத னே!குக தேவனே!—முருகோனே!

---

1677. [ ] விடப்பட்டுள்ளது. 'குமரேசா' எனச் சேர்க்கலாம்.

1680. வாதுபுரி சூரன் மாயவயி லேவு—செயவீரா!
சூதுநிக ரான தூயமுலை வேடர்—மகள்வாகா!
தாதுலவு நீப தாரையணி மார்ப!—எனையாளாய்!
போதுலவு சோலை பூமிகுசி காமென்—மலையாளா!

1681. வஞ்சனைசெய் சூரன் மங்கவயி லேவு—செயவீரா!
கஞ்சமலர் நாதன் கண்டுபணி பாத!—எனையாளாய்!
தஞ்சமிலை யாள்செய் தங்கமலை நேர்சி—கியின்மோரா!
அஞ்சவரு நோயை அஞ்சவடி தேவர்—கணநாதா!

1682. மட்டுலவு நீப அற்புதமென் மாலை
மற்புயம தேய—ணிகுவோனே!
கட்டுலவு வேடர் மெய்க்குடியில் வாழும்
கட்டழகி யாளை—அணைவோனே!
மெட்டுலவு சூர னைப்பகைகொள் வீர!
விட்டுணுத ஞைசை—மருகோனே!
பட்டுலவு மேனி வித்தக!செய் மேன்மை!
பக்தியுள தோகை—மலையாளா!

1683. மனத்துநோய் தவிர்வாய்!
மலர்க்குளேர் மிகுநீ—பமென்மார்பா!
வனத்துவாழ் குறமான்
மகிழ்ச்சியா யணைசீ—ரிருதாளா!
சினத்துநே ரிடுசூர்
தெறிக்கவேல் விடுவாய்!—குகநாதா!
எனக்குவே ணதுதா!
எழிற்செய் தோ கையின்மா—மலையாளா!

1684. எனதுமீ தினிலே இனியதோர் வரமே—புரிவாயே!
தனமினுள் குறமான் றனையுலா சமதாய்—அணைதோளா!
வனசமா மலர்மேல் வனமினு ளுடசீர்—மருகோனே!
கனகமா மலைநேர் கதிசெய்தோ கையின்மா—மலையாளா!

1685. கடிமண மிகுநீபா!
கமலமென் மலராமே—யிருபாதா!
அடியவர் தொழுதாளா!
அருள்புரி குருநாதா!—முருகேசா!
வடிவுள குறமானுள்
மகிழ்வொடு பணிதேவே!—எனையாளாய்!
படியுயர் சிகியாமோர்
பணைமலை தனில்வாழ்வாய்!—அமரேசா!

1686. கலைமதி தனையணி கயிலையில் வள ரரன்—அருள்பாலா!
அலைதனி லழகொடு அரவணை துயில்பவர்—மருகோனே!
சிலைநுதல் மடமயில் திருநிகர் குறமகள்—புணர்தோளா!
மலைதனி லுயர்சிகி மலைதனில் வருகுக!—எனையாளாய்!

1687. கரும்பைநேர் மொழியாள்
கமழ்ந்த மாலிகையே—புனைமானாள்
குரும்பைநேர் முலையாள்
குடங்கைநேர் விழியாள்—குறமானாள்
விரும்புநா யகனே!
மிகுந்தவாழ் வதுவே—அருளாயோ?
அரும்புநேர் நகையாய்!
அகன்றதோ கையின்மா—மலையாளா!

1688. வஞ்சிநே ரிடையாள் மஞ்சுசேர் குழலாள்—குறமானாள்
அஞ்சியே வருசூ ரன்றன்மே லயிலே—வியதேவே!
நஞ்சுசேர் மிடறார் நந்துசேர் கரனார்—அருள்பாலா!
மஞ்சுசூழ் சிகியாம் மன்றலா கியமா—மலையாளா!

1689. கொங்கு லாவிய தொங்க லேபுனை
கொண்ட லேநிகர்—குழலாளே
தங்கு சூருடல் ரெண்டு கூறிடு
தங்க வேலணி—முருகோனே!
பொங்கு நோயது அன்பர் பாலது
பொன்ற வேசெயும்—அமரேசா!
மங்குல் சூழ்வரு குன்றை மாமலை
வந்த நாயக!—எனையாளாய்!

1690. அருண மேனிய! அயிலை யேவிமுன்—எதிராவே
வருவல் சூரனை மடிய வேசெயு—முருகோனே!
திருமி னாள்புணர் திறல்கொள் மாயவன்—மருகோனே!
தருவு லாவிய தழைசி காமலை—அமரேசா!

1691. அயிலாலெதிர் வருசூருடல் அழிவாய்விட—எயுவோனே!
குயிலாகிய மொழிநாயகி குறமான்மரு—வியதோளா!
ஒயிலாகிய துரையே! அருள் உமைநாயகி—தருபாலா!
மயிலாகிய மலைமேல்வரு மணியே! அருள்—தருவாயே!

1692. எதிரிடு சூர னுடல்கிழி வாக
இசைவொடு வேலை—விடுவோனே!
மதியணி தேவர் நடமிடு ராசர்
வளர்சடை யீசர்—தருபாலா!

---

1689. முதலடியின் பொருள் முடிவுறாது நிற்கிறது.

கதியுள தோகை மயின்மிசை யேறு
கருணையி னுத !—எனையாளாய் !
அதிபதி தேவர் குருபர! தோகை
அழகுள மேலில்—வருதேவே !

1693. வனச மங்கையை மருவு மம்புயன்
மணிய ணிந்திடு—செயமாயோன்—மருகோனே !
விணைமி குந்திடு அயில்பொ ருந்திரு
விழிகு ளிர்ந்துமை—தருபாலா !—எனையாளாய் !
சினமி குந்திடும் அசுரன் மிஞ்சிய
திறல்கொ ளும்படை—கொலவேவோர்—அயிலாளா !
கனக விண்டுவை நிகர்சொ லும்படி
கமழ்சி கண்டியின்—மலை நீதே—வருதேவே !

1694. முத்து நேர்நகை சத்தி நேர்விழி
மொய்த்த சீர்குழல்—மடமானர்
குத்து மாமுலை யிச்சை யால்வரு
கொச்சை நோய்தவி—ரிடுவாயே !
கொத்து மேவிடு செச்சை யேபுனை
கொற்ற வேலவ !—எனையாளாய் !
சித்து மேவிய முத்த ரைருள்
சித்த னே!சிகி—மலையோனே !

1695. கடம்ப வனத்தி லுறைவோர்
கரந்தை தரித்த சடையா—ரிடமேசேர்
வடங்கொள் தனத்தி னுமையாள்
மகிழ்ந்த சுபுத்ர ! எனையாள்—குகநாதா !
திடங்கொ டெதிர்த்து வருசூர்
திரண்ட படைக்கு முனம்வே—லிடுதேவே !
தடங்கொள் பொழிற்சி கியின்மா
தழைந்த மலைக்கு ளரசே !—அருளாயோ ?

1696. வனசமலர் நிகரா யிலகுமிரு சரணு !
மணமுலவு மலர்மா—லிகைமார்பா !
கனகமலை நிகரா கியசிகியின் மலையா !
கருணைபொழி விழியாய் !—எனையாளாய் !
பனகவணை தனிலே துயில்செயரி மருகா !
பணியையணி குறமான்—அணைதோளா !
மனதில்வரு துயர்தீ ரிடவருள்செய் ! குமரா !
மகிமையுள குகநா—யக ! வேளே !

1697. வடித்த வேல்தனை யெடுத்து மேல்வரு
வலுத்த சூருடன்—எதிர்வோனே !
துடிக்கு நேரிடை அனத்தை நேர்நடை
துரைப்பெ ணுளொடு—புணர்தோளா !
படிக்குண் மேன்மைகொள் சிகிப்பொன் மேர்வளர்
பருத்த தோகையின்—வருதேவே!
நடிக்கு நாயகர் உமைப்பெ ணுயகி
நலத்த பாலக !—எனையாளாய்!

1698. வஞ்சனை மிகுத்த சூரன் அண்டிய படைக்கு நேரு
மண்டிட வயிற்கொ டேவு—செயவீரா !—எனையாளாய்!
கஞ்சனை யெதிர்த்து வீர மிஞ்சிட வடித்து வீழ [கோனே!
கண்டுடன் நகைக்க வேசொல்-விறல்மாயோன் !—மரு
நெஞ்சக மகிழ்ச்சி யாக இன்பொடு வரத்தை யேசெய்!
நின்கிருபை யெனக்க லாமல்—இனிவேறோர்—துணை
[யாதோ?
கொஞ்சிய குறப்பெ ணுளை அன்பொடு மணத்தை யேசெய்
குன்றையின் மலைக்குள் மேவு—குகநாதா !—[...]

1699. வானில் மேவிய சோலை சூழ்தரு வாகு லாவிய—நலமேசேர்
மேனி லாதவழ் தோகை மாமலை மீதி லேவரு—குகநாதா!
கானில் வாழ்வுறு வேட நாயகி காத லாய்மரு-வியதோளா!
தேனி னீபமென் மாலை சேர்புய! சேவ லா!அருள்-புரிவாயே!

1700. மண்டு போரின்மேல் வந்து சூரன்மேல்
—அயிலேதான்—விடுதேவே!
கண்டு போன்மொழி கங்கை நீலியாள்
—தருபாலா!—எனையாளாய்!
வண்டு சூழுமே வம்பு நீபமா
—லிகைமார்பா !—குகநாதா!
செண்டு போலவே திண்சிகா நன்மே
—ரினில்வாசா !—முருகோனே!

1701. பணைத்த மார்புய வலத்த சூரொடு
பகைத்த போரினில்—அடுவேலா!
இணைத்த வார்புனை தனத்தி னுள்குற
எழிற்பெ ணுளொடு—புணர்தோளா!

---

1698. [ ] விடப்பட்டது. 'அருள்வாயே!' எனச் சேர்க்கலாம்.

கணைக்கு நேர்விழி பயிற்று வார்செய்த
　　கலக்கி லேபர—தவியாதே
பிணைத்த நீப! பொன் சீகிக்கு வாழ்குக!
　　பிடித்த வாரண!—அருளாயோ?

1702. வடித்தவேல் விழியாள் மருட்செய்கே சமீனுள்—புவிமீதே!
குடிக்குள்மேன் மையதாய் குறப்பெண் ணுடனே—புணர்
[தோளா!
படிக்குள்வாழ் முடிசேர் பருத்ததோ கையின்மா-மலையாளா!
நடிக்குமா மயிலா! நலத்தைநீ யருள்வாய்!—குகநாதா!

1703. நச்சரா வதிலே நிர்த்தமே யிடுவோன்
　　நற்றுழா யணிமால்—மருகோனே!—குகநாதா!
வச்சிரா யுதனுர் பத்தர்யா வருமே
　　மட்டுலா வியபூ—மழைதாய்நேர்—பணிதேவே!
கச்சுசேர் தனமான் மைக்குநேர் குழலாள்
　　கற்பினுள் குறமான்—அணைதோளா!—[....]
பச்சைமா மயிலா! நற்சிகா மலையா!
　　பத்தர்நா யகமே!—அருளாயோ?—முருகோனே!

1704. வாச மாமலர் மீதி லேவளர் மாது சேர்புய மாயனுர்
நேச மாமரு கேச னே!அருள் நீடு தோகையின் நாதனே!
தேச மேபுகழ் தோகை மாமலை தேவ னே!கன சீலனே!
மாசி லாவயி லாள னே!அருள் வாழ்வை யே!அருள்
[நாதனே!

1705. வஞ்சமிடு சூரன் மார்பில்
　　மண்டிடமுன் வேலை யேவு—செயவீரா!
கஞ்சனுயிர் போக வேசெய்
　　கங்குனிற மாய னுர்தம்—மருகோனே!
தஞ்சமனு கூல மேசெய்!
　　தங்கமலை நேர்சி காமென்—மலையாளா!
நஞ்சையுணு நாதர் பால!
　　நம்புமடி யேனை யாள—வருவாயே!

1706. நச்சரவே புனைசடையார்
　　நர்த்தனமே யிடுமடியார்—அருள்பாலா!
அச்சுதனுர் நறைகமழ்சீர்
　　அற்புதனு ரணைபுயனுர்—மருகோனே!

---

1703. [ ] விடப்பட்டது. 'வடிவேலா!' எனச் சேர்க்கலாம்.

கச்சணிசீ ரிருமுலையாள்
கற்புயர்வே டுவர்குலமான்—மகள்வாகா!
செச்சையதே புனைபுயனே!
சித்ரசிகா மலையரசே!—எனையாளாய்!

1707. கூர்வேலெனும் விழியாள் கோலாகல மடமான்-நலமேசேர்
வார்சேரிரு முலையாள் வாழ்வேடுவர் குலமான்—அணை [தோளா!
தார்சூடிய புயவா! தாமாமயில் முருகா!—எனையாளாய்!
கார்தாவிய நலமார் காமேவிய சிகியா—மலையாளா!

1708. ஒருசூர னுடல்கீற வுயர்வேலை விடுசூர!—எனையாளாய்!
மருநீப மலர்மாலை வடிவான புயமீது—புனைதேவே!
தருசூழு சிகிமேரு தனில்வாழு முருகேச!—அருளாயோ!
கருமேனி விறல்தேவர் கணமேவு திறன்மாயன்—மரு [கோனே!

1709. கொண்டைமயில் வாகனு!
குன்றைமலை யாதிபா!—எனையாளாய்!
வண்டர்படி நீபமா
மன்றன்மலர் மாலையாய்!—அருளாயோ?
அண்டர்பணி நாதனே!
அன்பனிட மாவலாய்—வருவாயே!
கண்டமது நீலனுர்
கங்கையுமை யாள்சொல்பா—லக! வேளே!

1710. எதிர்வரு சூரனை யிடறிய சேவக!—எனையாளாய்!
கதிர்வடி வேலவ! கருணையின் நாயக!—அமரேசா!
நதியணி வேணியர் நலமிகு பாலக!—முருகோனே!
மதிதவழ் தோகையின் மலைதனில் வாழ்குரு—பர! வேளே!

1711. சாகர மிசைதுயின்மால்
தார்துள வணிபுயனுர்—மருகோனே!
மாகம ததில்வருசீர்
வாழ்மதி முகமாடவாள்—குறமானுள்
ஆகம துருகிடவே
ஆவலொ டணைதனிலே—புணர்தோளா!
கோகனக மலரள்சேர்
தோலமிகு சிகியின்மேல்—வருதேவே!

1712. கச்சையணி முலையாள் கட்டழகி குறமான்—அணைதோளா!
நச்சரவு புனைவோர் நர்த்தனம திடுவோர்—அருள்பாலா!
பச்சைமயின் முருகா! பட்சமுட னடியே—னிடம்வாராய்!
செச்சையணி புயனே! சித்ரமிகு சிகிமா—மலையாளா!

1713. வான நாயக னுவ லாகிய மாது சேர்புய!—எனையாளாய்!
ஞான மாமுனி வோர்க ளேபணி நாத னே!குக!-குருநாதா!
கான மேவரு வேட நாயகி காத லாய்மரு—வியவாகா!
தான மாமத யானை சோதர! சார்சி காமலை—முருகோனே!

1714. கடமத் மொழுகிய யானை யானனர்
கருதிய துணையுள ஞான நாயக!—எனையாளாய்!
திடசவு ரியபல சூர னுர்படை
தெறிபட வயில்தனை யேவு மாகன—செயவீரா!
நடமிடு சிறைமயில் வாக னு!அருள்
நலமிகு நினதடி யார்கள் பாலெதிர்—வருவாயே!
தடமதி தவழ்நிதி யான கோடுகள்
தழைசிகி மலைமிசை வாழு நாயக!—முருகோனே!

1715. வனசமலர் மீது வாழும் மகிமையுள மாது போலும்
—வடிவாமே—குறமானுள்
தனதுமய லாசை யான்முன் றனைபொழில்க ளூடு தேடு
—வடிவாளா!—எனையாளாய்!
அனமதனி லேறு வீரர் அமரர்முத லோர்கள் நாளும்
—பணிபாதா!—குகநாதா!
சினவவுணர் கால! கோல சிகிமலையின் வாச! நாய
—னிடம்வாராய்!—தனியாயே!

1716. அடுத்து வந்தெதி ராடிய சூருடல்
அறுக்க மிஞ்சிய கூரயி லேவிய—செயவீரா!
தொடுத்து ரஞ்சித மாகிய மாலிகை
சொருக்கி லங்கிய சீர்குழல் நாயகி—குறமானுள்
கொடுத்த வன்பொடு லீலைக ளாலவள்
குணத்த மூழ்ந்திய நாயக னே!அரு—ளுதவாயோ?
அடுத்த வம்பனை யாதரி யாய்!குக!
அருட்செய் குன்றையின் மாமலை மேல்வரு-முருகோனே!

1717. கயிலாச மலைமீது கமழ்தேவர் புணர்மான்
குயிலான மொழிமாது குருநீலி புதல்வா!
அயிலாள! எனையாள்வை! அழகான குமரா!
மயிலாள! சிகியான மலைமீது வருவாய்!

1718. வாசனை படைத்த நீப
மாலிகை தரித்த மார்ப !—எனையாளாய் !
யோசனை நினைக்கொ ணாது
ஓர்மயில் படைத்த தேவ !—என்முன்வாராய் !
தாசனை மகிழ்ச்சி யாக
தாரணியில் மெத்த வாழ—அருளாயோ ?
ஈசனை நிகர்த்த தேவ !
ஏர்மிகு சிகிப்பொன் மேரில்—வருவீரா !

1719. கனகமலை நிகராகிய பொழில்களுல வியசீருள
கனமுலவு சிகிமாமலை—வருதேவே !
வனசமலர் தனில்வாழ்வுறு அயிலிலகு விழிநாயகி
வடிவுதிகழ் திருமா துட—மருகோனே !
அன நடைகள் பயில்நாயகி குறகுலமெ னமையாளொடு
அருமையுடன் நசையாய்மரு—வியதோளா !
என துமன இருளோடிட வரமுதவு செகநாயக !
எழில்மயிலின் வருசேவக !—முருகோனே !

1720. கடமத மொழுகிய விறல்கெழு மியகன
களிறின்வ தனருட—துணையாளா !
மடமயி லெனவரு வடிவினள் குறவர்தம்
மகண்மய லொடுமரு—வியதோளா !
திடமிகு மசுரர்கள் ரணகள மதில்வரு
திரள்படை யதிரிடு—செயவேலா !
நடனமி டுகுருகு மிசைவரு குருபர !
நறைகமழ் சிகிமலை—முருகோனே !

1721. கூர்வேலனே ! கோவே!குகா !—எனையாளாய் !
சீர்தோகையாய் ! நீீபமா—மலர்வாகா !
கார்மேனியார் காவாழ்வுளோர்—தருமானுள்
சேர்தோளனே ! சீர்தோகையா—மலையாளா !

1722. சூருடலின் மீதிலே தூயவடி வேலையே—விடுவீரா !
காருலவு கேசமான் காதன்மிகு வேடமான்—அணைதோளா !
சீருலவு நீபமாம் தேனொழுகு மாலையாய் !—அருளாயோ ?
தாருலவு மார்பனே ! சாரன்மிகு தோகைமா—மலையாளா !

---

1719. குறகுலமென் அமையாள் ; அம்மையாள். நசை - விருப்பம்,

1723. கந்த மாகிய நீப மாலிகை கண்ட மீதணி நாதனே!
அந்த வானவர் ஞானவோர்கன அன்ப ரேபணி பாதனே!
சந்த நாவல! தோகை மேல்வரு சங்க ரா!குக! ஆள்வையோ?
இந்த லோகர்கள் வானு ளோர்பணி எங்கள் தோகையின்—
[மேருளோய்!

1724. கரும்புபோல் மொழியாள் இலங்குகூர் விழியாள்
கனிந்தசீ ரிதழாள்—வடிவேசேர்
அரும்புபோ னகையாள் குரும்பைபோல் முலையாள்
அணங்குவே டமினுள்—புணர்தோளா!
விரும்புசீ ரடியா னிடஞ்செய்வாய் நலமே
விளங்குதோ கையின்மா—மயிலாளா!
சுரும்புசோ லைகள்சூழ் சிகண்டிமா மலையா!
தயங்குமா யுதவே—லணிவேளே!

1725. வஞ்சக மிடுசூரன் மிஞ்சிய படையாவும்
மங்கிட வயிலேவு—செயவீரா!
கஞ்சனை யுயிர்மாள வென்றிடு விறலாள!
கங்குலி னிறமாயன்—மருகோனே!
கொஞ்சம தியைவேணி யின்றணி யெழிலாக
கொண்டிடு வரனுர்தம்—மகவேளே!
விஞ்சைய ருயர்வானர் அண்டிட அரிதான
மின்பயில் சிகிமேரில்—வருதேவே!

1726. கடிகம ழிலகிய அற்புத மடமான்
கனதன மதிலிரு கைக்கொடு புணர்மால்-மருகோனே!
பிடிபடு மடநடை வெற்பம ருமையாள்
பிரியம துடனருள் புத்திர! மலர்மா—லிகைமார்பா!
இடியென அதிரநெ ருக்கிய படையோர்
எதிரிட வருமவு ணர்ச்செய மிடுவேல்—அணிவோனே!
குடிமிகு குறவர்கு லக்கொடி கணவா!
கொடுமுடி களுயர்சி கிக்கிரி யரசே!—எனையாளாய்!

1727. தந்தியின் முகத்தனுர்
தந்துணை படைத்தவா!—எனையாளாய்!
கந்திகல் கருத்தினுள்
கங்குலி னிறத்தவே—டுவர்மானுள்
கொந்திகல் மலர்ப்பெணோர்
கொண்டிடு குறப்பெணுள்—புணர்தோளா!
செந்தியின் மலைக்குகா!
தென்சிகி மலைக்குள்வாழ்—குகநாதா!

1728. கங்குனிற மேனியார் கஞ்சமலர் மாதினுள்
—புணர்மாயோன்—மருகோனே!
திங்களணி வேணியார் தென்கயிலை யீசனுர்
—அருள்பாலா!—எனையாளாய்!
பங்கில்வளர் வேடுவோர் பைங்கிளியை யாவலாய்
—அணைதோளா!—முருகோனே!
மங்குல்தவழ் சோலைசூழ் மஞ்சுலவு தோகைமா
—மலையாளா!—[……]

1729. பவள வாயினுள் பரிய மார்பினுள்
—குறமானுள்—புணர்தோளா!
கவள யானையார் கருது சோதரா!
—அருளாயோ?—முருகோனே!
தவள மேனியார் தனையெ னுவிலே
—[…….]—அருளாயோ?
புவன மீதிலே புகழ்செய் தோகைமா
—மலையாளா!—[……]

1730. பருத்தமா முலையாள் பணைத்தசீ ரிருவா—குளமானுள்
திருத்தவே டமினுள் சிறப்பதா யணைதோள்-முருகோனே!
கருத்தனே! அருள்வாய்! கமழ்ச்சியா கியமா—லிகைமார்பா!
விருத்தகோ டுகள்சேர் மிகுத்ததோர் சிகியா—மலையாளா!

1731. தந்திமுக வற்கிளைய [பைந்தமி ழுலாச]
சந்த்ரனை நிகர்த்தமுக! இந்தவரு ளைத்தா!
கொந்துள கடப்பமலர் மன்றல்கொள் சரத்தைநனி
கொண்டிடு புயக்குமர! வந்தருள் கருத்தாய்!
முந்தவரு மற்புயவன் மங்குமவு ணற்குவொரு
முன்செல வயிற்கொடெதி ரன்றுசெய முற்ருய்!
பந்திநிரை யுற்றமண மிஞ்சிய பொழிற்குலவு
பண்புயர் சிகிக்கிரியில் வந்தினி திருப்பாய்!

---

1728. […] 'குமரேசா!' எனச் சேர்க்கலாம்.

1729. [ ] விடப்பட்டவை. முறையே, 'வருமாதே' 'குருநாதா' எனச் சேர்க்கலாம்.

1731. [ ] சந்தம் பொருந்தவில்லை.
'பைந்தமிழ் விருப்ப! குக!' எனப் படிக்கலாம்.

1732. செண்டடைதிகர் மாமுலை
திங்க ளொகிக ரானனம்—நலமாமே
கொண்டல் கொள்குழ லாள்நய
கொஞ்சி யகனி வாயினள்—குறமானுள்
தண்ட லைதனி லேயணை
தண்க மழ்மிகு நீபமென்—மலர்பார்பா!
அண்டர் கள்பணி தோகையின்
அங்கி ரிதனில் வாழ்வுறு—குகநாதா!

1733. [வால வேல்கொடு சூரன்மேல்
வாதி னுலெயு நாதனே!—அருளாயோ?]
நீல மேனியின் மாய னுருயர்
நீடு காதல தான தோர்கன—மருகோனே!
சூல பாணியர் வாள ராவணி
சூடு வேணியர் பால கா! இனும்—அருளாயோ?
தால மேபுகழ் தோகை மாமலை
தாணு வே! செய மாத வா![.........]

1734. மறைபக ரரியிரு முனிவர்கள் பணிபுரி
மகிமைகொ ளரனருள்—புதல்வோனே!
கறையகல் மதிமுக வடிவுள குறமகள்
கனதன மிளகிட—அணைதோளா!
சிறைவிரி மயில்மிசை வருகுரு பர!குக!
சிகிமலை தனில்வரு—துரைவேளே!
பிறையெயி றுளகண பதிதுணை முருகைய!
பிரபல மிகவருள்—புரிவாயே!

1735. வாதுபுரி சூர னுவி
மாயவட லேசெய் வேல!—எனையாளாய்!
கோதுபுரி வோர்கள் தானை
கூறுபட வேசெய் நாத!—அமராளா!
சூதுபுரி மார்பின் மாது
தோகைகுற மானை நாளும்—அணைதோளா!
சேதுநிற மேனி யாள!
தேவசிகி யான மேரில்—வருகோவே!

---

1733. [ ] முதலடியின் சந்தம் வேறு.
[ ] விடப்பட்டது. 'குக!—அருளாயோ!' எனச் சேர்க்கலாம்.
தாணு: சிவன் பெயர், முருகனுக்கு வந்துளது.

1736. கடம்பவன நாத ரீசர்
கரந்தைபுனை வேணி யார்தம்—இடமேசேர்
குடங்கொள்தன மாது தேவி
குழந்தை! எனை நாளும் வாழ—அருளாயோ?
நடம்பயில்செய் தோகை மீது
நயந்துவரு தேவ தேவ!—எனையாளாய்!
தடங்குலவு சோலை சூழு
தழைந்த சிகிமேரில் வாழு—முருகோனே!

1737. காத லாகிய வேட நாயகி காவி லேயணை—புயவேளே!
நாத னார்கயி லாச னாருள் நாக னார்புண—ருறுமானுள்
மாதி னுள்தரு பால கா!குக! வாச நீபமென்—மலர்மார்பா!
கோதி லாதபொன் மேரை யேநிகர் கூறு தோகையின்—
[மலையாளா!

1738. இந்த வாழ்வது சிந்தி டாதருள்
இந்தி ராதிபர்—பணிதாளா!
சந்த நாவல னென்ற பேர்பெறு
சந்த்ர வானன—முருகோனே!
கந்த நீபம ணிந்த நாயக!
கங்குன் மேனியர்—மருகோனே!
அந்த மேவுசி கண்டி யாதிப!
அன்பன் மீதருள்—புரிவாயே!

1739. வஞ்சனை மிகுசூர்மா வந்திட வயிலேவு—செயவீரா!
கஞ்சனை யெதிராடும் கங்குலி னிறமாயன்—மருகோனே!
வஞ்சிபொ னிறமானுள் வம்புகொள் முலைவேடர்—மகள்
[தோளா!
ரஞ்சித மிகுதேவே! நன்றுகொள் சிகிமேரில்—வருதேவே!

1740. வஞ்சி நேரிடை மாதினுள்
வம்பு சேர்தன மாதினுள்—உமைமானுள்
நஞ்சு சேர்மிடர் நாதனுர்
நந்து சேர்கர நாதனுர்—அருள்பாலா!
ரஞ்சி தா! குக! நாயகா!
நம்பி னேனரு ணீசெய்வாய்!—அமரேசா!
அஞ்சி யேவரு சூரனே
டன்று போர்புரி தோகைமா—மலையாளா!

1741. விடவரவி னுடனெளிய வுலகமது கிடுகிடென
விரைவினட மிடுமயிலில்—வருதேவே!
அடியனுட மிடியகல நிமிஷமதி லொருகிருபை
அருளுவது சமயமினி—யிலையேதான்
குடவளையி ஞெளியுள்வர குமுறொலியை மிகுவயல்கள்
குலவுவள மிகவினிய—தொருநேமா!
புடவிதனி லுனையலது எளியன்மிடி தவிர்வரெவர்?
புகல்! சிகியின் மலையின்முரு—கையவேளே!

1742. பொருது சூருடல் கிழிய வேயொரு
புகையி லாவயில்—விடுவேளே!
விருது கூறிய வவுண ஞர்குலம்
விரைவி லேயழி—படவேதான்
கருது நேமியை விடுநல் மால்கன
கமலநாயகி—புணர்மாயோன்
மருது வீழிட வுதையு மாதவன்
மருக! தோகையின்—மலையாளா!

1743. வனச மாமல ரணையின் மீதுறை வனிதை மேவிய
—புயமாயோன்—மருகோனே!
கனக மேருவை நிகர்சி காமலை
கமழு மேருவின்—நலமாவே—வளர்தேவே!
மனது நோய்தவி ரிடவு நீயருள்
மயிலின் வாகன!—முருகோனே!—எனையாளாய்!
புனமி ஞேடுற மகிழ்வ தாயணை
புய! இ நாளடி—யவர்நாதா!—அமரேசா!

1744. மீறிவரு சூரனுடல் நாசமிக வேசெயநன்
வீரவயி லேவுகன—முருகோனே!
கூறுபடை வேலைநிகர் பார்வைகுற மாதுபுணர்
கோகனக மாவதன!—எனையாளாய்!
நாறுமலர் நீபமதை மார்பிலணி தேவ! குக!
நாவலவ! நாயனிடம்—வருவாயே!
தேறுபட நீயருள்செய் தோகைமலை மீதுவரு
தேவகுரு நாத! மயின்—முருகோனே!

1745. கொஞ்சிய கிளிமொழியாள் கிஞ்சுக மெனுமிதழாள்
கும்பமெ னிருமுலையாள்—நலமேசேர்
வஞ்சியை நிகரிடையாள் அம்புய விருவிழியாள்
வங்கண மிகுகுறமான்—அணைதோளா!

நஞ்சிக லரவினிலே யின்றுயில் புரியரியார்
நன்றுகொள் மருகையனே !—எனையாளாய்!
மஞ்சுகள் தவழ்முடிசேர் குன்றையின் மலையரசே!
மன்றல கமழ்மலர்மா—லிகைமார்பா !

1746. மன்றல்கமழ் நீபமலர் வந்தபுய நாதா !
அன்றுவரு சூரன்முத லஞ்சுமயி லாளா!
குன்றைமலை மீதுவரு கும்பமுனி நாதா !
கொன்றைநதி சோதிமதி கொண்டவரன் பாலா!

1747. கான மாதினுள் காதலாகவே—புணர்தோளா !
வான நாதனர் வாழ்வ தாகவே—பணிதாளா !
தான வோர்களே சாக வேலையே—வியவீரா !
ஞான வேதனர் நாத ! தோகைமா—மலையாளா !

1748. கொங்குலவு மாலையணி கொண்டல்படி கேசமிகு—குற
[மானுள்!
அங்கமதி லேமருவு அந்தமிகு நாத ! இனம்—எனையாளாய் !
சங்கர ! சி வா! குமர! சந்த்ரவத னு! அருள்செய்!-அமரேசா !
மங்குறவழ் சோலைநிறை மன்றல்மிகு தோகைமலை—முரு
[கோனே !

1749. கொண்டல்கொள் குழல்மடவார்
கொண்டிடு மயலகல்வே—செயுவாயே !
மண்டப நிறைசிகியாய்
வந்திடு மலையரசே !—எனையாளாய் !
வண்டணி மலரணிவாய் !
வஞ்சனை யசுரனையே—கொலும்வேலா !
அண்டர்கள் பணிசரணு !
அன்பன்மு னினிவருவாய் !—குகநாதா !

1750. பாதவ மிகுத்தகன கானக மதிற்குலவு
பாவையை மகிழ்ச்சியொடு—புணர்தோளா !
சீதமதி யைச்சடையின் மீதணி கருத்தர்தரு
தேவதை ! எனக்குவரம்—அருளாயோ ?

---

1750. பாதவம் = மரம்.

போதுதி லுயர்ச்சிபெறு நீபமல ருற்றபுய !
போதகமுகத்தருட—துணையாளா !
தாதவிழ் மலர்ப்பொழில்கள் சூழுயர் சிகிக்கிரிய !
தாகமொடெனக்குநல—முதவாயோ ?

1751. மரகத மணியென வொளிவிடு நிறமிகு
கார்போலவு மேலோர்
மணமுல வியதொரு வனசம தனிலுறை
மானுள்மரு கோனே !
அரவுட னெளிபட நடமிடு மயின்மிசை
வாராய்!அம ரேசா !
அசுரர்கள் குலமது அழிபட வயில்விடு
சூரா ! பெலவீரா !
இரவியை நிகர்மணி தழுவிய முடிபுனை
வானோர்முத லானோர்
எனதுட திறையிது எனதுட திறையிது
பாராய் ! என வாளாய்!
பரவிய வடியவர் மிடிதவி ரிடவருள்
தாராய் ! முரு கேசா !
பணைபொழி லுலவிய சிகிமலை மிசைவரு
கோவே ! அருள்தேவே !

1752. மண்டப மாகிய பங்கய மீதினில்—வருமானுள்
மண்புவி மாமயி லுந்தின மேவிய—விறல்மாயோன்-மரு
அண்டர்க ளேபணி அம்புய மேநிகர்-இருபாதா ![கோனே !
அந்தர மேலுயர் குன்றையின் மேல்வரு-முருகோனே!-
[இணையாளாய்!
துண்டம தாகிய வெண்பிறை சூடிய—வவர்பாலா !
தொங்கல்க டாவிய நன்பரி மேல்வரு-குகநாத !—அம
கண்டவர் மாகவி வென்றிட வேயருள்—புரிவாயே ! [ரேசா!
கஞ்சனை யேசிறை யன்றுசெய் வாயினி-அருளாயோ ?
—செகநாதா !

1753. மங்குறவழ் குன்றைமலை வந்தமுரு கோனே !
வம்புபுனை யம்புயமெ னுஞ்சொலிரு தாளா !
கங்குலி னிறங்கன திலங்கிடமு னேரே
கண்டவர் பயங்கொள வெதிர்ந்துவரு சூர்மா

செங்குருதி சிந்தியிட வென்றஅயி லாளா!
செந்தமிழ் பயின்றியல் பறிந்தபுல வோனே!
கொங்குலவு தண்டலையில் அன்றுகுற மானுள்
கொண்க! அடி யென்றனெதி ரின்றுவரு வாயே!

1754. கனககும்ப மெனநிறைந்த—முலையாளே
கமழுகின்ற மலரணிந்த—குழலாளே
வனமடந்தை தனையணைந்த—குகநாதா!
மகிழ்சிறந்து அடியன்முன்பு—வருவாயே!
தனதனென்று நிதிசிறந்து—மிகவேதான்
தழைகவன்பு மிகவரங்கள்—புரிவாயே!
வனசமண்ட பமதிலங்கு—மயிலாளே
மருவு குன்றை மலையிலங்க—வருதேவே!

1755. விடவரவு முடிநெளிய நடனமிடு மிருசரண
விறலி ஞைசயா கியவு லாசமா—மருகோனே!
தொடரவரு பிறவிதனை யடியரிடம் விலகிவிடு
விரைகொ ணீபமா மலரின் மாலையே—புனைமார்பா!
கடகரியை நிகர்வதனர் துணைவனென வருகுமர!
கலக மாவையே யெதிர வேலையே—வியவீரா!
வடவரையை நிகருமொரு சிகரமிகு வுயர்சிகிரியின்
மலையின் வாசனே! அருள்செய் நாதனே!-எனையாளாய்!

1756. சகல புவியிலுள வடிய ருடமிடிகள்
தவிர வரமருளு—முருகோனே!—கணநாதா!
அகல மிலகுதிரை யுலவு கடலீலர
வணையின் விழிதுயி லு—விறன்மாயோன்-மருகோனே!
பகர வொருகிரியை யெதிர வருவசுரை
பழகும் அயிலதனை—விடுதேவே!—எனையாளாய்!
மகர வலைகள்மிகு வளையு மொருசிகிரியின்
மலையின் வருகுமர!—குருநாதா!—அமரேசா!

1757. கனக மன்றினி னடன மன்றுசெய்
கமழ்செய் கொன்றையை—அணிவோர்பால்
மனது கந்திடு மிமய நன்கிரி
வளரு மம்பிகை—புதல்வோனே!

---

1755. விறல்-திருமால்.

தினக ரன்றனை நிகர்க டம்பணி
திறல்கொ ளும்புய !—முருகோனே !
அனகி றைந்திடு தடமி குந்திடு
அருள்சி கண்டியின்—மலையாளா !

1758. கஞ்சனை வதைத்தமால்
கஞ்சம திருப்பரே—பணிமேலோர்
நஞ்சினை வருத்தினோர்
நன்றுள சுபத்திரா !—எனையாளாய் !
வஞ்சக மிகுத்தமா
மங்கிட வயிற்கொடே—வியசூரா !
தஞ்சம ருளைச்செய்வாய் !
தங்கிய சிகிப்பொன்மா—மலையாளா !

1759. கனக மேரு முலையாள் கமல மாது நிகர்வாள்
வனச மான முகமான் வனமி னளை யணைவாய் !
அனம தேறு மறைசேர் அயனு மாலு மறியாய் !
சினவ ராவின் முடிவாழ் சிகியின் மேரி லரசே !

1760. அடியரு டையகலி பொடிபட வருள்புரி
அழகிய மயின்மிசை—வருவேளே !
கடிகம ழிலகிய இதழ்நிறை மதுவுள
கமகம வெனவுயர்—மலர்நீபா !
கொடியது புரிவரு அவுணர்க ளுடகன
குடியழி படவயில்—விடுவீரா !
படிபுகழ் சரவண பவ!குக ! குருபர !
பருமுடி யுயர்சிகி—மலையாளா !

1761. சகல கடுவினை பொடிகள் படவருள்
தருவை குக!குரு—பர!வேளே!
பகர வுயர்கிரி அயிலை விடுபவ !
பரம சிவசுத !—கணநாதா !
மகர மெறிகட லதனி லரியணை
வளர்க ணரியுட—மருகோனே !
செகம தனிலுயர் புகழ்கொள் பழமலை
சிகர மிகுசிகி—மலையாளா !

1762. நம்பிய வடியவர் தம்பகை யகலிட
நன்றுகொள் வரமருள்—புரிவாயே !—குகநாதா !
வம்புசெ யவுணர்கள் தங்குல மழிபட
வந்தடல் புரிகுரு—பரவேளே !—எனையாளாய் !

அம்பெனு மிருவிழி யிங்தென வொளிர்முக
அம்புய மலர்மகள்—புணர்மாயோன்—மருகோனே!
கும்ப முனிபரவு கின்ற சிகரமிகு
குன்றையின் மலைவரு—துரைவேளே!—அருளாயோ?

1763. சந்த மெய்த்தமிழ் பாட வேயருள்
சங்க ரற்கொரு பால னுகிய—முருகோனே!
அந்த ரத்தவர் யாரு மேபணி
அம்பு யத்தினை நேரு மேயிரு—பதநாதா!
சுந்த ரத்துரை மாதி னுளொடு
தொங்க லிற்குழல் வேட நாயகி—புணர்தோளா!
பைந்த ருப்பொழில் சூழு மேன்மைகொள்
பங்க யத்திரு வாழ்சி காமலை—வருதேவே!

1764. வஞ்ச மனத்த னுக வுந்து பெலத்த னுன
வந்த வுணர்க்கு வீறு—படையாளா!
நஞ்ச மிடற்றி னுர்தம் பங்கி லிருக்கு மாது
நங்கை யுமைப்பெ ணுள்தன்—மகிழ்பாலா!
கஞ்ச மலர்க்குள் வாழ்வு என்று மிகுத்த மாது
கங்கு னிறத்த ராசை—மருகோனே!
தஞ்ச மெனக்கு நீசெய்! குன்றை மலைக்கு வாச!
தந்தி முகற்கு நேரு—மிளையோனே!

1765. எதிராய்வரு மசுரோனுடல் இறுவாய் விட—உடனேதான்
கதிராகிய அயிலேவிய கணநாயக!—அருளாயோ?
மதிசூடிய சடையார்புணர் வளர்மாதுமை—புதல்வோனே!
துதிசேர்சிகி மலைமேல்வரு துரையே!அருள்—புரிவாயே!

1766. மயிலேறிய துரையே! மகிழ்வாய்வர மருள்வாய்!
அயிலாலெதிர் வருமோர் அசுரோனுடன் அடுவாய்!
குயிலாகிய மொழியாள் குறநாயகி கணவா!
ஒயிலா!குரு பரனே! உயர்தோகையின் மலையா!

1767. மாலை மதியைமண மாலை யதனையணி—முடியார்பால்
மாலை யுடன்மருவு மாது வுமைதனுட—புதல்வோனே!
சேலை நிகரும்விழி சீர்கொள் குறவர்மகள்—புணர்தோளா!
வேலை வளைபுவன மீதி லுயர்சிகியின்—மலையாளா!

---

1762. இந்து - திங்கள்.

1768. வஞ்சனை படைத்த சூரன்
மங்கிட வயிற்கொ டேவு—செயவீரா!
கஞ்சமல ருற்ற பாத!
கங்குலின் நிறத்த மாயன்—மருகோனே!
நஞ்சணி மிடற்றர் பாக
நங்கையின் மகிழ்ச்சி யான—புதல்வோனே!
மஞ்சணி சிகிப்பொன் மேரில்
வந்தவ! எனக்கு மேன்மை—அருளாயோ?

1769. பிறையுற்றிடு நுதலாள்
பிணையுற்றிடு விழியாள்—கொடிபோலே
குறையுற்றிடு மிடையாள்
குணமுற்றிடு குறமான்—அணைதோளா!
நறையுற்றிடு மலரான்
நளினக்கொடி புணர்மால்—மருகோனே!
மறையுற்றவர் புகழ்சீர்
மகிமைச்சிகி மலைமேல்—வருதேவே!

1770. வருகார்பொழி மழைபோலவும்
வழிமாமத விறலானையர்—துணையாளா!
கருமாமுகி லெனுமேனியர்
கனதானவர் குலமாவுடன்—அடுசூரா!
மருமாமல ரெனுநீபமென்
மதுமாலையை யணிமாபுய!—எனையாளாய்!
தருவாய்வரம்! இனியாரருள்
தருவார்?சிகி மலைமேல்வளர்—குகநாதா!

1771. வஞ்சமிடு சூர னுவி
மங்கவயி லேவுவீர!—எனையாளாய்!
கஞ்சமலர் வாழு மாது
கங்குனிற மேனி மாயன்—மருகோனே!
நஞ்சவிழி வேட மாது
நன்றுபெற மேவு நாத!—முருகோனே!
தஞ்சமிலை யானை யா!பொன்
தங்குசிகி மேரில் வாழும்—முருகோனே!

1772. வார்புனை முலையாள் தூதுளை யிதழாள்
மானிகர் விழியாள்—குறமானுள்
கார்புனை வனமூ டேதிரி யுறுநாள்
காதல்கொ ளிடவே—புணர்தோளா!

தார்புனை புயவா! நீயினி யெனையே
தானுயர் பெறவே—அருளாயோ?
சீர்புனை சிகியா மாமலை யரசே!
தேவர்கள் துரையே!—எனையாளாய்!

1773. வித்துரு மத்தை நிகர்த்திடு பொற்பிதழ்
விற்குநி கர்ப்புரு வத்தின ளற்புத—மடமானுள்
முத்து நிரைத்த எயிற்கொடி பொற்புறு [டனே தான்
மொய்த்த குழற்குற வர்ப்பெணை யிச்சையொ—
குத்து முலைக்குட மத்தை நெருக்கிமை [தோளா!
யுட்கல வித்தொழி லெட்டொடு வற்பொடு—புணர்
அத்துவி தத்துமு டிப்பொரு ளிப்பருள்
அற்புத நற்சிகி யிற்றுரை! வித்தையை—அருளாயோ?

1774. வந்தடலைப்புரி யும்பல முற்றவன்
மண்டு கறுப்புறு கின்ற நிறத்தினன்—எனுமாவோ(டு)
உந்தயி லைக்கொடு வென்று செயக்கணி
உம்பர் வியப்புற அன்று தரித்திடு—முருகோனே!
கந்த! எனத்துதி அன்ப னெனக்கருள்!
கண்டி முதற்றல மெங்கும் விளக்கிய—அமரேசா!
உந்த னடித்துணை யென்றலை வைத்தருள்!
ஒண்புய லுற்றிடு குன்றை மலைக்குரு—பரவேளே!

1775. படவர வுடனெளி படவுட னடமிடு
பருமயின் மிசைவரு குருபர சரவண-நாதா!மாதேவே!
அடமுள பவன்மலை நிகர்புய னெனவரும் [தானே
அவுணர்கள் குலமுயர் படவெதி ரசுரனை—வேலாலே
தடவக லமதனில் விடுசெய மிகுகுக!
தரியலர் குலகல! அடியவர் மிடியறி—வாயேநீயேதான்
மடமயில் குறமகள் தனைமரு வியபுய! [கோவே!
வடிவுள சிகிமலை யதில்வளர் முருகைய!—தேவேமா

1776. அரகர வெனநித முயர்வரு சனதியி
னடியவர் பணிபுரி—பிருதாளா!
சரவண பவ!குக! குருபர! முருகைய!
அசுரர்கள் குலகல!—எனையாளாய்!

---

1773. எயிறு எனற்பாலது 'எயிற்' என நின்றது. நெருக்கி இமையுள். 'கலவித் தொழி லெட்டொடு மெட்டொடு' என இருப்பின் நலம்.

1775. குலகல: குலகால! (குறுக்கல் விகாரம்)

பரவையின் விழிதுயில் அரிமகி ழுமருக!
　　பதுமமி னிகர்குற—மகள்தோளா!
உரகர்த முடிமிசை வளர்சிகி மலைவரு
　　ஒளிரயில் முருகைய!—வருவாயே!

1777. வஞ்சனை யுற்றசு ரன்றனை மெட்டொடு
　　வந்தக ளத்தினி லன்று வதைத்திடும்—அயிலாளா!
நஞ்சமி டற்றினர் செஞ்சடை யுற்றவர்
　　நந்து தரித்தவ ரன்பு மிகுத்தருள்—குகநாதா!
பஞ்சவ ருக்குமுன் னின்று செயித்தவர்
　　பண்பு படைத்தவர் ரஞ்சித முற்றிடு—மருகோனே!
குஞ்சரி யைப்புணர் அம்புய முற்றவ!
　　கொண்டல் படிச்சிகி குன்றை மலைக்குரு—பர! வேளே!

1778. காவு லாவிய வேட நாயகி காத லாயணை—யிருதோளா!
பூவு லாவிய மாது நாயகர் போர்செய் மாயவன்-மருகோனே!
ஏவு லாவிய சூர னுருட லீரு கீளிலை—அயிலாளா!
பாவு லாவிய பாட லேயருள் பாவ லா! சிகி—மலையாளா!

1779. வடுவாகிய விழியாள்குற
　　மகள்மேவிய—புயவேளே!—அருளாயோ?
படுசூருட லிருகூறிட
　　பருமாவயில்—விடுவோனே!—எனையாளாய்!
கடுவேமிகு மிடறூர்தரு
　　கணநாயக!—முருகோனே!—செகநாதா!
உடுபோல்மலர் மிகுசோலைகள்
　　உயர்தோகையின்—மலையாளா!—[....]

1780. வாரணி முலையாள் காருள குழலாள்
　　வானுயர் வனம்வாழ்—குறமானுள்
சீரணி புயமேல் மாலொடு புணர்வாய்!
　　தேவர்கள் பணிசீ—ரிருதாளா!
காரணி விறலார் மேவுள மருகா!
　　காதல்கொ ளடியே—னிடம்வாராய்!
போரணி யயிலா! தோகையின் மலையா!
　　பூமலி மலர்மா—லிகைமார்பா!

---

1779. [...] விடப்பட்டது. 'குமரேசா!' எனச் சேர்க்கலாம்.

1781. கடமத மொழுகிய கறையடி யுள்கன
கரிவத னருடைய—துணையாளா!
மடமயி லெனவரு குயிலெனு மொழியுள
வனமகள் தனைமரு—வியதோளா!
அடமிகு பெலமுயர் திடசவு ரியபுயன்
அசுரர்கள் குலபதி—எதிரானே!
வடவரை தனைநிக ரடியவர் பணிபுரி
மகிமைகொள் சிகிவரை—முருகோனே!

1782. வஞ்சகமிகு சூரன் மார்பினில்
மண்டியவயி லேவு வீர!நல்—வரமேதா!
கஞ்சனையுயி ராவி யேகொளு
கங்குலினிற மாய னுருட—மருகோனே!
நஞ்சணிமிட றூர்தம் நாயகி
நங்கைதன்மன வாசை யாகிய—புதல்வோனே!
மஞ்சதுபடி தோகை மாமலை
வந்தவ!நலம் யாவு மேயருள்—குமரேசா!

1783. வந்தவினைதீர நன்றுலவு தோகை
வண்குலவு சீர்கொள்—மயின்மீதே
அந்தமுட னேறி அன்புமிக வேநின்
அன்பினுட னுசை—யுடன்வாராய்!
கந்தமிகு நீப மஞ்சுலவு மாலை
கண்டமதில் நாளும்—அணிதேவே!
சந்தமிகு பாவி னங்கள்சொலும் வாய!
தண்பொழில்கொள் தோகை—மலையாளா!

1784. வாசனை படைத்த நீப
மாலிகை படைத்த மார்ப—எனையாளாய்!
ஈசனை மகிழ்ச்சி யாக
வேபுணர் துரைப்பெ ணுசை—மகவோனே!
யோசனை படைக்கொ ணுது
ஓகையுட னிப்ப நாயன்—முனம்வாராய்!
பூசனை மிகுத்த பாத!
பூபொலி சிகிப்பொன் மேரில்—வருதேவே!

1785. மணமி குந்திடு மிதழ்நி ரைந்திடு
வனச மண்டப—மடமானுள்—தனையேசேர்
பணமி குந்தர வுடனெ ளிந்திட
பரத முந்திய—திறன்மாயோன்—மருகோனே!

குணமி குந்திடு நலமி லங்கிய
குறவர் தங்குல—மகள்பாகா!—என்னையாளாய்!
தணமி குந்திடு சிகியெ னுங்கிரி
தனில்ந லங்குல—வியதேவே!—முருகோனே!

1786. மதமொழுகு கவுளார் சிறியவிரு விழியார்
வளருமொரு வெயிரூர்—துணையாளா!
கதவசுரர் குலமேல் வருமசுர னுடனே
கதியிலமர் புரிகூ—ரயிலாளா!
பதமலரை நிதமாய் நினைவடிய னிடமே
பருமயிலில் வருவாய்!—அமரேசா!
இதழுலவு மலர்சூழ் பொழிலுலவு சிகியாம்
எழின்மலையி னரசே!—எனையாளாய்!

1787. வடமேரு கிரிமீது வரனூர்த மிடமே
வருதேவி மகிழ்பால!—அருளாயோ?
கடல்மேவு விறலான மலைபோல வுயர்வார்
களிறூன வவர்நேச—மிகுதோழா!
திடமான வசுரோனை அடல்மீது படவே
திகழ்வேலை யணிபாணி!—எனையாளாய்!
குடமான தனமாது குறமாது புணர்வாய்!
குக! தோகை மலைமீது—வளர்தேவே!

1788. ஞானமுனி நாரதனு நான்முகனு நாரணனு
நாடிநித மேபணியும்—இருதாளா!
தேனலர்கொள் மாலையணி சீருலவு மார்ப! உயர்
தேவர்குடி வாழ்கவரம்—உதவாயோ?
தானவர்கள் சேனையது தான்மடிய வேகமொடு
தாமவயி லேவுதிறன்—முருகோனே!
கானவர்கள் மாதுபுணர் காதன்மிகு நாத! அருள்
காரணி சிகாமலையின்—வருநாதா!

1789. இந்தணி சடையார் சிந்துர வுடலார்
இந்திர னிமையோர்—பணிவோர்பால்
வந்தருள் புரிமா னம்புய விழியாள்
வண்புக ழுமையாள்—தருபாலா!

---

1786. ஒரு எயிறூர் - ஒற்றைக் கொம்பர்.

கந்தமு யருநீ பங்கொளு புயவா!
கஞ்சன்மு தலினேர்—பணிபாதா!
செந்தமி ழருள்வாய்! குன்றையின் மலையா!
செந்திரு மருகா!—எனையாளாய்!

1790. கதியாகிய வசுரோனுடல்
கமராகிட அயிலேவிய—செயவீரா!
மதிசேர்முக வடிவாள்குற
மகளேமரு வியநாயக!—எனையாளாய்!
துதிசேரிரு சரண! குக!
துரைவேலவ! அடியேனிடம்—வருவாயே!
கதியேதர நினைவாய்! இனி
கமலாசனர் பணிதோகையின்—மலையாளா!

1791. வஞ்சிநே ரிடையாள் அம்புசேர் விழியாள்
வம்புசேர் முலையாள்—குறமானுள்
வஞ்சிசேர் புயவா! அன்பனு கியநான்
மங்கிடா தினியே—அருளாயோ?
நஞ்சுசேர் மிடறுர் தந்தபா லகனே!
நன்றுமால் மருகா!—எனையாளாய்!
மஞ்சுசேர் சிகியா மந்தமா மலையா!
வந்துதான் வரமே—உதவாயோ?

1792. மதியணி சடையார் கயிலையின் மலையார்
வளையணிகரனு—ரிடமேசேர்
நுதிபெறு அயிலா கியவிரு விழியாள்
நுவலுமை தருபா—லக!வேளே!
கதிபெறு மயின்மே லடியன்முன் வருவாய்!
கமலயன் முதலோர்—பணிபாதா!
நதிமிகு வயல்சூழ் சிகிமலை யரசே!
நலமினி யருள்வாய்!—குகநாதா!

1793. சோமனை முடித்த வேணி மேருவி ருக்கு நாதர்
தூய்பொது நடித்த பாத—ரிடமேசேர்
பூமது மலர்க்கொள் கேச மாதுமை யருட்செய் பால!
போர்புரி அயிற்கை வீர!—எனையாளாய்!
காமனை யளித்த மாய னுர்மருக! வித்தை யீவை!
காரண! குகக்கு மார!—வடிவேளே!
தாமரை படைத்த பாத! தோகையின் மலைக்கு வாச!
தார்புனை புயத்த! வாழ்வை—அருளாயோ?

1794. பர்சமய குலமுழுது மழிவுபட வருகுமர!
பாத சாலனே! லோக நாயகா!—முருகோனே!
அரவினுட வுடனெளிய கிடுகிடென நடனமிடு
பார தோகையா! வான நாயகா!—எனையாளாய்!
சரவணப வ!குருபர! அடியனுட மிடியகல
தாம மார்பனே! சேம மாகவே—அருளாயோ?
குரவுமலர் புனைகுழலி குறவர்மகள் மருவுபுய!
கோல மானதோர் தோகை மேரில்வாழ்—அமரேசா!

1795. கடன்மீதினி லரவோர்புர
கதிரமளிமேல் விழிதுயிலுமால்—மருகோனே!
நடராசர்பொன் மலையார்தரு
கனரிஷபமேல் வருகருணையார்—புதல்வோனே!
மடமாதினுள் குறநாயகி
மருவுபுயனே! தருவைவரமே—நலமாவே!
குடமேநிகர் முடிசூழுயர்
குறையில்சிகியா மலையினரசே!—எனையாளாய்!

1796. கஞ்சத் திருப்பெண் விளையாடு மார்பினர்
கங்குற் கறுத்த வுடலான மாயவர்—மருகோனே!
அஞ்சத் திருத்து மமரேசெய் சூருட
வங்கத் தவிர்த்து விறலான வேலவ!—எனையாளாய்!
மஞ்சத் திருக்க வெதிராக வேமண
மங்கைக் குறப்பெண் ணுயிலாக வேபுணர்—
நெஞ்சத் திருக்கை யகலோட வேயருள்! [இருதோளா!
நிந்தித் தவர்க்கு அருளாத தோகையின்—மலையாளா!

1797. கனகாசல மதிலேயுறை கதிர்மாமதி—புனைவோர்பால்
மனதாசையில் வளர்நாயகி மகிழ்பாலக!—முருகோனே!
சினமீறிய வசுரோரொடு திறல்போர்புரி—அயிலாளா!
அனதானநன் னயமேமிகு அருள்தோகையின்—மலையாளா!

1798. வனச மண்டப மதிலி லங்கிய
வளர்ம டந்தையை—அணைமாயோன்—மருகோனே!
சினமி குந்திடும் அவுணர் தங்குல
திறல்கொ ளும்புயன்—எனுமாவே—அடுவீரா!

---

1795. அரவு ஓர்புர கதிர் அமளி = பாம்பினுடைய ஒருடம்பாகிய ஒளிமிகும் அணை.

மனது கந்தனு தினம்வ ணங்குவர்
மகிழ வந்தருள்—புரிவாயே—மயிலாளா!
தினக ரன்றனை நிகர்கொ டுங்கைகொள்
சிகியெ னுங்கிரி—மலைமீதே—வருதேவே!

1799. வனத்தில் வந்திடு வேடு வோர்குல
மகட்கி ரங்கிமுன் மாலை யேபுனை—மயலாளா!
சினத்தில் வந்தெதிர் சூர னர்படை
திடுக்கி டும்படி வேலை யேவிய—செயவீரா!
மனத்தில் வந்திடு நோயை யேதவிர்!
மலர்க்குள் மிஞ்சிய நீப மாலிகை—புனைமார்பா!
தனத்தில் மிஞ்சிய மேரு வேநிகர்
தழைத்த குன்றையின் மேரு மேல்வரு—முருகோனே!

1800. எதிர வருமசுரர் படைக ளழிவுபட
இமையர் குலபதியு முனிவர் முதலெவரு—நலமாவே
கதிர்கொ ளயிலைவிடு குருபர! சரவண!
கருணை யுடனடியன் எதிர மயிலில்வரு—குகநாதா!
நதிகொ ளுலகமதி லடியவ ருடகுலம்
நலது பெறவருளை யுடனுட னருள்புரி—குமரேசா!
மதிரவி வலம்வரு கொடுமுடி யிலகிய
மகிமையுள சிகியின் மலைமிசை வருபவ!-எனையாளாய்!

1801. வனசமலர் மங்கை கொண்ட அம்புயன்
வனைதிகரி தண்டு தங்கு செங்கையன்—மருகோனே!
புனம்வளரு கின்ற பைங்க ருங்குழல்
புளகமிகு கொங்கை மங்கை யன்பொடு-புணர்தோளா!
கனசம ரடர்ந்து வந்த திண்படை
கதிகொளசு ரன்பின் அஞ்சி நின்றிடும்—அடுவேலா!
தனதுடைய வன்ப ரென்று வந்தருள்
சதுமறை புலம்பு குன்றை யங்கிரி—வருதேவே!

1802. அடத்து மிஞ்சிய சூருடல் கீறிட
அடுத்து வந்தெதி ராடிய கூர்மிகு—அயிலாளா!
நடத்தின் மிஞ்சிய மாமயி லா! கன
நலத்தை யுஞ்செய நீயென்மு னேயினி—வருவாயே!
திடத்தின் மிஞ்சிய ராவண னுருயிர்
செகுத்த செங்கதிர் மாயவ னருட—மருகோனே!
கடத்தின் மிஞ்சிய மாமுக னர்துணை
கதித்த கந்த! சி கூரமலை வாழ்வுறு—குமரேசா!

1803. அகமிஞ்சிய சூருடன் விறல்கொண்டுட னேகன
அமர்வென் றிடு வேலணி—செயவீரா!
மகமிஞ்சிய ஞானிகள் அருள்கொண்டடி யார்முதல்
மதமுந்திய தானவர்—பணிதாளா!
சுகமிஞ்சிய தோர்சொலி மயிலென் றிடு சாயலள்
துரைமங்கையை மாலொடு—புணர்தோளா!
இகமிஞ்சிய வாழ்வருள் எழில்குன்றையி னயக!
எனைவந்தருள் யாவையும்—உதவாயோ?

1804. அடியவ ருடனெதிர் புரிதுயர் முழுவதும்
அழிபட அருண்மழை—பொழிதேவே!
குடியுயர் குறவர்கள் குலமகண் மயல்விழை
குக! சர வணபவ!—எனையாளாய்!
பிடிநடை மடமயி லெனவரு துரைமகள்
பிரியம துடனணை—புயவேளே!
கடிகம ழிலகிய பொழில்மிக வுளதொரு
கனசிகி மலைவளர்—முருகோனே!

1805. வனசம லரினுறை திருமக ளுறைபுயன்
மணியணி யுரவரி—மருகோனே!
கனதன மிலகிய குறமகள் மருவிய
கமழ்புய! முருகைய!—எனையாளாய்!
மனமதி னுறைதுயர் தனையக லிடவருள்
மயின்மிசை வருபவ!—அமரேசா!
இனமணி நிரையுள முடியில கியசிகி
யெனுமலை தனிலுள—செகநாதா!

1806. மதிசூடிய சடையார் மகிழ்வாகிய புதல்வா!
நதிசூழ்சிகி மலையா! நலமேயினி யருள்வாய்!
நிதியாவையு மருள்வாய்! நிமலா! சிறை மயிலா!
அதிபா! அடி யவர்சூழ் அழகாகிய முருகா!

1807. வாதுபுரி சூரனுட னேயெதிர்செய் வேலால்
மாயவடு போர்புரியும் வீரமிகு வோனே!
சூதுநிக ரானமுலை யாள்குறவர் மானுள்
தூயகுற மாதுபுய மீதணையு நாதா!
மோதுபடை யாவும்விழ ராவணன்மு னாலே
மூடுகணை யால்வெல்கன மாயன்மரு கோனே!
ஏதுமறி யேனடியன் வாழவருள் வாயே!
ஏர்சிகியின் மாமலைபின் மீதுவரு தேவே!

1808. வனசமலர் மண்ட பத்தி லென்றுமே
வளர்வடிவி னிந்தி ரைப்பெ ணின்பமாய்
—அணைதோளார்—மருகோனே !
அனவரத முந்த னச்சொ லன்பர்வான்
அமரர்பணி கின்ற நற்ப தங்களே
—இனிதாய்நீ—அருளாயோ ?
புனைசெய்சது ரங்க முற்றும் வந்துபோர்
புரியுமசு ரன்ற னைக்கொல் வென்றிவேல்
—அணிவோனே !—எனையாளாய் !
கனகமலை யென்ற டுத்து வந்துமாக்
கதிர்மதி வலஞ்செய் நற்சி கண்டிமா
—மலையாளா !-முருகோனே !

1809. கஞ்சமலர் மாது மேவு கின்றபுய னை மாயன்
கங்குனிற மான நாதர்—பெலமேசேர்
கஞ்சனுயிர் மாய வேசெய் பைந்துளப மாலை மார்பர்
கம்புதரி பாணி மால்தன்—மருகோனே !
வஞ்சசுர மாவை யேவெல் கொங்குலவு மாலை வேல !
மஞ்சுலவு நீப மாலை—புனைமார்பா !
தஞ்சமெனை யாளும் நாத ! தென்சிகியின் மேரின் வாச !
தந்திமுகர் சோத ரா ! நல்—லருளாயோ ?

1810. மகிமை தங்கிய சிகிபெனுங் கிரி
வளர வந்திடு—முருகோனே !
மகிதலம்புக ழுடியரு ம்புகழ்
வனச மண்டப—மடமானுள்
மகிழ்வு டன்புணர் விறல்ம கிழ்ந்திடு
மருக ! என் றனை—யினியாளாய் !
மகிழ்ந வென்றுனை யினிதி னன்பொடு
மறவர் தங்கொடி—புணர்தோளா !

1811. கொங்குமிகு நீப மாலை
கொண்டபுய நாத ! நாளும்—எனையாளாய் !
கங்குனிற மான கேச மிஞ்சுகுற மாது மேவு
கந்த ! மயி லேறி யேவு—செயவேளே !
எங்குநிறை வான சோதி ! வந்துதய வேசெய் ! தேவர்
என்றுநல மாக வேசெய்—முருகோனே !
மங்குறவழ் தோகை மேரில் வந்தகுக ! நாத ! தேவ !
வண்டமிழ்சொல் பாவ லா ! சண்—முகவேளே !

---

1810. விறல் : திருமால்.

1812. இடியென அதிரிட வருபடை முழுவதும்
இமையினி லழிபட—விடுமாயோன்
கடிமண மிகுபசு துள வணி யிருபுனல்
கமலமி னணைபவர்—மருகோனே!
படிநிறை யடியவர் மிடி துக ளிடவருள்
பரமசி வனைநிகர்—குகதேவே!
அடியனை நலமிக வளரருள் புரிசெக
மகிழ்சிகி மலைவரு—செகநாதா!

1813. சசியணி முடியினர் கயிலையின் மலையினர்
தருமக வெனவரு—குகநாதா!
நிசிசரர் பொடிபட அயில்விடு திறன்மிகு
நிருப!பன் னருள்புரி—அமரேசா!
வசியுள கணையினில் அவுணர்கள் படவிடு
மலர்மகள் புணர்புயன்—மருகோனே!
கசிபட வெதிர்தொழு மடியவ ரிடமருள்
கனசிகி மலைமிசை—வருதேவே!

1814. தடவரை பொடிபட நடைமிகு சிறைமயில்
தனில்வரு குருபர!—எனையாளாய்!
புடவியின் வளருயர் அடியர்மு னருள்மழை
பொழிமுகி லெனநிறை—முருகோனே!
கடமத மொழுகிய கரிமுகர் மகிமைகொள்
கன துணை யுளகுக!—அருளாயோ!
மடமயில் குறமகள் புணர்மல ரணிபுய!
வடிவுள சிகிமலை—வருதேவே!

1815. தகுதி தித்திமி யெனந டித்திடு
சரண முற்றிடு மயிலி லுற்றிடு—முருகோனே!
மகுடம் வைத்திடு அறுமு கக்குக!
மணியி மைத்திடு நகைத ரித்திடு—தடமார்பா!
பகுற லைப்பட வரவி னிற்றுயில்
பதும மெய்க்கொடி தனைய ணைத்தவர்—மருகோனே!
மொகுமெ னக்கன அருவி யுற்றிடு
முளரி நற்றட மிகுசிகிக்கிரி—வருதேவே!

1816. நத்திலகு பாணி மைக்குநிகர் மேனி
நச்சரவி லேது—யிலுமாயோன்—மருகோனே!
சத்திதனை யேவி மொய்த்தபடை யாவும்
சட்டெனவெல் வீர!—முருகோனே!—எனையாளாய்!

1815. பல்+தலை: பஃறலை. இது 'பகுறலை' என விகாரப்பட்டது.

பத்தியடி யார்கள் நித்யசுப மாக
பத்மபத மேசெய்—இனிதாவே—அமரேசா!
சித்ரமிகு தோகை நற்கிரியில் வாழும்
சித்திதரு நாத!—குருநாதா!—அருணீதா!

1817. கொச்சைமிகு குறமான் அற்பிநெடு புணர்வாய்!
கொட்டுநறு மதுநீ—பமென்மார்பா!
இச்சையுட னடியேன் கிட்டவினி வருவாய்!
இட்டமுட னருள்யா—வையுநீதா!
நச்சையணி மிடறூர் பெற்றதொரு புதல்வா!
நர்த்தனசி கியின்மா—மயிலாளா!
செச்சையணி புயவா! மட்டவிழு மலரா!
சித்ரமிகு சிகிமா—மலையாளா!

1818. பாகைநிகர் மொழியாள் சூதைநிகர் முலையாள்
பான்மதியின் முகமான்—நலமாமே
ஓகைபுனே ஒயிலா! வேடுவர்கள் மடமா
னோடணையின் மயலால்—அணைதோளா!
டாகைமிகு மசுரோன் சேனைவிழ வுடனே
தானயில்கொ டுடனே—அடுவீரா!
வாகைபுனே புயனே! வாழ்வுதனே யருள்வாய்!
வாசமிகு சிகிமா—மலையாளா!

1819. கொஞ்சு கிளியின் மொழியாள்
கொண்டல் கொள்குழன் மடவாள்—குறமானுள்
ரஞ்சி தமுட னணைவாய்!
நம்பி னவெனே யினியே—இனிதாளாய்!
மிஞ்சி யவவு ணனேயே
வென்றி டுகதி ரயிலா!—குகநாதா!
பஞ்சி னுமிகு அடியார்!
பண்பு யர்சிகி மலைமேல்—வருதேவே!

1820. கங்கண மிடுபாணி குங்கும மிடுமார்பா!
கங்குலி னுயர்கேச—நயமாமே
வங்கண மிகுவேடர் தங்குல மடமாது
வந்துடன் மயலான்முன்—அணைதோளா!
சங்கரி யுமைமாது அம்பிகை மனதாக
தந்திடு குகநாத!—எனையாளாய்!
கொங்கலர் மிகுசோலை மிஞ்சிய திறலான
குன்றையின் மலைவாழு—முருகோனே!

1821. தந்தி முகனார் ஐந்து கரனார்
தம்பம் வளர்மா—துணையாளா!
மந்தி குதிபோ டுங்க ளைகண்மேல்
வந்து இமையோர்—முதலானோர்
புந்தி மகிழ்வாய் வந்த சிகியாம்
பொங்கு மலையா !—எனையாளாய் !
நந்தி லகுமால் தங்கை புதல்வா !
நம்பு மடியே—னிடம்வாராய் !

1822. மதமு மொழுகிய கவுள மிகுகரி
வதன ருடதுணை—முருகோனே
கதமு மிலகிய வசுர னெடுபகை
கருது செயவயில்—அணிதேவே !
சுதனை யினமினை மிகவு முளகலி
தொலைய வருள்தனை—உதவாயோ ?
இதழ்கள் மிகுமலர் நிறையும் வனமுயர்
எழில்கொள் சிகிமலை—வருதேவே !

1823. வாதுபுரி சூரனுட னேயெதிர்செய் வீரா !
வாசமிகு மாலையணி கூருலவு வேலா !
சூதுகிண மேருகன மானவினை யாமோர்
தூயமுலை வேடமகள் மேவுபுய நாதா !
தாதுதிக ணீபமலர் மாலையணி தோளா !
தாமரைமி னுள்மருக னே!அமரர் தேவா !
மோதுமிரு ளோடவரு சூரியனை நேராய்
மூசுகன கோடுலவு தோகைமலை வாசா !

1824. கஞ்சமலர் வாவிநிறை தண்டலைகள் சூழவரு
கங்குல்படி தோகைமலை—முருகோனே !
நஞ்சமணி மாமிடறர் அன்புவக லாதகுண
நங்கையுமை மாதுதவு—புதல்வோனே !
அஞ்சவரு சூரர்படை நைந்துவிட வேலைவிடு
அங்கைமுரு கேச!மயின்—மிசைவாராய் !
தஞ்சமிலை நீயருள்செய்! நம்புமடி யார்பரவு
சந்த்ரமுக வேள்!குமர !—குருநாதா !

1825. அடத்தில் வந்தெதிர் சூருட னேயுடன்
அடுத்து வென்றிட வேகன போர்புரி—செயவீரா !
நடத்தின் மிஞ்சிய மாமயி லேறிமுன்
நலத்தை யின்றடி யேனிட மேயருள்—புரிவாயே !

கடத்தி னென்புபெ ணுகமு ளுளிடு
    கருத்த னெண்குண நாயக னே!செக—பதியாளா!
தடத்தின் மிஞ்சிய வாவிக ளேமிகு
    தழைத்த குன்றையின் மாமலை வாழ்வுறு—குகநாதா!

1826. தந்திமுகர் துணைவா! என்றனிடம் வருவாய்!
    தஞ்சமிலை யருள்வாய்!—குகநாதா!
அந்திமதி தனையே கொண்டசடை முடியார்
    அன்புமிக வருமா—னுடபாலா!
வந்தி செயும் வலியான் நைந்துவிழ வுடனே
    வந்தபடை விழவே—அடுவீரா!
முந்திவரு வினையா வுந்தவிர்வ னடியேன்
    முன்பு அருள் சிகியா—மலையாளா!

1827. மடவன நடைபயில் வனமயில் குறமகள்—புணர்தோளா!
நடமிடு மயின்மிசை நலமுட னடியன்முன்—வருவாயே!
கடமத மொழுகிய கரிமுக ருடதுணை—முருகோனே!
தடவரை யினுமிகு தகுசிகி மலைமிசை—வருதேவே!

1828. வஞ்ச கமிடு சூர னுவியை வென்றி டுகன வேல வா!அருள்!
    வம்பு யர்மலர் நீப மாலிகை—புனைமார்பா!
கஞ்சனையுயி ரோட வேசெய்த அம்பு யமலர் மாது சேர்புயன்
    கங்கு லினிற மாய னுருட—மருகோனே!
[சொல் பாலக!
நஞ்ச ணிமிட ரூர்தம் மேல்மயல் கொண்டி டுவுமை யாள்
    ரஞ்சிதமிகு வேட நாயகி—புணர்தோளா! [வுறு
மஞ்ச ணிகன சோலை சூழ்வரு குன்றை யின்மலை மீது வாழ்
    வண்ட மிழ்சொலு நாத னேயினம்—அருளாயோ?

1829. திரைக்கடன் மீது துயிற்புரி மாயன்
    சிறப்புள வாசை—மருகோனே!
வரைத்தன மீது குறத்தியை நீடு
    வனத்தினில் மேவு—புயவோனே!
இரைத்துமு ழுக வளைத்தவு ணோர்கள்
    இறக்கமுன் வேலை—விடுவீரா!
விரைக்கமழ் சோலை மிகுத்திடு தோகை
    மீனுக்கிய மேரின்—முருகோனே!

1830. கடம்ப மாலிகை கலந்த மார்பய!—எனையாளாய்!
கடங்கொள் யானையின் கனங்கொள் மாமுகர்—துணையாளா!
தடங்கொள் சோலைகள் தழைந்த தோகையின்—மலையாளா!
தடங்கொள் நேமவண் தயங்கு நாடுள—முருகோனே!

1831. வலைபோலி லறமீது கபடாக வதின்வீழ
மருவாமல் எனையாளு—முருகோனே!
அலைபோல வருநோயை அகலோட அருளேசெய்!
அமரோர்கண் முதலோர்கள்—பணிதாளா!
கலைமீது வலுவாக எனையாளும் மயிலாள!
கதிர்கோடி எதிர்சூரை—அடுவீரா!
தலைமீது கதிர்போலு நிரையாக முடிமேவு
தகுதோகை மலையாள—வருதேவே!

1832. சரச ரஞ்சித முடனி லங்கிய
தழைவ னந்தனில்—மணமேதான்
திரமு டன்புரி குக!க டம்பணி
செயமி குந்திடு—கதிர்வேலா!
அரன்ம கிழ்ந்திடு குமரி சங்கரி
அருமை கொண்டிடு—புதல்வோனே!
குரவ மிஞ்சிய தழைகொள் தண்டலை
குளிர்சி கண்டியின்—மலையாளா!

1833. எந்தன் மனந்தனி லேயுழை யாவும்
என்றுங் கனிந்தருள் வாய்!அம ரேசா!
சந்த மிகுந்திடு பாடல்கள் யாவும்
சங்கம் வருங்கும ரா!அருள் வாயே!
உந்த னிரண்டடி யேதுதி நாயேன்
உய்ந்திட நின்க்ருபை யேயருள் வாயே!
கொந்தல ருந்திய சோலைகள் சூழும்
குன்றை யெனுங்கிரி மீதினில் வாசா!

1834. வாதுபுரி சூரன் மீதுகன கோப
மாகவயி லேவு—செயவீரா!
சூதுமிக ரான பூமலையின் மாது
தோகைகுற மானை—அணைதோளா!
தாதுலவு நீப மாலையணி மார்ப!
தாமரையின் வாசர்—பணிதாளா!
சேதுலவு சோலை சூழ்சிகியின் மேரில்
தேவர்தொழ வாழும்—அமரேசா!

1835. தகிர்த திமிதிமி தகிட தகிடவென
தனது சரணநடை—பயில்தோகை—மயில்வாகா !
மகிட முடியிமை யரசன் மகிழினொடு
மலர்கொள் சரணமதில்—நிதமேதான்—பணிதாளா !
மகித லமதனில் அடியர் பரவுகுக !
வனச மலரின்மகள்—புணர்மாயன்—மருகோனே !
பகிர மலையில யில்விடு குமரகுக !
பழமை மிகுசிகியின்—மலைமீது—வருதேவே !

1836. வனச மண்டப மதிலி லங்கிய
வடிவி யன்பொடு—புணர்மாயோன்—மருகோனே !
தனமி ரண்டுள பொறைசு மந்திடை
தளர்கு றம்பயில்—மடமானுள்—தனையேதான்
புனமி றைந்திடு தினைவ ளர்ந்திடு
புதிய நந்தன—வனமீதே—புணர்தோளா !
சினமி லங்கவு ணர்களை வென்றவ !
செயமி குஞ்சிகி—மலைமீதே—வருதேவே !

1837. பறைமு ழக்கிடத் தமரி ரைத்திடப்
பதியர் மொய்த்திட—இறவாமே
அறையு றக்கடன் முழுகி மெத்தவும்
அலைவ தெற்கினை—வணுகாமே
முறைப டப்படப் பரவு பத்தனை
முளரி நிற்பதத்—தினிலாள்வாய் !
மறைமு ழக்கிடுச் சிகியின் வெற்பினில்
வருசி றப்புயர்—முருகோனே !

1838. மங்குறவழ் சோலை மிஞ்சுவன மீது
வந்தகுற மானை—அணைதோளா !
கொங்குலவு நீப மன்றன்மலர் மாலை
கொண்டபுய நாத !—எனையாளாய் !
எங்குநிறை வாக வந்தகலி யாவு
மின்றகல நீசெய்—நலமேதான்
செங்குமுத வாயி லங்குகும ரேச !
செந்திமலை தோகை—மலையாளா !

1839. கனக மாமலை நிகர வேவரு
கருது தோகையின்—மலையாளா !
வனச மாமல ரதனி லேயுறை
வடிவின் மாமகள்—புணர்தோளா !

மனதி லேமிக மகிழவேவரு
மருக னே! அருள்—உதவாயோ?
எனது நோய்கலி தவிர வேயருள்
இனிய நாயக!—முருகோனே!

1840. மிகுத்தபடை யோடு மெதிர்த்துவட லேசெய்
விறற்கொடிய சூரன்—உடன்மீதே
பகுக்கவயி லேவு செயக்குமர! வாசம்
மணக்குமலர் நீப—மணிமார்பா!
வகுத்ததொரு பாவை நிகர்த்தகுற மாது
மகிழ்ச்சியுடன் மேவு—புணர்தோளா!
நகுக்குமுடி சூழு முயர்ச்சியுள தோகை
நலத்தமலை மீது—வருதேவே!

1841. அன்ன நடையாள் கின்ன முலையாள்
அழகுமிகு குறமான் மருவுபுய முருகா!
வன்ன மயின்மேல் முன்னம் வருவாய்!
மணமுலவு மலர்நீ பமதையணி புயவா!
கன்னன் மொழியாள் உன்னு மயலால்
கருதிமன மழியா வகையினிது தருவாய்!
நன்ன யமதாய் மின்னு சிகியாம்
நலமுலவு மலையா! கருணையுட னருள்வாய்!

1842. வஞ்ச னுகிய கஞ்சன் மாமுடி
மண்ட வீழிட—அடுமாயோன்—மருகோனே!
தஞ்சம் வேறிலை யன்ப னனருள்
தண்ட பாணியின்—முருகோனே!—எனையாளாய்!
கஞ்ச நான்முகன் அண்ட வானவர்
கண்டு பூமழை—பொழிபாதா!—அருளாயோ?
நஞ்ச ராமுடி யின்கு லாவிய
நன்று சேர்சிகி—மலைமீதே!—வருதேவே!

1843. திருமாது புணர்மார்பர்
செயமேனி யணிமாயன்—மருகோனே!
செருவேசெ யசுரோனை
திறலோடு மயிலேவி—அடுவீரா!
தருசூழ வரசேசெய்
தகுராசன் முதலோர்கள்—பணிதாளா!
ஒருசூரி யனைநேரும்
ஒளிர்தோகை மலைமீது—வருதேவே!

1844. வாதுபுரி சூரனுயிர் மாளவயி லேவியடல்—பரிவோனே!
சூதுநிகர் பூமுலையள் தோகைகுற மாதுபுணர்—புயவோனே!
தாதுலவு நீபமலர் தானணியு மார்பஎன்முன்—வருவாயே!
போதுமிகு சோலைநிறை பூவுலவுதோகைமலை--வளர்வேளே!

1845. வடிவாகிய ரூபி குடமாகிய மார்பி
வனம்வாழ்குற மாது—புணர்தோளா!
அடியார்முதல் வானர் பணியேபுரி தாள!
அடியேன்முன மாக—வருவாயே!
மிடியோடிட வேசெய்! குகநாயக தேவ!
குடிவாழ்கிட வேநல்—லருளாயோ!
படிமீதுறை மேன்மை மிகுதோகைய தான
பணைமாமலை வாச!—முருகோனே!

1846. பிறைநுதலாள் குறமகளாள் பிரியமதாய் மருவியவா!
குறைபடவே அசுரனையே குலமுழுதோ டடுகுமரா!
சிறையினில்நான் முகனைமுனள் செயுதகுகா! எனையருளாய்!
மறைபுகழ்சீர் மிகுசிகியா மலையினில்வாழ் குருபரனே!

1847. வனசமலர் மண்ட பஞ்சி றந்திட
வளர்வடிவி லங்கு மங்கை யிந்திரை—நிகராமே
கனதனமி ரண்டு கொண்ட பைங்கிளி
ககனம்வரு மிந்தி ரன்சொல் பெண்கொடி-மணவாளா!
எனதுகலி துன்ப மஞ்ச அன்புகொ[டு]
இனமயிலில் வந்து என்றன் முன்பருள்—புரியாயோ?
மனதொடுவி றைஞ்சு தொண்டர் தங்களை
மகிழவருள் கந்த! குன்றையங்கிரி—முருகோனே!

1848. கந்த நீபனே! கங்கை சூடியோர்—புதல்வோனே!
எந்த ஞேசைதா னென்று தீரவே—அருள்வாயோ?
சந்த நாவலா! சந்த்ர னேர்முகா!—எனையாளாய்!
நந்தி டாததோர் நன்று சேர்சிகி—மலையாளா!

1849. துறவற மீதி லாசை யுளமுனி வோர்கள் வானர்
துதியொடு பாத மீது—பணிவாரே
குறவர்தம் மாது மேவு முருகைய! தேவ தேவ!
குதிகொள்பொ னன தோகை—மயிலாளா!
மறமிகு சேனை சூழ வருபெல சூர னவி
மடியமின் வேலை யேவு—செயவீரா!
நறவுள நீப மாலை புனைபுய வா!கு! கா!நன்
நலமுயர் தோகை மேரில்—வருதேவே!

1850. நடன மாடிய மயிலி லேறிய நகுசி காமலை—முருகோனே!
குடமென் மாமுலை யிலகு கூர்விழி குறவர் மாமகள்—புணர்
[தோளா!
படவ ராவணி சடையி னுயகர் பரமர் பாலக!-எனையாளாய்!
அடம தேபுரி யசுர னூர்விழ அடுகு கா! குரு—பர! வேளே!

1851. அடத்தில் வந்தெதிர் சூருட னேவலு
அயிற்கொ டன்றடு போர்புரி நாயக!—எனையாளாய்!
திடத்தின் மிஞ்சிய வேடுவர் மாகுடி
சிறக்க வந்தவ ளாசைய தாய்மரு—வியவர்கா!
கடத்தின் வந்திடு மாமுனி வானவர்
கருத்தொ டும்பணி யேபுரி சீருள—பதவேளே!
நடத்தின் மிஞ்சிய தோகையின் மீதெழு
நலத்த குன்றையின் மேரினில் வாழ்வுறு—குமரேசா!

1852. வஞ்சமிகு சூரர்படை அஞ்சவயி லேயெதிர
மண்டியட லேபுரியு—முருகோனே!
தஞ்சமினி வேறிலையென் அண்டையினி லேவருவை!
சந்த்ரமுக! வேலணிகை—முருகோனே!
நெஞ்சமதில் நோயகல இன்றுவர மேயருள்வை!
நின்றுநட மாடுமயின்—முருகோனே!
குஞ்சரியை மேவுபுய! அன்பர்பணி யேபுரிசெய்
குன்றைமலை மீதுவரு—முருகோனே!

1853. கொஞ்சுகிளி மொழியாள் தண்டலையில் வளர்மான்
குஞ்சரியை மயலால்—அணைதோளா!—நலமேசேர்
நஞ்சுலவு மெயிறுன் செங்கண் மிகு வரியான்
நன்றணையின் விழியே-துயின்மாயோன்-மருகோனே!
அஞ்சுதலை யொழியாய்! கஞ்சமல ரயனுர்
அன்றுசிறை விழவே—செயும் நாதா!—எனையாள்ளாய்!
மஞ்சுலவு சிகியாய்! குன்றைமலை யரசே!
வந்தவினை தவிர்வாய்!—அமரேசா!—முருகோனே!

1854. மன்றத்தினி லேநட மாடிய வம்புற்றிடு தாதகி சூடிய
—அரனுர்தாம்—அருள்பாலா!
நன்றுற்றிடு வேடுவர் நாயகி நங்கைக்குற மாதினை யேபுணர்
—புயவேளே!—எனையாளாய்! [அரு
என்றுக்கதிர் போலவு மேநிகர் இன்புற்றிடு மேனிய னே
—ளுதவாயோ!—முருகோனே!
குன்றிற்பொலி வாகிய சீருள குன்றைக்கன மாமலை வாழ்வுறு
—குருநாதா!—அமரேசா!

1855. நடமாடிய மயிலேறிய நலமாகிய வடிவே!
குடமாமுலே யிணைமீதினில் குறமாதொடு புணர்வாய்!
படராவணி யரனார்தரு பரனே!அருள் புரிவாய்!
திடமாமுடி நிரையாய்வளர் சிகியாமலே யரசே!

1856. அடியார்பணி சரண! அருள்யாவையு முதவாய்!
குடியாகிய மறவோர் குலநாயகி கணவா!
படிவாழுயர் சிகியாம் பருமாமலே யரசே!
வடிவேல்இல கிடவே மயில்மீதினில் வருவாய்!

1857. தாதவிழ் நீப மாலே தானணி மார்ப! நீமுன்—வருவாயோ?
மாதர சான தேவி வாழ்வுள வேட மானே—அணேதோளா!
வாதடு சூர ஞவி மாழ்கிட வேலே யேவு—செயவீரா!
நாத! சிகாமென் மேரு நாயக! நீயெ நாளும்—அருளாயோ?

1858. எதிர்த்து வந்திடு சூருடல் கீறிட
எடுத்து வென்றிடு வேல்விடு நாயக!—முருகோனே!
மதிக்கி சைந்திடு மானன! வேடுவர்
மகிழ்ச்சி மிஞ்சிய மாதுடன் மேவிய—புயவேளே!
நதிக்கி லங்கிய வேணிய ஞர்புரம்
நகைத்து வன்றெரி யேசெய்த வீசுர—ரருள்பாலா!
கதித்த குன்றையின் மாமலே வாழ்வுறு
கருத்த! என்றனே மேன்மைய தாகிட—அருளாயோ?

1859. திருமாதினே நிகராகிய திகழ்வேடமின்—மணவாளா!
குருவாகிய அருளே!அருள்! குகநாயக!—முருகோனே!
மருவாகிய வுயர்நீபமென் மலர்மாலேகொள்—புயவேளே!
தருசூழ்சிகி மலேமேல்வரு தமிழ்நாயக!—எனேயாளாய்!

1860. கனக மாமலே நிகர தாகிய
கனசி காமலே—முருகோனே!
வனச மாமல ரிலகு மாதினே
மருவு மாயவன்—மருகோனே!
சினமு ளோர்பொரு வசுர மேனியன்
சிதற வேயயில்—விடுவீரா!
மனது நோய்தவி ரிடுவை நாயக!
மயிலி லேறிமுன்—வருவாயே!

1861. தாயார்கரு வூடேவரு தாழ்வா கியபிற—வியினலே
சேயாய்மணின் மீதேவளர் தீதா னதையினி-யொழியாயோ?
நோயான்மெலி வாலேயின நோகா தருள்தனே-யுதவாயோ?
தூயா! குற மானுள்புணர் தோளா! சிகிமலே-முருகோனே!

1862. கோடு லாவிய சோலை சூழுயர்
குன்றைமலை வாசனே! வந்தருள்செய் நாதனே!
நாடு நேமக னுடு சேர்குக!
நங்கைகுற மாதுசேர் செந்திமலை வாசனே!
ஆடு மாமயி லேறு சேவக!
அந்தமிகு வேலவா! அன்புமிகு தேவனே!
நாடு சீர்தமிழ் பாட வேயருள்
நஞ்சமிட றீசனுர் தந்ததொரு பாலகா!

1863. காதன்மிகு குறமான் மீதுமய லுறவே
கானில்மரு வியவா!—எனையாளாய்!
மாதரசி யிமையோ னுர்பெறுமி னுடனே
மாமயல்கள் மிகவே—புணர்தோளா!
தாதவிழு மலர்நீ பா! மணிகொள் புயனே!
தாசனென வெனையாள்!—குருநாதா!
சூதமுனி முதலோர் வானவர்க ளடியார்
சூழவரு சிகியா—மலையாளா!

1864. வந்தெ திர்த்த சூருடல் கீற வேயெதிர்
வஞ்ச ரக்கர் மாளிட வேலை யேவிய—செயவீரா!
சந்த முற்ற பாடல்கள் பாட வேயருள் [வாயோ?
தந்தெ னக்கு மேன்மையும் வாழ்வு மேயினி—உத
கந்த முற்ற நீபமென் மாலை சூடிய
கந்த ரத்த! மாமயி லேறி யேமுனம்—வருவாயே!
அந்த ரத்து வானவர் ஞானி யோர்முதல்
அன்பர் நித்த மேபணி தோகை மாமலை—வருதேவே

1865. வாரணி முலையாள் வாழ்வுள குறமான்—அணைதோளா!
தாரணி புயனே! தாசன்முன் வருவாய்!—முருகோனே!
ஆரணி சடையார் ஆவல்கொள் புதல்வா!—எனையாளாய்!
காரணி முடிசேர் காவுள சிகிமா—மலையாளா!

1866. வாச மிகு நீப மாலையணி மார்ப!—எனையாளாய்!
காசதிக மான க்ர்சிறவல் மாவை—அடுவீரா!
தேசர்பணி தோகை சீர்மலையின் வாச!—முருகோனே!
ஈசர்தரு பால! ஏர்சிகியி லேறி—வருவாயோ?

1867. ஒருத்தர்துணை யாது மேது?
உனக்குநிக ராரும் வேறு—முளரோ?கேள்!
உருத்திநெடு தோகை மீது
உயர்ச்சிபெற வேமு ருக—வருவாயே!

---

1864. கந்தரத்த!—கழுத்துடையவனே! கந்தரம் - கழுத்து.

செருப்பயிலும் வீர னை
  செகத்திலுயர் சூர னேடும்—அடுவீரா!
கருத்தனெனை யாளும் நாத!
  கமழ்ச்சிபெறு தோகை மேரில்—வருதேவே!

1868. வண்டர்படி நீப மஞ்சரிகள் சூடு—மணிமார்பா!
தண்டமிடு சூரர் தங்கள்குல கால!—எனையாளாய்!
அண்டர்பணி பாத! அன்பனெனை யாத—ரியும்வேளே!
கொண்டல்படி சோலை கொண்டசிகி மேரில்—வருதேவே!

1869. வடிவுமிகு வேலை யெதிரவரு சூரன்
  மடியவயி லேவு—செயவீரா!
குடியிலுயர் வேட ரருமைமிகு மாது
  குறமயிலை மேவு—புயநாதா!
அடியர்பணி பாத! மயிலில்வரு தேவ!
  அருள்செய்முரு கேச!—எனையாளாய்!
முடியுயர்சி காமென் மலையில்வளர் நாத!
  முனிவர்பணி ராச!—அருளாயோ?

1870. சங்கரா வலனே! நெஞ்சநோய் தவிர்வாய்!
  தந்திமா முகனுர்—துணையாளா!
சங்கமா யவனுர் அன்புமா முருகா!
  சந்த்ரமா முகவேள்!—எனையாளாய்!
பங்கயா சனனுர் அண்டர்நா யகனுர்
  பண்பதாய் நிதமே—பணிபாதா!
தங்கமே ருவைநேர் குன்றைமா மலையா!
  தண்டைசேர் கழலாய்!—அருளாயோ?

1871. திருமாதினை நிகராகிய திகழ்வேடமின்—அணைதோளா?
வருதேவர்கள் பணியேபுரி மகிபா! அரு—ளுதவாயோ?
செருவேபுரி வலுசூருடல் தெறிவாய்விடு—செயவேலா!
பொருசோலைகள் மிகவேவளர் புகழ்தோகையின்—மலை
[யாளா!

1872. விருப்ப மாகிய குறத்தி மேவிய
  விளக்க மாகிய—முருகோனே!
தருக்கு லாவிய திருச்சி காமலை
  தனிற்கு கா! இனி—யெனையாளாய்!

வுருத்து சூருடல் கிழிக்க வேல்விடு
மணிக்கி ரீடம்வை—முடியாளா!
கருத்த னே!அருள் மயிற்கு கா!மிகு
கமழ்க்கு நீபமென்—மலர்மார்பா!

1873. வஞ்சிமிக ரிடையார் மங்குல்மிகர் குழலார்—மயலாலே
துஞ்சியது யரினல் தொங்கிசம னதினல்—அலையாதே
மிஞ்சியம யிலின்மேல் மின்பெறமுன் வருவாய்!-அமரேசா!
பஞ்சினுமெ லடியாய்! பண்புசெறி சிகிமர்—மலையாளா!

1874. போதுலவு மாது போலவரு வேடர்—மகள்தோளா!
சூதுபுரி வோர்கள் சூரர்குல மாள—அடுவேலா!
மாதுபுணர் மார்பன் மாயன்மரு கேச!—எனையாளாய்!
தாதுலவு நீப தாம!சிகி மேரில்—வருவேளே!

1875. வஞ்சிநே ரிடையாள் வம்புசேர் முலையாள்—குறமாஞள்
கொஞ்சியே புணர்வாய்! கொண்டனேர் கரனே!—எனை
[யாளாய்!
அஞ்சியே வருசூர் அன்றுதான் விழவே—அடுவீரா!
மஞ்சுசேர் நலமார் வண்சிகா மலையா!—அருளாயோ?

1876. கோவை போலும் வாயினள்
கூர்மை வாளி பார்வையாள்
—குறமாஞள்—புணர்தோளா!
பாவை யேசொல் பாவலோர்
பாட லேகொள் நாதனே!
—எனையாளாய்!—முருகோனே!
தேவை யான யாவுமே
சீர தாக வேசெய்வாய்!
—அமரேசா!—அருளாயோ?
மாவை யேவெல் வேலவா!
வாச நீப மாலையா!
—சிகியாமோர்—மலையாளா!

1877. அத்தி முகத்த ரருட்டுணை பெற்றவ!
அத்துவி தத்தின் முடித்தலை மைக்குரு—குமரேசா!
முத்தி யெனக்கு மளித்திடு! வித்தக!
முட்டுளை பெற்ற கொடிக்கம லத்தினர்—பணிபாதா!

1873. தொங்கிசம் • அழிவு.

சத்தி யெடுத்து எதிர்த்த வுணர்ப்பட
சத்துரு வைக்கொலை வெட்டி விழச்செய்த-செயவீரா!
பத்தி நிரைத்த முடிச்சிகி நற்கிரி
பச்சை மயிற்பரி யிற்குக! வித்தையை—அருளாயோ?

1878. வஞ்சத் தரக்கருயிர் அஞ்சச் செயிக்கவெதிர்
மண்டக் கதிர்க்கொளயில்—விடுவீரா!
நெஞ்சத் திருக்ககல வந்திப் பருட்செய்குவை!
நின்சித்த மெப்படி? அ—தறியேனே
மஞ்சத் திருக்கமுனி ருந்திச்சை யுற்றுகுற
வஞ்சிப் புயத்தையணை—வடிவாளா!
கஞ்சத் திருப்பெண்மரு வுஞ்சித்ர முற்றதொரு
கந்தச் சிகிக்கிரியின்—வருவேளே!

1879. கூடு கூவெனக் கூகை கூவிடக்
கோகொ கோவெனத் தாயர் தாமழப்—படுபாடாய்
மோகு மோகெனப் பாடை மீதெழ
மூடு நோய்களிற் சாக லாகுமித்—துயரேனோ?
பாகு நேர்சொலக் கான மாதினைப்
பார மாமுலைக் கோடு மீதினிற்—புணர்தோளா!
வாகு சேர்முடித் தோகை மாமலை
வாச னே!அருட் டா!கு கா!மயிற்—பரியாளா!

1880. வாசக்கம லாசன ஞர்பணி
வானத்தவ ரேபணி நாயக!—எனையாளாய்!
நேசக்குற நாயகி யாள்புணர்
நீபக்கணி சூடிய சீர்புய—முருகோனே!
மோசக்கன சூருட னேவரு
மூரிப்படை நேரிட வேல்விடு—செயவீரா!
தேசத்தினில் மேன்மைக ளாகிய
சீருற்றிடு தோகையின் மாமலை—முருகோனே!

1881. வாரணி முலையாள் வாகுள குறமான்—அணைதோளா!
சீரணி சிகியா! தேவுயர் சிகியா—மலைநாதா!
காரணி மிடறுர் காதல்கொள் மதலாய்!—எனையாளாய்!
தாரணி புயவா! தாழ்வக லிடவே—அருளாயோ?

---

1878. கந்த: விளி.

1882. வரன ரேபணி வாச மாலிகை—யிருதாளா!
கான நாயகி காத லாயணே—யிருதோளா!
ஞான மாதவர் நாளு மேதுதி—முருகோனே!
மான வேலவ! வாகு சேர்சிகி—மலேயாளா!

1883. வஞ்ச ரக்கர் சேனைகள் மாள வேயெதிர்
மண்டு யுத்த மேபுரி வேல வா!அரு—ளுதவாயோ?
கஞ்ச னுக்கு மாமுடி வீழ வேசெய்த
கங்கு லுற்ற மேனியின் மாய னுருட—மருகோனே!
பஞ்ச வர்க்க வாளியின் மார னல்வரு
பண்பு பெற்ற நோய்களின் வாடி டாதருள்-புரிவாயே!
பஞ்ச ரத்தின் வாழ்கிளி வேட மானனே
பைங்க டப்ப மாலிகை மார்ப னே! சிகி—மலேயாளா!

1884. வஞ்சமிகு சூரனுடல் மண்டவயி லேவுசெய—முருகோனே!
கஞ்சமட மான்மருவு கங்குனிற மாயனுட—மருகோனே!
அஞ்சவரு நோயகல அன்புமிக வேகிருபை—உதவாயோ!
தஞ்சமலே நீயருள்செய் தங்கமலே நேர்சிகியின்-மலேயாளா!

1885. கொடிபோலு மிடையாள் குறமாது கணவா!-எனயாளாய்!
அடியார்கள் பணிவாய் அருள்யாவு மினியே-அருளாயோ?
வடிவான அயிலா! மயிலேறு சண்முகா!—குருநாதா!
மிடியோட வருள்வாய்! மிகுதோகை மலேமேல்—வருதேவே!

1886. கும்பமா முலேயாள் கொண்டல்சேர் குழலாள்—குறமானுள்
அன்பதா யணேவாய்! அந்தமா கியசீ—பமென்மார்பா!
கம்பமா துணேயா! கந்தனே! அருள்வாய்!—முருகோனே!
வம்புசேர் பொழில்சூழ் மஞ்சுலாம் சிகியா—மலேயாளா!

1887. வண்டுளர் பைந்துள மாலேயணி மார்பன் [கோனே!
வஞ்சவு னன்றனே யே! யடல்செய் மாயன்—மரு
செண்டு இரண்டுள சேய்முலேயின் மாது
செந்திரு அந்தமுள் வேடமினே யேம—ருவுதோளா!
கண்டுநிகர் கின்றசொல் காலேயரு ளேசெய்
கந்த மிலங்கிய நீபமணி தேவ!—அருளாயோ?
குண்டி லுயர்ந்திடு கோடுமிகு சீர்கொள்
குன்றையில் வந்தவ! நீயருள்செய் நாத!-எனயாளாய்!

---

1887. சேய் = சிவப்பு. செந்திரு அந்தமுள் = திருமகளின் அழகையுடைய.

1888. வந்தவினை தீர உன்றன்மயின் மீது
வம்பவிழ நீப—மலராளா!
எந்தனிட மாக வந்துதய வாக
இன்பமுடன் வேண—அருளாயோ?
கொந்தலர்கள் வாச மிஞ்சுபொழில் சூழு
குன்றைமலை மேவு—பரமேசா!
சொந்தமட வார்க ளன்பினொடு சேரும்
துங்கவடி வேல!—எனையாளாய்!

1889. வீறுபடு சூர னுவியது போக
வேலையுட னேவு—செயவீரா!
கூறுபடு வாளை யேநிகரு பார்வை
கோகன மாது—குறமானள்
மீறுதன மீது தான்மருவு மார்ப!
மேன்மைதனை நாய—னிடம்நீதா!
சீறுவிட நாக மாமுடியின் வாழும்
சீர்திகழ்செய் தோகை—மலையாளா!

1890. வஞ்சவு ணன்றனை ரெண்டென வுஞ்செய
மண்டிட முன்பயில்—விடுவீரா!
கஞ்சனை முன்சிறை கொண்டிடு செங்கர!
கங்குனி றங்கொண்மை—முருகோனே!
அஞ்சிட வந்திடு துன்பம கன்றிட
அன்புட னின்புற—அருளாயோ?
மஞ்சடர் தண்டலை யுந்திய குன்றையில்
வந்திடு சங்கர!—எனையாளாய்!

1891. செருக்க ளேபுரி திறத்த சூருடல்
தெறிக்க வேல்விடு—செயவீரா!
குருக்க ளாகவு மூவர்க்கர் மூவர்கை
குவிக்க வேமறை—பயில்வாயா!
கருக்க ளேமிகு முகிற்கு நேர்பெறு
கறுத்த மேனியர்—மருகோனே!
மருக்கள் பூமலி கடப்ப மாலைய!
வளர்ச்சி சேர்சிகி—மலையாளா!

1892. பஞ்சவர்ச காயன் மங்குலுய ரூபன்
பைந்துளப மாயன்—மருகோனே!
கஞ்சமலர் மீதி லங்குகலை மாது
கந்தமிகு பாட—லதுதாராய்!

அஞ்சவரு நோய கன்றுவிட வேசெய்!
அந்தமிகு தோகை—மலையாளா!
கொஞ்சுகிளி வேட மங்கைபுணர் தோள்!
கொங்குலவு நீப—மலர்மார்பா!

1893. கும்பமத யானை தன்றுணைவ! வான
கொண்டல்நிக ரான—முருகோனே!
செம்பவள வாயி லங்குகுற மாது
செந்திருவி னோடு—புணர்தோளா!
கும்பமுனி வோர்ப ணிந்தகுக! தேவ!
குன்றைமலை வாழு—முருகோனே!
வம்பவிழு நீப! என்றன்முன மாக
வந்துவரம் நீசெய்!—அமரேசா!

1894. வனத்தில் வந்திடு வேட நாயகி
மகிழ்ச்சி மிஞ்சிடு நாத னே!வர—முதவாயோ?
சினத்தில் வந்தெதிர் சூர னுருடல்
தெறிக்க வுந்திய வேல னே!செய—முருகோனே!
மனத்தில் வந்திடு நோய்க ளோடிட
வரத்தை யின்புட னேசெய் வாய்!குக!—அமரேசா!
கனத்தி லுந்திய கோடு லாவிய
கமழ்த்த குன்றையின் மேரி லேவரு—செகநாதா!

1895. நடனமிடு மயிலா! கிருபையினி யருள்வாய்!
நளினநிகர் சரண!—எனையாளாய்!
கடமொழுகு கொடியூர் நுதலிலொரு விழியார்
கறையடியர் துணைவா!—முருகோனே!
அடரமர்செ யவுணோர் குலகலக! அதிகூ
ரயிலணிகை யவனே!—அமரேசா!
தடமுலவு முடிசேர் சிகிமலையி னரசே!
தருநிகர்செய் கொடைநா—யகவேளே!

1896. கருணைக் குரியனுன் அடியர்க் கருளுவாய்!
கதியைத் தருவை!நீ—முருகோனே!
வருணத் துயருமா மூடிவித் தகருளோர்
மறையுற் றவர்களே—பணிநாதா!
திருவைப் புணருமால் மருகக் குமரனே!
செயசத் தியதையே—அணிதேவே!
தருவுற் றடருமால் படிவுற் றிடுசிகா
திழைநற் கிரியிலே—வருதேவே!

1897. காத லாகிய வேட நாயகி
காவ லா! இனி—எனையாளாய்!
சூது தரன்மிகு தான வோர்குல
சூர னுவிகொல்—அயிலொளா!
தாது சேர்கன நீப மாலிகை
தார்பு யா! அருள்—உதவாயோ?
கோதி லாதபொன் **தோகை யாகிய**
**கோடி** லேவரு—முருகோனே!

1898. வண்டு சூழ்வரு பைந்து ழாயணி
மங்குல் மேனியர்—மருகோனே!
கண்டு போன்மொழி குன்று நேர்முலை
கங்குல் நேர்குழல்—வடிவாமே
மண்டு காதலள் குன்றில் வாழ்குற
மங்கை சேர்புய!—எனையாளாய்!
பண்டு வாழ்முனி அண்டர் [....]
பண்பு சேர்சிகி—**மலையாளா**!

1899. வஞ்சிகுற மடமான் வம்புமுலை யதிலே—புணர்தோளா!
அஞ்சிவரு மசுரோன் நைந்திடமு னயிலே—வியசூரா!
பஞ்சிலகு மடியாய்! பண்புமிகு சிகியாய்!—எனையாளாய்!
கஞ்சமல ரயனுர் கண்டுபணி **சிகியா—மலையாளா**!

1900. சீத மதியணி தேவர் நாயக—ரருள்பாலா!
காத லவன்மகள் காவ லா! வர—முதவாயோ?
போத முனிவர்கள் பூவு ளோர்பணி—யிருதாளா!
நாத! **சிகிமலை** நாளு மேவரு—குகவேளே!

1901. எதிர்வரு சூர னுடல்கிழி வாக
எழிலுள வேலை—விடுவோனே!
மதியணி வேணி பொதுவினி லாடு
மணமலி பாதர்—அருள்பாலா!
கதிமிகு தோகை மயின்மிசை யேறு
கருணையி னுத!—எனையாளாய்!
நிதிமிகு **தோகை மலை**வரு தேவ!
நினதரு ளேசெய்!—முருகோனே!

---

1898. [ ] விடப்பட்டுள்ளது. 'கூடிய' என்று சேர்க்கலாம்.

1902. நடன மிட்டிடு மயிலி லுற்றவ!
நளின முற்றிடு—மிருதாளா!
அடமி குத்திடு படைபெ ருக்கிய
அவுண னைக்கொலு—மயிலாளா!
கடக ரிக்கொரு துணைப டைத்தவ!
கருணை முத்தைய!—எனையாளாய்!
தடமி குத்திடு பொழில்ப டைத்திடு
தகுசி கிக்கிரி—வருதேவே!

1903. முத்து நகையார் சித்ர வடிவார்
மொய்த்த குழலார்—மயலாலே
மெத்த வலைவாய் எப்பொ ழுதுநான்
மெய்க்கு ளழிவாய்—விடலாமோ?
சத்தி யதனால் கிட்ட வருசூர்
தட்ட ழியவே—அடுவோனே!
கர்த்த! எனையாள்! நற்சி கியிலாங்
கூற்கு ளுயர்வா—கியதேவே!

1904. வாச மாலிகை மார்ப னே!அரு—ளுதவாயோ?
தேச நாயக! சீர்பொன் மாமயின்—முருகோனே!
மாசி லாதபொன் வார ணா!வர—முதவாயோ?
ஈச னே!சிகி யேரு லாவிய—மலையோனே!

1905. மயிலேறிய வரதா!வர—முதவாயோ?
குயிலாகிய குறநாயகி—மணவாளா!
அயிலாலெதி ரசுரோனுடன்—அடுதேவே!
ஒயிலா!குக! உயர்தோகையின்—மலையாளா!

1906. பச்சைமயின் முருகா பத்மகிர்! சரணா!—எனையாளாய்!
கொச்சையுள குறமான் கொத்துமல ரணைமேல்—அணை
[தோளா!
செச்சையணி புயனே! சித்ரமிகு சிகிமா—மலையாளா!
இச்சையுட னருள்வாய்! எட்டிசையு மணமார்—மலர்நீபா!

1907. வஞ்சிநே ரிடையாள் மங்குல்சேர் குழலாள்—குறமானாள்
வஞ்சிசேர் புயவா! மஞ்சின்மா மயிலா!—எனையாளாய்!
தஞ்சம்வே றிலையே தங்கமா மலையா!—குகநாதா!
வஞ்சனா கியசூர் மங்கவே யயிலே—வியதேவே!

1908. கச்சை யணிமுலையாள் பத்ம மலர்முகமான்
கட்டு மலரணிகார்—குழன்மானுள்
பச்சை மயினிகராள் இச்சை யுளகுறமான்
பட்ச மொடுபுணர்வாய்!—எனையாளாய்!
நச்சை யணிமிடறுர் பொற்க யிலைமலையார்
நத்து வுமைதருபா—லகவேளே!
செச்சை யணிபுயவா! பத்த னிடம்வருவாய்!
சித்ர மிகுசிகியா—மலையாளா!

1909. நறுநீபமென் மலர்சூடிய நலமாகிய புயவா!
குறுமாமுனி முதலோர்பணி குருவே!அரு ளுதவாய்!
மறுவேயுள வசுரோனுடன் வளர்போர்புரி மயிலா!
உறுமாமணி நிறைகோடுள வுயர்தோகையின் மலையா!

1910. தத்துமயில் முருகா! பத்தனிடம் வருவாய்!
தக்கதொரு வரமே—அருளாயோ?
பத்துமுடி யசுரோ னற்படைக ளுடனே
பட்டுவிழ விடுமான்—மருகோனே!
கொத்துமல ரணிவாய்! செச்சை யணிபுயவா!
கொத்துமயின் முருகா!—எனையாளாய்!
சித்துவிளை குமரா! அத்துவித முடிவே!
சித்ரமிகு சிகியா—மலையாளா!

1911. மதிசூடி நடமாடி வளர்வேணி யிடம்வாழ்
பதியான உமைமாது பரிவான புதல்வா!
ததியேயுண் விறன்மாயன் தகையான மருகா!
கதிநீசெய்! சிகியான கனமேரி லரசே!

1912. தங்கமலை மேரைநிகர்
தண்சிகியின் மேரில்வரு—குகநாதா!
துங்கமயில் மீதுவரு
தொங்கலணி மார்ப!இனி—யெனையாளாய்!
மங்கைகுற வேடமகள்
மன்றலணை மீதுபுணர்—புய!வேளே!
செங்கைதனில் வேலையணி
திங்களௌனு மாமுகவ!—முருகோனே!

1913. வாசனை யாகிய நீபமென் மாலிகை
மார்பினி லேயணி—முருகோனே!
காசணி சூருடன் மீறிய போர்புரி
காரண னே!அரு—ளுதவாயோ?

தேசர்கள் வானவர் மாமுனி வோர்பணி
சீருள தோகையின்—மலையாளா!
தாசனை யாதரி மாமயி லா!குக!
தாமரை யானன!—அருளாயோ?

1914. பச்சைமயி லேறியே
பட்சமுட னுயன்வாழ்—இடவாராய்!
கச்சையணி மார்பினள்
கற்பின்மட மாதினள்—குறமானள்
இச்சையுடன் மேவுவாய்!
இக்குமொழி வாயனே!—எனையாளாய்!
செச்சைபுனை தேவனே!
சித்திரமிகு தோகைமா—மலையாளா!

1915. சித்தியுள முருகா! சித்ரமிகு சிகியா—மலையாளா!
முத்திதனை யருள்வாய்! முத்துநிறை நகையாள்—குறமானள்
நத்திமரு வியவா! நர்த்தனமென் மயிலா!—எனையாளாய்!
சத்தியணி கரனே! சத்ருசெய தரனே!—குகநாதா!

1916. குங்கும முலையாள் கொண்டல்கொள் குழலாள்—வடிவாமே
மங்குலி னுடலார் வண்குல மறவோர்—தருமானள்
வங்குமுன் முருகா! வந்தருள் புரிவாய்!—அமரேசா!
திங்களின் வதன! தென்சிகி மலையா!—எனையாளாய்!

1917. மதிசூடிய சடையார் மணிசேர்கயி லையினு—ரிடமேசேர்
துதியேபெறு முமையாள் துரைநாயகி புதல்வா!—எனை
[யாளாய்!
ததியேயுணும் விறலார் தகுமாமரு கையனே!—மயிலாளா!
பதியேபுகழ் சிகியாம் பணிமாமலை யரசே!—முருகோனே!

1918. செருவேவிளை யசுரோர்நெடு
திறல்வேல்கொடு—அடுவோனே!
கருமேனியர் வனவேடுவர்
கனமாகிய—குலமானள்

---

1916. வங்கு: இங்கு மலைக்குகை.

தருவாய்வெகு வரம்யாவையும்
தகுமாமயின்—முருகோனே!
திருவேமிகு மடியார்பணி
சிகிமாமலை—வளர்தேவே!

1919. கார்குழலாள் காதன்மினள்—நலமேசேர்
வார்முலையாள் வானமினள்—புணர்தோளா!
சீர்சிகியா! தேவர்களே—பணிபாதா!
தார்புனையாய்! தா! குமரா!—அருளேதா!

1920. மஞ்சு சூழ்சிகி யின்பொன் மாமலை
வந்த நாயக!—எனையாளாய்!
நஞ்ச மாமிடர் தங்க மேரினர்
நம்பர் பாலக!—முருகோனே!
பஞ்சி னாடி மங்கை வேடமின்
பங்க னே! வரம்—உதவாயோ?
தஞ்சம் வேறிலை அன்ப னனருள்!
தந்தி யார்துணை—யமரேசா!

1921. காவில் வாழ்வுறு வேட நாயகி
காத லா! வரம்—உதவாயோ?
தேவி மாதுமை பால கா!குக!
தேவ தேவெனும்—அமரேசா!
பாவி லேமிகு பாவ லா! அருள்!
பாகி னேர்மொழி—முருகோனே!
தாவி லாவரம் நீசெய் வாய்! உயர்
தாம னே!சிகி—மலையோனே!

1922. அஞ்சிட வருசூரன் மண்டிடு படையாவும்
அந்திட வயிலேவு—செயவீரா!
நஞ்சணி மிடறுன மன்றினில் நடமாடு
நம்பர்த மிடமாது—தருபாலா!
வஞ்சியை நிகரான நன்றுகொ ளிடைமாது
வண்குற மடமானை—அணைதோளா!
மஞ்சது தவழ்சோலை கொண்டிடு கனமான
வண்சிகி மலைமேவு—குகநாதா!

1923. வனச மண்டப மதனில் வந்திடு
வனிதை யும்புணர்—திறன்மாயோன்—மருகோனே!
கனக மிஞ்சிடு சிகர மூந்திய
கனசி கண்டியின்—மலையாளா!—எனையாளாய்!

அனமெ ழுஞ்சொலு நடைப யின்றிடு
அழகு மிஞ்சிய—குறமானுள்—புணர்தோளா!
மனநி னைந்திடு நினைவெ னும்படி
வரமி குந்தருள்!—குகநாதா!—முருகோனே!

1924. சந்தமிகு வேட ரங்குலமி னுனை
தண்கமழ்செய் கானி—லணைதோளா!
வந்துனது தாளை யன்பினெடு சேர
வண்புகழ்செய் வோர்கள்—குருநாதா!
கொந்தலரு நீப! உன்றனிட மாசை
கொண்டவடி யேனை—யினியாளாய்!
செந்தமிழு லாவு தண்டலைகள் சூழு
தென்சிகியின் மேரில்—வருநாதா!

1925. வஞ்சமிகு சூரன் அஞ்சவரு சேனை
மண்டமடி வாக—அயிலாலே—செயுநாதா!
நம்புமடி யார்கள் தங்கலியை யோட
நன்றுபுரி தேவ!—முருகோனே!—குகநாதா!
அம்புவிழி மாது செங்கனியின் வாயள்
அந்தமிகு வேடர்—குலமானுள்—புணர்தோளா!
வெம்புதுய ரோட வந்தருள்செய் நாத!
மென்சிகியின் மேரில்—வருவாயே!—எனையாளாய்!

1926. வாதுபுரி சூர னேடு சேனைவெகு சான பேர்கள்
மாயவழி லேவு வாகை—புனைவோனே!
கோதுகிளி யான தேவி தோகைமயி லான மாது
கோலமிகு வேடர் பாவை—புணர்தோளா!
மாதுபுணர் மாயன் மேனி மேகநிக ரான சீர்கொள்
மாலின்மரு கேச! வாழ்வை—அருளாயோ?
சேதுமிகு நீப மாலை சூடுபுய வா!கு கா!நல்
சீர்சிகியின் மேரில் வாச!—எனையாளாய்!

1927. வாசமிகு நீப மாலையணி மார்ப!
வாகையணி தோள!—எனையாளாய்!
நேசமிகு வேடர் மாதுபுணர் நாத!
நீயெனிடம் வேண—அருளாயோ?
தேசர்புகழ் நேம நாடுலவு தோகை
சீர்மருவு மேரில்—வருதேவே!
மாசடரு சூரை நாசமிட வேலை
வாகினெடு மேவு—செயவீரா!

1928. சேவற் கொடியாய்! சீருற் றிடுகான்—மடமானுள்
ஆவற் கிசைவா யாகப் புணர்வாய்!—எனையாளாய்!
காவற் குமரா! காரச் சுதனுர்—மருகோனே!
தேவர்க் கரசே! சீர்நற் சிகியா—மலையாளா!

1929. செந்திமலை வாசா!கு றிஞ்சிநக ராளா!
திங்கள்வத னு!தேவ—ரரசாளா!
தந்திதுணை வா!வானர் வந்துபணி நாதா!
சங்கரகு மாரா!நல்—நயவேளே!
கொந்திலகு நீபா!சி கண்டிமயி லாளா!
குன்றைமலை யாளா!பொன்—அயிலாளா!
வந்தினிய தாமோர்வ ரம்புரிவை! தேவா!
வஞ்சசுரை யேதான்வெல்—பவ!நாதா!

1930. சிந்தை நினைந்திடு மன்பர் நிறைந்திடு
செங்கை யிலங்கிய—அயிலாளா!
பந்தை நிகர்ந்த பரந்த குயங்கள்தன்
பண்புய முந்தொட—அணைமீதே
இந்தை யிலங்கு முகம்பளி ரென்றிட
இன்குற மங்கையை—அணைதோளா!
எந்தை! மிகுந்த வரஞ்செய்வை! குன்றையின்
இன்புடன் வந்திடு—குகநாதா!

1931. சந்திர முகமாது சங்கரர் புணர்மாது—தருபாலா!
இந்திரன் முதலோர்க ளின்பொடு பணிபாத!-எனையாளாய்!
தந்தியின் முகநாதன் தன்றுணை யுளதேவ!—முருகோனே!
அந்தியின் மதிதாவும் அந்தர முயர்தோகை—மலையாளா!

1932. செங்கதிரினை நிகர்மேனிய!
சிந்தனைசெயு மனதாசைய!—எனையாளாய்!
சங்கரியுமை புணர்நாயகர்
தந்திடுசுத! அருள்யாவையும்—உதவாயோ!
வங்கணமிகு குறநாயகி
மங்கையைவளர் பொழிலூடணை—புயவேளே!
திங்கள்தவழு முயர்தோகையின்
தென்கிரிவரு குக!நாயக!—அருளாயோ?

1933. செச்சையணி புயனே! சித்ரமயின் முருகா!-எனையாளாய்!
பச்சைமுகி லுடலார் பத்மமினை யணைவோர்—மருகோனே!
கொச்சையுள குறமான் கொத்துமல ரணைமேல்—அணை
[தோளா!
இச்சையுட னருள்வாய்! எற்றவழு சிகிமா—மலையாளா!

1933. ஏற்றவழும்: எல் தவழும் ' ஒளிவீசும்.

1934. வாரிடு பூமாலை தாமரை யானன
வாள்விழி [மி—னணைதோளா!]
சீரிடு தோகையின் மாமலை மேவிய
தேவர்கள் யாவர்கள்—பணிதாளா!
காரிடு மேனியின் மாயவ ளுருட
காதலி யாளுட—மருகோனே!
தாரிடு சீர்புய னே! வர மேயருள்!
தாரணி யோர்பணி—குகநாதா!

1935. மயிலேறி விளையாடி வருதேவ! அருள்வாய்!
குயிலான மொழிமாது குறமாது கணவா!
ஒயிலாள! எனையாள்வை! உயர்தோகை மலையா!
அயிலாள! முருகேச! அழகாள! அருள்வாய்!

1936. வனச மண்டப வனிதை யம்புயன்—மருகோனே!
சினமி குந்திடு செயவு ணன்றனை—அடுவேலா!
மனது கந்திடு வரமி குந்தருள்—புரிவாயே!
கனக மிஞ்சிய கனமி குஞ்சிகி—மலையாளா!

1937. வஞ்சிநே ரிடையாள் மங்குல்சேர் குழலாள்
[....]—குறமானுள்
ரஞ்சிதா யணைமேல் அன்பதா யணைவோய்!
நன்றுசேர் மயிலா!—எனையாளாய்!
வஞ்சனு கியசூ ரஞ்சவேல் விடுவாய்!
மன்றன்மா லிகையா!—குகநாதா!
தஞ்சம்வே றிலையே குன்றைமா மலையா!
தண்டுழா யணிமால்—மருகோனே!

1938. வாசனை படைத்த நீப
மாலைகள் தரித்த மார்ப!—எனையாளாய்!
நாசமொ டெதிர்த்த சூரை
நாடிமு னெடுத்த கூர்மை—அயிலாளா!
பாசம தகற்று ஞானர்
பாரிமையர் பத்தர் கோடி—பணிபாதா!
தேசமதில் முக்ய மான
சீர்சிகி மலைக்குள் வாழு—முருகோனே!

---

1934. [ ] சில எழுத்துக்கள் இல்லை. 'வேடமின் - அணைதோளா!' எனப் படிக்கலாம்.

1937. [......] இரண்டு சீர்கள் விடப்பட்டுள்ளன. 'கண்டுசேர் மொழியாள்' என்று சேர்க்கலாம்.

1939. தஞ்சம் வேறிலை யன்ப னருள்
தந்து காரெனை—முருகோனே!
வஞ்ச னுமவு னன்றன் மாளிட
வண்கொள் வேல்விடு—செயவீரா!
கஞ்ச மாதுறை அம்பு யாசனன்
கங்குன் மேனியன்—மருகோனே!
மஞ்சு சூழ்சிகி யின்கு கா! அருள்!
மஞ்சு சேர்சிகி—மலையாளா!

1940. சித்துவிளை யாடிய குமரா!
சித்ரமயி லேறிய முருகா!—எனையாளாய்!
வித்துரும மாகிய இதழாள்
விர்த்திபெறு வேடுவர் கொடியாள்—புணர்தோளா!
சத்துருவை நேர்பட அடுவோய்!
சத்தியணி சேவல! அருள்வாய்!—மலர்நீபா!
நத்துலவு நேமன னகரா!
நட்புமிகு தோகையின் மலையா!—அமரேசா!

1941. எதிர்வரு சூர னுடல்பிள வாக
இசையயி லேவு—முருகோனே!
கதிர்மிகு நீப மலர்புனை மார்ப!
கதியருள் தேவ!—முருகோனே!
நதியணி வேணி யரனருள் பால!
நடமிடு தோகை—மயிலாளா!
பதிபுகழ் தோகை மலைவரு தேவ!
பலனருள் நாத!—எனையாளாய்!

1942. சஞ்சி தப்பறவை யோட வேயருள்
தந்தெ னக்கதிக வாழ்வை யேயினி—உதவாயோ?
ரஞ்சி தக்குறமி னாளை யேபுணர்
நன்றி ருக்குமலர் நீப மாலிகை—புனைதோளா!
பஞ்சி ருக்குமிரு தாள னே! அருள்!
பண்பி ருக்குமயி லேறி நாயன்முன்—வருவாயே!
மஞ்சி ருக்குமுயர் சோலை சூழ்தரு
வண்பு கழ்ச்சிகியின் மேரின் வாழ்வுறு—குகநாதா!

1943. கதிர்போலொளிர் திருமேனிய! கமழ்நீபமென்-மலர்மார்பா!
நதிசூடிய சடைநாயகர் நடநாயகர்—புதல்வோனே!
மதியானன முருகா!குக! மயிலேறிய—செயவீரா!
விதிமால்பணி சரண! அருள் விரைசேர்சிகி—மலையாளா!

1944. மதுசொ ரித்திடு வுயர்க டப்பமென்
மலர்த ரித்திடு—தடமார்பா!
கதுமெ னப்பொடி நடைப டித்திடு
கனக மெய்ச்சிகி—மயிலாளா!
விதுமு கத்தினர் குறவர் மெய்க்குல
விழைவு பெற்றவள்—புணர்தோளா!
பதும முற்றவள் மருக! வித்தக!
பணிமு டிச்சிகி—மலையாளா!

1945. காத லாகிய வேட நாயகி காவின் மேவிய—புயவேளே!
நாதனே! அருள் தேவனே! க்ருபை நாளு மேயினி—உத
[வாயோ!
வர்தபுரி சூர னுருயிர் மாய வேயயில்—விடுவோனே!
கோத லாதொரு சீர தாகிய கோடு சேர்சிகி—மலையாளா!

1946. மந்தி தாவிய தண்கொள் சோலைகள்
மண்டு தோகையின்—மலையாளா!
தந்தி யானனர் தொங்கு சீர்கையர்
தம்ச கோதர!—முருகோனே!
அந்தி மேனியன் கைந்து தான்விழ
அம்பை யேவுவர்—மருகோனே!
நந்தி யேறிய அண்ட நாயகர்
நம்ப னாருள்—புதல்வோனே!

1947. மிக்க போர்புரி மொய்த்த மாபடை
மெத்த வோடிட—விடுவேலா!
தக்க னூர்பட வெற்றி யேபுரி
சக்க ராயுதர்—தருபாலா!
மைக்க ணாயகி சித்ர வேடமின்
மற்பு யாசலம்—அணைதோளா!
சிக்க நோய்தவி ரச்செய் வாய்! குக!
சித்ர மார்சிகி—மலையாளா!

1948. வானவர் முதலோர் வாசவ னுடனே—பணிதாளா!
கானக மதில்வாழ் காரிகை யுடனே—புணர்தோளா!
ஞானவர் முனிவோர் நாள்தொறும் பணியே—புரிதாளா!
தானவர் கலகா! தோகையின் மலையா!—எனையாளாய்!

1949. போர்பு ரிந்திடு சூரன் மண்டைகள்
போக வந்தெதிர்—அயிலாளா!
வார்பு னைந்திடு வேட மங்கையை
வான மங்கையை—அணைதோளா!

தார்பு னைந்திடு மார்ப! அன்பர்கள்
 தாழ்வ கன்றிட—அருள்தோளா!
கார்ப டிந்திடு தோகை யங்கிரி
 காவல் கொண்டிடு—முருகோனே!

1950. வஞ்சனை மிகுத்த சூரன்
 மண்டிய படைக்குள் வேலை—விடுவீரா!
கஞ்சனை வதைத்து வானர்
 கண்டுட னகைக்க வேசெய்—திடுமாயோன்
அஞ்சன நிகர்த்த மேனி
 அண்டர்பணி வுற்ற மாயன்—மருகோனே!
மஞ்சது தவழ்ப்பொன் மேரு
 வண்புகழ் சிகிப்பொன் மேரில்—வருதேவே!

1951. எதிர்வரு சூர னுவி யிடிபட வேலை யேவு—செயவீரா!
அதிரிட வாட லேசெய் அழகிய தோகை யான—பரியாளா!
பதிபுகழ் நேம நாட! பரிமள நீப மாலை—புனைதோளா!
கதிதரு தோகை யான கனமலை மீது வாழு—முருகோனே!

1952. வஞ்ச னுமவு ணன்றன் மார்பினில்
 மண்ட வேல்விடு—செயவீரா!
தஞ்சம் வேறிலை அன்ப னுனருள்!
 தந்தி யானனர்—துணையாளா!
கஞ்ச னுர்பணி கின்ற நாயக!
 கந்தனே! வர—முதவாயோ?
நஞ்ச ராமுடி வந்த பூவினில்
 நன்றுசேர்சிகி—மலையாளா!

1953. வந்தெதிர் சூரன் அஞ்சிட வேலை மண்டிட ஏவு—செயவீரா!
சந்தமு லாவு பைந்தமிழ் பாட தண்பத நீசெய்!—குருநாதா!
நந்தணி மாயன் மங்குலின் மேனி நன்றுள மார்பன்—மரு
 [கோனே!
அந்தர வானர் வந்துவு லாவு அஞ்சிகி மேரில்—வருதேவே!

1954. வாதுபுரி சூரன் மேனிபொடி யாக
 வாளயிலை யேவு—செயவீரா!
தாதுதிகழ் நீப மாலையணி மார்ப!
 தாசனெனை யாளு—முருகோனே!
மாதுகுற வேட நாயகியை மேவு
 வாசமிகு மார்ப!—எனையாளாய்!
தீதுவிட வேசெய் வாய்! குமர! தோகை
 சீர்மலையில் நாளும்—வருதேவே!

1955. சிந்தை மகிழ்வாக வந்துவரம் நீசெய்!
செந்திமலை வாழு—முருகோனே!
தந்தை என தாசை யின்படிசெய் வோர்கள்
தங்களைய லாதும்—அறிவீரோ?
நந்தையணி பாணி மங்குனிற மேனி
நன்றுபுரி மாயன்—மருகோனே!
விந்தைவளர் தோகை யின்கிரியின் வாச!
விண்பரவு தேவர்—பணிதாளா!

1956. வஞ்ச னுனவவு ணன்றன் மாளிடமுன்
வந்து வேலைவிடு—செயவீரா!
கஞ்ச நான்முகனும் அண்டர் நாயகனும்
கங்குன் மேனியனும்—பணிதாளா!
தஞ்சம் வேறிலைமுன் வந்து தானருள்செய்!
சங்க நாவலவ!—எனையாளாய்!
மஞ்ச மீதுகுற வஞ்சி சேர்புயவ!
மங்குல் தாவுசிகி—மலையாளா!

1957. மதிசூடிய நடமாடிய மணிராவணி—சடையார்பால்
துதியேபெறு முமைநாயகி சுதனே!வரம்—உதவாயோ?
கதியாகிய மயிலா!அருள் கருணைநிதி—யெனையாளாய்!
நதிசூழ்சிகி மலைவாழ்குக! நறுநீபமென்—மலர்மார்பா!

1958. மறைவாழயன் முதலோர்பணி வரநாயக!—எனையாளாய்!
திரைதாவிய மலையாகிய திருமேனியர்—மருகோனே!
வரையாகிய தனவேடமின் மணமாலிகை—புனைமார்பா!
துரைவேலவ! சிகிமேர்வளர் துதியேபெறு—முருகோனே!

1959. அந்தமிகு சோமன் கங்கைமட மாது
அன்பினொடு சூடு—சடையார்பால்
வந்தவுமை மாது சந்தமுயர் தேவி
மங்கையபி ராமி—தருபாலா!
செந்தமிழில் நாயன் மிஞ்சவர மேசெய்
செந்திருவி னுயன்—மருகோனே!
நந்துதவழ் சோலை மிஞ்சுசிகி யான
நன்றுபுரி மேரில்—வருதேவே!

1955. முருகோனே! தங்களை யலாதும் அறிவீரோ?: ஒருமையும் உயர்த்தற் பன்மையும் மயக்கம்.

1960. வனக்கு றத்தி மேவிய மார்ப னே!அருள்
மதிக்கு மெய்க்கு மானன நாத னே!குரு—பரவேளே!
அனத்தின் மிச்ச மாகிய சீர்கொள் மானடை
அருட்செய் மைக்கண் மாதுமை பால கா!வரம்—உத
சினத்தி ருக்கு மேன்மைகொள் சூர னுருடல் [வாயோ?
தெறிக்க வெற்றி யாகிட வேலை யேவிடு—செயவீரா!
மனத்தி ருக்கு வோடிட நீசெய் வாய்!அருள்
வனச்சி கிப்பொன் மேரினில் [....]—வளர்வேளே!

1961. சந்திர னணிசடையார்
சங்கரி புணர்புயனுர்—அருள்பாலா!
இந்திரன் முதலிமையோர்
இன்பொடு பணிசரணு!—முருகேசா!
நந்திரு கரவரியார்
நன்றுள மருகையனே!—எனையாளாய்!
செந்திரு நிறைசிகியார்
தென்மலை வருமரசே!—செகநாதா!

1962. கொஞ்சிய கிளிமொழியாள்
கொண்டல்கொள் குழன்மடவாள்—குறமானுள்
வஞ்சியை யணைபுயவா!
வண்டமிழ் தனையருள்வாய்!—அமரேசா!
பஞ்சினு மெதுவடியாள்
பங்கச மலர்மகள்சேர்—புயமாயோன்
ரஞ்சித மருகையனே!
நன்றுள சிகிமலையா!—எனையாளாய்!

1963. வஞ்சக மாவவு ணன்றனை யேயெதிர்
மண்டிட வேயயில்—விடுவீரா!
கஞ்சனை யேகொல நின்றிடு மானுயர்
கங்குலின் மேனியர்—மருகோனே!
பஞ்சணை மேல்வன மங்கையை மேவிய
பண்புள நீபமென்—மலர்மார்பா!
நஞ்சணி ராமுடி வந்திடு பூவளர்
நன்றுயர் தோகையின்—மலையோனே!

1964. மருமணம் மேவு நீப
மலரணி மார்ப! மேன்மை—அருளாயோ?
திருவணி மாயன் வாசம்
திகழ்துள மார்பின் மால்தன்—மருகோனே!

---

1960. [ ] விடப்பட்டுள்ளது. 'தேவர் சூழ்வுற' எனச் சேர்க்கலாம்.

உருமென வேசொல் வாயன்
உயருடன் மேனி மாவை—அடுவேலா!
தருமிகு சோலை சூழும்
தகுசிகி **மேரில்** வாழும்—முருகோனே!

1965. சங்கர னருளிய பாலா!
தந்தியின் முகர்துணை யாளா!—எனையாளாய்!
மங்கள மிகுகுற மாளுள்
வம்புமு லையிலணை தோளா!—குகநாதா!
பங்கச மலர்மக ளேசேர்
பண்புயர் துளவணி மாயோன்—மருகோனே!
திங்கள்த வழுமுடி யேசேர்
**தென்சிகி மலை**வரு தேவே!—அருளாயோ!

1966. கொண்டலெனு மேனி கொம்புதிகழ் யானை—துணையாளா!
வண்டனெனு மாமுன் வந்துவயி லேவு—செயவீரா!
கண்டமதி நீலர் கங்கையணி வேணி—தருபாலா!
அண்டர்பணி **தோகை யங்கிரி**யின் வாச!—எனையாளாய்!

1967. மைந்துயர் சூரன் நைந்திட வேலெய்
மண்டிய போர்செய்—செயவீரா!
ஐந்தரு வேநல் மிஞ்சிய தேவர்
அன்பொடு நாளும் பணிபாதா!
சுந்தரி தேவி அம்பிகை சூலி
சொந்தம தான—புதல்வோனே!
அந்தம தான **குன்றையி** னுத!
அன்பனை யாளும்—முருகோனே!

1968. வாதுபுரி சூரனுடல்
மாயஅயில் வேலைவிடு—செயவீரா!
சூதுநிக ரானதன
தோகைகுற நாயகியை—அணைதோளா!
தாதுதிகழ் நீபமலர்
தானணியும் மார்ப!இனி—யெனையாளாய்!
தீதுஅகல் சோலைநிறை
**சீர்சிகியின் மாமலை**யின்—முருகோனே!

1969. நீய லாது வேறுபேர் நீடு பூவில் யாவரோ?—அறியாயோ?
நாய னுசை யாலையே! நாளும் வாடல் நீதியோ?—குகநாதா!
மாய மான வாழ்வினுல் மாள்தல் நீதி யாகுமோ?-தயவாளா!
தூய மான சோதியே! **தோகை மேரின்** வாசனே!—எனை
[யாளாய்!

1970. வஞ்சக மிடுசூரன் மண்டிடு கனபோரில்—அடுவோனே!
தஞ்சமுன் வருவாய்!பொன் தங்கிய மயிலேறு—குகநாதா!
மஞ்சது தவழ்சோலை மண்டிய சிகிமேரில்—வருதேவே!
கொஞ்சிய கிளிமாது கொங்குயர் குறமாது—புணர்தோளா!

1971. சூரின் மார்பது தூள தாகிட—அயிலேதான்—விடுவீரா!
வாரின் மாமுலை மாது வேடமின்—அணைதோளா!—எனை
[யாளாய்!
மேரி னேர்சிகி மேரி லேவளர்—குகநாதா!—அருளாயோ?
காரின் மேனியர் காத லாகிய—மருகோனே!—முருகேசா!

1972. மதியணி சடையார் வளருமை புதல்வா!—எனையாளாய்!
ததியுணும் அரிமால் தகுமரு கையனே!—குகநாதா!
கதியுள மயிலா! கனமுள ஒயிலா!—அயிலாளா!
விதிபணி சரணா! மிகுசி கிமலையா!—அருளாயோ?

1973. வனச மண்டபம் வளரு மங்கையை—அணைதோளார்—
[மருகோனே!
மனமி குந்திடு வரமி குந்தருள்—குருநாதா!—எனையாளாய்!
சினமி குந்திடு திறலி லங்கிய—அசுரோன்மேல்--எதிராளா!
கனக மிஞ்சிய கனசி கண்டியின்—மலைமீதே!-வருதேவே!

1974. கதிர்மாமுடி நிறைதோகையின் கனமாமலை—வளர்தேவே!
ததியாலுயர் களவேபுரி தகுமாலுட—மருகோனே!
விதிமால்பணி சரணா!அருள் விளையாடிய—மயிலாளா!
நதிசூடிய வரர்பாலக! நலம்யாவையும்—உதவாயோ?

1975. வாதுபுரி சூரனுட னேயெதிர தாகவுயிர்
மாளவயி லேவுசெய—முருகோனே!
சூதுநிக ரானமுலை வானைநிக ரானவிழி
தூயகுற மாதுபுண—ரிருதோளா!
தீதுபுரி நோயகல நீலமயி லேறியென்முன்
சேயவடி வோடுதினம்—வருவாயே!
தாதுதிகழ் நீபமலர் சூடுபுய வா!அருள்செய்!
தாகமொடு தோகைமலை—வருதேவே!

1976. வானத் தார்பணி ராசன் மாமகள்
மாதுக் காய்மண மாலை சூடிய—மணவாளா!
கானத் தார்குல மீது தான்வரு
காரிற் றேறிய மேனி நாயகி—புணர்தோளா!

நானத் தாருயர் நீப னே! அருள்
நாமக் கூரயி லாள னே! க்ருபை—புரிவாயே!
மானத் தார்பணை சூழும் நாடணி
வாசச் சோலைகள் சூழ்சி காமலை—முருகோனே!

1977. தந்தி முகவர் துணைவா!
சங்கம் வருபு லவனே!—எனையாளாய்!
அந்தி மதிய ணிகுவோர்
அன்பு மிகுபு தல்வனே!—அருளாயோ!
செந்தி மலையி னரசே!
செங்க மலமி னணைவோர்—மருகோனே!
பந்தி யெனமு டிகள்சேர்
பண்பு மிகுசி கியின்மா—மலையாளா!

1978. மதியணி வேணி புணருமை மாது
மகிழ்வுயர் பால!—எனையாளாய்!
ததியுணு மாயன் மருவிய மாது
தகுமரு கேச!—முருகோனே!
விதிபுகழ் பாத! இதழுள நீப
விரைமலர் சூடு—புயவோனே!
கதியருள் தோகை மலைவரு தேவ!
கனமயின் மீது—வருவாயே!

1979. கங்கு லாவிய அந்தி மேனியர்
கஞ்ச மானணை—புயமாயோன்—மருகோனே!
சங்கு போன்மிடர் கொண்ட நாயகி
தந்த மாமயல்—மிகுதேவே!—எனையாளாய்!
கொங்கு லாவுக டம்ப மாலிகை
கொண்ட சீர்புய—முருகோனே!—[......]
மங்குல் தாவுசி கண்டி மாமலை
வந்த வா! மயில்—வடிவேலா!—[......]

1980. பைந்தரு நீழலி ருந்தர சேபுரி
பண்பயி ராணித—னயமாயோன்
தந்தருள் மாதும யங்கிட வேமயல்
சங்கையி லாதுசெய்—தணைதோளா!

---

1979. [ ] இரண்டிடங்களிலும் ஒவ்வொரு சீர் விடப்பட்டுள. முறையே, 'அருளாளா!' 'குமரேசா!'. எனச் சேர்க்கலாம்.

எந்தனை நாளும்வ ரஞ்செய்து மேன்மையி
லின்புற வாயருள்—உதவாயோ?
செந்தமி ழோரின்மி குந்திட வேயருள்
செந்திரு வாழ்சிகி—மலையாளா!

1981. வண்டு லாவுக் கடம்ப மாலிகை
மஞ்சு லாவிய—புயமீதே—அணிவோனே!
கண்டு போன்மொழி யம்பு போல்விழி
கஞ்ச மானிகர்—குறமானுள்—புணர்தோளா!
துண்டு மாமதி கொண்ட தோரெயிர்
தும்பி யானனர்—துணையாளா!—எனையாளாய்!
மண்டு சோலைகள் மிஞ்சு கோடுயர்
வண்சி காமலை—முருகோனே!—அருளாயோ?

1982. எதிர்த்த சூருடன் இலக்க தாய்அயில்—தொடுவேலா!
கதித்த மாமயில் கனத்த தோர்பரி—முருகோனே!
நதிப்பொன் வேணியர் நலத்த பாலக!—எனையாளாய்!
துதிப்ப தாஅருள்! சுகக்கு கா!சிகி—மலையாளா!

1983. மங்குல் தாவிய மேனியார்
வண்டு ழாயணி மார்பினர்—மருகோனே!
தங்கு மாமிட ருள்மினள்
தண்ணு லாவிய ஆரமான்—அணைதோளா!
பொங்கு நேமகன் னுடனே!
புங்க வேலணி பாணியா!—எனையாளாய்!
கொங்கு சேர்பொழில் சேருமோர்
குன்றை மாமலை வாசனே!—அருளாயோ?

1984. வருசூருட னடலேபுரி வடிவேலணி முருகா!
மருநீபமெ னலமாகிய மலர்சூடிய புயவா!
திருமாமயின் மிசையேறிய திகழ்சேவக! அரசே!
தருசூழ்சிகி மலைவாழ்குக! தகுமேன்மையை அருள்வாய்!

1985. மயிடன் மாமுடி யதனி லாடிய
வடிவு சேருமை—புணர்தோளா!
கயிலை மாமலை வளரும் வேணியர்
கமழ்செய் தாதகி—புனைவோரே

1982. துதிப்பதா - வணங்குமுறையாக; வணங்கும் பதமுடையவனே எனினுமாம்.

எயில தாகிய புதல்வ னே! அரு
ளுதவு வாய்! குரு—பரவேளே!
மயிலி லேறிய முருக! வேலவ!
வளமை சேர்சிகி—மலையாளா!

1986. மங்குல் போனிற மூந்து மேனியன்
வஞ்ச னாகிய—அசுரோன்மேல்
பொங்கு போர்புரி கின்ற கூருள
புங்க வேல்விடு—செயவீரா!
சங்கு மாமிடர் கொண்ட வேடுவர்
தங்கள் மாதணை—புயவேளே!
கொங்கு லாவிய திங்க டாவிய
குன்றை மாமலை—முருகோனே!

1987. மருவு லாவிய பசிய நீபமென்
மலரை யேயணி—புயவேளே!
திருவு லாவிய துளப மார்பினர்
திருவி னயகர்—மருகோனே!
செருவு லாவிய அயிலி னலெதிர்
செயும வோருடன்—அடுசூரா!
தருவு லாவிய சிகியின் மாமலை
தனிலு லாசமொ—டுறைதேவே!

1988. தண்டலை மீது வாழும்
தண்குழல் வேட மாது—புணர்தோளா!
வண்டணி நீப மாலை
வண்புய மீது சூடு—முருகோனே!
அண்டர்கள் வேதி யோர்கள்
அன்பர்கள் நாளு மேப—ணிசெய்பாதா!
வண்டமிழ் பாட வேசெய்
மங்குல்கொள் தோகை மேரில்—வருதேவே!

1989. வஞ்சமிடு சூரன் மார்பு
மண்டவயி லேவு சூர!—எனையாளாய்!
தஞ்சமினி வேறி லாது
தன்கிருபை நீசெய் தேவர்—பணிபாதா!

நஞ்சமிட ரூர்சொல் பால!
    நன்றுலவு வேட மாது—புணர்தோளா!
மஞ்சடரு வான ளாவு
    மன்றமிகு **தோகை மேரு**—வருதேவே!

1990. வாச நீபமென் மாலை சூடுமார்—பகவேளே!
நேச வேடமா னேயெ னாளுமே—புணர்தோளா!
தாச னானையா! தாழ்வை யோடவே—அருளாயோ?
தேச மீதுவாழ் **சீர்சி காநன்மா**—மலையோனே!

1991. சங்கர னருள்செய் பால
    தந்தியின் வதனர் மால்கொள்—துணையாளா!
சங்கணி கரத லார்பொன்
    தங்கிய புயநன் மாயன்—மருகோனே!
மங்கள குறமி னாளை
    வம்பவிழ் முலையி னோடு—புணர்தோளா!
திங்கள்த வழுமென் மேரு
    தென்**சிகி மலை**யின் வாச—மிகுதேவே!

1992. தந்தி முகவர் துணைவா!
    சந்த்ர னிகரும் வதனா!—எனையாளாய்!
அந்தி மதியை யணிவோர்
    அன்பு மிகுபு தல்வனே!—அருளாயோ?
செந்தி மலையி னரசே!
    செந்த மிழையெ னிடமே—உதவாயோ?
பந்தி நிரைகொண் முடிசேர்
    பண்பு மிகுசி **கியின்மா—மலை**யாளா!

1993. வஞ்சக மிடுசூரன் அஞ்சிட வொருவேலை
    மண்டிட வுடனேவு—செயவீரா!
பஞ்சவ ருட நேயன் மஞ்சது நிகர்மேனி
    பங்கச மலர்மாது—புணர்தோளா!
ரஞ்சித மருகேச! அண்டர்கள் பணிபாத!
    நன்றுள தமிழ்பாட—அருளாயோ?
மஞ்சது தவழ்சோலை மண்டிய **சிகிமேரி**ல்
    வந்திடு முருகேச!—எனையாளாய்!

---

1989. மஞ்சு அடரும் - முகில் நெருங்கித் தவழ்கின்ற.

1994. 'தருசூழ்வரு மிமையோர்பணி தயவாகிய—புனிதோனே !
கருசீர்குழன் மறவோர்குல கனமானணை—குகநாதா !
அருமாமறை முனிவோர்பணி அயனே ! க்ருபை-தருவாயே !
திருவாழ்முடி வளர்தோகையின் **சிகிமாமலை**—வருதேவே !

1995. அடியேனுட **கலிதீரிட** வருளாய்!முரு கையனே !
குடிவாழ்கன வனவேடுவர் குலநாயகி கணவா !
முடியாதுறு பொருள்யாவுள முனநீவரு வதனால் ?
கடிவாசனை மிகுசோலைகள் கமழ்**தோகையின் மலை**யா !

1996. செந்திமலை யரசே ! என் றன்மன தினிலே
[சிந்திதநலம் யாவு]—முதவாயோ ?
**தந்தியுட துணைவா** ! வந்துவர மருள்வாய் !
சந்திரவ தனனே !—எனையாளாய் !
அந்திமதி யணிவோர் தந்தவொரு புதல்வா !
அன்பினுட னடியேன்—மிடிதீராய் !
கொந்திலகு முடிசூழ் கின் றமுடி நிரைசேர்
**குன்றைமலை** வளர்வேல்—முருகோனே !

1997. தாதவிழ் நீப மாலை சூடிய மார்ப ! ஆவல்
தான்மிகு நாயன் வாழ—அருளாயோ ?
மாதர சான தேவி வேடுவர் சேய னை
மானுடன் மேவு நாத !—எனையாளாய் !
சேதனமாக வேமு னாய்வரு சூர னாவி
சீரழி வாக வேலை—விடுசூரா !
ஆதர வேசெய் தேவ ! **தோகையின் மேரில்** வாழும்
ஆரண மாதி நாத !—முருகோனே !

1998. வனச மண்டப மதிலு றைந்திடு
மயில்பு ணர்ந்தவன்—மருகோனே !
அனந டந்தென நடைப யின்றிடும்
அமிர்த ரஞ்சித—மொழிமானாள்
கனக குங்கும முலையி லங்கிய
கனகு றம்பயில்—குறமானாள்
மனது கந்திடு கணவா ! இன் றருள்
வரத ! **குன்றையின்**—மலையாளா !

---

1994. அயனே ! - ஐயனே.
1996. [ ] 'சிந்திதநலமெலா' என இருக்கலாம்.

1999. நானி னைந்திடு மாசை போல்வரம்
நாளு மேஅருள்—புரிவாயே !
கானி கர்ந்திடு கேச நாயகி
கான நாயகி—புணர்தோளா !
மேனி வந்துயர் சூர ழிந்திட
வேக மிஞ்சயில்—விடுசூரா !
வானி லங்கிய கோடி லங்கிய
மாசி கண்டியின்—மலையாளா !

2000. மதியைத் தரித்த சடையார்
வளர்பச் சையுற்ற கிளியாள்—உமைமானுள்
நிதிபெற் றெடுத்த புதல்வா !
நிலவுற் றிருக்கும் வதன !—அருளாயோ ?
விதியச் சுதற்கு முயர்வாய்
விளைவுற் றிருக்கு முதலே !—எனையாளாய் !
அதிகச் சிறப்பு மிகவே
அழகுச் சிகிப்பொன் மலைமேல் —வருதேவே !

2001. வலுசூருட வுயிர்போகிட வடிவேல்விடு—செயவீரா !
கலைமாமதி யணிநாயகர் கருணைநிதி—அருள்பாலா !
கலைபோனுதல் மறமான்மயல் திறலாகிட—அணைதோளா !
அலைசூழ்சிகி மலைமேல்வரும் அரசே!அருள்—புரிவாயே !

2002. மிடியாகிய படுபாவியை விலகாதினி—விடலாமோ ?
அடியேனெடு கிலுமேதுய ரதனுலலை—கிடலாமோ ?
கடிவாசனை யுளநீபமென் கனமாலிகை—அணிமார்பா !
படியோர்புகழ் சரண!உயர் பணைதோகையின்-மலையாளா !

2003. வடிவே லெடுத்தெதிர் சூரன்
மடிவாய் விழச்செயும் வீர !—எனையாளாய் !
குடிவாழ் குறக்கொடி யாளை
குளிர்மா புனத்தினில் மேவு—புயநாதா !
அடியார் நினைத்திடு கோடி
அதுபோ லருட்செயும் நாத !—முருகோனே !
மிடியோடிடச் செய்வை நாத !
விரைசேர் சிகிக்கிரி வாழும்—முருகோனே !

---

2000. விதி அச்சுதற்கும் - பிரமனுக்கும் திருமாலுக்கும்.

2004. கோகனக மாது கோகிலமி ளுள்கு—றமடமாளுள்
தார்கமொடு சேரும் தாரணியு மார்ப!—அருள்செய்வாயே!
நாகமணி வேணி நாதரருள் பால!—மயிலில்வாராய்!
மாகமுயர் சோலை வாழுமுயர் தோகை—மலையில்நாதா!

2005. எதிரேவரு மசுரோனுட லினிலேஅயில்—விடுவீரா!
கதிரேசிக ரொளிர்மேனிய! கதியேயினி—உதவாயோ?
நதிசூடிய வரனுர்தரு நலமாகிய—புதல்வோனே!
மதிதாவிய சிகிமாமலை வருநாயக!—அருளாயோ?

2006. பருத்தமா மயிலா!
பணைத்தயா னையிளுய்!—எனையாளாய்!
கருத்தமே னியனுர்
கருத்திலா சையதாம்—மருகோனே!
செருத்துமேல் வருசூர்
தெறிக்கவேல் விடுவாய்!—முருகோனே!
தருக்கொள்மேன் மையுமாஞ்
சகத்தில்வாழ் சிகிமா—மலையாளா!

2007. பங்கச முகைமுலையாள்
பைங்கிளி நிகர்மொழியாள்—குறமாளுள்
அங்கம திறுகுறவே
அன்பொடு புணர்புயவா!—எனையாளாய்!
சங்கரிதரு புதல்வா!
தந்தியி னுயர்துணைவா!—முருகோனே!
கொங்கலர் மிகுபொழில்சூழ்
குன்றையின் மலையரசே!—அருளாயோ?

2008. ததியுண்டிடு மாயனுர்
தகுபைந்துள மாலையார்—மருகோனே!
நதிகொண்டிடு வேணியார்
நகுவிந்தணி நாதனுர்—தருபாலா!
நிதிதந்தெனை யாளையா!
நிமிஷந்தனில் வா!ஐயா!—முருகோனே!
பதியன்பர்கள் வானவோர்
பணிகொண்டிடு தோகைமா—மலையாளா!

2009. தருசூழ்புன மதிலேவரு தழைகேசநல்—வடிவாளே
திருமாதினை நிகர்நாயகி திகழ்வேடமின்—அணைதோளா!
கருமாமுகி லனையானொரு கனசூருடன்—அடுவேலா!
குருவாகிய மணிசேர்முடி குளிர்தோகையின்—மலையாளா!

2008. நகு இந்து - ஒளி வீசும் திங்கள்.

2010. பாதக னாகிய சூருடல் கீறிடு
 பார்வல வேலிடு—செயவீரா !
கோதகல் மாயவ னார்மரு கா!அருள் !
 கோகில மாகிய—மொழிமானாள்
தாதவிழ் சோலையின் மீதினில் வாழ்பவள்
 தார்புனை வேடமின்—அணைதோளா !
ஆதர வேபுரி வாய்!சிகி **மாமலை**
 ஆள்குக நாயக !—முருகோனே !

2011. வாசமிகு நீப மாலையணி மார்ப !—எனையாளாய் !
நேசமிகு வேடர் நேரிழையை மேவு—புயவோனே !
நாசமிகு சூரை நாடியயி லேவு—செயவீரா !
தேசமதில் வாழ்வர் தேவர்பணி **தோகை—மலை**நாதா !

2012. வஞ்சிநிக ரிடையாள் மங்குனிகர் குழலாள்—குறமானாள்
வஞ்சிமரு வியவா ! வந்துவர மருள்வாய்—குகநாதா !
நஞ்சிலகு மிடறார் நன்குலவு புதல்வா !—எனையாளாய் !
மஞ்சிதவழ் **சிகியா மன்றல்மிகு மலையா** !—அருளாயோ !

2013. தேனுயர் சோலையில் வாழ்வுயர் வேடுவர்
 சீர்மகள் மேவிய—புயவேளே !
வானுயர் தேவர்கள் நாள்தொறு மேபணி
 மாமல ராகிய—இணைதோளா !
நானமு லாவிய நீபமென் மாலிகை
 நாயக னே!க்ருபை—அருளாயோ ?
தானவர் மாகுல கால!வி ணீடிய
 தாமிகு **தோகையின்—மலை**யாளா !

2014. சித்திதனை யருள்வாய் ! சித்ரமிகு மயிலா !—அருளாயோ ?
நித்யசுப கரமான் லெட்சுமியை நிகரா—கியமானாள்
வித்துரும இதழாள் விர்த்திபெறு குறமான்-அணைதோளா !
அத்துவித முடிவே ! அற்பினொடு வருவாய் !—**சிகிமேரா** !

2015. சந்திரச டாதரனார்
 சங்கரிகௌ மாரியினாள்—தருபாலா !
இந்திரன்வி ண்ணோர்களெலாம்
 எந்துரையெ னாமுனமே—பணிபாதா !
கொந்திலகு நீபமதே
 கொண்டபுய வா!கருணா—நிதியாளா !
மந்திகுதி போடுயர்வாய்
 வந்தபொழில் சூழ்சி**கிமா—மலை**யாளா !

2016. அடியே,னலமிக அருள்வாய்! குருபர!—முருகோனே!
மிடியோ டிடவருள்! விமலா! மயில்வரு—செயவீரா!
படிமீது யர்கன பணிகோ டுளசிகி—மலையாளா!
குடிவாழ் பவளொரு குறநா யகிபுணர்—புயவோனே!

2017. கருணைக்கட லாகிய நாயக!
கமலக்கொடி யாள்தனை மேவிய—கருமாயோன்
பொருதிச்சம ராடிடு தானவர்
பொடிபட்டிட வேபுரி மாலுட—மருகோனே!
அருளைத்தர வேநினை வாயுன
தடியர்க்கினி யாருளர்? நீயதை—அறியாயோ?
பருவக்குற நாயகி சேர்புய!
பருமக்கொடு மாமுடி சேர்சிகி—மலையாளா!

2018. தருவனச் சாரலில் வருமானுள்
தனைமணத் தார்புனை—மணவாளா!
திருவைநட் பாய்மரு வியமாயோன்
திரையணைச் சீர்துயில்—விழியாரேல்
மருக!நற் பூமல ரெனுநீபா!
வடிவயிற் பாணிய!—எனையாளாய்!
செருபுரிச் சூருடல் கிழிவேலா!
திகழ்சிகிச் சீர்மலை—வருதேவே!

2019. சகலசென ரெட்சகா!
தமியன்மகி ழச்செய்வாய்—உடனேதான்!
சுகநிகரெ னச்சொலாள்
சுகமிகுகு றப்பெணாள்—புணர்தோளா!
பகிரிடவு ரத்திலே
படவவுண னைக்கொல்மா—வயிலாளா!
அகமகிழு றச்செய்வாய்!
அழகுறுசி கிப்பொன்மா—வரையாளா!

2020. கோட்டுமுலை மாது கோக்குமலர் மாலை—புனைமானுள்
தீட்டுகிளி யான சீர்க்குறமி னாளை—அணைதோளா!
பாட்டுநய மான பாப்பகர வேநல்—லருளாயோ?
வாட்டுமதன் மேனி மாற்றுமிறை பால!—சிகிமேரா!

2021. மங்குல்தவழ் சோலைதனில்
மந்திகுதி போடவதன்—அசைவாலே
செங்கனிக ளூடுவழி
தென்றரவ தால்விளையும்—வளநேமா!

---

2021. தென்: தேன் என்பதன் குறுக்கம்.

சங்கரரு மாபரமர்
தம்புதல் வனே! கிருபை—தருவாயே!
செங்கமல மாதுவளர்
செங்கதிரு லாவுசிகி—மலையாளா!

2022. வண்டுசூழ் நீபமலர் மஞ்சுமார் மீதிலணி—குகநாதா!
செண்டுபோ லானமுலை திங்கள்போ லானமுக-மடமானுள்
கண்டுபோ லானமொழி கஞ்சமா னனகுற—மயிலாள்மால்
கொண்டுசேர் தோழ! அருள் கொங்குசேர் தோகைமலை-வரு
[தேவே!

2023. கொண்டல்நிகர் குழலாள் கும்பமெனு முலையாள்-குறமானுள்
தண்டலையில் மயலால் தண்தினையின் வனமூ-டணைதோளா!
கண்டனைய மொழியாய்! கங்குல்நிற வவுணோர்—குலகாலா!
அண்டர்பணி சரண! அந்தமிகு சிகியா—மலையாளா!

2024. மதியணி சடையார் மருவிய உமையாள்—தருபாலா!
கதியருள் புரிவாய்! கமழுள மலர்நீ—பமென்மார்பா!
விதிமுத விமையோர் விரைவொடு பணிசீ—ரிருபாதா!
பதிபுகழ் சிகியாம் பருமலை யரசே!—எனையாளாய்!

2025. வஞ்சமிடு சூரன் மண்டிவரு போர்க—ளழிவாவே
நஞ்சுவிட வேலை நந்துவிட ஏவு—செயவீரா!
கஞ்சுகிகொண் மேனி கம்பமத யானை—துணையாளா!
மஞ்சுதவழ் சோலை மண்டுசிகி மேரில்—வருதேவே!

2026. பைங்கிளி யாகிய பைந்தொடி வேடுவர்
—குலமானுள்—புணர்தோளா!
சங்கரி யாமளை சந்த்ரச டாதரர்
—அருள்பாலா!—எனையாளாய்!
செங்கம லாசனன் செந்திரு மால்பணி
—இருபாதா!—குகநாதா!
கொங்கலர் சோலைகள் கொண்ட சிகாமலை
—வருதேவே!—அருளாயே!

2027. நடனம யிற்பரியா! நலமதெ னக்கருள்வாய்!—குகநாதா!
கடமத முற்றிடுமோர் கரிமுக னுக்கிளையாய்!-அருளாயோ?
மடமயில் நற்குறமான் மருவுபு யத்தரசே!—எனையாளாய்!
வடவரை யைச்சரியாய் வளர்சிகி யிற்கிரியாய்! அருளாயோ?

2028. வந்துவர மருள்வாய்! வஞ்சிகுற மடமான்—அணைதோளா!
பந்துநிகர் முலையாள் பங்கயமின் மருகா!—எனையாளாய்!
கொந்துமிகு மணமார் கொங்குலவு மலர்நீ—பமென்மார்பா!
பைந்தருகொள் சிகியாம் பண்புலவு மலையா!-அருளாயோ?

2029. உனையலது ஆதரவு ஒருவருள ரோ? இதென—தெரி
[யாதோ?
வனசமலர் மீதிலுறை மகள்மருவு மாயனுட—மருகோனே!
கனகமய மானசபை கலகலென வேநடன—மிடுதாளார்
மனதுமகிழ் பாலக! நன் மையுளசிகி மேரில்வரு-குகநாதா!

2030. அயிலாலெதிர் வருசூருடன் அடுபோர்புரி—திறலாளா!
குயிலாகிய மொழியாளொரு குறநாயகி—கணவோனே!
மயிலாகிய பரிமேலென்முன் வருவாய்! குரு—பரவேளே!
ஒயிலா! உமை புதல்வா! அருள்!உயர் தோகையின்—மலை
[யோனே!

2031. எளியோனுட கவியோடிட இனிதாயருள் புரிவாய்!
களியாயெதிர் வருசூருடல் கமராகிட அடுவோய்!
தெளிவாகிய தமிழேயருள் செய்குவாய்! குருபரனே!
குளிசாரல்கொள் சிகிமாமலை குகனே!உமை மகனே!

2032. அடியேனுட மிடிதீரிட அருளாய்க்ருபை தருவாய்!
குடிவாழ்குற மகள்மேவிய குகனே!அரன் மகனே!
படியோர்புகழ் சரணு! மயில் பரியாய்!அருள் புரியாய்!
முடிசூடிய சிகிமாமலை முருகா! அரி மருகா!

2033. தினைப்புன வேட மாது
சிறப்பொடு மேவு நாத!—எனையாளாய்!
அனைத்தினு மாதி யான
அருட்சிவ ரூப! தேவர்—பணிபாதா!
சினத்தெதி ரான சூரன்
சிறப்பழி வாக வேலை—விடுசூரா!
மனத்துள மாயை தீரும்
மணிச்சிகி மேரில் வாழும்—முருகோனே!

2034. புவியில் மேன்மைகொள் புகழ்சி காமலை—முருகோனே!
கவிகள் தாவிய ககன மேவிய—பொழிலேவாழ்
நவியை நேர்விழி நலம தாகிய—குறமானுள்
குவியு மாமுலை குளிர வேபுணர்—புயநாதா!

2035. வனசமலர் மீதிலுறை மயிலனைய தேவிமரு—வியதோளார்
கனகனுடல் கீறுகன கரியநிற மானஅரி—மருகோனே!
மனதிலுறை நோய்தவிர மயிலில்வருவாய்! குமர!-குருநாதா!
தினகரனை நேர்முடிகொள் சிகிமலையின் மீதுறையு—முரு
[கோனே!

2036. கடம்பையணி புயனே!
கனிந்துவரம் அருள்வாய்!—அமரேசா!
நடம்புரியு மயிலா!
நலஞ்செய்குவை குமரா!—அருளாயோ?
அடம்புரியும் அசுரோன்
அழிந்திடமுன் அயிலே—வியசூரா!
தடங்கொள் சிகி மலையா!
தருந்தவர முதவாய்!--அமரேசா!

2037. உனையலது வேறுதுணை
யொருவருள ரோ? இதுவை—அறியாயோ?
கனைகடலின் மீதுதுயில்
கரியநிற மானவரி—மருகோனே!
முனையிலுயர் வானதொரு
வளருமுயர் ஞானமணி—அருள்வாயோ?
சினையுலவு சோலைநிறை
திகழ்சிகியின் மேரிலுறை—முருகோனே!

2038. திருமி ளுள்புணர் திகழ்து மாயணி—விறல்மாயோன்—
[மருகோனே!
பருவ மாமதி படியும் வேணியர்—அரனர்பால்—வருமானுள்
அருமை யாகிய அழக தாகிய—உமையாளே—தருபாலா!
தருவு லாவிய தழைசி காமலை—வருதேவே!—முருகோனே!

2039. கடம்பவன வாசர் நடம்புரிச பேசர்
கரந்தைபுனை யீசர்—தருபாலா!
அடம்புரியு மாவை ரணஞ்செய்கள மீது
அடர்ந்தவயி லேவி—யடுவீரா!
மடங்கொள்மட மாது குறம்பயிலும் வேடர்
மடந்தைதனை மேவு—புயலோலா!
தடங்குலவு சோலை மிகுந்தசிகி மேரில்
சகம்புகழ வாழ்வு—தருதேவே!

2040. மனது கந்திடு நினைவெ னும்படி
வரமி குந்தருள்—முருகோனே!
சினமி குந்திடு அசுர னின்றுடல்
செயமுன் வென்றிடு—வடிவேலா!
வனச மண்டபம் வளரு மங்கையை
மருவு செங்கணன்—மருகோனே!
தினமு மன்பர்கள் பணிந லந்தழை
சிகியெ னுங்கிரி—வளர்வோனே!

2041. வண்டுளரு நீபமலர் வம்புமிகு மாலையணி—புயவேளே!
தண்டுளப மாலையணி சங்கமணி பாணியுட—மருகோனே!
செண்டுநிக ரானமுலை திங்கள்முக வேடர்மகள்—புணர்
[தோளா!
கொண்டல்படி சோலைநிறை குன்றைமலை மீதுவரு—முரு
[கோனே!

2042. நஞ்சணி மிடறுர் நந்தணி கரனுர்—அருள்பாலா!
வஞ்சனை செயுமா வந்தடல் செயவே—அடுவீரா!
கஞ்சனை முனமே கண்டுசி றையிலே—இடுவோனே!
மஞ்சுத வழுமோர் வண்புகழ் சிகியா—மலையாளா!

2043. அடியேனுட மிடிதீரிட வருளாய்!குரு—பரவேளே!
துடியாயெதிர் வருசூரொடு துயராய்விட—அடுவேலா!
கடிமாமண மிகுகேசமின் கனவேடமின்—அணைதோளா!
வடிவேலவ! அருளாய்!குக! வளர்தோகையின்-மலையாளா!

2044. வாதுபுரி சூரனுட மார்புபிள வாகவயில்—விடுசூரா!
மாதுகுற நாயகியை வாசமிகு கானில்மரு—வியதோளா!
போதுமயி லாளையணை பூவைநிற மாயனுட—மருகோனே!
தாதுகமழ் சோலைநிறை சாரன்மிகு தோகைமலை-வருதேவே!

2045. மந்திகுதி போடு தண்டலையில் வாழு
மங்கைகுற மாது—புணர்தோளா!
கொந்திலகு சீர்க டம்பணியு மார்ப!
கும்பமத யானை—துணையாளா!
அந்திமதி சூடு செஞ்சடையி னுதர்
அன்புமிகு பால!—முருகோனே!
செந்திமலை வாச! குன்றைநக ராளா!
சிந்தனைசெய் வோர்முன்—வருவாயே!

2046. மன்றன மணக்குந் தண்டலை யுற்ற
மங்குனி றத்த—குறமானுள்—புணர்தோளா!
கொன்றை தரித்த செஞ்சடை யத்தர்
கொண்டம யற்பெண்—உமைமானுள்—தருபாலா!
அன் றுவெதிர்த்து நின்றவு ணர்க்கு
அங்கை யயிற்கொ—டுவீரா!—அருளாயோ?
நன்று மிகுத்த குன்றை யிருக்கும்
நன்று தரித்த—செயமாயோன்—மருகோனே!

2047. கானக மீது வாழுங்
காரிகை யாளை மேவு—புயநாதா!
வானக நாத னும்
மால்முத லோர்கள் யாரும்—பணிபாதா!
தானவ னை மாவை
சாகிட வேலை யேவு—செயவீரா!
நானமு லாவு சோலை
நாள்தொறு மேவு தோகை—மலையாளா!

2048. கங்கையணி சடையார்
கண்டுமகிழ் புதல்வா!—எனையாளாய்!
செங்கையணி யயிலா!
திங்கணிகர் வதனா!—முருகேசா!
கொங்கைபுள கிடவே
குன்றில்வளர் குறமான்—அணைதோளா!
மங்கைவளர் சிகியா!
மன்றல்மிகு சிகியா—மலையாளா!

2049. வஞ்சவவு ணன்றனுயிர் மங்கிவிட வன்றயிலை—விடுவீரா!
நஞ்சரவ ணிந்தமுடி நம்பரரு ளும்புதல்வ!—எனையாளாய்!
தஞ்சமிலை வந்தருள்வை! சந்த்ரவத னந்திகழ-வருவாயே,!
மஞ்சுதவழ் கின்றசிகி மங்களமி குந்தகிரி—வளர்தேவே!

2050. தூய மதியணி சடையாளர்
சோதி தரவரு புதல்வா!நன்—னயவேளே!
ஆய பலகலை புனைநாத!
ஆறு முகமுரு கையநாத!—அருளாயோ?
சேய! சரவண பவவேல!
தீய வசுரனை யெதிர்சூர!—குகநாதா!
மாய மயல்தனை அகல்வேசெய்!
மாக முயர்சிகி மலையாள!—அருளாயோ?

2051. நடனமிடு மயிலா! நளினமலர் வதன!—எனையாளாய்!
க்டகரியின் முகனார் கருணைமிகு துணைவா!—குகநாதா!
வடவரையை நிகராய் வளருசிகி மலையா!—அருளாயோ?
மடமயில்கு றமினாள் மருவுபுய முருகா!—அமரேசா!

2052. கடமத மொழுகிய கரிமுக னாடதுணை—முருகோனே!
அடமிகு வவுணனை அலறிட வயில்விடு—செயவீரா!
குடமுலை யிலகிய குறமக ளுடன்மரு—வியதோளா!
தடமுடி நிறையுள தகுசிகி மலைவரு—முருகோனே!

2053. திருமாது மேவிய செயமாய ஞருட—மருகோனே!
வருசூர ஞருடன் வலுபோரு தானிடு—செயவேலா!
கருமேனி வேடுவர் கனமாது மேவிய—புயநாதா!
தருசூழு மாமுடி தகுதோகை மாமலை—வளர்தேவே!

2054. மதிசூடிய சடையார் மலர்தாதகி முடியார்—சபைமீதே
துதிநாடக மிடுவோர் சுபநாயகர் புதல்வா!—எனையாளாய்!
கதிதானடி யவர்பால் கருணாநிதி! கிருபை—புரிவாயே!
நதிசூழ்சிகி மலையாய்! நலம்யாவையு முதவாய்!—[.......]

2055. வனமேவிய குறமான்
மனதாசையி னுடனே—புணர்தோளா!
கனமாகிய மயிலா!
கருணாநிதி க்ருபையே—புரிவாயே!
சினமாவெதிர் அசுரோன்
செயம்வீழிட அயிலே—வியவீரா!
இனமாமண்ணி நிரைசேர்
எழில்தோகையின் மலையா!—அருளாயோ?

2056. வஞ்சமிடு சூரனுடன் வம்புமிகு வாதுபுரி—அயிலாளா!
தஞ்சமினி வேறிலைநின் தண்கமல பாததெரி—சனமீவாய்!
நஞ்சமிகு மாமிடறர் நந்தருமை நாதரரு—ளியபாலா!
மஞ்சுதவழ் சோலைநிறை நன்றுலவு தோகைமலை—
[முருகோனே!

2057. செச்சையணி புயவா! சித்ரமயில் முருகா!—குகநாதா!
வச்ரமிகு கரனார் வர்த்தனைகொ ளிமையோர்—பணிபாதா!
அச்சுதனன் மருகா! அற்புதவ னமினாள்—புணர்தோளா!
நச்சரவின் முடியார் நத்துமக! சிகிமா—மலையாளா!

---

2054. [...] 'முருகோனே!' எனப் படிக்கலாம்.

2058. வனச மண்டபம் வளரு மங்கையை
—புணர்மாயோன்—மருகோனே!
அனந டம்பயில் அழகு மிஞ்சிய
—குறமானுள்—மணவாளா!
மனது கந்திடு வரமி னஞ்செய்வை!
—வடிவேலா—யுதநாதா!
கனக குன்றென கமழ்சி கண்டியின்
—மலையாளா!—அருளாயோ?

2059. கோக்னக முலையாள் கூரயிலின் விழியாள்—குறமானுள்
தாகமொடு புணர்வாய்! தாமமணி புயவா!—குகநாதா!
நாகமணி சடையார் நாளுமரு வியமான்—அருள்பாலா!
மாகமுயர் முடிசேர் வாசமிகு சிகிமா—மலையாளா!

2060. கருணை மிஞ்சிய அடியன் வெங்கலி
கலைய வந்தருள்—புரிவாயே!
தருண மங்கைநன் வடிவி லங்கிய
தருவின் மங்கைதன்—மகள்வாகா!
மருமி குந்திடு மிதழ்க டம்பணி
மணிமி குந்திடு—புயவேளே!
திருவி லங்கிய வுயர்செய் குன்றைய!
செயமி குந்திடு—வடிவேலா!

2061. வடிவி லங்கிய மயிலில் வந்தருள்—புரிவாயே!
அடியர் விண்ணவர் அனுதி னம்பர—வியபாதா!
குடியில் வந்திடு குறம டந்தையை—அணைதோளா!
கடிமி குந்திடு கனசி கண்டியின்—மலையாளா!

2062. கான மேவிய வேடமான்
காத லாயணை தோளனே!—அருளாயோ?
வான மேவிய வானுளோர்
மானு நான்முக னுருமே—பணிபாதா!
ஞான மாதவர் யாருமே
நாளு மேபணி தேவனே!—எனையாளாய்!
நான நீபமென் மாலையாய்!
நாத னே!சிகி மேரில்வாழ்—குகநாதா!

2063. அவுண ரஞ்சிட எதிர வந்தொரு
வடிவி லங்கிய—அயில்தானே—தொடுவீரா!
சிவச வுந்தரி யருள்செ யம்பிகை
திரள்க னங்குழை—உமைமானுள்—அருள்பாலா!

கவமி குந்திடு முனிவ ரண்டர்கள்
சகல் ரும்பணி—யிருதாளா!—ஜயாளாய்!
பவம கன்றிட மயிலில் வந்தருள்
பளப ளென்றிடு—சிகிமேரா!—குகநாதா!

2064. அண்டர் வானவர் கண்டு மேபணி
அன்ப தாகிய—முருகோனே!
கண்ட தாகிய தொண்டை வாயினள்
கங்குன் மேனியள்—குறமானுள்
கொண்ட காதல! தொண்டர் நாயக!
குன்றை மாமலை—முருகோனே!
வண்ட ஞமவு ணன்றன் வீழிட
வந்து வேல்விடு—செயநாதா!

2065. வீர மிஞ்சிய சூர னஞ்சிட
வேலை யன்றெயும்—முருகோனே!
சார மிஞ்சிய பாவி னஞ்சொலு
சாமி! வந்தருள்—புரிவாயே!
ஆர மிஞ்சிய மார்பி லங்கிட
யான்ம கிழ்ந்திட—வருவாயே!
ஈர மிஞ்சிய நாயன் முன்பருள்!
ஏர்சி கண்டியின்—மலையாளா!

2066. தானவர் குலகலகா!
தார்புனை நுதியயிலா—யுதவேளே!
கானவர் குலமடமான்
காதல்கொ ளிருபுயவா!—ஜயாளாய்!
வானவர் பணிசரணு!
மா துமை யருள்சிறுவா!—முருகோனே!
ஞானவர் புகழ்சிகியா
நாள்தொறும் வளர்மலைமேல்—வருதேவே!

2067. மாட மாளிகை நிறைவளமும்
வாச மேவுறு பொழில்வளமும்—நலமேசேர்
கூட கோபுர நிறைவளமும்
கூடு தோகையின் மலைதனில்வாழ்—முருகோனே!
ஆட லாடுறு மயில்முருகா!
[ஆரநீப மணிமார்பா]!—அருளாயோ?
பாடல் பாடவென் முனம்வருவாய்!
பாவை வேடர்தம் மகள்கணவா!—குகநாதா!

---

2067. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'ஆரநீபம தணிபுயவா!' எனப்படிக்கலாம்.

2068. கனத்தபூ முலையாள் வடித்தவேல் விழியாள்
கறுத்தகே சமினுள்—குறமானுள்
அனத்தைமே வியவா! மயிற்பொன்வா கனனே!
அருட்செய்வாய் குமரா!—நலமேசேர்
எனக்குமேன் மையதா யிருக்கநீ யருள்வாய்!
இசைத்தபா டல்களே—தருவாயே!
மனத்துநோய் தவிர்வாய்! சிகிப்பொன்மா மலையா!
வருத்துசூர் படவே—அடுவீரா!

2069. மனநி னைந்திடு வரமு கந்தருள்!
மணமி லங்கிய—மலர்நீபா!
அனந டம்பயில் குறம டந்தையை
அணையி லன்பொடு—புணர்தோளா!
வனச மங்கையை மருவு மம்புயன்
மகிழ வந்திடு—முருகேசா!
கனக மிஞ்சிய முடியி லங்கிய
கனசி கண்டியின்—மலையாளா!

2070. சார மிஞ்சிய பாவி னம்பகர் சாமி வந்தருள்—புரிவாயே!
ஆர மிஞ்சிய மார்பி லங்கிய வாறி ரண்டுள—புயநாதா!
வீர மிஞ்சிய சூரை வென்றிடு வேல ணிந்திடு-முருகோனே!
ஈர மிஞ்சிய தேவ! சங்கர! ஏர்சி கண்டியின்—மலையாளா!

2071. வானவர் முதலோன் மாது மினளே
மாலொடு புணர்வோய்!—அருளாயோ?
தானவர் குலமோ டேமடி வாயே
தான்விழ அயிலே—வியசூரா!
ஞானவ ரடியா ரேபணி சரண!
நாரண ருடமா—மருகோனே!
கானவர் குலமா னேபுணர் புயவா!
கார்தவழ் சிகிமா—மலையாளா!

2072. மாதய வாக வேயரு ளேசெய்!
வாதுள சூரை—அடுவீரா!
போதம தான ஞானவர் வானர்
பூவயன் மாயன்—பணிதேவே!
மாதர சான கான மினளை
மாலொடு மேவு—புயலோலா!
பாதக மோட வேயரு ளேசெய்!
யார்புகழ் தோகை—மலையாளா!

2073. வேலெ டுத்துவெதிர் சூரர மீதினில்
வீறு பெற்றவயி லேவிய வா!அருள்—உதவாயோ!
கோலெ டுத்துநிரை யோடுபி னேதிரி
கோல முற்றதிரு மாயவ ஞருட—மருகோனே!
மாலெ டுத்தகுற நாயகி மேவிய
வாச முற்றதிரு நீபமென் மாலிகை—புனைமார்பா!
சூலெ டுத்தமழை தாவிய சோலைகள்
சூழ்சி கிக்கிரியில் மேவிய வா!க்ருபை—புரிவாயோ?

2074. வந்த சூருடல் கிழியவே
மங்கி டாதயில் கடவியே—அடுவீரா!
சந்த மாகிய தமிழையே
தந்து கா!சிறை மயிலிலே—றியதேவே!
கந்த மாகிய மலரில்வாழ்
கங்கு லாவிய குழலிஞள்—மருகோனே!
அந்த மேவிய பொழில்கள்சூழ்
அண்ட மேவிய சிகிரியின்மா—மலையாளா!

2075. தண்டை யாடிய அம்பொன் மாமயில்
தங்கு மாமயில்—தனின்மீதே!
அண்டர் யாவரு மின்ப மாகமுன்
அன்ப தாகமுன்—வருவாயே!
கொண்ட காதலி மங்கை வேடுவி
கொங்கை மேல்வரு—வியதோளா!
கொண்டல் தாவிய பைம்பொ ஞகிய
குன்றை மாமலை—வருதேவே!

2076. திங்களணி சடையார் செங்கதிரி ஞெளியார்—அருள்பாலா!
மங்களகு றமிஞள் வம்புபுனை முலைமேல்—அணைதோளா!
செங்கமல மடமான் செம்பவள இதழாள்—மருகேசா!
மங்குறவழ் பொழில்சூழ் வண்சிகிரின் மலைமேல்-வருதேவே!

2077. நடன மிட்டிடு மயிலி லுற்றவ! நலமெ னக்கருள்-குருநாதா!
அடமி குத்திடு மசுர னைக்கொல அயிலெடுத்திடு-செயவீரா!
குடமு லைக்குற மடம யிற்புணர் குருப ரக்குக!—எனை
[யாளாய்!
தடமு கத்திடு பொழில்வ ளைத்திடு தழைசி கிக்கிரி—வரு
[தேவே!

2078. அயிலாலெதிர் வருசூரனை அடுபோர்புரி—செயவீரா!
மயிலேறிய குகநாயக! வரதா!அருள்—புரிவாயே!
குயிலாகிய மொழியேபயில் குறநாயகி—புணர்தோளா!
ஒயிலா!உமை புதல்வா!நலீ முயர் தோகையின்—மலையாளா!

2079. தூய தினைவன மீதில்வாழ் வேடர் குலம்வரு மாதினுள்
தோகை குறமகள் சேர்புயா!—அருளாயோ?
மாய னயன்முதல் வானவோர் சேவை செயுமிரு தாளனே!
வாச மிகுகன நீபமா—லிகைமார்பா!
சேய! சரவண நாதனே! சூர னுடல்கிழி வேலனே!
தேகம் வருபிணி யோடவே—அருளாயோ!
தீய வினைகெட வேசெய்வாய்! தோகை மலைவள ரீசுரா!
தேவ நடமிடு தோகையா!—எனையாளாய்!

2080. வான வர்மிடி தீரவே
மாவு டல்கிழி வாகவே—செயும்வேலா!
கான வர்குல மாதினுள்
காதல் கொள்குக நாதனே!—எனையாளாய்!
சானகி புணர் மாயனுர்
தான்ம கிழ்மரு கேசனே!—அருளாயோ!
ஞான வர்புகழ் பாதனே!
நாக மதுர தோகைமா—மலையாளா!

2081. கொஞ்சு கிளிமொழியாள் கொண்டல் படிகுழலாள்—குற
[மாதுள்
வஞ்சி தனைமயலால் வம்பு முலைதனிலே—புணர்தோளா!
நஞ்சி லகுமிடறூர் நன்று லவுபுதல்வா!—எனையாளாய்!
மஞ்சு தவழ்சிகியா மன்றன் மிகுமலையா!—அருளாயோ?

2082. வனத்தில் வந்திடு வேடமி னுளொடு
மகிழ்ச்சி மிஞ்சிட வேபுணர் சீர்புய!—எனையாளாய்!
கனத்த கோடுகள் சூழ்பொழில் சேர்வரு
கமழ்ச்சி யுந்திய தோகையின் மாமலை—முருகோனே!
சினத்த சூருடல் சீறிட வேயொரு
திறத்த வேலினை யேவிய வா! குரு—பர! வேளே!
மனத்தில் வந்திடு நோய்தனை யேயினி
தவிர்த்து வாழுமை யா! குக நாயக!—எனையாளாய்!

2083. வாது தான்மிகு மாவின் மேல்பிள—விடவேதான்
கோது தானகல் சூரின் வேல்விடு—செயவீரா!
சூது தான்முலை தோகை வேடமின்—அணைதோளா!
மாது வாழ்வுறு மாசி காமலை—முருகோனே!

---

2082. சந்தங்கள் பொருந்தவில்லை.

2084. வந்தெதிர் சூருடல் மண்டிட வேயயில்—விடுதேவே!
பந்தெதிர் பூமுலை பங்கச மாணிகர்—குறமானுள்
பைந்தொடி யாள்புணர் பண்புய வா! அருள்—குருநாதா!
ஐந்தரு வாகிய அஞ்சிகி மாமலை—முருகோனே!

2085. மோது போர்புரியு மாவையே
மூடு சேனையுட னேசமர்—அடுவீரா!
தோது தானலது வேடமான்
தூய கானிலணை சீர்புயா!—எனையாளாய்!
வாது ராவணனை நேரதாய்
வார போதுவெனு மாயனர்—மருகோனே!
மாது மேவுசிகி மேரில்வாழ்
வாச நீபமலர் மாலையா!—அருளாயோ?

2086. செருவுற்றிடு சூருட னேவெகு
திறமுற்றிடு கூரயி லேவிய—செயவீரா!
மருவுற்றிடு நீபமென் மாலிகை
மலரைத்தரி மார்ப! சி காமலை—வருதேவே!
தருவுற்றிடு கானக மானணை
சகமுற்றடி யார்பணி சீர்பத—முருகோனே!
திருவுற்றிடு மாமயில் வாகன!
திகழச்சுத னர்மகிழ் சீருள—மருகோனே!

2087. வஞ்சமிடு சூரன்மார்பில்
மண்டவயி லேவி யேவெல்—வடிவேளே!
கஞ்சனுயிர் போக வேசெய்
கங்குனிற மாய னர்தம்—மருகோனே!
மஞ்சமிசை வேட மானை
மன்றலொடு மேவி யாளு—முருகோனே!
நஞ்சரவின் மீது வாழும்
நன்றுளதொர் தோகை மேரில்—வருதேவே!

2088. சங்கம்புகழ் நாவல வா! அருள்
தங்குங்கட லே! க்ருபை யாவதும்—அருளாயோ?
வங்கம்மென வேயலை யாதினி
வண்சுந்தர மாமயி லேறிமுன்—வருவாயோ?
புங்கம்மிகு வேடமி னளொடு
பொன்தண்டலை யூடுவு லாவிய—மகிழ்லோலா!
தங்கங்கிளர் மேருவை யேநிகர்
தண்கொண்டிடு தோகையின் மாமலை—வருதேவே!

2089. மாதரசி யான வேடுவர்கள் மாணை
மாய்கையொடு மேவி—யணைநாதா!
சீதமதி சூடும் வேணியரன் மேவு
தேவியுமை யாசை—மகவேளே!
ஆதரவ தாக நாயனுயர் வாக
ஆடுமயின் மீது—வருவாயோ?
போதமிகு ஞானர் தேவர்பணி பாத!
பூவுலகு தோகை—மலையாளா!

2090. கலியோடிட அருளே செய்வை! கமலானன—வடிவேளே!
வலியாகிய அசுரோனுயிர் மடிவாகிட—அடுவீரா!
ஒலியாகிய அரிசூழ்வரு முயர்சோலைமின்—மணவாளா!
மலிசோலைகள் வளைதோகையின் மலையா! அருள்-புரிவாயே!

2091. தண்டையொலி மிகவே தங்கமயின் மிசையே—வருவாயே!
கெண்டைநிகர் விழியாள் கிஞ்சுகமென் மொழியாள்—குற
[மானுள்
தண்டலையின் மயலால் தங்கணவ னெனவே-புணர்தோளா!
அண்டர்பணி சரண! அந்தமிகு சிகிமா—மலையாளா!

2092. எனதுகலி தீர கிருபைபுரி யாமல்
இதுவரையு மேதுதய—விலையோதான்?
அனநடைசெய் பாதம் கொலுசுவொலி போட
அழகிகைும் வேடர்மகள்—புணர்தோளா!
கனகமய மான வடிவிலக வேமுன்
கனமயிலி லேறிஎதிர்—வருவாயே!
மனவிசன மோட வருள்செய்சிகி யான
மலையில்வரு தேவ!அருள்—புரிவாயே!

2093. கொஞ்சிய கிளிமொழியாள்
கும்பமு லையின்மடவாள்—குறமானுள்
வஞ்சியை மருவியவா!
வண்சிறை மயின்மிசையே—வருவாயே!
அஞ்சிய வவுணன்முனே
அண்டிமு னயில்கொடுபோர்—புரிதேவே!
ரஞ்சித கவிசொலவே
நன்றருள் புரிசிகிமேல்—வளர்நாதா!

2094. திங்களணி சடையாளர்
செங்கதிரி னுடலாளர்—அருள்பாலா!
துங்கமயின் மிசையேறி
தொந்தமென நடமாடி—வருவாயே!

புங்கசமென் விழிநாத !
பண்பினெடு க்ருபையாவு—முதவாயோ ?
கொங்கலர்கள் பொழில்சூழும்
குன்றைமலை வருதேவர்—பணிபாதா !

2095. தருணமி தையனே ! தயவுசெய் குகனே !—மயிலாளா !
கருணையின் வடிவே ! கமழ்மல ரெனுநீ—பமென்மார்பா !
இருவர்க ளுடனே இனிதுட னணைவாய் !—முருகோனே !
அருமறை முதலே ! அருள்சிகி மலைமேல்—வருதேவே !

2096. கதிர்மணி வடமணி கனதல மிலகிய—குறமானேடு
அதிமய லொடுபுணர் அழகிய புயகுக !—குருநாதா !
குதிகொளு மதுநிறை குளிர்மல ரணியிரு—தடமார்பா !
மதிதவழ் சிகியெனும் மலைவளர் முருகைய !—அருளாயோ?

2097. மண்டப மலர்மனையாள்
மங்கள சரஸ்வதியாள்—கலைமானுள்
தண்டமிழ் தனையருள்வாய் !
சங்கர ருடபுதல்வா !—எனையாளாய் !
அண்டர்கள் பணிசரணு !
அன்பனெ னிடமயின்மேல்—வருவாயே !
கொண்டல்கள் தவழ்பொழில்சூழ்
குன்றையின் மலையரசே !—அருளாயோ ?

2098. மருக்க டம்பணி வளர்ச்சி யுந்திய—புயநாதா !
திருச்சி கண்டியின் திகழ்ச்சி லம்பினில்—வருதேவே !
செருப்ப யின்றிடு திறத்த செங்கதிர்—ஒளிவேலா !
கருத்த னென்றுயர் கலைக்கு இன்றக—லிடவாராய் !

2099. தாதவிழ் நீப மாலிகை மார்ப !
தாமிகு வேல !—முருகோனே !
மாதர சான வேடுவர் மானள்
மார்லொடு சேரு—மிகுலோலா !
கோதடர் சூரை வாதுசெய் வீர !
கோமள மேனி—மருகோனே !
வாதடர் சோலை சூழ்தரு தோகை
மாமலை வாச !—அருளாயோ ?

2100. வாதுசெய் சூரன் மாளிட வேலை—எயும்நாதா !
மாதுமி ஞௗ வான்மக ளாளை—அணைதோளா !
போதுமின் மேவு பூரண மாயன்—மருகோனே !
தாதுதிர் சோலை தான்மிகு தோகை—மலையாளா !

2101. கானக மானுள் காதல்கொள் புயவா!—அருளாயோ?
வானவர் தாமே மாலொடு பணிசீர்—முருகோனே!
தானவர் தாமே தான்மடி படவே—எயும்வேலா!
வானடர் பூசேர் மாசிகி மலையா!—அருளாயோ?

2102. மதிசூடிய சடையார் மணமேவிய குழலாள்—உமைமானுள்
அதிமால்மிகு புதல்வா! அருளாய்!முருகையனே!-குகநாதா!
துதியேபெறு சரண! துரையே!அருள் புரிவாய்! அமரேசா!
நதிசூழ்சிகி மலையா! நலமேயினி யுதவாய்!—மயிலாளா!

2103. மருவுலவு நீபமெனு மதுமலரின் மாலையணி—புயநாதா!
கருவுலவு நோய்தவிர கருணையுள நாத!அருள்—புரிவாயே!
திருவுலவு மாயனுர் திகழ்துளப மார்பனுட—மருகோனே!
தருவுலவு சோலைநிறை தகுசிகியின் மேரில்வரு—குகநாதா!

2104. சினமிகு சூர னவி
தெறிபட வேலை யேவு—செயவீரா!
மனமிகு நோய்கள் தீர
வரமருள்! தேவ தேவ!—முருகோனே!
அனநடை வேட மாது
அளியொடு மேவு நாத!—அருளாயோ?
கனமிகு சோலை சூழும்
கமழ்சிகி மேரில் வாக!—அருளாயோ!

2105. கானகம் வாழும் வேடர் காதல்கொள் மாது மேவு—புய
[வேளே!
வானக நாடர் நாளும் வாசனை யான பூகொ—டடிமீதே
தானணி யாக வேமுன் தான்மிகு ஆவ லோடு-பணிபாதா!
தேனலர் சோலை சூழும் சீர்சிகி மேரில் வாச-மிடுவோனே!

2106. ஆடிய மயிலா! ஆறிரு புயவா!—அருளாயோ?
சூடிய மலரா! சூருட னெதிரே—புரிவேலா!
நாடிய வடியேன் நானல மிகவே—அருளாயோ?
பாடளி பொழில்சூழ் பார்புகழ் சிகியா—மலையாளா!

2107. வண்டணி மலர்நீபா! வந்தருள் புரிதேவா!—குகநாதா!
அண்டர்கள் பணிபாதா! அன்பனை நெடிதாய்வாழ்—வரு
[ளாயோ!
மண்டப மலர்வேதா! மங்குலின் நிறமாயோன்-துதிதாளா!
கொண்டல்கள் படிசீரார் குன்றையின் மலைமீதே-வருநாதா!

2108. வனச முங்கையை மருவு மிங்கிதன்—மருகோனே!
கனக மிஞ்சிய கயிலை யங்கிரி—தனிலேவாழ்
மனமி குந்திடு மதிய ணிந்தவர்—அருள்பாலா!
மனது கந்தருள் வரத! குன்றையின்—மலையாளா!

2109. திடசூரனை யெதிராய்வர திகழ்வேல்கொடு—எறிவீரா!
நடமாடிய மயிலேறிய நறுநீபமென்—மலராளா!
தடமாமுலை மடநாயகி குறமாதொடு—புணர்தோளா!
கடல்சூழ்தரு புவியோர்பணி கமழ்தோகையின்-மலையாளா!

2110. கானக வேடமி னள்புணர் சீர்புய!
கரண! கூர்மிகு—வடிவேலா!
சானகி யாள்சிறை தீரிட வேசெயும்
சாமள ரூபர்தம்—மருகோனே!
ஞான மெய்ஞ் ஞானசொ ரூப!வி லாச!உ
லாச!சி காமலை—வருதேவே!
வானர சேமுத லோர்பணி யேபுரி
மாநிதி யே! க்ருபை—தருவாயே!

2111. மங்குல் தாவிய சோலையே
மண்டு மேரினின் வேடமான்—அணைதோளா!
கொங்கு லாவுறு நீபமே
கொண்ட மாலிகை மார்பனே!—அருளாயோ?
பொங்கு சீர்கடன் மீதில்வாழ்
பொன்கொள் மார்பினர் ஆசையாம்—மருகோனே!
தங்கு சீர்மிகு கோடுசீர்
தங்க மாமலை நேர்சிகா—மலையாளா!

2112. எதிர்வரு சூர னொடே
இகல்விளை வேலை யேவு—செயவீரா!
கதிதனை யீயு நாத!
கமழ்சிகி மேரில் வாச—மிடுவோனே!
மதியணி வேணி நாதர்
மகிழுயர் பால னை—முருகோனே!
துதிபெறு பாத! நாத!
துரைமுரு கேச! மேன்மை—உதவாயோ?

2113. குடிவாழுயர் குறமான்
குருமாமணி முலைமேல்—அணைதோளா!
அடியேன்மிடி தனையே
அழிவாகிட அருளே—புரிவாயே!

வடிவேலணி கரவேள்
வரதா!க்ருபை புரிவாய்!—அமரேசா!
கடியார்பொழில் மிகுசீர்
கனதோகையின் மலையா!—அருளாயோ?

2114. நடனமயின் மிசையே நலமருள வருவாய்!—குகநாதா!
அடமிகுசெய் பவுனு மசுரனுடல் தனையே—பகுவேலா!
குடநிகரு முலையாள் குறமினணை புயவா!—அருளாயோ?
தடமுடிக ளுயர்சீர் தகுசிகியின் மலைமேல்—வருதேவே!

2115. பனமுடியின் வேணி நாதர்
பருவமதி சூடும் வேணி—தருபாலா!
அனநடையின் வேட மாது
அருமையுடன் நாளு மேவு—புயநாதா!
எனதுதுயர் தீர வேசெய்!
எழிலுலவு தோகை நீடு—மயிலாளா!
கனகமலை யான சோலை
கமழ்சிகியின் மேரில் வாழும்—முருகோனே!

2116. ரஞ்சித மொழியாள் நங்கைகு றமினள்
—புணர்தோளா!—குகநாதா!
கொஞ்சிய மொழியாள் கொண்டல்கொள் குழலாள்
—உமைமானுள்—அருள்பாலா!
அஞ்சிய வசுரோன் அண்டிய படையோ
—டடுவீரா!—வடிவேலா!
மஞ்சுகள் தவழ்சீர் மண்டிய சிகிமா
—மலைமீதே—வருதேவே!

2117. அனநடை பெற்றிட்ட தாமரைத் தாளினள்
அடர்புன மொய்த்திட்ட வேடுவர்ச் சேயிழை
—புணர்தோளா!
சினமிகு வெற்றிக்க லாமயிற் சூருடல்
தெறிபட முற்பட்டு வேல்விடுத் தேவெனு
—முருகோனே!
மனமதி விச்சித்த தேவையைத் தானருள்!
வடிவுள வெற்றிப்ப தாகையுற் றுய்!அருள்
—புரிவாயே!

2115. பனமுடி: பணமுடி. (விகாரம்); பணம்-பாம் பின்படம்; ஆகுபெயரால் பாம்பை உணர்த்தியது.

இனமணி வைத்திட்ட கோடுபெற் றேஉயர்
எழின்மிகு சித்ரச்சி காமலைப் பார்த்திப!
—முருகோனே!

2118. நாடக மேபுரி ஈசுர னார்தரு
நாயக னே!க்ருபை—புரிவாயே!
ஏடலர் பூமலி சோலையில் வாழ்கிளி
யேர்மிகு வேடமின்—அணைதோளா!
பாடளி சூழ்மலர் நீபமென் மாலைய!
பாவல னுகிட—அருளாயோ?
மாடநன் மாளிகை சூழ்தரு தோகையின்
மாமலை வாழ்வுறு—குகநாதா!

2119. வடிவேலவா! வரதா!குகா!—எனையாளாய்!
குடிவேடமான் குறமாதினுள்—புணர்தோளா!
அடியேன்முனே அழகானதோ—கையில்வாராய்!
படியோர்விணோர் பணிதோகைமா—மலையாளா!

2120. தாதவிழ் நீப மாலை தானணி மார்பி·னுத!—எனையாளாய்!
மாதர சான தேவி மாகுற மானை மேவு—புய!லோலா!
கோதடர் சூர னுவி கூறிட வேலை யேவு—செயவீரா!
வாதடர் சோலைசூழும் வானுயர் தோகை மேரில்-வருதேவே!

2121. வாதுபுரி சூரனுட
மார்புபிள வாகவயில்—தொடுவீரா!
கோதுகிளி யானமொழி
கூறுகுற மாதினுடன்—அணைதோளா!
போதுறையு நான்முகனும்
பூவினடி யாருமநிதம்—பணிபாதா!
தாதுமிகு நீபமலர்
தானணியு மார்ப!சிகி—மலையாளா!

2122. குருமணி யழுத்து க்ரீடம்
குலவிட மயிற்கண் ஏறி—வருவாயே!
அருவினை யெனக்கு வோட
அருள்தருவை! சத்தி பாணி—முருகோனே!
திருமடவி யுற்ற மார்பர்
திகழ்துள தரித்த வாகர்—மருகோனே!
மருமலர் தழைத்த சோலை
மருவுசிகி யிற்பொன் மேரில்—வருதேவே!

2123. கங்கையணி சடையார் கஞ்சர்பணி யரனுர்—தருபாலா!
அங்கைநிகர் விழியாள் அந்தமிகு குறமான்-அணைதோளா!
செங்கையயி லதனுல் சென்றசுர னுடனே—அடுவீரா!
பங்கயமி னுறைசீர் பண்புமிகு சிகிமா—மலையாளா!

2124. தினைப்புன மாது மேவு
திருப்புய நாத னே!முன்—வருவாயே!
கனைக்கடல் சூழு தோகை
கதித்திடு மேரில் வாச!—எனையாளாய்!
நனைக்கம லோனும் வான
நலத்திடு தேவர் கோனும்—பணிபாதா!
அனைக்கவு மாரி தேவி
யருட்புதல் வா!எ நாளும்—எனையாளாய்!

2125. சகமாய்கையினு லனியா யமதாய்
தனியே.னிடரான்—மெலிவேனே?
அகநோய் தனையே யினியோ டிடவே
யருளே புரிவாய்!—அமரேசா!
குகநா யகனே! அறுமா முகவா!
குளிர்சோ லையிலே—வளர்சீமான்
மகள்சேர் புயவா! சிகிமா மலையா!
மணியே! க்ருபையே—புரிவாயே!

2126. கலசத்தன நாயகி கரியக் குறவோர்குல
—மடமானுள்—புணர்தோளா!
சலசத்தட மாவயல் தகுமற்புத நேமநல்
—வளநாடா!—க்ருபைதாராய்!
அலமுற்றிடு பாணிய ரவர்நற்றுணை யானவர்
—மருகோனே!—செயவேலா!
பலமுற்றிடு சூருடல் பதறக்கொனும் வேலவ!
—சிகியாமோர்—மலையாளா!

2127. கருணைபொழி முகிலே! ககன்நிறை வெளியே!-அருளாயோ?
திருமருவு புயமால் திகழ்துளவின் விறலார்—மருகோனே!
அருமறைக ளறியா அழகுதிகழ் சரணு!—எனையாளாய்!
மருவுநிறை பொழிலே மருவுசிகி மலைவாழ்—முருகோனே!

2128. கானு லவிய வேட நாயகி காத லாயணை—புயவேளே!
தேனு லாவிய நீப மாலைய சீரு லாவிய—புயநாதா!
வானு லாவிய தோகை மாமலை வாழு நாயக!—எனையாளாய்!
மானு லாவிய பாணி யாய்! அருள்! வானு ளோர்பணி-இரு
[தாளா!

2129. நாடிவரு மடியார் நாளும்வளர் கிடவே—அருளாயோ?
பாடிவரு ஞிமிறூர் பாரமலை வளர்வே—டர்கள்மானுள்
ஆடிவரு மயில்போ லானகுற மயிலாள்—புணர்தோளா!
ஓடிவரு கலியே ஓடவருள் சிகிமா—மலையாளா!

2130. கதிர்மதி சூடிய முடியார்
கமழ்மலர் சூடிய சடையார்—அருள்பாலா!
எதிரிடு சூருட னடலா
யெழின்மிகு வேல்விடு குகனே!—எனையாளாய்!
துதியொடு பாடிய வடியார்
துரையென வாழ்கிட அருள்வாய்!—முருகோனே!
பதியுளர் வானவர் நிதமே
பணிசிகி மேரினி லரசே!—எனையாளாய்!

2131. செகபதி யாகிய மதுரையின் வாழ்வுறு
செயவழு தீமன—மகிழ்மானுள்
அகமகிழ் நாயக ரருளிய பாலக!
அளவில வாகிய—க்ருபை தாராய்!
பகரிட வேயசு ரனைவெலும் வேலவ!
பரிமள நீபமென்—மலர்மார்பா!
சுககுற நாயகி புணர்புய வா! அருள்
துரைமுரு கா! சிகி—மலையாளா!

2132. மடலவிழ் நீப மலரணி மார்ப!—எனையாளாய்!
கடகளி றூன கனதுணை வேல!—அருளாயோ?
அடவசு ரோனை அலறிட வேலை—விடுவீரா!
தடபொழில் சூழும் தகுசிகி மேரில்—வருதேவே!

2133. சூதுநிகர் முலையாள் தோகைகுற மகளாள்—புணர்தோளா!
வாதுபுரி அசுரோன் மாளவயில் விடுவாய்!—அருளாயோ!
கோதுகிளி மொழியாள் கோகனக மனையாள்-முருகோனே!
போதுநிறை பொழில்சூழ் பூமலி சிகியின்மா—மலையாளா!

2134. எந்தன் விழிகள் குளிர இன்ப முடன்முன் மயின்மேல்-வரு
[வாயோ?
சந்த மிலகு தனமின் தங்கு கமல மடமான்—முருகோனே!
சொந்த மனைவி யெனமுன் துங்க மறவர் கொடியார்-புணர்
[வாகா!
அந்த மொழுகு முடியின் அண்டர் பரவு சிகியா-மலைநாதா!

---

2131. 'வழுதி' என்பது 'வழுதீ' எனச் சந்தம் நோக்கி நீண்டது.

2135. மண்டிய காதலாள் மங்கையின் வேடமான்-அணைதோளா!
தெண்டிரை மீதிலே தென்றுயின் மாயனுர்—மருகோனே!
வண்டமிழ் பாடவே வந்தருள் நீசெய்வாய்!—அமரேசா!
கொண்டல்கள் தாவுசீர் குன்றையின் மேரில்வாழ்!-குகநாதா!

2136. வந்த நோய்தவிர் குன்றை மாமலை வந்த நாயக!—எனை
[யாளாய்!
சந்த நாவல ரென்று பேர்பெறு சங்க நாவலர்-புகழ்தேவே!
கந்த மானக டம்ப மாலிகை கண்டி மாமணி-புனைதோளா!
அந்த வானவ ரன்ப ரானவர் அண்ட ரானவர்-பணிதாளா!

2137. கொண்ட லாகிய குழலினுள்
கொங்கு சேர்புன மகளினுள்—புணர்தோளா!
அண்டர் வானவ ரடியரே
அன்பு சூழ்தர நிதமுமே—பணிபாதா!
கண்டர் காருமை கணவனுர்
கஞ்ச னுர்பணி யிறையனுர்—தருபாலா!
வண்டர் பாடுபொ ழில்கள்சூழ்
மங்குல் தாவிய சிகியின்மா—மலையாளா!

2138. வண்ட னுகிய சூரன்மேன்
மண்ட வேல்விடு சூரனே!—எனையாளாய்!
அண்ட நாயகர் வானுளோர்
அன்பரா னவர் நாளுமே—பணிபாதா!
கொண்ட லாகிய கேசமான்
கொங்கு லாவிய கானமான்—அணைதோளா!
தண்ட மேவிய பாணியாய்!
தங்க மேவிய தோகைமா—மலையாளா!

2139. மாறி யாடிய நாத னுருடன்
மாறு போர்புரி தேவி யாளுமை—தருபாலா!
சீறி யேவரு சூர னுரொடு
தேவ ராலெதி ராக வேயடல்—புரிவேலா!
மீறி யேவரு நோய்கள் தீர்விட
வேண தாயருள் நீசெய் வாய்!குக!—குருநாதா!
ஆறின் மாமுக வா! சி காமலை
யாள னே!மலர் நீப மாலிகை—புனைதோளா!

2140. கஞ்சமலை ரயனுர் கண்டுபணி சரண!—அருளாயோ?
அஞ்சவரு வசுரோன் அங்கம்விழ அடுவேல்—விடுவீரா!
மஞ்சமிசை குறமான் வந்துபுணர் புயவா!—அமரேசா!
தஞ்சமிலை யருள்வாய்! தங்குவொளி சிகியா—மலைநாதா!

2141. வனசமலர் மீது வளருமொரு மானின்—மருகேசா!
தினமுலவு வேடர் திகழ்மயிலை மேவு—புயநாதா!
அனநடையின் மாது அழகினுமை பால!—எனையாளாய்!
புனமுலவு கோடு புணர்சிகியின் மேரில்—வருதேவே!

2142. வந்துவர மருள்வாய்! மங்குல்படி கிகிமா—மலையாளா!
கொந்துநிறை பொழில்வாழ் கொங்கையொளிர் குறமான்—
[அணைதோளா!
நந்துலவு கரமால் நன்றுலவு மருகா!—எனையாளாய்!
இந்துநிகர் வதன! என்றும்நல முதவாய்!—அமரேசா!

2143. கொஞ்சிய மொழிமாது குங்கும முலைமாது—குறமானுள்
வஞ்சியை யணைதேவ! வந்தருள் குகநாத!—எனையாளாய்!
நஞ்சிகல் மிடறீசர் நன்றுணை யுமைதேவி—புதல்வோனே!
மஞ்சுகொள் சிகிமேரு வந்திடு குருநாத!—அருளாயோ?

2144. கான வேடுவர் மாதி னுள்புணர் காளை யே!அருள்-புரிவாயே!
வான வோர்பணி நாத னே கன வாசநீபமென்—மலர்
[மார்பா!
ஞான மாதவர் வேத வோர்பணி ராசனே!குரு-பரவேளே!
தான வோர்குல கால னே! ஒளிர் தானுளாய்! சிகி—மலை
[யாளா!

2145. செங்குமுத வாயினுள் திங்கள்முக மாதினுள்—குறமானுள்
கொங்குலவு கானிலே கொண்டமய லாலுமே-புணர்தோளா!
கங்குல்நிற மாவையே கண்டுகன வேலையே—வியசூரா!
மங்குல்தவழ் கோடுசேர் வண்சிகியின் மேரில் வாழ்—குக
[நாதா!

2146. கண்டுநிகர் மொழியாள்
கஞ்சமலர் முகமான்—வனம்வாழ்வோர்
துண்டுமதி யெயிறூர்
துங்கமற வர்கள்மான்—அணைதோளா!
மண்டுபடை யசுரோன்
மங்கவயில் விடுவாய்!—அருளாயோ?
கொண்டுவளர் பொழில்சூழ்
குன்றைமலை யரசே!—எனையாளாய்!

2147. வேதனை யருஞ்சிறையின் மீதினில் வையுங்குமர-குருநாதா!
சீதமதி கொன்றையணி சீருலவு செஞ்சடையர்—தருபாலா!
வாதமணை வென்றகுரு! வான்மகள்ம ணந்தபுய!—அரு
[ளாயோ!
கோதகலு மன்பர்துதி கூறுசிகி யின்கிரியில்—வருதேவே!

2148. வடித்த வமுதனைய மொழியாள்
மணிக்க லசநிகரு முலையாள்—வனம்வாழ்வோர்
குடிக்கு றவராருமை மகளாள்
குறக்கொ டியைமருவு புயவா!—எனையாளாய்!
கடிக்க மலமலரின் வருவோர்
கருத்தி னெடுபணியும் முருகா!—குகநாதா!
நடிக்கு மயின்முதுகில் வருவாய்!
நலத்த சிகிமலையின் அரசே!—எனையாளாய்!

2149. வடிவேலணி முருகா!குக! வரதா!கிர்பை—புரிவாயே!
குடிவாழ்குற மகளாள்புணர் குருமாமணி—யணிதோளா!
மிடியேதவி ரிடுவாய்!கன முடிசேர்சிகி—மலையாளா!
அடியார்பணி குருவே!இனி யருளாய்!நலம்—உதவாயே!

2150. வஞ்சமிடு சூரனுடல்
மண்டவயி லேவுசெய—முருகோனே!
கஞ்சன்முத லோர்பணிசெய்
கந்தமிகு மாமலரை—நிகர்பாதா!
பஞ்சிநிகர் சீறடிகள்
பண்புமிகு தேவிகுற—மகள்பாகா!
மஞ்சுபடி கோடுலவு
வண்சிகியின் மாமலையின்—வருதேவே!

2151. சீத மதியணி வேணியார்
தேவர் பணியிரு பாதனு—ரிடமேசேர்
காதலு மைதரு பாலகா!
கான மகள்புணர் மார்பனே!—எனையாளாய்!
பாத கனைநிகர் மாவையே
பார வயில்விடு வீரனே!—அருளாயோ?
தாத வழுமணி சோலைசூழ்
சாரல் மிகுசிகி மேரில்வாழ்—குருநாதா!

2152. வடித்தரச மொழியாள்
மகிழ்ச்சியொடு குறமான்—அணைதோளா!
கடிக்கமல மலரோன்
கறுத்தமுகி னிறமால்—பணிதேவே!
இடிக்குநிக ரதிராய்
எதிர்த்துவரு மசுரோன்—அடுபோர்மேல்
மடிக்கவயில் விடுவாய்!
மணிச்சிகியின் மலையா!—எனையாளாய்!

2153. எதிர்வரு சூர னடியொடு போக
எழினுதி வேலை—விடுவீரா!
கதிர்மதி சூடு சடைமுடி யாளர்
கடவுள ராசை—மகவேளே!
நிதிவெகு கோடி தமிழ்வெகு கோடி
நிதமினி தாக—அருளாயோ?
மதிதவழ் சோலை நிரைகுரு கோடு
வடிவுள தோகை—மலையாளா!

2154. பொருது சூரொடு புழுவ தாகிட—அடுவேலா!
மருவி னீபமென் மலர்கள் சூடிய—புயவேளே!
அருவி தோய்மலை யதனில் வாழ்குற—மகள்தோளா!
திருமி ஞள்வளர் திகழ்சி காமலை—வளர்தேவே!

2155. கங்கை சூடிய சடையார்
கண்ட மேவிய கறையார்—அருள்பாலா!
மங்கை வேடுவர் மகளாள்
வந்து மேவிய புயவா!—எனையாளாய்!
செங்கை வேலணி முருகா!
திங்க ளானன வதனு!—அருளாயோ?
கொங்கை மேவிய பொழில்சூழ்
குன்றை மாமலை யரசே—புரிதேவே!

2156. வந்து போர்புரி கின்ற சூருடல்
மங்க வேல்விடு—செயவீரா!
பந்து நேர்கொள்தி ரண்ட மாமுலை
பண்செய் மாமொழி—மடமாஞள்
தந்து காதல்மி குந்து மேவிய
சங்க நாவல!—எனையாளாய்!
கொந்து மாமலர் கொண்ட கா்வளர்
குன்றை மேர்வளர்—குருநாதா!

2157. வானவர் பணிதாளா!
வாகைகொள் புயநாதா!—எனையாளாய்!
கானக மடமாஞள்
காதல்கொள் மணவாளா!—குகவேளே!
தானவர் குலகாலா!
தாதவிழ் மலர்நீபா!—தமிழ்தாராய்!
மானவொள் வடிவேலா!
வாழ்சிகி மலைமீதே—வருதேவே!

2158. எதிர்த்த சூருடல் கிழிக்க வேல்விடும்
இகற்கு கா! அருள்—புரிவாயே!
கதித்த காலர்கள் வருத்தி டாதருள்
கருத்த னே! இனி—யுதவாயே!
பதித்த மாலொடு திருத்த மாகமுன்
பருத்த மாமயில்—தனில்வாராய்!
உதித்த மாமதி தவழ்ச்சி காமலை
ஒருத்த னே! கதி—தருவாயே!

2159. கருத்திலே நினைத்ததோர்
கருத்தெலா மினிச்செய்வாய்!—அமரேசா!
செருக்கினு லெதிர்த்தசூர்
தெறிக்கவே லெடுத்ததோர்—திறலாளா!
பருத்தமா மயிற்குகா!
பணைத்தகா வினிற்பெணுள்—புணர்தோளா!
ஒருத்தனே! அருட்செய்வாய்!
உயர்ச்சிகா மலைக்குகா!—குருநாதா!

2160. 'அஞ்சல்நீ யடியனே இன்று
அன்பதா யருள்செய்வே' னென்று—வருவாயோ?
நஞ்சமா மிடறினர் பங்கில்
நங்கையாள் அருளுமோர் மைந்த!—குகநாதா!
கொஞ்சமா மதியின்மா வந்த
கொண்டசே னைகளெலாம் வென்ற—வடிவேலா!
தஞ்சம்வே றிலையையா! மிஞ்சு
தங்கமே ருவினைநேர் குன்றை—மலையாளா!

2161. அடமாகமுன் அடுசூருடன் அடலேபுரி—செயவீரா!
நடமாடிய மயிலேறிய நறுநீபமென்—மலர்மார்பா!
குடமாமுலை கணையார்விழி குறநாயகி—புணர்தோளா!
தடமாகொடு முடிசேர்சிகி தகுமேரினில்—வருதேவே!

2162. ஆடிய மயின்மேல் ஏறிமுன் வருவாய்!
ஆறிரு கரனே!—எனையாளாய்!
நாடிய எவையோ யாவையு மினியே
நாயக! தருவாய்!—அமரேசா!
கூடிய படையோ டேவரு மசுரோன்
கூறிட வயிலே—வியவீரா!
பாடிய வடியே னேரினி லருள்வாய்!
பார்புகழ் சிகிமா—மலையாளா!

2163. திருமாது நிகரான தேவிகுற மாதினுள்—புணர்தோளா!
தருநீழல் வருதேவர் தான்மிகுவு லாசனுர்—பணிதாளா!
வருசூர னுடல்கீற வாகுமிகு வேலையே—வியவீரா!
மருநீப மலர்மார்ப! வானுயர்சி காநன்மா—மலையாளா!

2164. மடவார் மயலாலு மதனுர் மலர்வாளி
யதனல் வெகுமோசம்—வரலாமோ?
நடமா டியதோகை மயின்மீ தினிலேறி
நலம்யா வையும்நாய—னிடமேதா!
அடமா கமுனுக வருசூ ருடனடி
அடுபோர் புரிதேவ!—எனையாளாய்!
தடமா கியசோலை நிரைசூழ் வருதோகை
தகுமா மலைமீது—வருதேவே!

2165. கடவுள் சங்கரர் மதிய ணிந்திடு
கமழு செஞ்சடை—அரனுர்பால்
மடமின் மங்கையின் மயிலி சங்கரி
வரச வுந்தரி—தருபாலா!
குடமி ணைந்திடு தனம டந்தைநன்
குறவர் தங்குல—மகள்தோளா!
தடமி குந்திடு பொழினி றைந்திடு
தழைசி கண்டியின்—மலைநாதா!

2166. மயிலேறி வருவாய்! வனுவேலை யெதிராய்—வருசூர்மேல்
அயிலேற எயுவோய்! அடியேனை நிதம்வாழ்—இடவாராய்!
குயிலான மொழியாள் குறமாது தனையே—புணர்தோளா!
ஒயிலாள! அருள்வாய்! உயர்தோகை மலைமேல்—வருதேவே!

2167. எப்பவு நாய னேயி
விட்டிட லாகு மோசொல்!—சிகியாளா!
முப்பொழு தாக வாசை
முற்றிட மேன்மை யான—துதிவேளே!
செப்பம தானவேடர்
சித்திர மான பாவை—புணர்தோளா!
மைப்படி சோலை சூழும்
மட்டுள தோகை மேரில்—வருதேவே!

2168. கடமத மொழுகிய கரிமுக ருடதுணை—முருகோனே!
குடநிக ரிணைமுலை குறமகள் மருவுபன்—னிருதோளா!
அடமிகு வசுரனை அலறிட எதிர்புரி—அயிலாளா!
வடவரை நிகர்சிகி மலைதனில் வருகுக!—குகநாதா!

2169. வந்து போர்புரி சூரன்மேல்
மண்ட வேல்விடு வீரனே !—எனையாளாய் !
பந்து போல்முலை மாதினாள்
பண்ப தாயணை தோளனே !—அருளாயோ ?
கந்து மீதுறு மானையரர்
கண்டு வாசைகொள் சோதரா !—முருகேசா !
சிந்து சூழ்தரு நேமிவாழ்
தென்சி காமலை யாளனே !—க்ருபைதாராய் !

2170. வாட்டிய சூருடன் மாட்டிய வேல்விடு—செயவீரா !
காட்டினில் வாழ்மயில் கார்க்குழல் நாயகி—புணர்தோளா !
பாட்டினி லேயருள் ! பார்த்திப னே!க்ருபை—புரிவாயே !
தாட்டிக னே!அருள் ! தார்ச்சிகி மேரினில்—வருதேவே !

2171. வஞ்ச ரஞ்சிட வந்து போர்புரி—அயிலாளா !
பிஞ்சி இந்தணி பின்ன லஞ்சடை—யரனார்தாம்
கஞ்ச மங்கையள் கங்கு லங்குழல்—உமைபாலா !
தஞ்சம் வந்தருள் ! தங்கு குன்றையின்—மலையாளா !

2172. குயிலாகிய மொழியாள் குறநாயகி கணவா !—எனையாளாய் !
மயிலேறிமுன் வருவாய்! வரதாகுரு பரனே!—அருளாயோ !
அயிலாலெதிர் வருமோர் அசுரோனிட மெயும்வேள் !-தினம்
[வாராய் !
ஒயிலா ! அன வரதா ! உயர்தோகையின் மலைமேல்—வளர்
[தேவே !

2173. வஞ்ச ரோடிட வந்து போர்புரி—செயவீரா !
கஞ்சன் மால்பணி கண்டு மேபணி—குருநாதா !
நஞ்ச மாமிடர் நங்கை மாதுமை—தருபாலா !
மஞ்சு சூழ்தரு வன்சி காமலை—முருகோனே !

2174. கருப்பின்விலை நேரு நுதலாள்
கருத்தருடன் மேவு முமையாள்—தருபாலா !
விருப்பினொடு நாய னிடமே
மிகுத்தசிகி மீது வருவாய்!—அமரேசா !
சுருப்பினினம் மேவு பொழில்வாழ்
சுகக்குறமி னானை மயலாய்—அணைதோளா !
பொருப்பி லுறு தோகை மலையாய் !
பொறுத்து எனை யாள வருவாய் !—குகநாதா !

2171. கஞ்சம் அங்கையள் = தாமரை மலரனைய அழகிய கையினாள்.

2175. குயிலான மொழியாள் குறமாது கணவா!—எனையாளாய்!
ஒயிலான் முருகா! உயர்தோகை மலையா!—அமரேசா!
வெயிலான கதிர்வேல் மிகுசூர னுடன்மேல்—விடுவீரா!
மயிலான பரியாய்! வருவாயென் முனமே!—குகநாதா!

2176. மண்டிவரு தானவனை
மங்கிவிழ வேயடல்செய்—அயிலாளா!
கண்டிமுத லாறுபடை
கண்டதிலெ நாளும்வளர்—குருநாதா!
அண்டிவரு நாயனிடம்
அன்புசெய்வை! வேல்முருக!—அருளாயோ?
எண்டிசையி னோர்பரவும்
இந்த்ரர்பணி தோகைமலை—வருதேவே!

2177. அண்டர்பணி சரணு! அன்பனிடம் வருவாய்!—அமரேசா!
தண்டமிழை யருள்வாய்! தங்குசிகி மலைமேல்—வளர்தேவே!
வண்டனெனு மசுரோன் மங்கவயில் தனையே—விடுவாயே!
கொண்டவருள் புரிவாய்! கொண்டைமயில் முருகா!—குக
[நாதா!

2178. வட்டமதி சூடிய சடையார்
மட்டுலவு தாதகி புனைவோர்—அருள்பாலா!
துட்டனென வேவரு மசுரோன்
துக்கமுடன் வாடிட வயிலே—வியசூரா!
கட்டழகி வேடமின் மகளாள்
கட்டியணை வாகுள புயவா!—எனையாளாய்!
சிட்டர்பணி தோகையின் மலையாய்!
சித்தியருள் வாய்!குரு பரனே!—குகநாதா!

2179. கொஞ்சிய மொழியாள் கொண்டல்கொள் குழலாள்—குற
[மானுள்
வஞ்சியை யணைவாய்! வண்டுள வணிவோர்—அருள்பாலா!
அஞ்சிய வசுரோன் அண்டின ருடனே—அடுவேலா!
மிஞ்சிய பொழில்சூழ் விண்பொரு சிகிமா—மலையாளா!

2180. வாட்டிய மிடிதீரிட மாச்சிகி மயின்மீதினில்—வருவாயே!
கோட்டினி லுயர்வாகிய கோச்சிகி மலைமேல்வரு-குகநாதா!
மேட்டிமை யுளசூருடல் வேற்றுமை படவேயடு-செகநாதா!
கூட்டிய நிதியேயருள்! கூப்பிய கையினர்பணி-யிருதாளா!

2176. கண்டி முதல் ஆறுபடை வீடு எனக் கூறுவதால் இவருக்குக் கண்டியி லுள்ள கதிர்காமத்தின்மேல் உள்ள பற்று விளங்குகிறது. ஆறுபடை வீடுகளில் கண்டி தனியாகக் கூறப்படுவதில்லை.

2181. வாச முற்றிடு நீப நற்கணி
மார்பி னிற்றரி—குகநாதா!
நாச முற்றிடு சூர னுக்கெதிர்
நாடி வெற்றிகொள்—அயிலாளா!
நேச முற்றிடு வேடு வக்கொடி
நீள்பு னத்தினில்—அணைதோளா!
தேச முற்றிடு வோர்து தித்திடு
சீர்சி கிக்கிரி—மலையாளா!

2182. கொண்டல்நிகர் குழலாள் கொங்கையொளிர் குறமான்—
[அணைதோளா!
வண்டமிழை யருள்வாய்! வந்துவர மருள்வாய்!-அமரேசா!
கண்டரருள் புதல்வா! கஞ்சன்முத லிமையோர்-பணிபாதா!
அண்டர்பணி சரண! அந்தமிகு சிகிமா—மலையாளா!

2183. வன்னக் கிளிமொழியாள்
மன்னுற் றிடுகுறமான்—அணைதோளா!
அன்னத் திருநடையாள்
அன்னைக் குமரியினுள்—அருள்பாலா!
சொன்னப் பரிமயிலா!
துன்னித் திருவடியார்—பணிதாளா!
மின்னற் கொடுமுடிசேர்
விண்ணுற் றிடுசிகிமா—மலையாளா!

2184. எதிர்வரு சூர னுடல்பிள வாக
எழில்பெறு வேலை—யெறிவீரா!
கதிர்மதி நேர வொளியுள தேவ!
கதியருள் நாத!—முருகோனே!
துதிபெறு தாள! எனதிடம் நீநன்
துடிமயின் மீது—வருவாயே!
அதிபதி யாக சிகிமலை வாழும்
அசுரர்கள் கால—வடிவேலா!

2185. மதிசூடிய வரனர் மகிழ்பாலக! எனையாள்!
கதியாகிய மயிலா! கமழ்நீபமென் மலரா!
துதியேபெறு சரண! துரையே! க்ருபை புரிவாய்!
பதியோர்புகழ் குகனே! பணைதோகையின் மலையா!

2186. கதியாகிய மயிலேறிய கருணாநிதி! அருள்வாய்!
மதிசூடிய வரனர்தரு மதலாய்!அருள் புரிவாய்!
நதிசூழ்சிகி மலைமேவிய நறுநீபமென் மலரா!
விதிமால்பணி சரண! குக! விரைவாய்முனம் வருவாய்!

2187. வடிவேல்கொடு வருசூருடன்—எதிர்வீரா!
கடிநீபமென் கமழ்மாலிகை—புனைதோளா!
அடியார்பணி அலராகிய—இருதாளா!
மிடிபோகருள் விரைசேர்சிகி—மலையாளா!

2188. வட்ட மதிபுனை சடிலனுர்
மத்த கெசவுரி யுடையினுர்—தருபாலா!
துட்ட னெனவரு மசுரனுர்
சுற்று படையற எதிருமோர்—படையாளா!
கட்ட முகிகுற மடமினுள்
கட்டி யணையிரு புயகுகா!—எனையாளாய்!
மட்ட விழுபொழில் வளையுமோர்
வர்த்த னைகொள்சிகி மலையின்மேல்—வருதேவே!

2189. வடித்தரச மொழியாள் மணிப்பவள விதழாள்-நலமேசேர்
குடிக்குறவர் மகளாள் குறப்பெணுடன் மயலால்—அணை
[தோளா!
இடிக்குநிகர் குரலோ டிரைத்துவரு மசுரோர்—குலகாலா!
படிக்குளுயர் நலமார் பருத்தசிகி மலைமேல்—வருதேவே!

2190. நதியணி வேணி அரவணி வேணி நறுமலர் சூடு-மரனுர்பால்
வதிதரு தேவி யுமைபர மேசு வரிதரு பால!-எனையாளாய்!
கதிமிகு தோகை மயில்வரு சூர! கடவுளர் தேடு—குகநாதா!
அதிபதி யான சுககுரு நாத! அழகிய தோகை-மலையாளா!

2191. வனச மண்டப மதிலி லங்குமின்
மருவு மம்புயன்—மருகோனே!
சினமி குர்திடு மசுரர் தங்கிளை
சிதறவென் றிடும்—அயிலாளா!
மனமி ரங்கிநின் னடிய ரன்புற
வர மகிழ்ந்தருள்—குகநாதா!
கனக மிஞ்சிய முடியிலங்கிய
கமழ் சிகண்டியின்—மலைவேளே!

2192. வடிவேல்கொடு வருசூருடன்—எதிர்சூரா!
துடியாரிடை துரைநாயகி—மணவாளா!
அடியார்பணி அழகாகிய—இருதோளா!
கடியார்பொழில் கமழ்தோகையின்—மலையாளா!

2193. அயிலாலெதிர் வருசூருட னடுபோர்புரி—செயவீரா!
குயிலாகிய மொழியேபயில் குறநாயகி—புணர்தோளா!
மயின்மீதினி லுடனேயென்முன் வருவாய்!குரு-பரவேளே!
ஒயிலா! க்ருபை புரிவாய்! குக! உயர்தோகையின்—மலை
[யாளா!

2194. ஆடல்புரி மயிலா! யான்மகிழ வரமே—புரிவாயே!
பாடல்வர வருள்வாய்! பான்மதியின் வதனு!—எனையாளாய்!
ஏடவிழு மலர்மே லேமருவு மயனுர்—குருநாதா!
நாடரிய சிகியாம் நாகமதில் வருவாய்!—குருநாதா!

2195. வஞ்சனைபுரி சூரனை
மங்கிடவயி லேவிமுன்—அடுசூரா!
கஞ்சனையெதிர் போர்புரி
கங்குலின்நிற மாயவன்—முருகோனே!
அஞ்சனமிடு கூர்விழி
அஞ்சொலின்மட மான்மகள்—புணர்தோளா!
நஞ்சரவினின் மேல்வளர்
நன்றுளசிகி மேலினில்—வருதேவே!

2196. கருணை யொழுகிய விழியாள்
கமழு மலரணி புயவா!—எனையாளாய்!
அருண நிறமுரு கையனே!
அமரர் பணியிரு சரணு!—குகநாதா!
தருண மிதுக்ருபை புரிவாய்!
தமிழின் மிகுகுரு பரனே!—அருளாயோ?
திருமின் மருவிய முடிசேர்
சிகியின் மலைமுரு கையனே!—தயவாளா!

2197. கொண்டல்நிகர் குழலாள் கொஞ்சுகிளி மொழியாள்—
[வடிவேசேர்
செண்டுநிகர் முலையாள் செந்திருவை நிகர்வே—டமினுதா!
கண்டனைய தமிழாய்! கஞ்சமிகு சரணு—எனையாளாய்!
அண்டர்பணி முருகா! அந்தமிகு சிகியாம்—மலைநாதா!

2198. வண்டுநிகர் விழியாள் மங்குல்நிகர் குழலாள்—வடிவேசேர்
கண்டுநிகர் மொழியாள் கஞ்சமலர் வதனள்—நலமேசேர்
செண்டுநிகர் முலையாள் செங்கமல குறமான்-அணைதோளா!
பண்டுமுனி பணிவோய்! பண்புமிகு சிகிமா—மலையாளா!

2199. வனசமலர் மகள்சேர்
வடிவுபெறு குறமான்—அணைதோளா!
அனவரத முனையே
அடியிணைகள் பணிவேன்—அருளாயோ?
கனகவரை நிகர்தோ
கையின்மலையி னரசே!—குகநாதா!
மனமயலை யொழிவாய்!
மயிலில்வரு முருகா!—அமரேசா!

2200. தருமேவிய சோலைசூழ்
தழைகேகய மேரில்வாழ்—குகநாதா!
மருமேவிய மாலைசூழ்
மறவோர்குல மாதினுள்—புணர்தோளா?
பொருசூருட னேவெல்வோய்!
புனிதா!குக நாதனே!—அருளாயோ?
கருணைநிதி நீயையா!
கனமாகிய வாழ்வையே—அருளாயோ?

2201. மதியணி சடையார் மழவிடை யரனு—ரிடமானுள்
நதியணி முடியார் நறைகமழ் குழலாள்—உமைபாலா!
கதியணி மயிலா! கறைகெழு வயிலா—யுதவேளே!
பதிபுகழரசே! பளிரிடு சிகிமா—மலையாளா!

2202. பஞ்சவர்ச காய ரான
பங்கயமின் வாச ரான—விறலானோர்
மஞ்சுநிற மான சோதி
வண்டுளவின் மார்பின் மாயன்—மருகோனே!
வஞ்சனெனு மாவை வீழ
வம்பிஞெடு போர்செய் சூர!—எனையாளாய்!
கொஞ்சமதி தாவு நீடு
குன்றைமலை மீதில் வாழு—முருகோனே!

2203. வண்டணி குழலாள் வம்பணி முலையாள்—குறமானுள்
தண்டலை தனிலே தங்குல மறியா—தணைலோலா!
அண்டர்கள் முனிவோ ரன்பொடு நிதமே—பணிதேவே!
கொண்டல்கள் படிசீர் குன்றையின் மலைமேல்—வருதேவே!

---

2201. பளிரிடு: பளிர்: ஒளியைக் குறிக்கும் இடைச்சொல்.

2202. கொஞ்சமதி - பிறைத் திங்கள்.

2204. வடிவி லங்கிய வேலவா! வரமி குந்தருள் நாதனே!
அடிய ரன்பொடு சேர்பதா! அழகு தங்கிய வேடமான்
பிடிக ணிந்தணை தோளனே! பிரிய முங்கொடு தோகைமேல்
மிடித விர்ந்திட வா!ஐயா! மிகுசி கண்டியின் நாதனே!

2205. புளிகித்த முலையாள் புணரிப்பொ னிகரா—கியமானள்
அழகுற்ற குறமான் அருமைக்க ணவனே!—எனையாளாய்!
தளவத்தி னகையாய்! தருணத்தி லணைவாய்!—குகநாதா!
களவெற்றி யயிலா! கனமுற்ற சிகிமா—மலையாளா!

2206. பச்சைமுகின் மேனியார் பத்மமகள் நாதனர்—மருகோனே!
கச்சையணி மார்பினள் கட்குறவர் மாதினள்-புணர்தோளா!
செச்சைபுனை நாதனே! செக்கர்நிற மேனியாய்!—எனையா
[ளாய்!
இச்சையுட னுளுமே எத்திசையு மேன்மைசேர்—சிகியாளா!

2207. குடத்தைநிகர் முலையாள் குறத்திமரு வியவா!-எனையாளாய்!
அடத்தையுள வசுரோன் அறக்கதிரி னயிலே—வியவீரா!
படத்தரவின் முடியார் பணைத்தவிடை யரனர்-அருள்பாலா!
வடத்திலரி துயில்வா மனர்க்குமரு க!சிகா—மலையோனே!

2208. அண்டர்பணி சரண! அன்பினுட னருள்வாய்!—குகநாதா!
கொண்டல்படி முடிசேர் குன்றைமலை யரசே!—தயவாளா!
தண்டமிழி லுயர்வோர் சங்கமதி லுறைவாய்!—அமரேசா!
வண்டணியு மலரா! வந்தருள்செய் குமரா!—மயிலாளா!

2209. தத்தித்திரி மாமயி லா'ஒரு
சட்டித்திதி நாளினி லேரண—க்ளமீதே
அத்ரத்தினில் மீறிய போர்புரி
அஸ்தக்கொடு சூருடல் கீறிய—செயவீரா!
வத்ரத்தினி லேதெளி வாகிய
மட்டுக்குழன் வேடமி னள்புணர்—புயசீலா!
சித்ரச்சிகி மாமலை வாழ்வுறு
சித்திக்குரு சாமி!இ நாளென்முன்—வருவாயே!

2210. நடன மிட்டிடு மயிலி லுற்றிடு
நளிர்க டப்பணி—புயவேளே!
திடமி குத்திடு மசுர னைப்படை
தெறிப டக்கொலு—மயிலாளா!

---

2205. தளவம் - முல்லை.

குடமி தார்த்திடு மீருத னத்தினள்
குறம யிற்கொடி—புணர்தோளா!
தடமி றைத்திடு சிகிமலைக்குக!
தமிழ்மி குத்திட—அருளாயோ!

2211. சீரிய தமிழ்தருவாய்! தேவர்கள் பணிமுருகா!
கூரிய அயிலதனல் கூடிய படையசுரோன்
பாரினில் விழவடுவோய்! பார்வதி தருபுதல்வா!
தாரிடுபுய! வரமே தா!சிகி மலையரசே!

2212. அடமி குத்திடு சூரன் அடுப டைக்கெதிர் வேலை—விடுசூரா!
கடம தக்களி றூன கனமு கத்தவர் சோத—ர!குகேசா!
நடமி குத்திடு தோகை நலம யிற்பரி யேறும்—முருகோனே!
தடமி குத்திடு சோலை தழைசி கிக்கிரி மீது—வருதேவே!

2213. சித்தர்பணி சரண! சிற்சபையின் அரனர்—அருள்பாளா!
சத்தமுகி னிறமா சத்தியினில் விழவே—அடுவீரா!
முத்தமிழை அருள்வாய்! மூக்யசனி தியனே!—க்ருபை தாராய்!
கொத்தலர்கொள் பொழிலே குப்பிடுசி கியின்மா—மலையா
[ளா!

2214. நிருத்தரருள் புதல்வா! நினைத்தவர மருள்வாய்!—குகநாதா!
வருத்தஎதிர் அசுரோர் மடிக்கநெடு விலைவேல்—விடுதேவே!
தருத்தகுசெய் கரனே! தழைத்தசிறை மயிலா!—தமிழ்தா
[ராய்!
பருத்தமுடி புனைசீர் பணைத்தசிகி மலையா!—எனையாளாய்!

2215. கோகன கத்திரு மாதினள்
கோலமி குத்திடு மார்பினள்—மருகோனே!
மாகமி குத்திடு தேவரே
வர்சமி குத்திடு கானரே—பணிபாதா!
நாகமி குத்திடு வேடமான்
தான்மகிழ் வுற்றிடு நாதனே!—எனையாளாய்!
சேகர முற்றிடு கோடுசேர்
சீர்சிகி மெய்க்கிரி மீதிலே—வருதேவே!

---

2213. சத்தமுகில் நிறமா - ஏழு மேகங்களைப்போன்ற கருநிறமுடைய சூரனாகிய மாமரம். சத்தி - வேல்.

2214. தருத்தகு செய்கரன் - கற்பகத் தருவைப்போல் வழங்கும் கையினன்.

2216. சிட்டர்பர வியசரண !
சித்திதனை யுளமுருகா !—குகநாதா !
துட்டர்படை யொடுமெதிரே
சுற்றுமசு ரனையடு போர்—புரிவேலா !
மட்டவிழு முயர்பொழில்சூழ்
மைப்புயல்கள் தவழ்சிகிமா—மலையாளா !
இட்டமிக மயின்மிசையே
இச்சையுட னென்முன்வருவாய் !—செகநாதா !

2217. திருவைநிகர் மடமான் திறமுலவு மறமான்—மகளாலே
தருவனம தனிலே தனியொடலை பவனே !—எனையாளாய் !
கருநிறவன் அசுரோன் களிறெடுநன் படைமேல்—விடு
[வேலா !
அருமறைகள் துதிசீர் அழகுமிகு சிகிமா—மலையாளா !

2218. கனகவரை நிகர்தோ கையின்மலையி னரசே !-அருளாயோ ?
வனசமல ருறைமான் மயிலைநிகர் குறமான்-அணைதோளா !
உனதுவடி யவனுன் உரிமையுடன் மயின்மேல்-வருவாயே !
மனதினினை வரமே மகிழினொடு தருவாய் !—அமரேசா !

2219. மனதி னினைத்த படியேதான்
வரம தெனக்கு அருள்வாயே !—குகநாதா !
உனது முகத்தை யடியேனுன்
ஒருநி மிஷத்து மறவாதே—புகழ்வேனே !
எனது தமிழ்க்கு முதலாவாய் !
எளிய னெனக்கு வொருவேறு—தரவேதோ ?
வனம களுக்கு மணவாளா !
மணிமு டியுற்ற சிகியாமா—மலையாளா !

2220. மதிதரித்த சடையார் மகிழ்மிகுத்த வுமையாள்–அருள்பாலா!
கதிமிகுத்த மயிலா ! கருணையுற்ற கடலே !—அருளாயோ ?
துதிபடைத்த சரண ! துரைமகட்கு மணவா !-அருளாயோ ?
அதிகவித்தை தருவாய் ! அழகுபெற்ற சிகிமா—மலையாளா !

2221. தருவி லங்கிய பொழிலில் வந்தவள்
தகைமை கொண்டிடு—மடமானுள்
மருவும் அம்புய வதன சுந்தர !
வளர்க டம்பணி—மணிமார்பா !
செருவெ திர்ந்திடும் அசுரர் தம்படை
திறம ழிந்திட—விடுவேலா !
உருவு வெங்கதிர் முகடு யர்ந்திடும்
உலவு குன்றையின்—மலையோனே !

2222. வருசூருடல் கிழிவாகிட வடிவேல்விடு—செயவீரா!
'கருமாமுகில் நிறமேனியர் கமழ்மார்பினர்—மருகேசா!
அருமாமறை பயில்வோர்பணி அறுவோரிடம்-வளர்தேவே!
குருமாமணி முடிசேர்கன குளிர்தோகையின்—மலையாளா!

2223. கோக னகமனை யாள்புணர்
கோவி யர்கள்மட வார்புணர்—புயமாயோன்
நாக மிசைதுயி லுயகர்
நாம மணிநுத லார்மகிழ்—மருகோனே!
பூக மிசைகயல் பாய்வெகு
போக மிகுவள நேமநன்—னகராளா!
சேக ரசிகர மேவிய
சீரு லவுசிகி மாமலை—வருதேவே!

2224. அடரவரு சூரன் அலறவயி லேவு—முருகோனே!
மடவரலின் மேன்மை வருகுறமின் மேவு—துரைவேளே!
கடவருவி யோடு கரிவதனர் சோத—ரகுகேசா!
திடமுடிகள் சூழு சிகிமலையின் வாச!—அருளாயோ?

2225. பந்து போலுமுலை பண்கொள் சீரின்மொழி—வடிவேசேர்
நந்து போலுமிடர் நங்கை வேடமகள்—புணர்தோளா!
கொந்து நீபமலர் கொண்ட மார்பின்முரு—கையவேளே!
வந்து தானருள்செய்! மங்குல் சேர்சிகியின்—மலையாளா!

2226. மதுரத்தமிழ் பாடவு மேயருள்
வடிவுற்றிடு மாமயி லேறிமுன்—வருவாயே!
சதுரப்பெரு சேனையி னோடெதிர்
தகுவைக்கதிர் வேல்கொடு சீறிய—செயவீரா!
விதுவைப்புனை வேணியி னாருள்
விரையுற்றிடு நீபமென் மாலிகை—புனைமார்பா!
மதுவுற்றிடு சோலைகள் சூழுயர்
மகிமைச்சிகி மாமலை வாழ்வுறு—குகநாதா!

'2227. வலுவாகிய சூரனை மடிவாகிட வேல்விடு—செயவீரா!
குலிசாயுத னூர்முதல் குளிர்கானக ஞானியர்—பணிதாளா!
சலியாவர மேயருள் தகுமாமயின் மீதினில்—வருவாயே!
மலிசோலைகள் சூழ்சிகி மலைமேல்வரு நாயக!-எனையாளாய்!

2228. அடியேனுட மிடிதீரிட அருள்வாய்!குரு பரனே!
குடிவாழ்குற மகள்சேர்புய! குகனே!க்ருபை புரிவாய்!
துடியாகிய அசுரோனுடல் துணிவேலணி கரனே!
முடிசேர்சிகி மலையா! அறு முகவா!மயில் முருகா!

2229. தானவர் குலகலகா!
தாவிய மயின்முருகா!—எனையாளாய்!
கானவர் மடமகளாள்
காரிகை குறமயிலாள்—புணர்தோளா!
தேனல ரணிபுயவா!
சீருள தமிழ்தனையே—தருவாயே!
வானவர் துதிமுருகா!
வாழ்சிகி மலையரசே!—க்ருபையாளா!

2230. வானவர் பணிசரணு!
வாசமென் மலரணிவோய்!—எனையாளாய்!
கானவர் குலமடமான்
காதல்கொள் முருகையனே!—அருளாயோ?
சானகி புணர்விறலார்
தாமகிழ் மருகையனே!—மயிலாளா!
மானவர் பணிமுடிசேர்
வாழ்வுயர் சிகிமலைமேல்—வருதேவே!

2231. கயிலை மலையில் மேவு பவள முலவு வேணி
கருணை பொழியு மீசர்—அருள்பாலா!
அயிலை யெதிரு சூரன் படைகள் முழுது நாச
மழிய விடுநன் மேவு—செயவீரா!
குயிலை நிகர்சொல் வாயள் கயலை நிகரு பார்வை
குறமின் மருவு தோள!—எனையாளாய்!
மயிலை நடன மாட நடைகொ ளுயர்பொன் மேவு
வளரு முடிகொள் தோகை—மலையாளா!

2232. கான கத்திலுறை வேடமான்
காத லுற்றகும ரேசனே!—அருளாயோ?
வான கத்திலுறை வானவோர்
வாச முற்றமலர் தூவியே—பணிபாதா!
சான கிக்குமண வாளனர்
தாம கிழ்ச்சிமரு கேசனே!—எனையாளாய்!
ஈன ரக்கன்முடி சாயவே
ஏவு சத்திகொள்கை யா!சிகா—மலையாளா!

2233. தருமேவிய வானுல கோர்பணி
சரண!க்ருபை யாவையு மேயினி—அருளாயோ?
குருவே!மயி லேறிய நாயக!
குக!வேள்! தமிழ் பாடவு மேயினி—உதவாயோ?

செருவேபுரி சூருடல் கீறிய
திறவேலணி பாணிய னே!நலம்—உதவாயோ?
அருவே!உரு வே!குற நாயகி
அழகா!சிகி மாமலை வாழ்வுறு—முருகோனே!

2234. செருபுரி சூருடல் கிழிபட வேயயில்
திரமுட னேவிய—குமரேசா!
தருவளர் சோலையில் வருகுற மாமயில்
தனையணை சீர்புய!—எனையாளாய்!
குருமணி தானிழை முடிபுனை நீடிய
குளிர்சிகி மாமலை—வருதேவே!
அருமறை தேடிய இருசர ணு!குக!
அடியனை யாதரி!—வடிவேலா!

2235. ..................................
கும்பமா முலை தனிலே—புணர்தோளா!
..................................
மடிவாய் விட வயில்வேல்—தொடுசூரா!
..................................
யிணை போலுழல் படுவாதருள்—புரிவாயே!
..................................
நலமேவிய சிகிமா—மலையாளா!

2236. ........................ர் வேலையணி—முருகோனே!
........................ யாடரி—மருகோனே!
........................ள் செய்வாய் குமர!—குருநாதா!
........................ முலவு தோகைமலை—முருகோனே!

2237. வேட நாயகி நாதனே!
மீறு வேலணி பாணியா!—எனையாளாய்!
பாடல் பாடிட வேசெய்வாய்!
பாவ லா!சிகி யாளனே!—குகநாதா!
ஆட லேபுரி தோகையாய்!
ஆறு மாமுக! வேலவா!—க்ருபைதாராய்!
மாட மாளிகை சூழ்சிகா
மாவு லாவிய மேரில்வாழ்—குருநாதா!

---

2235, 2236. இரண்டு பாட்டுக்களும் சிதைந்துவிட்டன.

2238. மணியுலவு தோகை மலையிலர சாளும்—முருகோனே!
துணிவினெடு மேவு துடிகள்மிகு சூரை—அடுவேலா!
பணிசெயடி யேனை பரிவினேடு வாழ—அருளாயோ?
அணியுலவு தோகை யழகுமலை யாள!—எனையாளாய்!

2239. வனம்வளர் வேடர் மகள்புணர் தோளா!—எனையாளாய்!
கனம்வளர் சோலை கமழ்சிகி மேவில்—வருதேவே!
சினம்வளர் சூரை சிதறிட வேலை—எயும்வீரா!
மனம்வளர் நோயை வழுவிட வேசெய்—குகநாதா!

2240. எதிரவரு சூரை இடறிவிழ வேலை—விடுசூரா!
கதிரின்முடி மேவு கமழ்சிகியின் மேவில்—வருதேவே!
மதியையணி வேணி மகிழும்அருள் பால!—எனையாளாய்!
அதிகவர மேசெய் அறுமுகவ! மேன்மை—அருளாயோ?

2241. கந்தா! அருள் புரிவாய்!
கஞ்சோன்முத லமரோர்—பணிதாளா!
வந்தாதரி குமரா!
வம்பார்மலர் புனைவாய்!—எனையாளாய்!
செந்தாமரை வதனு!
சிந்தேதுயில் விறலார்—மருகோனே!
நந்தாவன மிகுசீர்
நன்றூர்சிகி மலைமேல்—வருதேவே!

2242. வஞ்சனை மிகுசூரை வந்தடு கனவீரா!—எனையாளாய்!
நஞ்சணி மிடறீசர் நண்புப ருமைமாது—தருபாலா!
பஞ்சணி பதமாது பண்புயர் குறமானை—அணைதோளா!
மஞ்சணி முடிமேவு மங்கள மிகுதோகை—மலையாளா!

2243. கானுலவு வேட மாது
காதலுடன் மேவு நாத!—எனையாளாய்!
தேனுலவு நீப மாலை
சீரினெடு சூடு தேவ!—அருளாயோ?
மானுலவு பார்வை மாது
மாரியுமை தேவி யாள்சொல்—புதல்வோனே!
வானுலவு தோகை மேவில்
வாழுமுரு கேச னே!முன்—வருவாயே!

---

2241. சிந்து - கடல்.

2244. திரும ருவிய புயனுர்
திற்லு ளவிறல் மருகா!—அருளாயோ?
மருமி குகுழ லுமையாள்
மருவி யகறை மிடருர்—அருள்பாலா!
தருமி குவளர் பொழில்சூழ்
தகுசி கிமலை முருகா!—எனையாளாய்!
அரும றைபுகழ் சரணு!
அடியன் முன்மயில் மிசையே—வருவாயே!

2245. எதிர்வரு சூர னிருபிள வாக—எயும்வேலா!
கதியுயர் தோகை கனமிகு கேக—யவுலாசா!
நதியணி வேணி நலமிகு பால!—எனையாளாய்!
மதிதவழ் சோலை வளர்சிகி மேரில்—வருதேவே!

2246. வடிவேல்கொடு வருசூருடன்—எதிர்தேவே!
குடிவாழ்பவள் குறநாயகி—புணர்தோளா!
அடியார்பணி அழகாகிய—மலையாளா!
கடியார்பொழில் கமழ்தோகையின்—மலையாளா!

2247. தருநிறை கானகந் தனில்வளர் நாயகி—புணர்தோளா!
அருமறை யேபுகழ் அறுமுக வா! க்ருபை—புரிவாயே!
நிருதர்க ளோடெதிர் நிணமிகு கூரயில்—முருகோனே!
மருமிகு சோலைகள் வளர்சிகி மாமலை—வருதேவே!

2248. வருசூருட னடலேபுரி வடிகூரயில்—முருகோனே!
கருமேனியி னுடல்நாயகர் கமழ்தாமரை—மடமானுள்
திருமார்பினர் மருகா! அருள் திடமாமயில்—முருகோனே!
அருமாமறை புகழ்நாயக! அருள்தோகையின்—மலைநாதா!

2249. சினமிகு சூருடல் சிதறிட வேயயில்—தொடுவீரா!
கனமிகு மாமயில் கடுகிட வேநடை—புரிசூரா!
அனநடை யேபயில் அழகிய வேடமின்—மணவாளா!
மனமது நோய்தவிர்! வளர்சிகி மாமலை—முருகோனே!

2250. வடிவேல்கொடு எதிர்சூருயிர் மடிவாகிட—எயும்நாதா!
குடிவாழ்குற மகள்நாயகி குவவாமுலை—புணர்தோளா!
அடியார்பணி சரணு! அருள்! அழகாகிய—மயிலாளா!
படியோர்புகழ் முடியேமிகு பணைதோகையின்—மலையாளா!

2251. தாதவிழ் சோலை வாழும் தார்புனை வேட மாது—புணர்
[தோளா!
மாதர சான தேவி மாரிமி ளுள்த ணைசை—மகவேளே!
ஆதர வாக வேமுன் ஆடிய தோகை யேறி—வருவாயே!
கோதல கோடு லாவு கோடுயர் தோகை மேரில்—வருதேவே!

2252. சகமடி யார்கள் தனைநிதம் வாழ—அருளாயோ?
பகரரி தான பனுவலை நீதான்—அருளாயோ?
சுகமொழி வாயள் துரைமகள் பாக!—முருகோனே!
நகவொளி கோடார் நளிசிகி மேர!—எனையாளாய்!

2253. நான்மெலி குவனே நாத! உ னடியேன்—அறியாயோ?
கான்மலி குறவோர் கான்மரு வியவா!—குகநாதா!
மான்மலி கரனர் மால்புரி முதல்வா!—எனையாளாய்!
வான்மலி முடிசேர் வாழ்வுள சிகிமா—மலையாளா!

2254. சகல மனிதர்கள் சகல புலவர்கள்—பணிதாளா!
மகம துளமுனி வரர்கள் துதிகுக!—எனையாளாய்!
தகமை அசுரர்கள் தகர வயில்விடு—செயவீரா!
மகர மிகுகடல் வளையு முயர்சிகி—மலையாளா!

2255. கருணை தங்கிய குக! ச வுந்தர!
கனதை கொண்டிடு—முருகோனே!
மருமி குந்திடு மதுசி றந்திடு
வனச மங்கைதன்—மருகோனே!
தருவி லங்கிய பொழிலில் வந்தவள்
தனைய ணைந்திடு—புயவேளே!
குருநி றைந்திடு முடிபொ ருந்திய
குளிர்சி கண்டியின்—மலையாளா!

2256. அடிய னீயென அணுவ தாகிலு—நினையாயோ?
குடிவில் வாழ்வுறு குறமி ஞொளொடு—புணர்தோளா!
கெடிகொள் சூருட கெருவ மோடிட—விடுவேலா!
படியின் மேன்மைகொள் பழைய தோகையின்-மலையாளா!

2257. அடியர் கண்டுபணி அருளி லங்குமல—ரிருபாதா!
குடியி லங்குகன குறம டந்தைபுண—ரிருதோளா!
வடிவு கொண்டதொரு வையின்மி குந்தவயில்—முரு
[கோனே!
கடிநி றைந்தபொழில் கமழ்சி கண்டிமலை—முருகோனே!

2258. தீதுபுரி சூரனுடன் தீய்வ்ட லேபுரியு—முருகோனே!
வாதுபுரி ராவணனை மாளவுட னேசெயரி—மருகோனே!
சேதுபுரி நீபமலர் சீரினுட னேபுனையும்—வளர்மார்பா!
தாதுபுரி சோலைமிகு தாமுலவு தோகைமலை—முருகோனே!

2259. வஞ்சனை புரிசூருடன் மண்டிய வமர்தானிடு—செயவீரா!
கஞ்சமின் மயலாகிய கஞ்சனை யடுமாலுட—மருகோனே!
நஞ்சணி மிடறீசுரர் நங்கையி னுமைமாதுதன்—மகவேளே!
மஞ்சணி கனசோலைகொள் மங்கள மிகுதோகையின்—மலை
[யாளா!

2260. வனசமலர் மண்டப மீது
வளருமட மங்கையை மேவு—புயமாயோன்
மனதுமகிழ் கின்றிடு சோதி
மருவுகன மிஞ்சிய வாசை—மருகோனே!
உனதடியன் அன்பொடு வாழ
உரிமையுடன் வந்துமு னுக—அருளாயோ!
கனதைபெறு கின்றிடு சோலை
கமழ்முடியி லங்கிய தோகை—மலையாளா!

2261. வண்டமிழ் தனைநீயருள்
வஞ்சனை மிகுசூருடன்—எதிர்வீரா!
கொண்டல்கள் படிகாருள
கொங்குயர் பொழில்மாதுடன்—அணைதோளா!
அண்டர்கள் முனிவோர்நல
அன்பர்கள் பணிசீருள—இருதாளா!
விண்டலர் பொழில்மாமுடி
மிஞ்சிய சிகிமாமலை—முருகோனே!

2262. நீடுசடை முடியார் நீள்கயிலை யரனூர்—அருள்பாலா!
வாடுமிடை மடமான் மாமயிலள் குறமான்—அணைதோளா!
நாடுமசு ரனையே நாசமிக வயிலே—வியசூரா!
கோடுலவு சிகியாங் கூறரிய மலையா!—எனையாளாய்!

2263. தருநி றைந்திடு சோலைவாழ்
தனிவ ருங்குற வேடமான்—மணவாளா!
பொருபு ரிந்திடு சூரன்மேல்
பொறி பறந்திட வேலையே—வியதேவே!

மருநி றைந்திடு நீபமா
  மலர ணிந்திடு மாலையாய்!—எனையாளாய்!
திருநி றைந்திடு நாடுசூழ்
  நிகழ்சி கண்டியின் மேரில்வாழ்—குகநாதா!

2264. கானக மாதினுள் காதல்கொள் நாதனே!—குகவேளே!
வானக நாதனுர் மாலொடு நாளுமே—பணிதாளா!
மீனமர் பார்வையாள் மேன்மைகொள் தேவியார்—புதல்
[வோனே!
தேனலர் காவுலாம் சீர்பொழில் தோகையாம்—மலையாளா!

2265. மனதி னினைத்த—படிதாராய்! மயிலை நடத்து-முருகோனே!
தனது பதத்தின்—மணமேசேர் தரும லரைக்கொ—டிமை
[யோரே
தினமு மரிச்சித்—திடுபாதா! திறல்பெ றுவெற்றி-யுறுவேலா!
கனக கிரிக்கு—சரியாமே கனசி கிநற்சி—கியின்வாசா!

2266. வேரு தரவு மிலையது
  மேலா கியகுக!—அறியாயோ?—அமரேசா!
கூறு மயிலை யெதிர்வரு
  கோதா கியவசு—ரனைமார்மேல்—விடுசூரா!
[திரு...... தனை] சடை
  தேவா கியவரன்—அருள்பாலா!—எனையாள்வாய்!
மாரு வருவி பொழிகன
  மாலார் சிகிமலை—தனில்வாசா!—அருளாயோ?

2267. எத்தனைநா ளிப்படியான்—மெலிவேனோ?
பத்தன்முனே பட்சமதாய்—வருவாயே!
நத்தணிமால் நட்புயர்வோர்—மருகோனே!
சித்தர்கள்சூழ் சித்ரசிகா—மலையாளா!

2268. வனசமல ரதனில்வளர்
  வனிதைதனை மருவுபுயன்—மருகோனே!
தினமுமுன துபயசரண்
  சிரசிலணு தினமுநினை—குவன்மீதே
தனதுதய வதுபுரிவை
  சகலபுவ னமும்வளர—அருள்தேவே!
எனதுகுடி வளரவருள்
  எழிலுலவு சிகியின்மலை—முருகோனே!

---

2265. மூன்றாமடியிலே சந்தம் சிறிது வேறுபடுகிறது.
2266. [ ] 'சேரு ரரவு புனை' என்றிருக்கலாம்.

2269. கஞ்சனை யெதிர்புரி கங்குலி னிறவிறல்—மருகோனே!
அஞ்சன மணிவிழி அம்புய முக! குற—மகள்தோழா!
நஞ்சணி மிடறினர் நம்பர மருதவு—புதல்வோனே!
மஞ்சது தவழ்முடி மன்சிகி மலைவரு—குகநாதா!

2270. வருசூருடன் வலுபோர்புரி—செயவீரா!
தருசோலையுள் தகுநாயகி—புணர்தோளா!
பொருவேலணி புனிதாவரம்—உதவாயோ?
திருமாதுறை திகழ்தோகையின்—மலையாளா!

2271. வடம்புனை பூமுலை மணங்கமழ் மேனியள்—குறமானுள்
குடம்புரை சீர்முலை குலுங்கிட வேநய—மிடுலோலா!
அடம்புரி சூருடல் அருண்டிட வேயயில்—தொடுசூரா!
நடம்புரி தோகைய! நலங்கிளர் தோகையின்-மலைவாழ்வே!

2272. கடிகமழ் பொழில்வாழ் கனமிகு குறமான்—அணைதோளா!
அடியவர் நிதியே! அழகுள மயிலா!—எனையாளாய்!
மடிபட வசுரோன் வடிநுனை யயிலே—வியசூரா!
முடிபுனை நலமார் முதுசிகி மலையாய்!—அருளாயோ?

2273. மதிசூடிய சடையார் மதலாய்!க்ருபை புரிவாய்!
கதியாகிய மயிலா! கருணாநிதி! எனையாள்!
முதிதாகிய தமிழா! முதல்வா!திரு மருகா!
நதிசூழ்சிகி மலையா! நலம்யாவையு மருள்வாய்!

2274. கருணைநா யகனே! கமலவா னனனே!—எனையாளாய்!
அருணமே னியனே! அருள்செய்வாய்! குகனே!—க்ருபை
[தாராய்!
தருணமா கையினுல் தயவுதான் புரிவாய்!—அமரேசா!
பொருளைநீ யருள்வாய்! புனித!தோகையின்மா—மலையாளா!

2275. வண்ணமிகு முலையார் வன்னிநிகர் மொழியார்—மயலாலே
எண்ணமுறு துயரே என்னிதய மணுகா—தருள்வாயே!
கண்ணனுட மருகா! கன்னிகுற மயிலாள்—புணர்தோளா!
அண்ணல்சிகி மலையா! அன்னமிசை வருவார்—குருநாதா!

2276. கஞ்சனுயிர் மாள கண்டுமகிழ் மாயன்—மருகோனே!
வஞ்சசுரன் மாள மண்டுசம ரேசெய்—அயிலாளா!
தஞ்சமருள் தேவ! தண்டமிழை யாவ—லொடுதாராய்!
மஞ்சுதவழ் சோலை வண்சிகியின் மேரில்—வருதேவே!

2275. வன்னி - கிளி.

2277. வருசூருட னெதிரேபுரி வலுவாகிய—அயிலாளா!
திருமாதுட னலமேபுரி திறன்மாயவன்—மருகோனே!
அருமாமறை புகழ்நாயக! அடியேன்மிடி—தவிர்வாயே!
குருமாமணி நிரைசேர்முடி குளிர்தோகையின்—மலையாளா!

2278. அடியேன்மிடி தவிர்வாய்!குக! அழகாகிய—மயிலாளா!
குடிவாழ்குற மடமான்வளர் குளிர்சோலையின்-நடைதாளா!
கடிதார்புனை புயநாயக! கருணாநிதி!—எனையாளாய்!
வடிவேலணி முருகா!என்முன் வருவாய்!சிகி—மலையாளா!

2279. கரிந்த கூழிடங் கனிந்து மாமழை—பெய்தல்போலே
புரிந்த நாயினன் பவங்கள் தீரிட—அருளாயோ?
முரிந்து வீழிட முனிந்த சூருடன்—அடுவேலா!
சரிந்த சோலைகொள் தழைந்த தோகையின்—மலையாளா!

2280. அஞ்சவரு சூரனுட
னண்டியட லேபுரியும்—முருகோனே!
தஞ்சமினி வேறுமிலை
தந்திமுக வோர்துணைவ!—அருளாயோ?
நெஞ்சினினை வோர்கண்மிடி
நின்கிருபை யால்விலக—அருளாயோ!
மஞ்சுதவழ் சோலைநிறை
வண்சிகியின் மாமலையின்—வருதேவே!

2281. அடத்தின்மிகு சூரை அடுத்தடல்செய் கூரின்—அயிலாளா!
குடத்தின்மிகை போல குவித்ததன வேட—மகள்வாகா!
நடத்தின்மிகு தோகை நலத்தமயின் மீது—வருதேவே!
திடத்தினுயர் சோலை செழித்தசிகி மேரில்—வளர்வேளே!

2282. அடியன் மீதுதய வதுசெ யாதவிது—நயமோதான்?
மிடியி னுலவதி மெலிவ னே!குமர!—குருநாதா!
கொடிய னேன்மறதி கொளுவ தாலதனை—நினையாதே
வடிவி னுயரும் வளர்சி காமலையின்—முருகோனே!

2283. வருத்தம் யாவையும் மடித்து வீழிட—அருளாயோ?
பருத்த பூமுலை பணைத்த வேடமின்—அணைதோளா!
கருத்த மேனியன் கருத்தி னுசைகொள்—மருகோனே!
திருத்த மாகிய சிகிப்பொன் மேரினில்—வருதேவே!

---

2283. கருத்த: கறுத்த: எதுகை நோக்கிய விகாரம்.

2284. நந்து தரித்திடு மாயன்
நன்று படைத்திடு மால்தன்—மருகோனே!
கொந்து மிகுத்திடு சோலை
குன்றி லுதித்திடு வேடர்—மகள்பாகா!
பந்து முலைக்கொடி யார்கள்
பண்பி லகப்படு மோக—மதுதீராய்!
வந்து மிகுத்தருள் தேவ!
மன்சிகி நற்கிரி யாளும்—முருகோனே!

2285. மணமலிக டம்ப மலர்புனை சிறந்த—புயநாதா!
பணவரவி லங்கு பணியணியு நம்பர்—புதல்வோனே!
புணரிசுவ ரன்று பொருதவயில் கொண்ட—முருகோனே!
இணர்மிகு புனங்கொள் எழிலுலவு குன்றை—மலைவேளே!

2286. எனதுயர் தீர எளியனிட மாக—வருவாயே!
தனது அடி யேனை சகமதனில் வாழ—நிதிதாராய்!
அனநடையின் வேடர் வரமகளை மேவு—புயநாதா!
வனசமயில் மேவு வடிவுமிகு தோகை—மலைபாளா!

2287. வருசூருட லிருகூறிட வடிவேலணி—முருகோனே!
பொருவேல்விழி யுமையாள்தருபுதல்வா! இனி-எனையாளாய்!
தருநாயகன் முதலோர்பணி சரணு! க்ருபை—புரிவாயே!
அருமாமறை புகழ்தோகையின் அழகாகிய—மலையாளா!

2288. கதிமிகு சூருடல் கிழிபட வேயொரு
கதிர்வடி வேலணி—முருகோனே!
மதியணி வேணியர் தமையணை நாயகி
மனமகிழ் வாகிய—புதல்வோனே!
துதியடி யார்பணி குருபர னே! அருள்
துரைமுரு கா! இனம்—எனையாளாய்!
விதிகுரு வே! கன முயர்சிகி மாமலை
விரைமலர் நீபமென்—மணிமார்பா!

2289. வந்தவினை தீர வந்துவரு ளேசெய்—முருகோனே!
செந்தமிழை யேசெய்! செங்கமல மான—இருதாளா!
சந்தமிகு வேல! தங்கமலை யான—சிகிமேரா!
கொந்தலர்கொள் மார்ப! குஞ்சரித ஞசை—மணவாளா!

2290. சூதுசெ யாது நீதய வேசெய்! தோகையி லேறி-வருதேவே!
தாதுயர் நீப மாமல ரான தார்புனை மார்ப!—எனையாளாய்!
மாதுபொன் வேட நாயகி யாளை மாலொடு மேவி—அணை
[தோளா!
ஏதிது காறும் நீயரு ளாது? ஏர்மிகு தோகை—மலைநாதா!

2291. வருவாயென்முன் மயிலேறிய—குகவேளே!
பொருசூருடல் பிளவாய்விடும்—அயிலாளா!
மருநீபமென் மலர்சூடிய—புயநாதா!
தருசூழ்வரு தகுதோகையின்—மலையாளா!

2292. மணமலி நீப மலரணி மார்ப!—எனையாளாய்!
குணமிகு வேடர் குறமகள் மேவு—புயநாதா!
தணமலர் வேணி தருபுதல் வா! நன்—னயவேளே!
வணமிகு சோலை வளமிகு தோகை—மலையாளா!

2293. மயில்மீதினில் வருவாய்!குக!—எனையாளாய்!
அயிலாலெதிர் அசுரோனுடன்—எதிர்சூரா!
குயிலாமொழி குறநாயகி—புணர்தோளா!
ஒயிலாயரு ளுயர்தோகையின்—மலையாளா!

2294. வஞ்சியிடை யான மங்கைகுற மாது—புணர்தோளா!
நஞ்சரவின் வேணி நம்பர்தரு வால—குமரேசா!
பஞ்சவன மான பண்புமிகு தோகை—மலையாளா!
வஞ்சசுரர் கால வஞ்சிகிரியின் மேரின்—வருதேவே!

2295. வருசூருடல் வடுவாகிட—அடுவேலா!
மருநீபமென் மலர்சூடிய—புயநாதா!
திருமேவிய செயமானுட—மருகோனே!
அருமாமறை அறைதோகையின்—மலைநாதா!

2296. செகமகிழ் நாத! திருமயி லேறி—வருவாயே!
அகமகிழ் வேண அருள்தரு தேவ—குருநாதா!
மகபதி யாசை மருக! அ நேகம்—அருளாயோ?
பகரரி தான பழமைகொள் தோகை—மலைநாதா!

2297. தந்தை தாயுநீ! சங்க நாவலா!—எனையாளாய்!
சிந்தை நோயெலாம் சிந்தி யோடவே—அருளாயோ?
இந்து வேணியார் இன்ப மானதோர்—புதல்வோனே!
விந்தை மாதுசேர் மென்சி காநன்மா—மலையோனே!

2298. அந்தமிகு மாமயிலில்
அன்பினொடு நீகிருபை—தரவாராய்!
சந்தமிகு பாடல்தனை
தந்தருள்செய் வாய்! குமர—குருநாதா!
கொந்தலர்கொள் நீபமலர்
கொண்டபுய வா! அமரர்—பணிபாதா!
சொந்தவடி யேன்முனருள்
துங்கமயின் மாமலையின்—வருதேவே!

2299. தயவுதா னிலையோ தமியன்மீ தினிலே?—குகநாதா!
பயமிலா தெதிர்சூர் படையெலா மடிவாய்—விடுவேலா!
நயமதா கியவே டமினையே புணர்வாய்!—எனையாளாய்!
வயல்கள்சூழ் நியமா! வடிவுசேர் சிகிமா—மலையாளா!

2300. கண்டிபுனை மார்பா! கந்தமலர் நீபா!—அருளாயோ?
மண்டிவரு சூரோன் மண்டைபட வேதான்—விடுவேலா!
அண்டிவரு நாயேன் அஞ்சவரு நோயே—தவிர்வாயே!
செண்டிலகு சோடார் தென்சிகியின் மேரா!—எனை
[யாளாய்!

2301. கனகாசலம் நிகராகிய கனதோகையின்—மலையாளா!
மனதாசையின் படியேயினி வரமேபுரி—குவைநாதா!
வனவேடுவர் தருமாதினை மயலால்மரு—வியதோளா!
தினமாவுட லிருகூறிடு திகழ்வேலணி—முருகோனே!

2302. மாதுகுற மானை மாலினொடு மேவு—புயநாதா!
சேதுமிகு நீப சீர்மருவு மாலை—புனைதோளா!
கோதுமிகு சூரை கூறுபட வேலை—விடுவீரா!
தாதுலவு சோலை தானுலவு தோகை—மலைநாதா!

2303. வாமி யிமயமட மாது அருமையொடு—தருபாலா!
பூமி புகழுவரு பூவு லவியசிகி—மலைநாதா!
நேமி யதனையணி நீல நிறவிறலின்—மருகோனே!
சாமி அருள்புரிவை! தார்கள் புனைகுமர!—குருநாதா!

2304. வனசமலர் மேவு மயிலையனை மாயன்—மருகோனே!
கனகமலை நேரும் கமழ்சிகியின் மேரின்—வருதேவே!
தினையினலை வேட ரழகுதிகழ் மாது—புணர்தோளா!
மனதுவரு நோயை வழுவிவிடு வாய்!தென்—மயிலாளா!

2305. முனிவோர்பணி சரண!அருள் முதலே!க்ருபை—புரிவாயே!
கனிவாயுமை தருபா!லக கருண நிதி—முருகோனே!
அனியாயம தகுவேபுரி அசுரோனுடல்—கிழிவேலா!
பனிமாமதி தவழ்தோகையின் பருமாமலை—வருதேவே!

2306. ஆறுமுக வேலவா! யானடிமை யாகினேன்—அருளாயோ?
கூறுபடை வேலினல் கோதுபுரி சூரன்மேல்—விடுதேவே!
மாறுபடி லாததால் வாதைபட நீதியோ?—அறியாயோ!
நீறுபுனை மேனியாய்! நீயருள்செய்! தோகைமா—மலையாளா!

2307. தாதவிழ் சோலை வாழும் தாமிகு வேட மாது—புணர்தோளா!
வாதடு சூர னேடு மாறிடு போர்செய் கூரின்—அயிலாளா!
நீதய வேசெய் வாய்!நன் னீலவி லாச மேன்மை—மயிலாளா!
சீதள மான சோலை சேர்சிகி யான தோகை—மலையாளா!

2308. அடல்புரி சூரனை யெதிரிடு போரினில்
அலறிட வேயயில்—விடுசூரா!
கடமத மேபொழி கடனவி நாயகர்
கருணைய தாகிய—துணையாளா!
நடனசி காமயில் முருக!கு கா!க்ருபை
நலமதெ லாமருள்—புரிவாயே!
வடவரை யேநிகர் புகல்சிகி யாகிய
மலைமிசை யேவளர்—குருநாதா!

2309. நடன மிட்டிடு மயிலி லுற்றுடன்
நலமெ னக்கரு—ளிடவாராய்!
அடல்வி ளைத்திடு மவுணர் மைக்குல
மழிய வெற்றிகொ—ளயிலாளா!
குடமி ணைத்கன வசன நற்கிளி
குறம யிற்கொரு—துணையாளா!
தடமு டிச்சிகி மலையி லுற்றவ!
தமிய னுக்கருள்—புரிவாயே!

2310. மனதில்வரு நோயை வழுவவர மேசெய்!—அமரேசா!
அனநடையின் மாது அழகுதிகழ் வேடர்—மகள்தோழா!
கனககிரி நேரு கனமுலவு தோகை—மலையாளா!
வனசமலர் மாது மருவுதிறல் மாயன்—மருகோனே!

2311. பயமிகு சூரன் படவயி லேவு—செயவீரா!
நயமிகு வேடர் நலமிகு தேவி—மகிழ்நாதா!
வயல்மிகு நேம வளநகர்சூழு— சிகிமேரா!
குயிலிசை [தருவாய்] இறையவ! [வருவாய்]—அமரேசா!

2312. கான நாயகி தோழனே! காவல ா!க்ருபை நீசெய்வாய்!
வானம் வாழ்பவர் நாளுமே வாழ மாவுடல் கீறுவோய்!
கூனமாமதி சூடுவோர் கோல நாயகி பாலகா!
நான மேவிய மார்பனே! நாளு மேசிகி மேரனே!

---

2311. [ ] சந்தம் வேறு: முறையே 'ஈவாய்' 'போதாய்' என அமைக்கலாம்.

2313. வண்டுசூழ் குழலாள் வம்புசேர் முலையாள்—நலமேசேர்
கண்டுநேர் மொழியாள் கங்குன்மே னியினாள்—குறமானாள்
மண்டுசே னையின்மா மங்கவே அயிலால்—எயும்நாதா!
விண்டுசேர் முடிசேர் மென்சிகா மலைவாழ்—குகநாதா!

2314. கருணை கொண்டருள் கனசி கண்டியின்—வருதேவே!
திரும டந்தையை தினம ணைந்தவர்—மருகோனே!
மருவு கந்திடு மலிக டம்பணி—இருதோளா!
தருசி றந்திடு தழைசி கண்டியின்—மலையாளா!

2315. கலைநிறைந்திடு மதியணிந்திடு
கடவு ளன்புயர்—புதல்வோனே!
அலையி லங்கத வணையு றங்கிய
அருமை கொண்டிடு—மருகோனே!
முலைஞெ முங்கிட மறவர் மங்கையை
முகமி லங்கிட—அணைதோளா!
மலையின் மிஞ்சிய மலைசி கண்டியின்
மலையில் வந்திடு—முருகோனே!

2316. மனதினி னைத்த படியரு ளைச்செய்!
மகிமை படைத்த—செகநாதா!
கன தன முற்ற குறமயி லுக்கு
கமழ்மல ரைப்பு—னையுநாதா!
வினவடி யர்க்கு நினையரு ளைச்செய்
விரைசெய்க டப்ப—மலர்மார்பா!
பனகமு டிப்பு வியில்வளர் பொற்பு
படிசிக ரச்சி—கியின்மேரா!

2317. அயிலாலெதிர் வருசூருடன் அதிர்போரிடு—செயவீரா!
குயிலாகிய மொழியாளுயர் குறநாயகி—புணர்தோளா!
மயிலேறிமு னடியேனிடம் வருவாய்!குரு—பர!வேளே!
ஒயிலா!தமிழ் தனையேயருள்! உயர்தோகையின்—மலையாளா!

2318. அரவி லங்கிய முடிது லங்கிய
அரன்ம கிழ்ந்தருள்—புதல்வோனே!
திரமி குந்திடு மசுரர் தங்குலம்
தெறிப டன்றயில்—தொடுசூரா!

---

2315. அங்கதம் - பாம்பு.

மரபு யர்ந்திடு குறவர் தங்கொடி
மகிழ வுந்தய—வுளநாதா!
சரண பங்கய மதனை வந்தருள்!
தழைசி கண்டியின்—மலையாளா!

2319. வந்துவ ரந்தருவாய்!
வன்சிறை யின்சிகிமே—லுடனேதான்
பந்துள கொங்கையினுள்
பைங்கிளி யின்சொலினுள்—குறமானுள்
இந்துமு கந்தனிலே
இன்பமு டன்புணர்கூர்—வடிவேலா!
கொந்தலர் தண்டலைசூழ்
குன்றையி னங்கிரிவாழ்—முருகோனே!

2320. வண்டு சூழ்கரு குழலினுள்
வம்பு சேருறு முலையினுள்—குறமான்மேல்
கண்டு வாசைகொள் கணவனே!
கங்கை யாள்தரு புதல்வனே!—எனையாளாய்!
மண்டு போர்படை யழியவே
வந்த சூருடல் பகிரவே—எயும்நாதா!
துண்டு மாமதி தவழுமோர்
துங்க மாகிய சிகியின்மா—மலையாளா!

2321. சிகிமலை வாழும் திருமுருகா!தென்—வடிவேலா!
மகிதலம் யாவும் மகிழுற மேன்மை—தருவாயே!
முகினிற மேனி முதல்வர்த மாசை—மருகோனே!
சுககுரு நாத! சுருதியின் வாச!—எனையாளாய்!

2322. அடியேனுட மிடிதீர்வுற அருளாய்!குரு—பரவேளே!
குடிவாழ்குற மயிலாளுட குவிமாமுலை—அணைதோளா!
வடிவேல்கொடு வெதிர்சூருடன் வலுபோர்புரி—செயவீரா!
செடியார்பொழில் மிகுதோகையின் சிலைவாழ்திரு
—முருகோனே!

2323. சந்தமிகு பாடல் யாவுந்
தந்தருள்செய் தோகை மீது—வருவாயே!
சுந்தரவு லாச லீலை
துங்கமிகு வேட மாது—புணர்தோளா!
கொந்தலர்கொள் நீப மாலை
கொண்டபுய வா!கு ஊள!—முருகோனே!
அந்தமிகு தோகை யான
அண்டர்பணி மேரில் வாழும்—அமரேசா!

2324. வஞ்சக மிடுசூருடல்
மண்டிட வயிலேவிய—அயிலாளா!
கஞ்சனை யுயிரோடுவெல்
கங்குலி னிறமாயவன்—மருகோனே!
நஞ்சணி மிடறூர்தரு
நன்றுள புதல்வா!குக!—குருநாதா!
மஞ்சது தவழ்சோலைகொள்
வண்புகழ் சிகிமாமலை—முருகோனே!

2325. மடமயி லாகிய குறமகள் மீதினில்
மயல்கொளு நாயக!—எனையாளாய்!
நடனசி காமயில் தனில்வரு வாய்!குக!
நறுமலர் நீபமென்—மணிமார்பா!
அடமிகு சூரனை வருபடை யோடிட
அயில்கொடு போர்புரி—திறலாளா!
தடமுடி யேகிரை சிகிமலை வாழ்வுறு
சரவண னே!க்ருபை—புரிவாயே!

2326. வானில்வளர் தேவர்பணி
வாசமிகு மாலையணி—யிருதாளா!
கானில்வரு வேடர்மகள்
காதலத னல்மருவு—புயவேளே!
தேனின்மொழி யாளுமைசொல்
சீருலவு பால!என்முன்—வருவாயே!
ஞானியர னேகர்நிதம்
நாடிவரு தோகைமலை—முருகோனே!

2327. எதிரெதிர் வரவர இடியென வடல்புரி—அயிலாளா!
கதிர்மணி யிலகிய கனமுடி யுலவிய—சிகியாமே
மதிதவழ் சிகிமலை வருகுரு பர!இனம்—எனையாளாய்!
நிதிதனை யருள்புரி! நிருதர்க ளெதிரிடு—செயவீரா!

2328. சுருதியறி யாத சுரர்கள்பணி நாத!—எனையாளாய்!
பொருதசுரன் மாள புரியுமட லாள!—அருளாயோ?
தருவுலவு கானந் தனில்மறவர் மாதை—யணைதோளா!
கருமுகில்க டாவு கமழ்சிகியின் மேரில்—வருதேவே!

2329. எத்தனைநா ளிப்படிநான்—மெலிவேனோ?
இச்சையதாய் நற்சிகிமேல்—வருவாயே!
வித்தகனே! சத்ருசெயா!—வடிவேலா!
மிக்கவுலா சக்குமரா!—குகநாதா!

மத்தகனுர் நற்றுணைவா !—அருளாயோ ?
வச்சிரனுர் பெற்றமினள்—புணர்தோளா !
கொத்தலர்சூழ் நற்பொழில்வாழ்—சிகிமேராம்
கொட்டினில்வாழ் அத்விதனே !—அருளாயோ ?

2330. அவுணர்குல காலா ! அடியன்மிடி தீராய் !—குகராசா !
கவுரிதரு பாலா ! கருதுதமி ழாளா !—எனையாளாய் !
சவுரியவொள் வேலா ! தமியனிடம் வாராய் !—மயின்மீதே
பவுரிபுரி தாளா ! [பழமையுள சிகிமா—மலையாளா !]

2331. அன்னநடை மாது அந்தமிகு வேடர்—மகள்தோழா !
வன்னமயி லேறி வந்துவரம் யாவும்—உதவாயோ ?
சின்னமதி யோடு சென்றுவரு சூரை—எதிர்வேலா !
சொன்னமய மான துங்கமிகு தோகை—மலையாளா !

2332. மதியையணி சடையார்
மகிமையுள புதல்வா !—எனையாளாய் !
கதியைமிகு மயிலா !
கருணைபொழி முகிலே—க்ருபைதாராய் !
துதியைமிகு சரணு !
துடியசுரை யெதிரே—அடுவீரா !
பதியைமிகு சிகியாம்
பருமலையி னரசே !—தமிழ்தாராய் !

2333. அடியன் மீது தய வதனை நீசெய்குரு—பரவேளே !
கடிகொள் நீபமலர் கமழு மாலையணி—குகநாதா !
துடிகொள் சூரைவிழ துகளும் வேலைவிடு—செயவீரா !
படியின் மீதுவெகு பழமை யானசிகி—மலைநாதா !

2334. மதித ரித்திடு வரத ரற்புயர்—புதல்வோனே !
கதிப டைத்திடு கனம யிற்பரி—தனில்வாராய் !
துதிப டைத்திடு துரைம கட்கணி—புனைநாதா !
பதிமி குத்திடு பழமை யிற்சிகி—மலையாளா !

2335. பொருதிய சூரன் பொடிபட வேலை—எயும்வீரா !
கருதிய வாசை கனமொடு கூட—அருளாயோ ?
பருதியை நேரும் பளிரிடு மேனி—முருகோனே !
சுருதிகள் நாளும் துதிசிகி மேரில்—வளர்வோனே !

---

2329. கோட்டினில் என்பது கொட்டினில் எனச்சந்தம் நோக்கி முதல் குறுகியது.

2330. [ ] சந்தம் மாசபடுகிறது 'பழையசிகி மேராம்' எனப்படிக்கலாம்.

2336. வனசமலர் மீதில் வளரும்வடி வான—திருவேநேர்
புனமதனில் வாழும் புனிதமட மாது—புணர்தோளா!
சினவுலவு சூரன் சிதறவயி லேவு—செயவீரா!
கனகமலை நேரும் கமழ்சிகியின் மேரில்—வளர்தேவே!

2337. வஞ்ச னைபுரி சூரனை
வந்தெ திரட லேபுரி—அயிலாளா!
கஞ்ச னையெதி ராடிய
கஞ்கு லினிற மாயவன்—மருகோனே!
மிஞ்சி யநட மாடிய
மென்சி றைவிரி மாமயில்—மிசைவாராய்!
மஞ்சு கள்தவழ் சோலைகள்
மண்டி யசிகி மாமலை—முருகோனே!

2338. நடன மிட்டிடு நலமி குத்திடு—மயிலாளா!
கடக ரிக்கொரு கருணை யுற்றிடு—துணையாளா!
அடமி குத்திடும் அசுர னைச்சம—ரிடுவேலா!
தடமி குத்திடு தழைபொ ழிற்சிகி—மலையாளா!

2339. வானவர்கள் முதல்பணி நாயக!
வாசமிகு மிதழ்மலர் நீபமென்—மணிமார்பா!
கானம்வளர் குறமட மாதெனும்
காரிகையை மிகுமய லாலணை—முருகோனே!
தானவர்கள் குலமழி வாய்விட
தாமுலவும் அயில்தனை யேவிய—செயவீரா!
கூனமிடு முயர்பிறை தாவிய
கோடுலவு சிகிமலை மீதினில்—வளர்தேவே!

2340. கொடிய சூரொடு கொலைசெய் போர்புரி—அயிலாளா!
படியில் யாவரும் பரவு சீருள—இருதாளா!
அடியர் தீவினை அழிய வேபுரி—க்ருபையாளா!
முடிகள் சேர்சிகி முதிய மாமலை—வருதேவே!

2341. எதிர்வரு சூரன் இடறிட வேலை—எயும்நாதா!
நதியணி வேணி நலமிகு பாவை—குமரேசா!
விதிமுதல் வானர் மிகுபணி யேசெய்—இருதாளா!
மதிதவழ் சோலை வளர்சிகி மேரில்—வருதேவே!

2342. வந்தபிணி தீரவருள்!மஞ்சுதவழ் சோலைமலை—முருகோனே!
கந்தமிகு நீபமலர் கண்டம்நிறை வாகஅணி—வடிவேலா!
சொந்தமிகு வேடர்மகள் துங்கமிகு சோலைதனில்
—அணைதோளா!
சந்தமிகு கோடுநிறை தங்கமலை நேர்சிகியின்—மலைநாதா!

2343. வஞ்சிநிக ரிடையாள் வம்புபுனை முலையாள்—உமைபாலா!
நஞ்சிலகு மிடறர் நம்பர்தரு புதல்வா!—எனையாளாய்!
அஞ்சவரு மசுரோன் அன்றுவிழ வயிலே—வியவீரா!
மஞ்சுதவழ் பொழில்சூழ் மண்புகழ்செய் சிகிமா
[—மலையாளா!

2344. அற்புத மலர்வாழும் பொற்கொடி யதிரூபி
அற்புறு திருமார்பின்—விறல்சேகு
வெற்புறு கனதோள ரக்கனை யெதிராக
வெற்றிகொள் ரகுவீரன்—மருகோனே!
பொற்புயர் குறமாதை நற்பொழி லினில்மேவு
புட்பமென் நறுமாலை—புனைவோனே!
தற்பர னருள்பால! மெய்ச்சிகி மலைமேவு
சற்குரு பர!நாத!—முருகோனே!

2345. கருப்பை நேர்மொழி குறத்தி நாயகி
கருத்தி லாசைகொள்—மணவாளா!
செருக்கொள் சூருடன் மிகுத்த போரினில்
தெறித்து ஓடிட—அடுவீரா!
மருக்கொள் நீபமென் மலர்ச்சி மாலைகொள்
மணிப்பு யாசல!—முருகோனே!
திருப்பெண் வாழ்வுறு பொழிற்குள் நீடிய
திருச்சி காமலை—வருதேவே!

2346. ஒரும ருப்பினர் கரிமு கத்தனர்
உரிமை பெற்றசோ—தர!வேளே!
வருப டைக்கெலாம் அரசு பெற்றரா
வணனி றக்கவே—செயுமாயோன்
மருக! இப்பநின் அடியி லுற்றும்நான்
வளர்தல் சித்தம்நோ—குதலாமோ?
பெருமை பெற்றதோர் சிகிம லைக்குளே
ப்ரபல மிக்கவே—வருதேவே!

2347. பெலத்த சூருடன் படைக்கு நேரிடு
பிடித்த வேலெடு—சமராளா!
குலத்தில் நீடிய வனத்தில் வாழ்வுறு
குறப்பெ ணுளொடு—புணர்தோளா!
செலத்தி லேதுயில் துளப்பொன் மாலைகொள்
திருப்பெண் ணுயகர்—மருகோனே!
மலர்ச்சி யாகிய பொழிற்குள் நீடிய
மயிற்பொன் மாமலை—வருதேவே!

2348. வானு லாவிய சோதி சேர்மதி வாழ்ச டாதரர்—மகிழ்மானுள்
தேனு லாவிய கேச நாயகி தேவி மாதுமை—தருபாலா!
கானு லாவிய வேடு வோர்தரு காதல் நாயகி—புணர்தோளா!
பானு லாவிய தோகை மாமலை பாவ லா!க்ருபை—புரிவாயே!

2349. வருகமயின் மீது! வருகஅடி யேன்முன்!—முருகோனே!
திருமருவு மார்பர் திகழ்துளப மாயன்—மருகோனே!
உரிமையொடு நாளும் உனதடியன் வாழ—அருளாயோ?
மருவுலவு சோலை வளர்சிகியின் மேரு—வளர்தேவே!

2350. நடைப டைத்திடு மயிலி லுற்றவ!
நறும லர்ப்புனை—புயநாதா!
படைமி குத்திடு அசுர ரைப்பொரு
பனிரெ னக்கதிர்—மிகுவேலா!
விடைமி குத்திடு கயிலை நற்கிரி
விதுத ரித்தவர்—புகழ்நாதா!
இடையி லெட்குறை இலகு மைப்பொழில்
இலகு நற்சிகி—முருகோனே!

2351. எதிரவரு சூரனுடல்
இருபிளவ தாகஅயில்—விடுசூரா!
அதிகவடி வானவுமை
அருமையிடு பாலஎளி—யன்முன்வர்ராய்
துதிபரவு நாத!அருள்!
துரைமகளை மாலினெடு—புணர்தோளா!
மதிதவழு சோலை வளம்
மருவுசிகி மேரில்வரு—குருநாதா!

2352. சகல புவன இரட்சகா!
[தயவுபுரியக்ஷயாய்]—குமரேசா!
அகல மிலகு கடப்பனே!
அடியர் மிடியை யகற்றவே—வருவாயோ!
மகப தியுட மகட்குமா
மயிலி குறம களுக்குமே—மணவாளா!
சிகர மதுல கில்வைத்தல்போல்
திகழ்பொ ழில்கிறை சிகிப்பொன்மா—மலையாளா!

---

2352. [ ]சந்தம் சரியாயில்லை. 'தயவு புரியினி பட்சமாய்!' எனப் படிக்கலாம்.

2353. கயலை நேரும்விழி கமழு லாவுகுழல்—மடமாதுள்
சுயம தானகுல சுகமின் வேடர்மகள்—புணர்தோளா!
மயலி லாதவகை மனதி லேயுலவ—அருளாயோ!
புயல்கள் தாவுகன பொழில்கள் சூழ்சிகியின்—மலைநாதா?

2354. தும்புரு நாரத ரும்பரி வோடதிர்
துந்துமி யாவுமு ழங்கிட வேவரு—குருநாதா!
கும்புக ளாகிய அன்பர நேகர்கள்
கொண்டல்கள் போலொலி மண்டிடவேஅருள்
[—தருதேவே!
கிம்புரி சூடிய கொம்புகள் மீறிய
கிண்கிணென் மாமணி மிஞ்சுறு மோர்வலு—களிறுளா!
அம்புவி யோர்துதி கொண்டிடு கோடுயர்
அந்தம தாகிய குன்றையின் மாமலை—வளர்தேவே!

2355. வனசமலர் மீது
வளருமயின் மாது—புணர்தோளார்—மருகோனே!
அனநடையின் மாது
அழகுதிகழ் வேடர்—தருமாதுள்—மணவாளா!
அனவரத நாளும்
அடியனிட மாக—வருவாயோ—மயின்மீதே?
கனகசல மான
கமழ்பொழில்கள் சூழ்சி—கியின்மேரில்—வருதேவே!

2356. சினத்திடு சூரன் தெறித்திட ஓடி—அடுவேலா!
வனத்தினில் வாழும் மயிற்குற மாது—புணர்தோளா!
மனத்தினில் நோயை வருத்தியி லாது—அடுவாயே!
கனத்திடு சோலை கமழ்ச்சிகொள் தோகை—மலையாளா!

2357. மடந்தை மாரிலும் உயர்ந்த ரூபிதம்
வளர்ந்த வேடமின்—மணவாளா!
வடங்கொள் பூமுலை நுடங்கு நூலிடை
மணங்கொள் பூமகள்—மருகோனே!
அடஞ்செய் சூருடன் வளைந்த போர்விழ
அலங்கல் வேல்விடு—செயவீரா!
கடம்பின் மாலிகை புனைந்த வா!பொழில்
கமழ்ந்த தோகையின்—மலையாளா!

2358. தருவின்மகள் கொங்கை முதிரா
தருணகுற மங்கை யிருவோர்—புணர்தோளா!
மருவிலகு செங்க மலமேல்
வளர்வனிதை யின்பம் அயில்வோர்—மருகோனே!
கருணைபொழி கின்ற துரையே!
கமழ்மிகு கடம்ப மலர்மா—லிகைமார்பா!
குருமணி யிலங்கு முடிசேர்
குளிர்புன நிறைந்த சிகிமா—மலையாளா!

2359. என்மீதினி லேதய வேசெய
இந்நாளினி லேமயி லேறிமுன்—வருவாயே!
மின்னுள்குற நாயகி யாள்புணர்
விண்ணுடர்கள் யாவரு மேபணி—யிருதாளா!
பன்னுகம தேயணி வேணியர்
பண்ணேர்மொழி யாளுமை நாயகர்—அருள்பாலா!
ஒன்னார்படை தூள்பட வேல்விடு
உல்லாச! மராவணி வாய்!சிகி—மலையாளா!

2360. கருணை தங்கிய கடவுள் என்றன்முன்—வருவாயோ!
திருவு தங்கிய திகழ்க டம்பணி—முருகோனே!
திரும ணம்புரி வனச விஞ்சையர்—பணிதாளா!
தருமி குந்திடு தருசிகண் டியின்—மலையாளா!

2361. சங்கரி திரிபுரையாள்
சந்திர சடையுமையாள்—தருபாலா!
மங்கல குறமடமான்
வம்புகொள் தனமதிலே—புணர்தோளா!
பங்கய மலரயனர்
பண்பொடு பணிகுகனே!—எனையாளாய்!
பைங்கம லமின்உறைசீர்
பைம்பொழில் வளர்சிகிமா—மலையாளா!

2362. செருவேபுரி அசுரோனொடு திறல்வேல்கொடு—அடுவீரா!
மருநீபமென் மலர்மாலிகை மணிமார்பினில்—அணிவோனே!
அருமாமறை புகழ்நாயக! அருளேபுரி—குவைநாதா!
கருமாமுகில் தவழ்சோலைகள் கமழ்தோகையின்
[—மலையாளா!

---

2359. மரா-வெண்கடம்பு

2363. ஏடிலகு மலர்மே லேவளரும் அயனர்—பணிதாளா!
ஆடிவரு மயிலா! ஆதரவி னுடனே—எனையாளாய்!
நாடிவரும் அசுரோன் நாசமிக அயிலே—வியசூரா!
கோடிலகு சிகியாம்கோடில்வரு குமரா!—க்ருபைதாராய்!

2364. வனமுலவு வேடர் மகள்மருவு சீர்கொள்—புயநாதா!
அனவரத காலும் அடியனிடம் ஆவ—லுடன்வாராய்!
மனதில்வரு நோயை வலுவினெடுதீர—அருளாயோ?
கனகமலை நேரும் கமழ்சிகியின் மேரில்—வளர்நாதா!

2365. வாச மேவிய நீப மாலிகை மார்பி லேபுனை—முருகோனே!
தேச மீதினில் யாரு மேபணி சீர்சிகா மலை—வளர்வோனே!
நேச மாகிய வேட நாயகி நீடுகா வினில்—அணைதோளா!
நாச மாகிட சூர னுடெதிர் நாடி வேல்விடு—செயவீரா!

2366. சகல கிருபை புரிவாய்! நடன மயிலின் வருவாய்!
தமியன் வளர அருள்வாய்!—குமரேசா!
பகர அசுர னுடனே அதிக சினம துடனே
படைக ளதிர வடலே—புரிவேலா!
தகர மொழுகு குழலாள் அணிகொள் களப முலையாள்
தளர்வில் குறவர் மடவாள்—புணர்தோளா!
சிகர முலவு பொழில்சூழ் சிகியின் மலையி னரசே!
திகழு மிதழின் மலர்மா—லிகைமார்பா!

2367. ஆடிய பொன்மயிலா! ஆதர வுபுரிவாய்!—அமரேசா!
நாடிய நல்வரமே நான்மகி ழுஇனிநீ—அருளாயோ?
ஓடிவ ரும்அசுரோன் ஊறுப டஅயிலே—வியவீரா!
கோடில குசிகியாம் கோலமி குமலைமேல்—வருதேவே!

2368. அடம்புரி ராவணன் அடங்கிட வேசெயும்
—விறல்மாயோன்—மருகோனே!
குடம்புரை பூமுலை குறம்பயில் நாயகி
—மயலாலே—அணைதோளா!
நடம்புரி மாமயில் நகுந்திறல் வேலொடு
—எதிராவே—வருவாயே!
தடங்கொளும் சோலைகள் தருஞ்சிகி மாமலை
—தனிலேதான்—வருவேளே!

2369. மதியணி சடையார் மயனுள வுமையாள்—தருபாலா!
கதியுள மயிலா! கருணையி னுடனே—வருவாயே!
துதியுள சரணு! துரைமுரு கையனே!—எனையாளாய்!
அதிபதி! எனையாள்! அழகுள சிகிமா—மலையாளா!

2370. மருவு லாவிய [நீப]
மலரின் மாலிகை [மார்ப!]—எனையாளாய்!
கருணை நாயக! இதழார்
கமல மாமலர் அயனுர்—பணிதாளா!
பொருது சூருட னெதிரே
புனையும் வேல்கொடு சமரே—புரிவாயே!
கருது மாமறை புகழ்சீர்
கமழு மாமயில் மலைமேல்—வருதேவே!

2371. திடமுலவு சூர னுவி
சிதறிவிழ வேலை யேவு—திறலாளா!
நடனமிடு தோகை நீடு
நலமுலவு தோகை யா!முன்—வருவாயே!
படஅரவு சூடு வேணி
பரிவுமிகு தேவி யாள்தன்—மகவேளே!
தடமுடிகள் சூடு **தோகை**
**தருமலை**யின் வாச மான—முருகோனே!

2372. வஞ்சக மிடுசூரன் மண்டிய படைவீழ—அடுவீரா!
கஞ்சனை யெதிர்மாயன் கங்குலின் உடல்நாதன்—மருகேசா!
கொஞ்சிய மொழிபேசு குஞ்சரி மகிழ்தேவ!—மணவாளா!
நெஞ்சக மகிழ்வோடு நின்கிருபை புரி**தோகை—மலை**யோனே!

2373. கண்டனைய மொழியாள்
கங்குலுயர் குழலாள்—வடிவேசேர்
துண்டமதி நுதலாள்
துங்கமிகு குறமான்—மணவாளா!
அண்டர்பணி சரணு!
அன்பனென்முன் வருவாய்—மயின்மீதே!
கொண்டல்படி பொழில்சூழ்
**குன்றைமலை** யரசே!—எனையாளாய்!

2374. வாதுபுரி சூரன் மாமுடிகள் வீழ—விடுவேலா!
சூதுமிக ரான தூயமுலை வேடர்—மகள்தோழா!
தாதுலவுநீப தாமமணம் வீசு—மணிமார்பா!
மீதுபொழில் சூழும் மேன்மைமிகு **தோகை—மலை**நாதா!

---

2370. [ ] சந்தம் வேறு. 'இதழார்' 'புயவா!' எனமாற்றலாம்.

2375. குயிலாகிய மொழியாள் குறநாயகி கணவா! அருளாயோ?
மயிலாகிய பரியா! மலர்நீபமென் மலரே—புனைதோளா!
அயிலாலெதிர் வருசூ ரனையேபடை யொடுசா—டிடுவீரா!
ஒயிலா!குரு பரனே! உயர்தோகையின் மலைமேல்—வளர்
தேவே!

2376. கானகம் வாழ்குற நாயகி மேவிய
கானவ னே!க்ருபை—புரிவாயே!
சானகி யாள்தனை யேசிறை மீதுவை
தானவர் மாகுல—அரசான
ஆனவி ராவணன் நாசம தாகமுன்
ஆழிகொள் ராகவன்—மருகோனே!
வானமு லாவிய சீர்பொழில் மாமுகில்
மாசிகி யாமலை—முருகோனே!

2377. அருள்மறை மொழிவார் மணமலி மலரார்
அயன்மு தலிமையோர்—பணிதாளா
திருமகள் புணர்பூ தரஅரி மருகா!
செயமிகு அயிலா—யுதவேளே!
பொருதிய அசுரோன் முடியதி ரிடவே
புகழயில் தனையே—விடுசூரா!
தருமிகு பொழில்சூழ் சிகிமலை தனில்வாழ்
சரவண பவனே!—எனையாளாய்!

2378. கோலமயி லான கோகிலவு லாச—குறமானுள்
ஓலமிடு கானில் ஓசைவிழ ஆசை—கொளுநாதா!
வாலவடி வேலை மாகுருதி தோய—அடுவீரா!
ஞாலம்வளர் யாரும் நாடிவரு தோகை—மலைநாதா!

2379. அரக்கர் குலமழிய மிகுத்த படைமடிய
அடுத்த சமர்செய்விறல்—மருகோனே!
பரத்தை யடியவர்க ளிருக்க வருள்செய்பவ!
பருத்த சிறைமயிலில்—வருதேவே!
புரத்தி லுருவஅழல் எரிக்க நுதலில்விழி
புரித்த பரமர்தரு—மகவேளே!
சிரத்தில் முடிகள்மிகு மணத்த பொழில்கள்வளர்
சிகிக்கிரி யினில்வளர்—குகநாதா!

---

2378. மா குருதி தோய—மாவாகிய சூரன் குருதி தோயும்படி.

2380. கதியாகிய மயிலா!
கம்ழ்நீபமென் மலரே—அணிமார்பா!
நதியேயணி சடையார்
நளிர்தாதகி அணிவோர்—தருபாலா!
விதிமால்முத லிமையோர்
விரைவாகமுன் எதிரே—பணிதாளா!
நிதியாகிய முடிசேர்
நிறைதோகையின் மலைமேல்—வருதேவே!

2381. கொண்ட லினுமிகு குழலாள்
குங்கு மநிரையு முலையாள்—மடமானுள்
வண்டர் படிமலர் விழியாள்
வஞ்சி யிடையுமை யவள்பா—லக!வேளே!
அண்டர் பரவுதென் முருகா!
அன்ப னிடமயி லினில்வா—அமரேசா!
கொண்டல் பொழிலுல வியசீர்
குன்றை [மலை மே லியவா!]—அமரேசா!

2382. ஆடிய மயின்மேல் யான்மகிழ் பெறவே—வருவாயே!
பாடிய புலவா! பான்மதி வதனு!—எனையாளாய்!
தேடிய விமையோர் தேறிட அசுரோர்—குலகாலா!
கூடிய பொழில்சூழ் கோதறு சிகிமா—மலையோனே!

2383. எதிருற்றிடு சூரன் படைமுற்றிலும் வீழ
இகலைச்செயும் வீர—மிகுதோளா!
கதிபெற்றிடு தோகை நடனப்பரி மீது
கனமிக்கமுன் வருவாய்!—அமரேசா!
சுதியுற்றிடு சோதி அரிமொய்த்திடு நீப
சுபநற்சிக ழிகையே—புனைமார்பா!
அதிகப்பொழில் வளைசீர் முடியுற்றிடு சிகியாம்
அழகுக்கிரி மிசைவாழ்—முருகோனே!

2384. சங்கரி திரிபுரையாள் சம்புவின் மனையவளே—தருபாலா!
வங்கண மிகுகுறமான் வந்தனை யிருபுயனே!—[..............]
பங்கய மலரயனர் பண்பொடு பணிசரணு!—அமரேசா!
கொங்கவிர் மிகுபொழில்சூழ் குன்றையின் மலையரசே!—
[அருளாயோ?

---

2381. [ ] சந்தம் வேறு 'மலையுறை அழகா!' எனப்படிக்கலாம்.

2383. இப்பாட்டில் 'தான'வும் 'தனனு'வும் மாறி வருகின்றன; பொருத்த மாகவில்லை.

2384. [...] விடுபட்டது. 'முருகோனே!' என அமைக்கலாம்.

2385. மதியணி சடையார் மருவிய புயமான்—உமைமானுள்
துதிபெறு புதல்வா! துரைமுரு கையனே!—எனையாளாய்!
நிதிதனை யருள்வாய்! நினது[..........] யேன்—அதனாலே
கதிதனை யுதவாய்! கமழ்சிகி மலைமேல்—வருதேவே!

2386. பைங்கிளி நிகர்மொழியாள் பங்கய முகமடவார்—மயலாலே
இங்கித சரசமதா எங்கணு முழலுவதே—தவிராயோ?
சங்கித அரிபயில்வா சங்கிளர் இதழுளநீ—பமென்மார்பா!
கொங்கிணர் மிகுபொழில்சூழ் குன்றையின் மலையரசே!—
[அருளாயோ?]

2387. மணமலியு நீப மாலை
மணியுலவு மார்பி னுளும்—அணிவோனே!
குணமுலவு வேடர் மாது
குளிர்தினைகொள் கானு லாவ—மயலாவாய்!
பணஅரவு சூடு வானை
மருவுமுமை மாதி னுள்சொல்—புதல்வோனே!
தணமுலவு சோலை சூழும்
தருசிகியின் மேரில் வாச!—அருள்வாயே!

2388. விடமனைய கூர்நுனைவேல்
மிகுமசுரன் மீதினிலே—விடுசூரா!
படஅரவு மாமுடியார்
பழகிடுபொன் மேருடையார்—தருபாலா!
கடகரியின் மாமுகனுர்
கருணையுள சோதரனே!—எனையாளாய்!
குடநிகரும் பூமுடிசேர்
குளிர்சிகியின் மேரினில்வாழ்—குகநாதா!

2389. மறைப யிற்றிய சதுமு கத்தவன்
மணமி குத்திடு—மலர்வாழ்வோன்
சிறையி ருக்கமுன் மிகவும் வைத்திடு
திறல்ப டைத்திடும்—அயிலாளா!
பிறைநி கர்த்திடு மெயிர்மி குத்திடு
பிரப லக்கன—அசுரோன்மேல்
கறைமி குத்திடும் அயிலை விட்டவ!
கமழ்சி கிக்கிரி—வளர்தேவே!

---

2385. [...] விடுபட்டது. 'அடிமை' என இருக்கலாம்.

2390. கட்டிய மலர்நீபக் கத்திகை யணிமார்ப!—எனையாளாய்!
பட்டிட் அசுரோனைப் பட்சண மிடவேலை-எயும்வீரா! [ளா!
விட்டிடும் எழில்சூழும் விற்கொடி குறமானுள்—புணர்தோ
மட்டவிழ் மலர்சோலை வற்சிகி மலைமீது—வருதேவே!

2391. வாசமிகு நீப மாலைமலர் சூடு—மணிமார்பா!
நேசமிகு வேடர் நேரிழையை மேவு—புயவேளே!
தாசனென்னை யாள தாவிமயி லேறி—வருவாயே!
ஈசர்தரு பால! ஏர்சிகியின் மேரில்—வருதேவே!

2392. கானக மடந்தை மேவி
காதல்கொள் கடம்ப மாலை—புனைமார்பா!
வானக மடந்தை மாது
மாலொடு மணந்து மேவு—நயலோலா!
சானகி மடந்தை மால்முன்
தானவரை வென்ற மாயன்—மருகோனே!
[தேனலர்கொள் சோலை சூழும்
சீருலவு தோகை மேரில்]—வளர்தேவே!

2393. கானக மடமாது காதல்கொள் நயமான—மணவாளா!
வானக மடமாது வாசனை மலர்சூடு—மருகோனே!
சானகி சிறைதீர தானமர் புரிமாயோன்—மருகோனே!
பானல மதிதாவு பார்புகழ் சிகிமேரில்—வருதேவே!

2394. மனதில்வரு நோய்கள் தீர
மயிலில்வெகு ஆசை யாக—வருவாயே!
அனநடையு லாச மாது
அழகுதிகழ் வேட மானை—அணைதோளா!
தினகரனை நேரு மேனி
திகழுமுரு கேச! நாளும் —அருள்வாயே!
கனகமுடி மேவு தோகை
கனகிரியில் வாச மான—குகநாதா!

2395. மனமீதி லாசையுறும் அழகான சேலின்விழி
மடவார்க ளாசைதரு—மயலாலே
நினைவேவு மேயழிய விதியா? இந் நாளினென்முன்
நிறைதோகை மாமயிலில்—வருவாயே!
தினைமீறு காவில்வளர் வனமாது மேவியணை
திகழ்நீப வாசமலர்—அணிதோளா!
கனமேவு தோகைமலை தனில்வாழ்கு கா! குமர!
கருணாநி தே! கிருபை—புரிவாயே!

2292. [ ] சந்தம் வேறு.

2396. செருபு ரிந்திடு அவுணர் தங்குலஞ்
சிதற வென்றிடு—அயிலாளா!
மருநி றைந்திடு செயக டம்பணி
மரும! வந்தருள்—புரிவாயே!
உருவி லங்கிய வடிவு கொண்டவள்
உயர்பு னந்திரி—மகள்தோழா!
தருநி றைந்திடு பொழில்வ ளைந்திடு
தகுசி கண்டியின்—மலையாளா!

2397. சினத்த சூரொடு செருச்செய் தானைகள்—அழிபடவே
கனத்த போர்புரி கதித்த வேலணி—கரதலனே!
வனப்பெ ணுளொடு மகிழ்ச்சி யாகிட—மருவியவா!
அனத்தர் வானவ ரெவர்க்கு மேயருள்—சிகிமலையா!

2398. நடம்புரியு மயிலா! நலந்தரவென் முனம்நீ—வருவாயே!
கடம்பையணி புயனே! கரந்தையணி சடையார்-மக!வேளே!
குடந்தகுபொன் முலையாள் குறம்பயிலு மடமான்—மணவா
[ளா!
இடம்பரவி லுயர்சீர் இலங்குசிகி மலைமேல்—வளர்தேவே!

2399. இருவர்மட மாதர் இருபுறம தாக—மயில்மீதே
கருணையொடு பார்வை கடைவிழிக ளாலும்—அருளாயோ?
உரிமையொடு பூவில் ஒருவர்துணை யேதும்—உளதோதான்?
பெருமையுள சோலை பெருகுசிகி மேரில்—அரசாளா!

2400. செருப்பயிலும் சூர னுவி
செகுத்துவிட வேலை யேவு—செயவீரா!
மருப்பொலியு நீப மாலை
மணத்துவிடு மார்ப! தோகை—மயிலாளா!
கருப்பையினுள் வீழி டாது
கதித்ததல மீது வாழ—அருள்வாயோ?
தருப்பொலியும் சோலை மேவி
தழைத்துவிடு தோகை மேரில்—வருதேவே!

2401. செகநகன திந்தி திமிதியென நின்று
—நடமாடு—மயிலாளா!
நகவென விலங்கு நளினமலர் மங்கை
—நிகரான—வடிவேசேர்
சுககுற மடந்தை சுபமிக வணைந்த
—மயலாள!—எனையாளாய்!
குக்குமர வென்று குழறடியர் பங்கில்
—வருவாய்!சி—கியின்மேரா!

2402. ஆடிய மயின்மீதே யான்மகி ழிடவேதான்—வருவாயே!
நாடியப்படி சூர்மா நாசம திடவேலால்—எயும்வீரா!
பாடிய புலவோனே! பான்மதி முகலோலா!—கிர்பைதாராய்!
நீடிய பொழிலேசேர் நீள்சிகி மலைமீதே—வருதேவே!

2403. தாவிய படையோடும்
சாகிட அயிலேவி—அசுரோனை—அடுவீரா!
கூவிய மயிலாள!
கூறிடு தமிழ்யாவும்—மனதார—அருள்வாயே!
மேவிய குறமாது
மீதினி லதியாசை—மிகுலோல!—எனையாளாய்!
பூவிரி மிகுசோலை
பூணிடு சிகிமேரில்—வருதேவ!—அருளாயோ?

2404. தருணமிது ஆகையால் தயவுதனை நீசெய்வாய்!—அமரேசா!
கருணைபுரி வாய்!குகா! கமழுமலர் நீபமா—லிகைமார்பா!
பொருதசுரன் மாளவே புகழயிலை யேவியே—அடுவீரா!
அருணநிற மேனியாய்! அழகுதிகழ் தோகைமா—மலையா
[ளா!

2405. மந்திகுதி போடும் மண்டிவளர் கானில்—வளர்மானுள்
கொந்திலகு மாலை கொண்டபுய வேடர்—மகள்தோளா!
அந்திமதி சூடும் அண்டர்பணி தேவர்—தருபாலா!
தந்திதுணை யாள! தண்சிகியின் மேரில்—வளர்தேவே!

2406. தானவர் குலகாலா! தாமரை நிகர்தாளா!—எனையாளாய்!
வானக மடமானுள் மாமய லொடுதானே—புணர்தோளா!
நானமென் மலர்நீபா! நாரதர் முதலோரே—பணிதாளா!
கானக நிறைசீர்சேர் கார்தவழ் சிகியாமோர்—மலைநாதா!

2407. புடைத்தெழு தனத்தினள்
புனிற்றிள மறிக்குநிகர்—விழிமானுள்
கடைக்கணை மிரட்டிமுன்
கருத்தினை மயக்கியிடு—மயலாலே
அடைத்திடு தினைப்புனம்
அதிற்குற மடக்கொடியை—அணைதோளா!
தொடைப்படு புயத்தவ!
சொலற்கரு சிகிக்கிரியின்—அரசாளா!

2408. மதக்களிறை நேருமுகன்
மகிழ்ச்சிபெறு சீர்கொள்துணை—முருகேசா!
கதித்துவரு சூரனுட
கனத்தபடை யாவும்விழ—அடுவேலா!

மதிச்சடில ராசையுள
மகக்குமர! நீயதிகம்—அருளாயோ?
பதிக்குளுயர் தோகையெனும்
பணைத்தமலை மீதுவரும்—அமரேசா!

2409. மருவி லங்கிய தொடையினர்
வனச மண்டப மகளினுள்—புணர்தோளா!
பொருவி லங்கிய நிசிசராள்
புதைய வென்றிடு கணையினர்—மருகோனே!
கருவி லங்கிய பிறவிநோய்
கடவ தென்றதை விலகவே—அருளாயோ?
தருவி லங்கிய முடியின்மேல்
சசித வழ்ந்திடு சிகியின்மா—மலையாளா!

2410. கலசத்தன மகரக்குழை கமழ்மைக்குழல்—மடமானுள்
குலமிக்குள அருமைத்திரு குறநற்கொடி—புணர்தோளா!
பெலமுற்றிடும் அசுரைப்பொருப்ரபலத்திரு—முருகோனே!
கலபச்சிகி மயில்வித்தக! கனமெற்சிகி—மலையாளா!

2411. பருவமதி சூடும் பவளநிற வேணி—மக!வேளே!
திருமகளை மேவு செயவிறலி ஞசை—மருகோனே!
அருமறைகள் தேடி அலறியிடு பாத!—இனியோனே!
குருமுடிகொள் தோகை குலவு மலையாள!—எனையாளாய்!

2412. வாதுபுரி சூரன் மாளவயி லேவு—செயவீரா!
தாதுலவு நீப! தாரையணி மார்ப!—எனையாளாய்!
ஓதுமறை தேடும் ஓகைபுனை யாள!—மருகோனே!
மோதுபொழில் யாவும் மூடுசிகி மேரில்—வருதேவே!

2413. மடக்கொடி யாகிய குறக்கொடி யாள்தனை
வனத்தினில் மாலொடு—புணர்தோளா!
படர்ப்படு மாயையை அடர்த்திடு வாருயர்
பதத்தினில் வாழ்வுற—அருள்வோனே!
கடப்பமென் மாலிகை தரித்திடு சீர்புய!
கருப்பைவி ழாதருள்—புரிவாயே!
தடப்பொழில் சூழ்சிகி மலைக்கர சாகிய
தழைத்திடு தோகையின்—மலையாளா!

2414. விரைநீப மலர்சூடும் விகுவான புயநாத!—எனையாளாய்!
துரைமாது புணர்தோள! சுபமான சிகிமேரில்—வருதேவே!
திரைமீது துயில்மாயன் திறநாதன் மனதாசை-மருகோனே!
புரைமாவி னுடல்கீறு புகழ்கூரி னயிலாள!—அருளாயோ?

2415. ஆடிய மயில்மீது யான்மகி ழிடவேதான்—வருவாயே!
பாடிய*தமிழ்வாயா! பார்வதி யுமைமானுள்—தருபாலா!
சாடிய படையோடும் தான்வரு மசுரோனே—டடுவேலா!
கூடிய பொழிலேசூழ் கோலம துள [சிகிமா]—மலையாளா!

2416. மதுரித மாகிய குயின்மொழி நாயகி
வனமயி லாள்குற—மடமானுள்
பதுமமென் மாமலர் முகைமுலை மேவிய
பணையிரு சீர்புய—முருகோனே!
மதுமலர் நீபமன் னயவிதழ் மாலிகை
மணிபுனை மார்பினில்—அணிதோளா!
விதுதவழ் சோலையின் விருதுகள் பாடிடு
விரைசெறி தோகையின்—மலைநாதா!

2417. மதுவுவை யுண்டிட வெறிகொள் வண்டுடன்
மதுக ரம்பயில்—மலர்நீபா!
விதுவ ணிந்திடு சடையி லங்கிய
விமலர் தந்தருள்—புதல்வோனே!
சதுவி தங்கொளும் படைய டங்கலும்
சதிசெய் தன்றடல்—புரிவேலா!
முதிய அன்பர்கள் பணிசெ யுங்குக!
முருக! பொன்சிகி—மலையாளா!

2418. கலக மிஞ்சிடு அசுரர் தங்கிளை
கழிய அன்றடல்—புரிவோனே!
கலசம் ரெண்டுகொள் தனமி லங்கிய
கமல மங்கைதன்—மருகோனே!
அலகில் செந்தமிழ் பனுவல் வந்தருள்
அழகி லங்கிய—மயிலாளா!
சலச லென்றுதண் ணருவி வந்திழி
தழைசி கண்டியின்—வளர்தேவே!

2419. வனத்தில் வாழ்வுறும் ஒருத்தி யான்மயல்
வருத்த வேயதில்—அலைவோனே!
கனத்த கார்முகம் வளைத்து மாமகள்
கழுத்தில் மாலிகை—யணிமாயோன்

---

* 2415. 'பாடிய தமிழ்வாயா' என்றூர், திருஞான சம்பந்தராக முருகனே அவதரித்தா ரென்பதைக் கருதி. [ ] சந்தம் வேறு. 'தோகை' எனலாம்.

சினத்த தானவர் குலத்தை வேரறு
திகழ்ப்பொ ருழியர்—மருகோனே!
இனத்தின் மாமணி யிழைத்த கோடுகள்
இசைத்த சீர்சிகி—மலையாளா!

2420. அடியன் முன்புநீ அருள வின்றுதான்—வருவாயே!
குடியில் வந்தமான் குறவர் மங்கையே—புணர்தோளா!
கடிக டம்புசேர் கமழ்ந றும்புயா—சலவேளே!
வடிவி லங்குவேல் மகிப! தென்சிகா—மலையோனே!

2421. விடமுலவு நாகமணி விரையுலவு வேணிஅர—னிடமேசேர்
குடமுலவு பூமுலைமின் குமரிஅபி ராமியருள்—மக! வேளே!
இடருகளை யேயெனிடம் இனிஉலவி டாதுஎன்முன்—வரு
[வாயே!
புடவிதனில் வாழடியர் புகழுயர்சி காமலையின்—அரசாளா!

2422. குரவை குனித்து விளையாடும்
குமரி குறப்பெண் மடமானை—அணைதோளா!
அரவி னணைத்து யிலுமாயன்
அளவில் மனத்தி லதியாசை—மருகோனே!
உரசி லெதிர்த்து வருசூரன்
உடைய படைக்கு எதிர்போய்முன்—அடுவேலா!
புரவி மயிற்பொன் முதுகேறும்
புனித! சிகிக்கி ரியின்மீது—வருதேவே!

2423. மதுர மிஞ்சிய வசனி பெண்குற—மடமானாள்
அதிக அன்புடன் அணையும் அம்புய!—முருகோனே!
மதிய ணிந்திடு வரதர் தந்தருள்—பெருமானே!
கதிரி லங்கிய கனசி கண்டியின்—மலைநாதா!

2424. கொடிய பாவிஅசு ரனைமு னடியெதிர்
குலவு சேனைவிழ—அடுவேலா!
வடிவு லாவு குற மயிலி னுளமுனம்
மலர்கொள் மாலையணி—மணவாளா!
அடிய னேனையினி யுயர்வ தாகவெகு
அருள்செய் தாளநினை—குவைநீயே!
கடிய சோலைநிறை சிகியின் மேநில்வளர்
கமழு நீபமலர்—புனைதோளா!

2425. கறுத்த குழலாள் கனத்த முலையாள்—குறமானாள்
சிறுத்த விடையாள் செருக்கொள் விழியாள்-புணர்தோளா!
செறுத்த வசுரோன் தெறிக்க வடலே—புரிவேலா!
சுறுக்கி லருள்வாய்! சுபிட்ச முளதோகை—யின்மேலா!

2426. குயிலை நேருமொழி குறமி ஞளைமரு—வியதோளா!
மயிலி லேறியென்முன் வருவை நாயன்முன—மகிழ்வாயே!
அயிலை யேவியெதிர் அடுசெய் சூரனுடன்—இகல்வோனே!
ஒயிலு லாவுபுய! உயர்சி காமலையில்—முருகோனே!

2427. கனகாசல மதில்வாழ்வுறு கருணாநிதி—தனையேசேர்
தனமாதுமை க்ருபைநாயகி தருபாலக!—முருகோனே!
புனவேடுவர் மகளாசைகொள் புனைநீபமென்-மலர்யார்பா!
இனமாமணி முடிசேர்கன எழில்சேர்சிகி—மலைநாதா!

2428. அனநடை பயிலும் அழகிய குறமான்—அணைதோளா!
தினமடி யவர்கள் செகமுழு வதுமே—பணிதாளா!
மனவிச னமது மறுபட அருளே—புரிவாயே!
தனமலை நிகரும் தகுசிகி மலைமேல்—வருதேவே!

2429. ஆடிய மயிலா! யான்மகி ழிடவே—அருளாயோ?
தேடிய அடியார் சீர்நல மிகவே—வருவாயே!
பாடிய புலவோர் பாழ்வினை தனையே—அடுவாயே!
கூடிய பொழில்சேர் கோதகல் சிகிமா—மலையாளா!

2430. இந்திரன் முதலிமையோர்
இன்பம தொடுபணியே—புரிபாதா!
சந்திர சடைமுடியார்
தந்தரு ளியபுதல்வா!—எனையாளாய்!
புந்தியில் வரும்அடுநோய்
பொன்றிட மயில்மிசைநீ—வருவாயே!
மந்திகள் நிறைபொழிலே
மண்டிய சிகிமலைமேல்—வளர்தேவே!

2431. கானக மடமாது காதல்கொள் புயநாத!—எனையாளாய்!
மாநல மருள்தேவ! வாசமென் மலர்நீப—மணிமார்பா!
சானகி மணவாளர் தான்புகழ் மருகேச!—அருளாயோ?
வானவர் புகழ்தேவ! மாமிகு சிகிமேரில்—வருதேவே!

2432. மடமைதிகழ் வேடர் மயிலையணை தோள!—எனையாளாய்!
திடமுலவு சூரன் திறமழிய வேலை—எயும்வீரா!
குடமுலையின் மாது குமரிதரு பால!—அருளாயோ?
வடவரையை நேரும் மயின்மலையில் நாளும்—வளர்தேவே!

---

2428. தனமலை • பொன்மலை (இமயமலை).

2433. துடியாகிய வசுரோன் றுக்ளாடிய வயிலே—வியவீரா!
அடியேனிட மயின்மேல் அழகாய்வரு குவையே—முரு
[கோனே!
குடிவாழ்குற மயிலாள் குவிமாமுலை தனிலே-அணைதோளா!
வடிவாகிய மயிலாம் மலைமேல்வளர் குமரா!—எனையாளாய்!

2434. உருவின் மீறிய உலக நாயகி—தருபாலா!
மருவு லாவிய மலரின் நீபமென்—மணிமார்பா!
பொருது சூருடல் பிளவ தாகிட—எயும்வேலா!
கருணை நாயக! கமழ்சி காமலை—முருகோனே!

2435 நடஞ்செயு மயிலா! நலந்தனை யருள்வாய்!—அமரேசா!
அடஞ்செயு மசுரோன் அழிந்திட வயிலே—வியசூரா!
வடம்புனைமுலையாள் வனந்தனில் வளர்மான்-அணைதோளா!
தடங்கொளு பொழில்சேர் சகம்புகழ் சிகிமா—மலையாளா!

2436. வனசமலர் மாது வடிவுநிக ரான
—குறமானுள்—நலமாமே
புனமதனி லாசை பொரமருவு லீலை
—புரிநாதா!—வளமேசேர்
சனகிதனை மேவு சகமயிலை மேவு
—விறல்மாயோன்—மருகோனே!
மனதுமகிழ் வாக மயின்மலையில் நாளும்
—வளர்தேவே!—அருளாயோ?

2437. மதுரித மிகுந்த மதுமலர் புனைந்த—சடையார்பால்
விதுநிறை யிலங்கு விரைமுக மடந்தை—தருபாலா!
கதுமெனமுன் வந்த கனவசுரை வென்ற—அயிலாளா!
பதுமைவளர் கின்ற பளிரிடு சிகண்டி—மலையாளா!

2438. கருணை மிகுத்த கடவு ளெனக்கு—அருளாயோ?
அருண நிறத்த அழகு படைத்த முருகோனே?
திருமறை யுற்ற திறனுள பத்தர்—பணிபாதா!
மருவு மிகுத்த வளர்சிகி பொற்கி—ரியின்நாதா!

2439. கடம்பையணி புயனே! கரந்தையணி சடையார்—அருள்
[பாலா!
நடம்புரியு மயிலா! நலங்குலவு மடியே—னிடம்வாராய்!
அடம்புரியு மசுரோன் அடுங்களம தனிலே—எயும்வீரா!
தடங்குலவு சிசியாம் தருங்கிரியில் வளர்வாய்!-எனையாளாய்!

2440. வனசமலர் மீது வளருதிரு மாது—தனையேசேர்
கனமுலவு மாயன் கரியநிற மால்தன்—மருகோனே!
புனம்வளரு மாது புணருபுய நாத!—எனையாளாய்!
தனமலையை நேரு தகுசிகியின் **மேரில்**—வருதேவே!

2441. நறுமிகு கடம்ப மலர்புனை உயர்ந்த
நலமிகு சிறந்த—புயநாதா!
வறுமைதனை யன்பர் இடமகல இன்று
வரமருள் நிறைந்த—முருகேசா!
மறுவெகு அடஞ்செய் அவுணர்க ளடங்க
வலுசமர்செய் கின்ற—அமரேசா!
சிறுகணுயர் தும்பி [துளையுளே சுமந்த]
**சிகிமலையில்** வந்த—குகவேளே!

2442. செருவேபுரி திறலாகிய—அசுரோன்மேல்
பொருவேல்விடு புகழ்நாயக!—எனையாளாய்!
அருமாமறை யடியார்பணி—இருதாளா!
திருமேவிய **சிகிமாமலை**—முருகோனே!

2443. கருத்தி லாசைகொள் கனத்த பூமலை—மடமானுள்
திருப்பெ ணுகிய செழித்த வேடமின்—அணைதோளா!
மருக்கொள் நீபமென் மலர்ப்பு யாசல!—முருகோனே!
தருக்கள் சூழ்பொழில் தழைத்த **தோகையின்-மலை**யாளா!

2444. வருவாயொரு மயின்மீதினில்—முருகோனே!
கருமேனியின் கனமாலுட—மருகோனே!
அருமாமறை அடியார்பணி—புரிதாளா!
திருவேமிகு **சிகிமாமலை**—வளர்தேவே!

2445. மதியணி சடையார் மருவிய உமையாள்—தருபாலா!
கதியுடன் வருசூர் கமரிட வயிலே—வியவீரா!
துதிதிரு டியமால் தனிமரு கையனே!—எனையாளாய்!
விதிவயல் மிகுசீர் வளமிகு **சிகிமா—மலை**யாளா!

2446. மருவு லாவுகன மலரில் நீபமணி—புயநாதா!
செருசெய் சூரனுடல் சிதற வேலையெதிர்—எயும்வீரா!
ஒருபொன் மாமயிலில் உலவி யேறிவரு—முருகோனே!
திருமி னுள்மருக! **சிகியின் மாமலையின்**—வருதேவே!

2447. எதிரிடு சூர னிடரிட வேலை—யெயும்வீரா!
கதியுள தோகை கனமயி லேறி—வருவாயே!
மதிபுனை ஈசர் மகிழ்ந்து பால!—எனையாளாய்!
துதிபெறு **தோகை துகூள்மலை** மேவு—முருகோனே!

2441. [ ] விளங்கவில்லை. ‘துணைவ! உமை மைந்த!’ என இருக்கலாம்.

2448. வருசூருடல் மடிவாய்விட—எயும்நாதா!
கருமாமுகில் கருமேனியர்—மருகோனே!
ஒருமாமயி லுடனேயென்முன்—வருவாயே!
திருவேமிகு சிகிமாமலை—முருகோனே!

2449. கானக மாது காதல தாக—அணைதோளா!
வானவர் தேடு மாமல ரான—இருதாளா!
பானல சோமன் பாவிய வேணி—புதல்வோனே!
தேனலர் சோலை சீர்மிகு தோகை—மலையாளா!

2450. வனசமலர் மாது மருவுபுய மாயன்—மருகோனே!
புனமதனில் வாழும் புளகமிகு தேவி—புணர்தோளா!
அனவரத காலும் அடியனிடம் நாளும்—வருவாயே!
கனகமலை நேரு கனசிகியின் மேரில்—வருதேவே!

2451. நறுமாமல ராகிய
நலநீபமென் மாலிகை—புனைமார்பா!
சிறுசீரிடை வேடமின்
தெளிவாகிய நாயகி—புணர்தோளா!
மறுவேயுள சூருடன்
வலுபோர்புரி கூரயின்—முருகோனே!
உறுசீர்பொழில் சூழ்தரு
உயர்தோகையின் மாமலை—வருதேவே!

2452. வாசமிகு நீப மாலையணி மார்ப!—எனையாளாய்!
நேசமிகு வேடர் சேரிழையை நாளும்—அணைதோளா!
நாசமிக மாவை நாடியயி லேவு—செயவீரா!
தேசர்பணி தோகை சீர்மலையில் நாளும்—வளர்தேவே!

2453. வனச மண்டப மகள்ம ணந்திடு
—புயமாயோன்—மருகோனே!
அனாக டம்பயில் அழகி லங்கிய
—குறமானுள்—புணர்தோளா!
சினமி குந்திடு திறமி குந்திடு
—அசுரோனே—டிகல்வேலா!
கனமி குந்திடு கமழ்சி கண்டியின்
—மலைமீதே—வருதேவே!

2454. முத்து நகைமாது மொய்த்தகுழல் வேடர்—மகளாள்மேல்
மெத்தமய லாக விர்த்தியுடன் நாளும்—அணைதோளா!
பத்தர்துணை யாள! பத்மமல ரான—இருதாளா!
சித்தர்பணி யேசெய் சித்ரசிகி மேரில்—வருதேவே!

2455. நான்வ ருத்தமுற நீக ருத்திஞெடு
நாடி மைச்சிகியில்—வாராதே
ஏன்வ ரத்தைஅரு ளாதி ருப்பதது
ஏது மைக்குறமின்—மயலாலோ ?
பான்மி குத்தபிறை சூடு நிர்த்தர்தரு
பால கக்குமர !—குருநாதா !
வான டர்த்துவளர் சோலை சுற்றுசிகி
மாம லைக்கரசு—புரிதேவே !

2456. வனமயிலை நாளு மருவுபுய நாத !—எனையாளாய் !
சினமுலவு சூரன் சிதறவயி லேவு—செயவீரா !
அனநடையின் மாது அழகுவுமை தேவி—தருபாலா !
கனகமலை யான கனமுலவு தோகை—மலைநாதா !

2457. மகபதி யாசை மகள்தனை மேவு—புயநாதா !
செகமதில் வாழும் சிகிமலை வாழு—முருகோனே !
குக!கும ரேச ! குருபர நாத !—அருளாயோ ?
அகமகி ழாசை அருள்புரி தேவர்—அரசாளா !

2458. நடன மிட்டிடு நலமி குத்திடு—மயிலாளா !
மடம யிற்குற மயிலை யற்பொடு—புணர்தோளா !
திடமி குத்திடு திருவ யிற்குரு—பரவேளே !
வடவ ரைக்கெதிர் வளரு மெய்ச்சிகி—மலைநாதா !

2459. வஞ்ச ளுகிய மிஞ்சு சூருடல்
மண்ட வேலினை—எயும்வீரா !
தஞ்சம் வேறிலை ! வந்து தானருள் !
சங்க நாவல !—எனையாளாய் !
அஞ்ச ராவணன் மங்க வேசெயும்
அண்டர் நாயகர்—தருபாலா !
மஞ்சு தாவிய குன்றை மாமலை
வந்த நாயக !—அருளாயோ ?

2460. கருத்தி லாசையுடன் கனத்த மாமயிலில்—வருவாயே !
செருச்செய் சூரனுடன் திறத்த போர்புரியும்—மயிலாளா !
மருக்கொள் நீபமலர் மணிப்பு யாசலமு—ருக!வேளே !
தருக்கொள் சோலைமிகு தழைத்த தோகைமலை-வளர்தேவே!

2461. வஞ்ச னுகிய சூருடல்
மண்ட வேலினை யேவிய—செயவீரா !
பிஞ்சு மாமதி சூடிய
பிஞ்ஞ காதிபர் பாலக !—அருளாயோ ?

கொஞ்சு சீர்கிளி வேடமின்
கொண்ட காதல ! நாதனே !—எனையாளாய் !
மஞ்சு தாவிய தோகைமா
மன்றல் மேரினில் நாளுமே—வருதேவே !

2462. வாடிய பயிர்போலே நான்மெலி குவதாமோ ?
மாமழை பெய்தல்போலே—அருளாயோ ?
ஆடிய மயில்மேலே தேவிய ருடனேதான்
யான்மகி ழிடவேதான்—வருவாயே !
கூடிய முனிவோர்மேல் வானவ ரடியாரே
கூறிய புகழாளா !—எனையாளாய் !
சூடிய மலர்மார்பா ! நீடிய பொழிலேசூழ்
தோகையின் மலைமீதே—வருதேவே !

2463. பஞ்ச பாதக மிடுசூரன்
பந்து சூழ்வரு படையோடும்—அடுவீரா !
அஞ்ச ராவண னுடனேபோர்
அண்டி யேவெலும் விறல்மாயன்—மருகோனே !
தஞ்சம் வேறிலை யருளாயோ ?
சந்த்ர வேணியர் தருபாலா !—அருளாயோ ?
நெஞ்ச நோய்தனை யருளாயோ ?
வம்பு சோலைகள் நிறைதோகை—மலையாளா !

2464. சாடிய படையோடு தான்வரு மசுரோனே—டெயும்வேலா !
ஆடிய மயின்மீதே யான்மகி ழிடவேதான்—வருவாயே !
பாடிய தமிழாளா ! பான்மதி புனைவோர்பா—லக ! வேளே !
நீடிய பொழி லேசூழ் நீள்சிகி மலைமீதே—வளர்தேவே !

2465. வருத்த மானவெனை மகிழ்ச்சி யாகவரம்—உதவாயோ ?
கருத்தி லாசையுடன் கனத்த தோகைதனில்—வருவாயே !
ஒருத்த ராதரவு உருக்கமாகவிலை—அறியாயோ ?
திருத்த மானகன சிகிப்பொன் மேரில்வரு—குகநாதா !

2466. அனியாய லோபர் அவர்பாலி லோடி—மெலிவாமோ ?
கனிவான வாயள் கமழ்சோலை மாது—புணர்தோளா !
இனிதான பாடல் எளியேன்மு னுக—அருளாயோ ?
பனிமேவு சோலை படர்தோகை மேரில்—வளர்தேவே !

2467. மதிசூடிய சடையார் மழுமானணி கரனர்—அருள்பாலா!
துதியேபுரி சரணு! துரைநாயகி கணவா!—எனையாளாய்!
விதிமால்பணி முதலே! விரைநீபமென் மணமா—லிகை
[மார்பா!
கதிமாமயின் முருகா! கமழ்தோகையின் மலையா!—அரு
[ளாயோ?

2468. கருத்திலா சையுடன் கவர்ச்சி யானவன
—மடமானள்—புணர்தோளா!
செருச்செய் சூரனுடன் திறத்த போர்புரியு
—மயில்வேலா!—எனையாளாய்!
வருத்த மானவெனை மகிழ்ச்சி யாகவரம்
—உதவாயோ?—குகநாதா!
திருத்த மானகன சிகிப்பொன் மேருகிரி
—முருகோனே!—அருளாயோ?

2469. கானக மாது காதல்க ளாக—அணைதோளா!
வானகம் வாழும் வானவர் நாளும்—பணிதாளா!
சானகி மாது தான்மகிழ் மாயன்—மருகோனே!
தானவர் கால! தாமிகு தோகை—மலையாளா!

2470. எனது மனது போல
இசைவின் வரமும் நீயும்—அருளாயோ?
அனவ ரதமு நாயன்
அவதி யதனில் மூழ்க—விதியாமோ?
சினவ சூரர்கள் கால!
திகழு மயில்கொள் பாணி—முருகோனே!
கனக மலையை நேரும்
கமழ்சி கிகிரி வாச—அமரேசா!

2471. வாதுபுரி சூரனுடன் மாளவயி லேவியடு—சமராளா!
தாதுலவு நீபமலர் தானணியு மார்ப! இனம்-எனையாளாய்!
போதுலவு நான்முகன்மெய் போதமுனி வோரிமையர்—
[பணிதாளா!
மாதுகண வா! க்ருபை செய் வாய்! சிகர மேவுசிகி-மலைநாதா!

2472. சிந்தா குலம்தீர சிந்தா வரம்நீசெய்—குவை! நாதா!
மந்தா கினிசூடும் மங்கா மதிவேணி—தருபாலா!
கொந்தார் மலர்நீப! குந்தா! அடியேன்முன்—வருவாயே!
நந்தா வளமேவும் நன்றுகிய தோகை—மலைவாசா!

2472. குந்தா! குந்தம்: ஒரு படைக்கருவி. 436, 437, 465-ஆம் பாடல் குறிப்பைப் பார்க்க.

2473. மதிசூ டியசடை அரனு ருளிய
மலர்நீ பமணியு—மணிமார்பா!
கதியா கியமயில் மிசையே றியகுக!
கணநா யக! க்ருபை—புரிவாயே!
விதிமால் முனிவர்கள் முதலா யடியர்கள்
விரைவாய் நிதநிதம்—பணிபாதா!
அதியா சையினுடன் வருவாய்! குருபர!
அழகா கியசிகி—மலையாளா!

2474. வாசமே வியநீப மாலைசூ டியமார்ப!—எனையாளாய்!
நேசவே டமினுளை நீடுகா னகமீது—புணர்தோளா!
தாசநான் வளர்வாக தானிநாள் முனமாக—வருவாயே!
தேசசே யுளதேவ தேவ!தோ கையின்மேரில்-வளர்நாதா!

2475. முத்துநிகர் நகையாள் மொய்த்தகன குழலாள்-குறமானுள்
வித்துரும விதழாள் விர்த்தியுள வனமீ—தணைதோளா!
பத்தர்பணி சரணு! பத்மமலர் வதனு!—எனையாளாய்!
சித்ரமிகு முடிசேர் சித்தியுள சிகிமா—மலைநாதா!

2476. வஞ்சக மனசூருடல்
மண்டிட வயிலேவிய—செயவீரா!
அஞ்சன வுடல்மாயவன்
அன்புறு கனமாகிய—மருகோனே!
கொஞ்சிய கிளிவேடமின்
கொண்டிடு மயல்நாயக!—க்ருபைதாராய்!
மஞ்சுகள் தவழ்சோலைகள்
மண்டிய சிகிமேரினில்—வருதேவே!

2477. வடிவாகிய நலமார் மறமான்மரு வியவா!—எனையாளாய்!
மிடியாவையு மணுகா விரைவாய்மயில் மிசையே-வருவாயே!
அடியார்முத லிமையோர் அனைவோர்களு நிதமே—பணி
[தாளா!
கடியார்பொழில் நிறைசீர் [சிகிகமழ்மாமலை]-வளர்தேவே!

2478. கனகமலை முலையாள் கமழுவன மயிலாள்—புணர்தோளா!
வனசமலர் மயிலாள் மருவுபுய விறலார்—மருகோனே!
தினகரமெய் வடிவா! திகழுமயின் மிசையே—வருவாயே!
உனதடிய னெனையாள் உயர்சிகியின் மலைமேல்—வளர்
[தேவே!

---

2477. [ ] சந்தம் பொருந்தவில்லை. 'கவினுர்சிகி மலைமேல்' எனப் படிக்கலாம்.

2479. கந்தமிகு நீபமாலை
கண்டமது சூழ நாளு—மணிமார்பா!
அந்தமிகு வானு ளோர்கள்
அன்பினுடன் ஆசை யாக—நிறைதேவே!
சந்தமிகு பாடல் பாட
தன்கிருபை யாவு மேசெய்—குவைநாதா!
குந்தமிகு பாணி சீர்கொள்
குன்றைமலை மேவி வாழும்—முருகோனே!

2480. நீடிய வனநாயகி நேரிழை தனைமேவிய—புயநாதா!
கூடிய படைமாவுடல் கூறிடு கதிர்வேலணி—முருகோனே!
ஆடிய மயில்வாகன! யான்மகி ழிடநீயென்முன்-வருவாயே!
பாடிய கனபாவல! பார்புகழ் சிகிமேரினில்—வளர்தேவே!

2481. எதிரவரு சூர னிட றவழி லேவு—செயவீரா!
மதியையணி வேணி மருவுமுமை மாது—தருபாலா!
அதிகவர நீசெய்! அழகுதிகழ் வேடர்—மகள்தோழா!
கதியுலவு தோகை கமழ்சிகியின் மேரில்—வருதேவே!

2482. வனம்வளரு மாது மேவி
மருவுபுய நாத! நாய—னிடம்வாராய்!
பனகமுடி வேணி யீசர்
பரமர்கரு ணைநி தேசொல்—புதல்வோனே!
மனதில்வரு நோய்கள் தீர
மகிழ்நெடு தோகை மீதில்—வருவாயே!
கனகமலை நேர தான
கமழ்சிகியின் மேரில் வாழும்—முருகோனே!

2483. கொந்தலர்கொள் மாலை கொண்டகுழன் மாது-குறமானுள்
தந்தமய லோடு தங்கவணை மீது—புணர்தோளா!
சொந்தவடி யேனை துங்கமிகு வேண—அருள்தாராய்!
அந்தமிகு தோகை யந்தமலை மீது—வருதேவே!

2484. காலன் வருமுனே காண வெனின்முனே—வருவாயே!
சீல மிகுகுகா! தேவர் பணிபதா!—எனையாளாய்!
வால வடிவுளோய்! வாழ்வின் மறமினுள்—புணர்தோளா!
வேல! அருள்செய்வாய்! மீறு சிகியின்மா—மலையாளா!

2485. வெற்றிபுனை யயிலால் மிக்கதள வசுரோ—னுடனேதான்
செற்றுவிழ வடுவோய்! சித்ரமயில் முருகா!-எனையாளாய்!
நற்றமிழை யருள்வாய்! நத்தருட மருகா!--செகநாதா!
உற்றடியர் முதலே உத்தியருள் சிகிமா—மலையாளா!

2486. அஞ்சிவரு சூர ஞேடு
அண்டியடலேசெய் கூரின்—அயிலாளா!
வஞ்சிகுற மாதி னேடு
வம்புமுலை மீது லீலை—புரிலோலா!
கொஞ்சுகிளி யான தேவி
கொன்றையணி வேணி நாதர்—தருபாலா!
மஞ்சுதவழ் நீடு சோலை
மண்டுசிகி மேரில் வாச!—அருளாயோ?

2487. ஆடிய மயிலா! யான்மகி ழிடவே—அருளாயோ?
பாடிய வடியேன் பாரினி லுயர்வாய்—அருளாயோ?
வாடிய விடையாள் மாகுற மயிலாள்—புணர்தோளா!
கூடிய பொழில்சேர் கூறரு சிகிமா—மலையாளா!

2488. சானகிம ணாள ரான
தார்புனையு மாய ராசை—மருகோனே!
வானவர்கள் ராசன் மேவு
மாதுசசி யார்சொல் தேவி—புணர்தோளா!
ஞானமுனி வோர்கள் தேடு
நான்மறைகொள் பாத னே!நல்—லருள்தாராய்!
தேனலர்கள் சோலை சூழும்
சீர்சிகியின் மேரில் வாழும்—முருகோனே!

2489. சமராடிய தகுவேலவ!—அருளாயோ?
குமரா!நடை கொளுமாமயில்—முருகோனே!
அமரோர்பணி அழகா!க்ருபை—புரிவாயே!
அமர்சோலையின் அருள்தோகையின்—மலையாளா!

2490. வஞ்சமிகு சூர னாவி
மண்டுசமர் மீது போக—அடுவோனே!
கஞ்சமலர் வாச மாது
கங்குனிற மான மாயன்—மருகோனே!
தஞ்சமரு ளேசெய் நீடு
தங்கமலை நேர்சி காமென்—மலையாளா!
நஞ்சரவு சூடு வேணி
நம்பர்தரு பால கா!நல்—லருளாயோ?

---

2488. சசியார் சொல் தேவி : தேவயானை என்று கொள்க.

2491. காத லாகிய வேட நாயகி
காம நாயக!—எனையாளாய்!
சீத மாமதி சூடு வேணியர்
தேடு பாலக!—அருளாயோ?
நாத னே!உனை யேய லாதொரு
நாதி தானிலை—அறியாயோ?
போத மேவிய ஞான நாயக
பூப! தோகையின்—மலையாளா!

2492. சினத்த ராவணன் மீதினி லேகன
திறத்த கூர்கணை யேவிய ராகவன்—மருகோனே!
மனத்து லாவிய நோயக லோடிட
மயிற்கு கா!அடி யேனிட மேயினி—வருவாயே!
தனத்தி னல்மய லேபுரி வேடமின்
தனக்கு நாயக னே!க்ருபை வாரியே!—அருளாயோ?
இனத்து மாமணி சேர்முடி சூழ்தரு
எழிற்சி காமலை மீதினில் வாழ்வுறு—குருநாதா!

2493. நடனமிடு தோகை நலமயிலி லேறி—வருவாயே!
சினமுலவு சூரன் திறமகல வேலை—விடுவீரா!
அனநடையின் மாது அழகுதிகழ் வேடர்—மகள்தோழா!
கனகமலை நேரு கமழ்சிகியின் மீது—வருதேவே!

2494. கறையாகிய மிடறுர் கமழ்தாதகி முடியார்—தருபாலா!
பிறையாகிய நுதலாள் பிடியாகிய இடையாள்—குறமானுள்
இறையாகிய வரசே! இணையார்தகு மயிலா!—அருளாயோ!
நறையாகிய பொழில்சேர் நலமேவிய சிகிமா—மலையாளா!

2495. கனகமலை யான தோகை
கமழ்கிரியில் வாச மான—முருகோனே!
அனநடையின் மாது தேவி
அழகுமையி னுசை யான—புதல்வோனே!
மனதுவரு நோய்கள் தீர
வரமுதவி யேசெய்! தேவர்—பணிதாளா!
புனமகளை மேவு மார்ப!
புனிதமிகு நாத! யாவும்—அருளாயோ?

2496. கலக லெனச்ச தங்கை யாடிட
கமழ்கொள் கடப்ப லர்ந்த மாலிகை—யுடன்வராய்!
வலுவுடன் வெற்றி கொண்ட மாவுடல்
மடிய அடற்செய் கின்ற வேலவ!—எனையாளாய்!

அலமுறு சக்ர வங்கை வாமன
 அழகு படைத்த விண்டு ஆசைகொள்—மருகோனே!
மலர்நனை மைப்பொழில் சிந்து தோகையின்
 மலைவளர் மெய்க்குக கந்த சாமி!நின்—அருளாயோ?

2497. சரச மிகுத்த தேவி
 நருவன முற்ற மாது—புணர்தோளா!
அரனருள் பெற்ற தேவ!
 அழகு படைத்த தோகை—மலையாளா!
விரசு மிகுத்த மாவை
 மிகுபெல முற்று வேல்கொ—டெயும்வீரா!
வரமடி யற்கு நீசெய்!
 மகிப!சி கிக்கு நாத!—எனையாளாய்!

2498. எனதுதுயர் தீர எழில்சிகியி னேறி—வருவாயே!
வனம்வளரும் வேடர் மகளுமைய லோடு—புணர்தோளா!
சினவவுணர் கால! செகமுழுது மாளு—முருகோனே!
கனகமலை நேரும் கமழ்சிகியின் மேவு—குகநாதா!

2499. கந்தமிகு நீப மாலை
 கண்டமதில் நாளு மேய—ணியும்நாதா!
சந்தமிகு பாடல் பாட
 தந்தருள்வை நீத மான—முருகோனே!
கொந்தலர்கொள் காவில் வாழ்வு
 கொண்டகுற மானை மேவு—குகநாதா!
அந்தரவி ணோர்கள் சூழும்
 அன்ப!சிகி மேரு லாவும்—அமரேசா!

2500. அடல்புரி சூரன் அலறிட வேலை—எயும்வீரா!
கடல்தனி லேமுன் கனதுயி லேசெய்—திறல்மாயோன்
மடமயி லாள்பொன் மகள்புணர் மால்தன்—மருகோனே!
திடமுடி சேரும் சிகிமலை மீது—வளர்தேவே!

2501. வந்துவரம் நீசெய் வண்டுலவு நீப—மலர்மார்பா!
செந்துவர்செய் வாயள் சிந்துநிகர் பார்வை—மடமானுள்
கொந்துலவு மாலை கொங்கை குறமாது—புணர்தோளா!
நந்துபொழில் சேரும் நன்றுசிகி மேவில்—வளர்தேவே!

---

2496. இப்பாட்டில் சந்தங்கள் இடையிடையே சிறிது மாறுகின்றன.

2501. சிந்துநிகர் பார்வை: கடலலையென இமைக்கும் நோக்கம்.

2502. மதிதவழ் கின்ற சூலடிப் பலவின்
வுரியளி யுந்து தீமணச் சுலைகள்—ரசமோடி
நதிதவழ் சங்கு தாமரைக் கொடியின்
நகைமணி சிந்து சீர்வளப் பணைகள்—விளைவேறும்
பதிநிறை குன்றை மாமலைக் கதிப!
பனிமொழி மங்கை யாள்குறக் கொடிதன்-மணவாளா!
கதிதரு துங்க பாதபத் மீகுக!
கருணைபொழிந்து வாழ்வெனக் கருள்வை!—குமரேசா!

2503. மதிதவழ் சோலை மகள்தனை மேவு—குகநாதா!
கதியுள தோகை கமழ்மயி லேறு—முருகோனே!
விதிபர மேசர் வெகுமுனி வோர்கள்—துதிதேவே!
பதிபுகழ் தோகை பணைமலை வாழும்—அமரேசா!

2504. அனநடை பயின்ற வேட நாயகி
அழகுயரு கின்ற தேவி யோடணை—புயவேளே!
மனதுதுயர் கின்ற நோயை யேதவிர்
வனசமலர் மிஞ்சு பாத னே!க்ருபை—புரிவாயே!
தினகரமி லங்கு சோதி மேனிய!
திறமிகவு ணன்றன் மேனி சீறிடும்—அயிலாளா!
உனதடிய னின்று வாழ வேயருள்
உயர்பொழி லிலங்கு தோகை மாமலை—முருகோனே!

2505. உனது பாத மிரண்டை
உரிமை யாக நினைந்து—பணிவேனே!
எனது பாவ மகன்று
விடவு மாக சிகண்டி—தனில்வாராய்!
சினவ ராவு புனைந்த
திகழ்ச டாதரர் தந்த—புதல்வோனே!
மனது நோய்தவிர் கந்த!
வளமை சேருயர் குன்றை—மலையாளா!

2506. கருணை தங்கிய கமல மங்கைதன்—மருகோனே!
மரும ணந்திடு மலர ணிந்திடு—புயவேளே!
திருவி லங்கிய திகழ்ச வுந்தரி—தருபாலா!
அருள்க னிந்தருள் அழகு யர்ந்திடு—சிகிமேரா!

2507. வாதுபுரி சூரன் மாளவயி லேவு—முருகோனே!
சூதுமிகு மார்பின் தோகைகுற மாது—புணர்தோளா!
ஆதரவு நீசெய் ஆறுமுக! வேல!—எனையாளாய்!
தாதவிழு சோலை தானுலவு தோகை—மலையாளா!

---

2507. சூது மிகுமார்பு: சூதாடு கருவியான வட்டினை வென்ற கொங்கை.

2508. வனசமலர் மீது வளருமட மாது—மருகோனே!
பனகமணி வேணி பனிமதிகொள் வேணி—தருபாலா!
மனதுவரு நோயை மருவிடவி டாமல்—அருள்வாயே!
கனகமலை யான கமழ்சிகியின் மேரில்—வருதேவே!

2509. கறையணி மிடறுர் கருணையி னரனர்—அருள்பாலா!
இறைகுரு பரனே! இமையவ ரரசே!—அருளாயோ?
குறைதவிர் குகனே! குறமயில் கணவா!—க்ருபையாளா!
மறைபுகழ் சிகிமா மலைவளர் முருகா!—எனையாளாய்!

2510. காலனை வதைத்த காலா!
காரண கருத்த ராசை—மக!வேளே!
வேலினை யெடுத்து மாவை
வீழிட அடர்ச்செய் வீர!—எனையாளாய்!
பாலக னெனக்கு நாளும்
பார்மிசை தரித்ர மோட—அருள்வாயே!
வாலமதி யுற்ற சோலை
வாழ்வுறு சிகிப்பொன் மேரில்—வருதேவே!

2511. வனச மாமலர் வளரு நாயகி
—புணர்மாயோன்—நலமேசேர்
சினவி ராவணன் சிதற வேசெயும்
—மணிமால்தன்—மருகோனே!
மனது நோய்தவிர் மயிலின் வாகன!
—முருகோனே!—எனையாளாய்!
கனக மேமிகு கமழ்சி காமலை
—வளர்தேவே!—அருளாயோ?

2512. துயராகிய சமுசாரமென்
சுகவாழ்வினில் வருமாகலி—யதுதீராய்!
அயராதனு தினநானுனை
அடியேதொழ வருளர்ததும்—எதனுலோ?
குயமீறிய தெளிவாகிய
குறநாயகி யுடன்லீலைகள்—புரிலோலா!
வயநேமகன் னகரா!கன
மணிசேர்சிகி மலைமேல்வரு—குகநாதா!

2513. அனியாய லோப ரிடமோடி நாளும்
அலையாமல் வாழ்வு—புரிவாயே!
பனியான சோதி மதிசூடு வேணி
பரமேச ராசை—மக!வேளே!

சனியான பாவ மடமாத ராசை
தவிராது பூவில்—அலைவேனோ?
முனிவோர்கள் தேவர் பணியேசெய் தோகை
முதுகேறு தோகை—மலைநாதா!

2514. மாரியறி யாத பயிர்போலே
மாதரறி யாத சிசுபோலே—நெடுநாளாய்
வேரிமிகு வாச மலர்போலே
மேவுனது பாத மறியாதே—மெலிவேனோ?
காரிருளை மேவு முடல்மாவை
காலனென வேறு வயிலாலே—அடுசூரா!
தாரிலகு மார்ப! எனையாளாய்!
தாவுபொழில் சூழு சிகியாமோர்—மலையாளா!

2515. அருமை யறியாத பிரபுவிட மோடி
அலைவததுபாவம்—அறியாயோ?
கருமையுள பாவ மடமின் வயினூடு
கருவில்விழல் மோசம்—விலகாயோ?
இருமைவினை தீர அடியனிடம் ஓடி
எதிர்வருவை! தோகை—மயிலாளா!
உரிமையுடன் வேண வுதவிசெய்கு வாய்!தென்
உயர்சிகியின் மேரில்—வருதேவே!

2516. திருவை நேரும் வடிவாள்
திறளு லாவு முலையாள்—குறமாதுள்
மருவு லாவு குழலாள்
மயல்க ளோடு புணர்சீர்—முருகோனே!
பொருது சூர னுடனே
புடைகொள் சேனை விழவே—அடுவீரா!
தருவு லாவு பொழில்சூழ்
தகுசி காநன் மலைமேல்—வருதேவே!

2517. மருவுள நீப மலரணி மார்ப!—எனையாளாய்!
கருமுகின் மேனி கனவிற லாசை—முருகோனே!
வருமசு ரோரை மடிபட வேலை—எயும்வேலா!
தருவுயர் சோலை தகுசிகி மேரில் வளர்தேவே!

---

2515. விலகாயோ: விலக்காயோ? (சந்தம் நோக்கித் தொக்கது).

2518. அனியாய லோப ரவருடு வோடி—அலையாதே
கனிவான சோதி கருணைநி தே!நல்—லருளாயோ?
இனியாவ லாக எளியேன்மு னுக—வருவாயே!
நனிசோலை மேவு நலமான தோகை—மலையாளா!

2519. ஆவலி னல்நிதம் மோசம தாகவும்
ஆதுல னுவதும்—அறியாயோ!
பாவவி மோசன! சேவல்கொள் பாணிய!
பார்மிசை நான்மெலி—குவதாமோ?
சேவக னுகிய சூரனை வீழிடு
தீரதி கூரிய—அயிலாளா!
பூவலர் காவுகள் கூடிய தோகையின்
பூமலி கோடுயர்—குகநாதா!

2520. எனதுட வாவ லினிநிறை வேற—அருளாயோ?
மனதினி லோடி வருகிற நோயை—அடுவாயே!
கனகடன் மீது கமழ்துயின் மாயன்—மருகோனே!
வனநிறை தோகை மயின்மலை வாச—முருகோனே!

2521. கடம்பையணி புயனே!
கரந்தைபுனை சடையார்—அருள்பாலா!
அடம்புரியு மவுணோர்
அகங்குலைய வலியாய்—விடுவேலா!
நடம்புரியு மயிலா!
நறுந்துழைகொள் புயமால்—மருகோனே!
தடங்கொள்முடி நிறைசூழ்
சகம்பரவு சிகிமா—மலையாளா!

2522. கதியாகிய மயிலா! கமழ்நீபமென் மலரா!—எனையாளாய்!
நதிசூடிய சடையார் நலமாகிய புதல்வா!—அருளாயோ?
மதியாகிய முகமான் மறமானணை புயவா!—குகநாதா!
துதிசேரிரு சரண! துரையே!சிகி மலைமேல்—வருதேவே!

2523. வனசமலர் வாழும் மயிலையணை மாயன்—மருகோனே!
மனதுலவு நோயை மறையவரு ளேசெய்!—குகநாதா!
புனமுலவு வேடர் புனிதமட மாதை—அணைதோளா!
கனகமலை நேரும் கனசிகியின் மேரில்—வருதேவே!

---

2521. 'துழாய்' என்பது 'துழை' என நின்றது.

2524. கிம்புரிக் கோட்டு மதமா தன்தனத் தேத்து சசிசேர்
'கின்ற பொற்பூவின் மகவான்—முருகோனே!
செம்பிறைச் சூட்டு முடியார் அன்பருக் கேற்ற புகழார்
செங்குழைத் தோட்டி னரனுர்—தருபாலர்! [வளமே
அம்பிறைத் தூற்று முகிலார் பைம்பொழிற் காட்டின்
லந்தரத் தாற்றி னிமையோர்—புகழ்வான
கொம்பினிற் றூக்கு சிறுகால் பைந்துணர்த் தூற்று மெழி
குன்றையிற் பாற்று வடிவேல்-முருகோனே! [லார்

2525. மருவு லாவிய கொன்றை மதிய ராவணி யெந்தை
மகிழ்வி னேடருள் கந்த!—மலர்மார்பா!
பொருது சூருடன் வந்த படைகள் யாவையும் வென்ற
புகழு மோரயில் கொண்ட—செயவிரா!
கருவு லாவிய பந்த விருளு ரூதொளிர் கின்ற
கதிர தாயெழு கின்ற—இளையோனே!
முருகு லாமதி சிந்தி அருவி யோடிழி கின்ற
முதுமை சேர்சிகி வந்த—முருகோனே!

2526. கானக மயிலாள் காதல்கொள் குறமான்—அணைதோளா!
சானகி புணர்சீர் தார்புனை புயமால்—மருகோனே!
தேனலர் மலரார் தேவர்கள் முதலோர்—பணிதாளா!
வானக முயர்சீர் மாமிகுசி கிமா—மலையாளா!

2527. மடந்தை யாகிய மணங்கொள் சீர்குழன்—மயலாளே
குடங்கள் போன்முலை குறஞ்சொல் நாயகி—புணர்தோளா!
அடஞ்செய் சூருடன் அடன்று போர்புரி—அயிலாளா!
தடங்கொள் சோலைகள் தகுந்த தோகையின்—மலையாளா!

2528. அஞ்சலென என்முனே யன்பினெடு மயின்மேல்—வரு
[வாயே!
கொஞ்சமதி நுதலாள் கொண்டல்நிற குழலாள்-குறமானுள்
வஞ்சிதனை யணைவாய்! வந்தவசு ரூடனே—அடுசூரா!
தஞ்சமருள் குகனே! தங்கநிறைசிகிமா—மலையாளா!

2529. கயிலாச வாசர் கமழ்வேணி நாதர்—தருபாலா!
மயிலேறி யேமுன் வருவாய்! உலாச!—முருகோனே!
குயிலான தேவி குறமாது மேவி—அணைதோளா!
ஒயிலாக நாளும் உயர்தோகை மேரில்—வருதேவே!

---

2524. மதமாவின் கிம்புரிக் கோட்டைத் தன் கொங்கைக் கொப்பிடும் இந்திராணி. அம்பு = நீர். சிறுகால் = தென்றல். பாற்று - போர்செய்கின்ற.

2530. வருசூருடன் வலுமோர்புரி—அயிலாளா!
திருமாமயில் செயமாமயில்—புணர்தோளா!
மருவேமிகு மலர்சூடிய—மணிமார்பா!
தருவேநிறை தகுதோகையின்—மலையாளா!

2531. வந்த் வினைதவிர் வம்பு மலரணி—புயவேளே!
கந்த மலரயன் கண்டு பணிபுரி—முருகோனே!
சந்த மிகுதமிழ் தந்து வரமருள்—குகநாதா!
நந்த வனநிறை நன்று மிகுசிகி—மலையோனே!

2532. அடியனிட மேது மருமையிலை யோ?சொல்!—முருகோ
[னே!
கடிமலர்கள் சூடு கனகுழலி வேடர்—மகள்தோளா!
துடியிடையின் மாது துரைமகள்த ஞசை—மகவோனே!
வடிவுமிகு தோகை மலைவளரு நாத!—எனையாளாய்!

2533. தாவி யமயில் வாகன!
தார்பு னைபுய பூதரா!—எனையாளாய்!
காவி யைநிகர் பார்வையாள்
காதல் கொள்குற மாதினுள்—புணர்தோளா!
கூவி யகன சேவலா!
கோத றுகம லாசனே—பணிதாளா!
பாவி யையினி யாளையா!
பார்பு கழ்சிகி மேரில்வாழ்—குகநாதா!

2534. வருசூருடன் வலுபோர்புரி—அயிலாளா!
ஒருவேடமின் உடனேமரு—வியதோளா!
மருநீபமென் மலர்மாலிகை—புனைதோளா!
தருவேநிறை தகுதோகையின்—மலையாளா!

2535. கானக முறைமாது காதல்கொள் குறமானை-அணைதோளா!
தானவர் குலகால! தார்புனை புயநாத!—எனையாளாய்!
நானினி மெலிவாதல் ஞாயம தலதேவ—குலசீலா!
வானவர் பணிதாள! வாழ்வுறு சிகிமேரில்—வருதேவே!

2536. சகல புவன நாதனே!
தருண மறிவை தேவனே!—அருளாயோ?
அகம துளவி லாசனே!
அடியன் வளர்க வேசெய்வாய்!—குகநாதா!

சுகம் துளநன் வேடமான்
    தீரைமி னவளு நாளுமே—புணர்தோளா!
தகமை யுளசி கரபொன்மா
    தழுவு மலையின் வாசனே!—எனையாளாய்!

2537. நஞ்சணி மிடறினர் நன்றுள சடையினர்—அருள்பாலா!
கஞ்சனை யடருவோர் கங்குலி னுடலினர்—மருகோனே!
வஞ்சக வசுரமா வந்தெதிர் பொருதுவே—லணிதேவே!
மஞ்சுகள் தவழுமோர் மஞ்சுயர் சிகியின்மா—மலையாளா!

2538. வீர மிஞ்சிய சூர னைந்திட வேலை யன்றுமுன்—எதிர்வீரா!
சார மிஞ்சிய பார்வை யின்றருள் தாவு கின்றபொன்—மயி
[லாளா!
கார மிஞ்சிய ராவ ணிந்திடு கார ணன்றரு—புதல்வோனே!
பார மிஞ்சிய கோடி லங்கிய பார்பு கழ்ந்திடு—சிகிமேரா!

2539. எந்தவித மாகினுநீ
    என்றன்மன தாவல்கள்போல்—அருளாயோ?
கந்தமலர் மீதினில்வாழ்
    கஞ்சன்முதல் வானவரே—பணிதாளா!
சந்தமிகு பாடல்களே
    தந்துவெனை யாளுமையா!—குகநாதா!
கொந்தலர்கொள் சோலைகளே
    கொண்டசிகி மேரினில்வாழ்—முருகோனே!

2540. கருத்திலா சையொடும் எனக்கு வேணநிதி
    கருத்த னே! கிருபை—புரிவாயே!
திருத்த மானகுற மயிற்கு மாலைபுனை
    சிறப்ப தானவழ—குளதேவே!
செருச்செய் சூரனொடு மமர்க்கு ளேயெதிர்செய்
    திறத்த வேலைவிடு—செயவீரா!
தருக்கள் சோலைநிறை சிகிப்பொன் மேரில்வரு
    தமிழ்க்கு ஈச! என்முன்—வருவாயே!

2541. எதனு லடியே னிடநீ தயவே—புரியாதே?
மதுவே நிறைசீர் மணநீ பமென்மா—லிகைமார்பா!
பதுமா சனனுர் பணியே புரிமா—குருநாதா!
விதுதா வியசீர் மிகுதோ கையின்மா—மலையாளா!

2542. ஏறுபெ ருஞ்சின நால்வகை யின்படை
யேவவு ணன்சிரம்—விழவேதான்
பாறுழ லும்படை வேல்தொடு புங்கவ!
பாழிநெ டும்புய!—முருகோனே!
தாறிடு செங்குலை வாழைம ணங்கமழ்
தாவுகு றிஞ்சியி—லுறைவோனே!
ஆறிடு செஞ்சடை யாரரு ளுஞ்சுத!
ஆல்தவழ் குன்றையின்—மலையோனே!

2543. கூவிய மயிலேறி கூறிடும் அயிலோடும்—அசுரோன்மேல்
தாவிய படைவீழ சாடிய செயவீர!—அருளாயோ?
பாவியை யடுநோயை பாதக மலையாவை—அடுவாயே!
தூவிகள் நிறைசீரின் தோகையின் மலைமீது—வருதேவே!

2544. நடன மாடிய மயிலி லேறிமுன்
நளின மாமுக—முடன்வாராய்!
மடவி வேடுவர் குலமி னுள்குற
மயிலை மாலொடு—புணர்தோளா!
படவ ராவணி சடில நாயகர்
பரம ராசைகொள்—மகவேளே!
தடவ தாகிய பொழில்கள் சூழ்தரு
தகுசி காமலை—முருகோனே!

2545. ஆடிய மயின்மீதே யான்மகி ழிடவேதான்—வருவாயே!
கூடிய படையோடும் கோதுள வசுரோன்மே—லடுசூரா!
நாடிய வரம்யாவும் நாள்தொறு மருள்வாயே—அமரேசா!
நீடிய பொழில்சூழும் நேமநன் னகராளா!—சிகிமேரா!

2546. [கடகளிறின் முகத்தனுர்] கருணையுள கத்தனுர்-துணையாளா!
மடவரல் குறத்தியார் மயலொடு புணர்ச்சிநா—யகவேளே!
இடரதை விலக்கியே யினியவர மிப்பநீ—அருள்வாயே!
வடவரை நிகர்க்குமோர் மயின்மலையி னித்தம்வாழ்—குரு
[நாதா!

2547. சகல லோக நாயகனே!
தமியன் வாழ நீயருள்வாய்!—அமரேசா!
சுகமின் வேட நாயகியாள்
துரைமி னுளு மாலுடனே—புணர்தோளா!

2546. [ ] சந்தம் மாறுபடுகிறது.

அக்ம தேசெய் மாவுடனே
•அடல்க ளேசெய் வேலவனே !—க்ருபைதாராய்!
மகமு ளோர்கள் வானவரே
மலர்கள் தூவு தோகையின்மா—மலையாளா !

2548. பாதி மதியைத் தரித்த வேணியர்
பாவை யுமையைப் புணர்த்த நாயகர்
—தருபாலா !—முருகோனே !
ஆதி மறையைப் பெருத்த ஆழியில்
[ஆர்க யலுருவிற் றெருகுத்த] மாதவர்
—மருகோனே !—குகநாதா !
மாதி ரமதைப் பொடித்த வேலவா!
வார்கெ ழுமுலைக் குறத்தி நாயகி
—மயல்மேவும்—இளையோனே !
சோதி முடிகள் நிறைத்து லாவிய
தோகை மலையின் மகிழ்ச்சி யாகிய
—குமரேசா !—அருளாயோ ?

2549. கான கத்திலுறை வேடு வர்க்குலமின்
காதன் மிக்கமரு—வியதோளா !
தேன லத்திலுயர் வான நற்சொல்பகர்
தேவி யற்புதமின்—மருகோனே !
பான லத்தமதி சூடு கர்த்தரருள்
பால கக்குமர !—குருநாதா !
வான கத்தமரர் சூழு மெய்ச்சிகியின்
மாம லைக்கரசு—புரிதேவே !

2550. இனியமட வார்க ளாசை
யெனுமொருபொ லாத வாவி
—தனில்வீழா—தருள்வாயே !
அனிதமிகு சூர னாவி
யழியநுனை வேலை யேவு
—செயவீரா !—முருகோனே !
பனியின்மதி சூடும் வேணி
பரமரருள் பால கா! பொன்
—மயில்வீரா !-அருளாயோ !
கனிகணிறை சோலை தாவு
கமழ்சிகியின் மேரில் வாழும்
—அமரேசா !—க்ருபை தாராய் !

---

2547. [ ] எழுத்து மிகுதி. 'ஆர்கயலெனத் தொகுத்த' எனப் படிக்கலாம்.
2548. பாலக : விளி.

2551. சிந்தைதனில் வருநோய்கள்
சிந்திவிட வரம்யாவும்—அருளாயோ ?
நந்தையணி கரமாயன்
நன்றுபுரி முனிவோர்கள்—பணிதேவே !
பந்தைநிகர் முலைமாது
பங்கசமென் முகவேடு—வியினுதா !
விந்தைநிதம் விளையாடு
மிஞ்சுமுடி நிறைதோகை—மலைநாதா !

2552. மடங்க லேறனைய புயங்கள் மீறவரு
வளைந்த சேனையுடன்—வருசூர்மா !
தடங்கு லாவுமுர மிரண்டு கூறுபட
தயங்கு வேலைவிடு—செயவீரா !
குடங்கள் போலநிறை தனங்க ளால்மயல்செய்
குறும்பு தானிடுவர்—மயல்தீராய் !
முடங்கு வாழைகுலை நெருங்கு தோகைமலை
முகுந்த னார்மருக !—முருகோனே !

2553. வஞ்ச கமிடு சூரன் மார்பினில்
மண்டி டவதி கூர்மை வேலினை—விடுசூரா !
நெஞ்ச கம்வரு நோய்கள் தீரிட
நின்கி ருபைபுரி வாய்கு கா!குரு—பரநாதா !
பஞ்சி னுமெலி தான சீரடி
பைங்கொ டிகுற மாது நாயகி—புணர்தோளா !
மிஞ்சி யபொழில் சூழ வேவளர்
மின்ப யில்சிகி மேரில் வாழ்வுறு—முருகோனே !

2554. கலசவினை முலையாள் கமலதள வதனள்—குறமானள்
வலியமரு வியவா ! மகிமையுள துரையே !—எனையாளாய் !
புலனிலுள அறிவே ! புணரிதுயில் விறலார்—மருகோனே !
குலமறைகள் புகழ்சீர் குலவுசிகி மலைமேல்—வருதேவே !

2555. இனியாகிலு மடியேனிட மிசைவாய்வரம்—அருளாயோ ?
கனிவாகிய குறநாயகி கணவா ! க்ருபை—புரிவாயே !
பனிமாமதி தவழ்வேணியர் பதுமாசனர்—குருநாதா !
முனிவோர்பணி குகநாயக ! முதலே ! சிகி—மலையாளா !

2556. எனதாவலின் படியேயரு ளிசைவாயினி—அருளாயோ ?
மனதேவரு கிறநோயொடு மயலோடிட—அருளாயோ ?
புனமீதினில் வருநாயகி புணர்சேவக !—எனையாளாய் !
கனசோலைகள் நிறைவாகிய கமழ்தோகையின்—மலைநாதா !

2557. சகல புவன கருத்தனே !
தமியன் வளர வருட்செய்வாய் !—அமரேசா !
மகம துபரி விழைத்தவோர்
மகப தியித மயிற்குமா—யகவேளே !
புகலு மறைகள் புகழ்க்குகா !
புணரி துயில்வர் தமக்குமா—மருகோனே !
தகமை யுயரு மயிற்பொன்மா
தழுவு மலையி லிருக்கும்வேல்—முருகோனே !

2558. தினைப்புனங் காத்த குறமின்
திருப்புயஞ் சேர்த்து மருவு—புயலோலா !
பனைக்கரங் கோட்டு வதனம்
படைத்திடும் மேட்டு வயிறர்—துணையாளா !
முனைப்படுங் கூர்த்த வயிலை
முறுக்கிடும் போக்கு விடுபொன்—முருகேசா !
சினைப்புனங் காட்டு சிகியின்
திறக்கிடுங் கோட்டில் வளரும்—வடிவேலா !

2559. எனதாசை போல இனிவாழ வேணும்—அருளாயோ ?
தனமீறு தேவி தகுகான மாது—புணர்தோளா !
மனநோய்கள் தீர வரம்யாவும் நீசெய் !—குகநாதா !
கனமீறு தோகை கமழ்மேரில் வாழும்—முருகோனே !

2560. கரந்த வீரனுடல் துணிந்து நீடுபகை
கடந்த கூர்வயிர—மகபதிதன்—மருகோனே !
குரங்க ளேபயிலும் மடந்தை கானமயில்
குவிந்த பூண்முலையில்-மயலினுடன்—அணைதோளா !
வரந்த வாதநட மிடும்பொ னர்சடிலர்
மகிழ்ந்த சேயிளைய—குமரகுரு—பரநாதா !
சுரந்த சூலின்முகி லினங்கள் சூழுமுடி
துலங்கு தோகைமலை—[வளர்சரவண]—முருகோனே !

2561. வனசமலர் மீது வளருமட மாது—மருகோனே !
அனவரத காலும் அடியனிட மோடி—வருவாயே !
மனதுவரு நோய்கள் மடியவர மியாவும்—அருளாயோ ?
கனகமலை நேருங் கமழ்சிகியின் மேரில்—வளர்தேவே !

---

2557. மகபதி யிதமயில் - இந்திரனுடைய நலந்தரும் மயில் : தேவயானை.

2560. [ ] ஓரெழுத்து மிகை. 'வளர்சரண' என இருக்கலாம்.

2562. தாதவிழ் கொன்றை மாலை
தாரணி கின்ற நாதர்—அருள்பாலா!
சேதன மிஞ்சு வோர்கள்
சீர்மலர் கொண்டு தூவும்—இருபாதா!
மோதமர் கொண்ட சூரன்
மூடிட வந்த சேனை—விழவேலால்
கோதமர் கொண்ட வீர!
கோடுயர் குன்றை மேரு—வளர்தேவே!

2563. [சகலரெட்சகா]
தமியனிட மிப்பவே—அருளாயோ?
பகருமறை யுற்றவா!
பணிபுனை குறப்பெணுள்—புணர்தோளா!
சுகமயி லுமைப்பெணுள்
துரைமகள் தனக்குமால்—மகவேளே!
மகபதி துதிச்சிகா
மலையிலர சுற்றவா!—எனையாளாய்!

2564. வந்த சூருடல் ரெண்டு கூறிட மண்ட வேல்விடு—செயவீரா!
சந்த மேவிய விஞ்சு பாடல்கள் தந்து வாதரி-முருகோனே!
நந்த னருள் கின்ற நாயக! நங்கை வேடுவி-புணர்தோளா!
அந்த மேவுசி கண்டி மாமலை யங்கு வாழ்வுறு—குகநாதா!

2565. மதிதவழ் சோலை யூடு
வளர்குற மானை மேவு—புயலோலா!
நதிமலர் சூடும் வேணி
நலனுறு பால கா!பொன்—மயிலாளா!
ததியுறு பாணி மாயன்
தகுமரு கா!சி காதேன்—மலையாளா!
அதியழ கான தேவ!
அருள்புரி வாய்!உ லாச—முருகோனே!

2566. கொஞ்சிய கிளிமொழியாள்
கொண்டலை நிகர்குழலாள்—குறமானுள்
ரஞ்சித முடனணைவாய்!
நன்றுள கிருபையெலாம்—அருளாயோ?
பஞ்சினு மெலியடியாள்
பந்திணை முலையுமையாள்—அருள்பாலா!
மஞ்சுகள் தவழ்சிகிமா
மன்றல்கொள் மலையரசே!—எனையாளாய்!

2563. [ ] சந்தங் குறைகிறது. 'சகலபுவி ரெட்சகா!' என இருக்கலாம்.

2567. வஞ்சமிடு சூரனுடன்
மண்டியட லேபுரியும்—மயிலாளா!
கொஞ்சமதி யானநுதல்
கொண்டனிற மானகுழல்—உமைபாலா!
செஞ்சரண பாதமணி
சிஞ்சிமென வோடிமுனம்—வருவாயே!
மஞ்சுதவழ் சோலைநிறை
மண்பரவு தோகைமலை—முருகோனே!

2568. புனத்தி லுற்றிடு வேடுவர் நாயகி
புணர்ச்சி யுற்றிடு மாபுய வா!க்ருபை—புரிவாயே!
மனத்தி லுற்றிடு நோயது தீரிட
மகிழ்ச்சி பெற்றிட மாமயி லேறிமுன்—வருவாயே!
கனத்தி லுற்றிடு சீர்மழை போல்வெகு
கருத்தி லுற்றருண் மாமழை நீபொழி—குவை!நாதா!
சினத்தி லுற்றிடு சூர்பகு வேலவ!
சிகிப்பொன் வெற்பினில் வாழ்குரு நாயக!—முருகோனே!

2569. உலக மாடிட விரிகொள் தோகையி
னுதவு சீர்மயின்—முருகோனே!
கலக மேபுரி யசுரன் வீழிட
கதிரின் வேல்விடு—செயவீரா!
இலக வேயழ கொழுகு வேடமின்
இனிமை யாய்மரு—வியதோளா!
திலக வாள்நுதல் உமைதன் மாமக!
எழில்சி காமலை—வருதேவே!

2570. கொங்கவிழு நீப மாலை
கொண்டபுய வா!மு ருக—வருவாயே!
பங்கமுள நோய்கள் தீர
பண்பினொடு நீசெய் வாய்நல்—அருள்தானே!
சங்கரர்சொல் பால! தேவ
தந்திதுணை யாள! நாத—முருகோனே!
தங்கமலை யாக நீடு
தங்குசிகி மேரில் வாழும்—அமரேசா!

2571. வாவியி னிலங்கிவளர் மாமலரு கந்தமகள்—முருகோனே!
தேவியுமை பங்கில்வளர் தேய்மதி புரிந்தசடை—யவர்பாலா!
தாவியசி கண்டிமிசை தானுலவு கின்றகுரு—பர!வேளே!
பாவியென்முன் வந்தருள்செய்! பார்புகழ்சி கண்டிமலை—முருகோனே!

2572. கருணைபொழி மேகமே!
கமலதள நாதனார்—பணிதாளா!
அருமையுள தேவனே!
அடியனிட மாசையாய்—வருவாயே!
செருசெயசு ரோனையே
திறலயில்கொ டேவியே—அடுவோனே!
தருவுலவு சோலைசூழ்
தகுசிகியின் மேரில்வாழ்—குருநாதா!

2573. மதிசூடி நடமாடி
வருதேவ ரருள்பால!—முதல்வோனே!
கதியாக நடையேசெய்
கனதோகை மயிலாள!—எனையாளாய்!
நதிநீடு வளர்நேம
நலநாட! அருள்யாவும்—உதவாயோ?
பதியோர்கள் முனிவோர்கள்
பணியேசெய் சிகிமேரில்—வருதேவே!

2574. உரிமையுடன் நாளும் யானின்
உபயமல ரான பாதம்—மறவேனே
கருமைமழை தாவ நீடு
கமழ்புனைமி னாளை மாலொ—டணைதோளா!
இருமைவினை தீர வேயென்
இணைவிழிகள் காண வேமுன்—வருவாயே!
பெருமைசெறி தோகை யான
ப்ரபலமலை மேவு ஞான—முருகோனே!

2575. செருப்பயில் சூர னாவி
தெறித்திட வேலை யேவு—செயவீரா!
மருப்பயில் நீப மாலை
மணித்திரு மார்பின் மீது—புனைதேவே!
கருப்பையி னோய்கள் தீர
கருத்தினி லாசை யாகி—அருளாயோ!
திருப்பயில் கோடு லாவு
சிகிக்கிரி வாச னே!நல்—அருள்தாராய்!

---

2574. 'கமழ்புனைமினாள்' என்பது 'கமழ்குழல்மினாள்' என்றிருப்பின் பொருந்தும்.

2576. பூசத்திரு நாளினி லேயொரு
பூவுற்றிடு தேரினி லேவரு—குகநாதா!
தேசத்தினி லேயுள யாவரும்
தேடிப்பணி சீர்சர ணு!க்ருபை—புரிவாயே!
பாசத்தினி லேவிழு காதருள்
பாலிப்பை! சிகாமயின் மீதினில்—வருதேவே!
வாசத்தினில் மீறிய நீபமென்
மாலைப்புய வா!சிகிமேரினில்—வளர்தேவே!

2577. வடிவி லங்கிய குறம டந்தையை
மருவு மிங்கித—முருகோனே!
அடிய ரன்பொடு பணிசி கண்டியில்
அனுதி னம்பயில்—குகநாதா!
இடியெ னும்படி அதிர வந்தெதி
ரிடும வன்குல—கலகா!சீர்
குடிகொள் குன்றையின் மலையில் வந்திடு
குமர! என்றனை—இனியாளாய்!

2578. மதுரி தத்தமிழ் பாடிய நாவலர்
மகம்வி ளைத்திடு மாமுனி வோர்பணி—யிருதாளா!
விதுத ரித்திடு வேணியி னரிடம்
விழைவு மிக்கொடி மாதுமை நாயகி—தருபாலா!
கதுமெ னத்திரு நாடக மேபயில்
கனம யிற்பரி யேறிய சேவக!—முருகோனே!
சதுமறைக்கறி யாதிடு நாயக!
தருசிகிக்கிரி மீதினி லேவரு—குகநாதா!

2579. மதுமலர் மாலை நீப! மணியணி க்ரீட மேவு—முடிநாதா!
சதுமறை தேடு பாத! சகலசர் வேச னை—முருகோனே!
விதுவணி வேணி நாதர் விமலரை மேவு தேவி—தருபாலா!
பதுமமென் மாது வாழும் பணைமுடி சேரு தோகை—மலை
[யோனே!

2580. மருப்பொலியு நீப மாலை தரித்ததிரு மார்ப! நாயன்
மனத்தில்வரு நோய்கள் தீர—அருளாயோ?
செருப்பொலியு மாவி னோடு சதுர்ப்படைகள் வீழ வீழ
திறத்தகதிர் வேலை யேவு—செயவீரா!

---

2580. செருப்பொலியும் மா: சூரபன்மனாகிய மாமரம்.

கருப்பொலியு மாய வாழ்வில் இனிப்புகலி லாத வாறு
கதிக்கடிமை சேரும் வாழ்வு—அருளாயோ?
உருப்பொலியும் வேட மாது மயற்கடலுள் மூழ்கு மார!
உயர்ப்பொழி லுலாவு தோகை—மலையோனே!

2581. வாச னைப்படு நீபமென் மாலிகை
மார்பி னிற்றரி நாயக னே!க்ருபை—புரிவாயே!
நாச முற்றிட வேயவு ணேனிடம்
நாடி வெற்றிகொள் வேலவ னே!தய—வுடன்வாராய்!
ஈச ருக்கினி தாகிய பாலக
னே!எ னக்கரு ளேசெய்கு வாய்!குரு—பரவேளே!
பாச மைக்கடன் மேல்விழு காதருள்!
பாரின் மெய்க்கதி யேயருள் தோகையின்—மலைநாதா!

2582. கடம்பையணி மார்பா! கனிந்துவர மேநீ—தருவாயே!
அடம்புரியு மாமார் அகழ்ந்திட முன் வேலே—விடுவீரா!
நடங்குலவு தோகாய்! நலங்கள்தமை யீவாய்!—அமரேசா!
தடங்குலவு சீர்சேர் தருஞ்சிகியின் மேரா!—எனையாளாய்!

2583. தருணமிது வாகை யானின்
தயவுசெய்கு வாய்!கு கா!பொன்—மயிலாளா!
அருணநிற மேனி நாத!
அடியனிட மாக வேண—அருள்தாராய்!
திருமறைகள் தேடு நாத!
தினமடியன் வாழ வேண—அருளாயோ?
மருவுலவு சோலை சூழும்
மகிமையுள தோகை யான—மலையாளா!

2584. வஞ்சனை மாவுடல் கொண்டிட வேயடல்
மண்டிய போரிடும்—அயிலாளா!
நெஞ்சணை நோய்கள கன்றிட வேயினி
நின்க்ருபை யாவையும்—அருளாயோ?
மஞ்சடர் சோலைகள் மண்டிய கானக
மங்கையை மேவிய—புயலோலா!
குஞ்சர வானனர் தந்துணை வா!உயர்
குன்றையின் மாமலை—வருதேவே!

---

2581. மார!: மன்மதனைப்போன்றவனே! (உவமையாகுபெயர்).

2582. அடம்புரியும் மா மார் அகழ்ந்திட - தீமை செய்யும் (சூரனுகிய) மாமரத்தின் மார்பு பிளந்திட.

2585. கலகமிடு சூர ஞவி விலகவயி லேவு சூர!
    சுனதைபுரி வாய்!கு கா!பொன்—மயிலாளா!
நலவடிவி வேட மாது மருவுபுய லோல! வாச
    நளினமல ரான பாதம்—அருளாயோ?
குலமறைகள் தேடு நாத குருபரவு லாச !தேவ!
    குமரியபி ராமி பாகர்—மக!வேளே!
சலதிவளை நேம நாட! அடியரள வாக வேசெய்
    தகுசிகியின் **மேரில்** வாழு——முருகோனே!

2586. கானக மாது மேவு
    காதல்கொள் நாத! நாளும்—அருளாயோ?
ஞானவர் தேடு பாதர்
    நாரண ராசை யான—மருகோனே!
தேனலர் நீப மாலை
    சேர்புய மீது சூடும்—முருகோனே!
வானவர் ராச! தேவ!
    மாமிகு **தோகை மேரில்**—வளர்வோனே!

2587. உனைநம்பிய நாயே
    னுடனின்புற வேதான்—அருளாயோ?
எனைவந்தடு நோயோ
    டிடவின்று குகா!நீ—வருவாயே!
நனைரெண்டுகு ரூரர்ள்
    நகுபங்கச மானுள்—மருகோர்னே!
முனைகொர்ண்டிடு வேலா!
    முதிர்குன்றையின் மேரா!—எனையாள்ளாய்!

2588. சவுரி யமிகு சூர ஞேடெதிர்
    சமரி னினுதி வேலை யேவிய—செயவீரா!
பவுரி கொள்மல ரான சீருள
    பத!அ ரஹர நாத ஈசுரர்—இடமேசேர்
கவுரி யின்மக வாக வேவளர்
    கமழ்ம மலரிதழ் நீப மாலிகை—அணிமார்பா!
மவுரி டுபவ ரோட டாதருள்!
    மணிமு டிநிறை **தோகை மாமலை**—முருகோனே!

---

2587. நனைரெண்டு குரூராள்: நனை - தோன்றுதல். ரெண்டு குரூராள்: இராவணன், காக்காசுரன், நகு - விரும்பிய.

2588. பவுரி: கூத்தின் விகற்பம்.

2589. கனதனம் ரெண்டு மீற வேயிரு
    கையிலணி வண்டு வீழவேயொரு—மடமானுள்
நினைவும றந்து வாடு ருளவள்
    நினது புயங்க ளார வேமரு—விடவாராய்!
எனது மனங்கொ ளாசை போலருள்
    இனிய கடம்ப மாலை சூழ்தரு—தடமார்பா!
புனம்வளர் கின்ற மாது நாயக
    பொழிலுயர் குன்றை மேரில் வாழ்வுறு—செகநாதா!

2590. புதியமலர் கொண்டு பூசை
    புரியவரு மன்பர் பாகம்—வருதேவே!
அதிகசது ரங்க மோடும்
    அடல்செயவு ணன்ற னுவி—கொளும்வேலா!
சுதியளிமு ரன்று பாடு
    துகள்பொதிக டம்ப மாலை—புனைமார்பா!
நிதியருள்சி கண்டி மேரின்
    நிருப! என்முன் வந்து வேண—துதவாயோ?

2591. இனியாகிலு மடியேனிட மினிதாயருள்—புரிவாயே!
புனிதா!சர வண!நாயக! புகழ்சேர்பத—மலராளா!
கனியாகிய புனநாயகி கமழ்மேலொடு—புணர்தோளா!
பனிமாமதி தவழ்தோகையின் பருமாமலை—வளர்தேவே!

2592. கானக மாது சேர்புயா!
    காதல தாக வேமுனே—வருவாயோ?
வானக தேவர் ஞானியோர்
    மாமலர் வேதன் மாயனே—பணிபாதா!
தேனலர் நீப மாலையே
    சீர்மிகு மார்பி லாவலாய்—அணிதேவே!
தானவர் நாச காலனே!
    தாமிகு தோகை மேரிலே—வளர்தேவே!

2593 வஞ்சனை யிடுசூருடல் மண்டிட அயிலேவிய—செயவீரா!
கஞ்சமென் மலர்வாழ்வுறு கங்குறை அயனுருட—குருநாதா!
நஞ்சணி மிட றுரிட நங்கைதன் மதலாய்!அருள்—தருவாயே!
மஞ்சது தவழ்சோலைகள் மண்டிய சிகிமேரினில்—வளர்
[தேவே!

2589. இது அகத்துறைப் பாட்டு.

2590. துகள் : மகரந்தப்பொடி.

2593. கம்குறை - தலை குறைந்த. சிவபெருமான் கட்டளைப்படி வயிரவர் பிரம னுடைய ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளினார். ஆகையால் தலை குறைந்தவரானார்.

2594. ஆதரவு வேறு முளதோ ?
  யாதுமறி [யாதுபோல்வ]—தெதனுலோ ?
காதன்மிகு வேட மகளாள்
  கானமதில் நாளு மணைவாய்!—அமரேசா !
போதலரு நீப மலரா !
  போர்புரியும் மாவி னுடனே—அடுவீரா !
மாதயவு நீபு ரிகு வாய் !
  வானவர்கள் தேடு **சிகிமா—மலையாளா** !

2595. பொருசூருடல் கிழிவாய்விட புகழ்வேல்விடு—செயவீரா !
மருநீபமென் மலர்மாலிகை மணிமார்பினில்—அணிதேவே !
அருமாமறை புகழ்நாயக ! அடியேனிடம்—வருவாயே!
கருமாமுகில் தவழ்சோலைகள் கமழ்**தோகையின்—மலை**நாதா !

2596. வனசமலர் மாது மருவுபுய மாயன்—மருகோனே !
புனமகளை மேவு புனிதமுரு கேச !—முருகோனே !
அனநடையின் மாது அருமையுள நீலி—புதல்வோனே !
கனகமலை நேரும் கன**சிகியின் மேரில்**—வளர்தேவே !

2597. மதிய ணிந்திடு சடையி லங்கிய
  வரதர் தந்தருள்—புதல்வோனே !
கதிமி குந்திடு மயிலில் வந்தருள்
  கருணை மிஞ்சிய—முருகோனே !
விதியு மண்டரு நிதம்வ ணங்கிய
  விமல சங்கர—குருநாதா !
நதியி லங்கிய வயல்வி ளைந்திடு
  நலசி **கண்டியின்—அமரேசா** !

2598. மதிசூடிய சடையார் மகிழ்பாலக ! முருகா !—அருள்தாராய் !
விதிமால்பணி சரணு! விரைநீபமென் மலர்மா—லிகைமார்பா !
கதியாகிய மயிலா ! கருணாகர வடிவே !—க்ருபைதாராய் !
நதிசூழ்தரு வயல்சூழ் நலமாகிய **சிகிமா—மலை**யோனே !

2599. மாதொரு பாகனுர் மான்மிகு பாலகா !—அருளாயோ ?
தாதவிழ் நீபமாம் தார்புனை நாயகா !—வளர்தேவே!
ஆதர வேசெய்வாய்! ஆரண நாயக !—எனையாளாய் !
மாதய வேசெய்வாய்! வாழ்வுள **தோகைமா—மலை**யாளா!

---

2594. [ ] விளங்கவில்லை. 'யாது வருவ' என்றிருக்கலாம்.

2600. மிடியினு லுலகில் நாயன்
வெருவதா மெலிய ஞாயம்—உளதோதான் ?
வடிவதா யிலகு வேடர்
மடமினுள் மயல தாக—அணைதோளா !
மடியமா வுடல்கள் கீற
வலுவின்வேல் கொடுமு னேவு—செயவீரா !
அடியன்வாழ் வுறவை போகம்
அருள்செய்வாய் ! சிகியின் மேரில்—வருதேவே !

2601. வருசூருடன் எதிராகிய வலுபோர்புரி—செயவேலா !
திருமான்மரு வியமார்பினர் திகழ்மாலுட—மருகோனே !
அருமாமறை புகழ்நாயக ! அடியேனிடம்—வருவாயே !
கருமாமுகில் தவழ்சோலைகள் கமழ்தோகையின்—மலை
யாளா !

2602. ஆதரவு வேறு முளதோ ?
யாதுமறி யாது[போல்வ]—தெதனுலோ ?
சீதமதி சூடு சடையார்
தேவியுமை மாது கனிவா—கியபாலா !
காதன்மிகு வேட மடமான்
கானகம தூடு புணர்வாய் !—எனையாளாய் !
மாதயவு நீபு ரிகுவாய் !
மாமுடிகள் சூடு சிகியா—மலையாளா !

2603. வான்கம் வருதேவர்கள் சீதரன் முதலோர்நித
மாமுனி வரரேபணி—இருதாளா !
கான்கம் வளர்வேடுவர் சீர்குல மடநாயகி
காதல்கொள் புயநாயக !—எனையாளாய் !
தேனலர் மலர்மாலிகை தானணி புயவாகுக !
தேமிகு தமிழ்பாடல்கள்—தருவாயே !
தானவர் குலநாசம தாகிட வயிலேவிய
சாமி ! பொன் மயின் மாமலை—முருகோனே !

2604. வாதுபுரி சூருடன் வாளயிலை யேவியெதிர்—செயும்வீரா !
சூதுநிக ரானமுலை தோகைமற மான்மருவு—புயலோலா
தாதுலவு நீபமலர் தானணியு மார்பவரம்—உதவாயோ ?
மோதுபொழில் சூழுலவு மூரியசி காமலையின்—வளர்தேவே !

---

2602. [ ] இது 'வருவ' என்றிருக்கலாம். 2594-ஆம் பாட்டைப் பார்க்க.

2604. மூரிய - பெருமையுற்ற. மூரி - பெருமை.

2605. வந்த சூருடல் மண்ட வேல்விடு—செயவீரா!
கொந்த மாலிகை கொண்ட சீர்புய!—முருகோனே!
இந்து வேணியர் இன்ப நாயகி—தருபாலா!
சந்த மேவிய தஞ்சி காமலை—வளர்தேவே!

2606. வனச மண்டப வனிதை யன்புறு—மருகோனே!
புனம டந்தைதன் புளக கொங்கையில்—அணிதோளா!
மனது கந்தருள் மயிலில் வந்திடு—முருகோனே!
கனக மிஞ்சிய கமழ்சிகண்டியில்—வளர்தேவே!

2607. மதத்த சூருடன் எதிர்த்த போர்புரி
வலுத்த வேல்கொடு—எயும்வீரா!
கதத்தி லேநடை பயிற்று மாமயில்
கருத்த னே!அடி—யனையாளாய்!
மிதத்த நாயடி யனைச்செ யாதினி
மிடிப்ப டாதருள்—புரிவாயே!
முதற்கு கா!நல மெனக்கு நீசெய்வை!
முடிச்சி காமலை—வருதேவே!

2608. ஆதரவு நீசெய்வாய்! ஆறுமுக வேலவா!—எனையாளாய்!
காதன்மிகு வேடமான் காமமொடு நாளுமே—புணர்
[தோளா!
சீதமதி சூடுவோர் தேவர்மக வேசனர்—தருபாலா!
மாதயவு நீசெய்வாய்! வாழ்வுசெறி தோகைமா—மலையாளா!

2609. கஞ்ச மலரைநிக ரிருதாளாள்
கங்கு னிகருநெடு குழன்மானுள்—வடிவேசேர்!
நஞ்ச நிகருமிரு விழிமானுள்
நங்கை குறமடவி தனையேசேர்—புயலோலா!
தஞ்ச மிலையுதவி புரிவாயே!
சங்க மணியிருகை விறல்மாயோன்—மருகோனே!
கொஞ்ச மதிதவழு பொழிலேசேர்
குன்றை மலையின்வரு குகநாதா!—எனையாளாய்!

2610. அடியன் மீதுவெகு தயவி லாததெனை
அவதி யாவததை—விலகாயோ?
கடிகொள் நீபமலர் புனையு மார்ப! வெகு
கனிவ தாகவரம்—உதவாயோ?
துடிய தானவிடை அனம தானநடை
துரைமி ஞனமரு—வியதோளா!
வடிவு சேர்சிகர முலவு தோகையெனு
மலையின் வாசமுள—முருகோனே!

2611. கருணை தங்கிய மகிமை மிஞ்சிய
கமலம் ரெண்டுள—சரண! சீர்
தருண மென்றன்முன் உயர்சி கண்டியில்
தயவு கந்தினி—வருவாயே!
பருவ மங்கைநன் னயமி குந்திடு
பணிய ணிந்தகு—றமினள்சேர்
உருவி ளங்கிய சிகியெ னுங்கிரி
உரிய கந்த! நன்—னயவேளே!

2612. எனது மீதுதய விலது தானதுவு
மெனமொ? தோணவிலை—முருகோனே!
மனது நீடுதுயர் விலக வேணபடி
வரமெ லாமுதவி—புரிவாயே!
புனமி ஞீனமரு வியகு கா!கிருபை
புரிவை! தோகைமயின்—முருகோனே!
கனக மேருகிரி நிகரு மேன்மைசெறி
கமழ்சி காமலையில்—வளர்தேவே!

2613. வஞ்சம்புரி சூருடல்
மண்டும்படி கூரயில்—விடுசூரா!
நஞ்சம்பயில் வேல்விழி
நன்றுந்திய வேடமின்—அணைதோளா!
நெஞ்சம்பயில் நோய்விழ
நின்கண்கொடு பார்! சிகி—மயிலாளா!
தஞ்சக்க்ருபை யேசெய்வை!
தங்கந்திகழ் தோகையின்—மலைநாதா!

2614. மடக்கொடி யான வேடர்
மகட்குமுன் மாலை சூடி—அணைதோளா!
திடப்படு சூர னவி
தெறித்திட வேலை யேவு—செயவீரா!
படத்தர வேறு வேணி
படைத்தவ ராசை யான—மகவேளே!
தடப்புவி சூழு நேம!
தமிழ்ப்புனை தோகை மேரில்—வளர்தேவே!

2615. படபட வெனவரு மசுரர்கள்
குலமழி படவயில் தனைவிடு—செயவீரா!
குடமிணை படுதன மயிலிவ னமிலகு
குறமகள் தனைமரு—வியதோளா!

நடமிடு பரிமயின் மிசையெளி யன்முன்வெகு
நிலமதை யருளிட—வருவாயே!
வடவரை தனைநிகர் இலகிய கொடுமுடி
வளர்சிகி மலைமிசை—வருதேவே!

2616. வலுபடு சூர னுடலிரு கூறு
வகிரிட வேலை—எயும்வீரா!
ஒலியுள வேலை தனிலணை மீது
துயில்கொளு மாயன்—மருகோனே!
நலிபடு நோய்கள் அடியன்மு னேறு
நலவரம் நீசெய்—குவைநாதா!
மலிபடு சோலை வளமிகு தோகை
மலைமுரு கா! பொன்—மயிலாளா!

2617. எந்தவித மானுலு மென்றனுட நோய்தீர—அருளாயோ?
கந்தமல ரேசூடு கங்குல்நிறை சீர்கேச!—முருகோனே!
அந்தமிகு கான்மாது அன்பினுட னேசேரு-முருகோனே!
வந்தருள்செய் சீர்மேவு மங்குல்தவழ் மாதோகை-மலைநாதா!

2618. கனத்தபூ முலையாள் கமழ்க்கொள்கே சமினள்—நலமேசேர்!
வனத்தில்வா ழுமினள் மறப்பெணு சையினல்—அணை
[தோளா!
மனத்தினேய் களெலாம் மடித்துவோ டமுனே-வருவாயே!
இனத்தின்மா மணிசேர் எழிற்சிகா மலைமேல்—வருதேவே!

2619. வருசூருடன் வலுபோர்புரி—செயவீரா!
அருமாமறை அடியேன்தொழு—முருகோனே!
மருமேவிய மலர்நீப!மென்—மணிமார்பா!
கருமாமுகில் கமழ்தோகையின்—மலையாளா!

2620. நடனமுற்றிடு மயிலி லுற்றவ!
நலமெ னக்கருள்—புரிவாயே!
கடக ரித்திரு வதன ரற்புதர்
கதிர்ம ருப்பினர்—துணையாளா!
[............த்திடு] மவுணர் பொய்க்குலம்
அமர்செ யித்திடு—செயவீரா!
[............க்கிணை] தருசி கிக்கிரி
மலையி னிற்குக!—எனையாளாய்!

---

2620. [ ] ஏடுமுரிந்தபகுதி. முறையே 'அடவெ திர்த்திடு' எனவும், 'வட கிரிக்கிணை' எனவும் இருக்கலாம்.

2621. பாசி லாடுசிறை ஆடு மாமயிலள்
பாகு லாவுமொழி—மடமானுள்
ஆசி லாததன காரின் மீறுகுழல்
ஆசை வேடர்மகள்—புணர்தோளா !
வாசி யோடுகர ணுதி நாலுமணை
வான யோகியர்கள்—பணிதாளா !
பேசி லாமவுன தேசி கா!குமர !
பீடு சேர்சிகியின்—மலையாளா !

2622. கஞ்ச மலரில் வாழுங்
கங்கு வுலவு கேச—மடமானுள் —மருகோனே !
நஞ்ச மிடறின் நாதர்
நங்கை கவுரி பாகர்—அருள்பாலா !—முருகோனே !
வஞ்ச மதுசெய் சூரன்
மங்கி விழமுன் வேலை—விடுவீரா !—குகநாதா !
அஞ்ச லெனமு னேடி
அண்டர் பணிசெய் தோகை—மலைமேவு—செகநாதா !

---

தின கவிதை முதல்பாகம் முற்றும்.

---

2621. பாசு = பசுமை. பாசில் - பச்சை நிறத்துடன்.